கழக வெளியீடு: ௬௮௩

உ

திருச்சிற்றம்பலம்

# பெரிய புராண வசனம்

அல்லது

# திருத்தொண்டர் வரலாறு

[பெரியபுராண உரைநடை]



புலவர் அரசு

எழுதியது.



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

**திருத்தொண்டர் வரலாறு** என்னும் இந்நூல், தெய்வச் சேக்கிழார் அடிகள் திருவாய் மலர்ந்தருளிய பன்னிரண்டாந் திருமுறையாகிய 'திருத்தொண்டர் புராண'ச் செழும் பிழிவாகிய செவ்விய எளிய தெளிந்த உரைநடை நூலாகும். திருத்தொண்டர் புராணம் 'பெரிய புராணம்' எனவே வழங்கப்பட்டு வருகின்றது. அது, "செயற்கரிய செய்வார் பெரியர்," என்னும் தனித்தமிழ் மறையாய திருக்குறளின் வழிநின்று, செம்பொருட்டுணிவாம் சிவனடி யின்பம் பெற்ற சீரியோர் திருவரலாறு கூறுவதால் வாய்ந்ததாகும். ஒழுகலாற்று இலக்கண நூலாக அமைந்துள்ள திருக்குறளுக்கு எடுத்துக் காட்டும் இலக்கிய நூலாவது இப் பெரிய புராணமென வழங்கும் செந்தமிழ்நாட்டுச் சீரியோர் மெய்வரலாற்று நூல் ஒன்றுமேயாம். இந்நூல் சிறப்பாகச் சைவ நன்மக்களுக்குரியது. பொதுவாகத் தமிழ் மக்கள் எல்லாருக்கும் உரியதேயாம்.

இப்புராணத்தில் குறிக்கப்படுவன தனி அடியார்கள் அறுபத்து மூவர், தொகையடியார்கள் ஒன்பதின்மர் ஆகிய எழுபத்திருவர் திருவரலாறுகள். இவ்வரலாறுகள் நாலாயிரத்து இருநூற்று எண்பத்தாறு திருப்பாட்டுக்களால் அமைந்துள்ளன. அப்பாட்டுக்கள் எங்ஙனம் சுருக்கமும் தெளிவும் எளிமையும் இனிமையும் அமைந்துள்ளவோ, அங்ஙனமே ஆசிரியர் திரு. புலவர் அரசு அவர்களால் இவ்வரலாற்று நூலும் ஆக்கப்பெற்றுள்ளது. இதன்கண் அடியார் திருவரலாறுகள் பல்வேறு உள்தலைப்புக்களால் பாகுபடுத்திச் செப்பஞ் செய்யப்பெற்றுள்ளது.

இதனைக் கற்பார், ஆற்றொழுக்கமைந்த தமிழ் உரைநடை நூல் எழுதும் சிறந்த எழுத்தாளராவர். பெரியபுராணத் திருப்பாட்டுக்களில் பெரும்பாலானவற்றை இந்நூலைக் கருவியாகக் கொண்டு எளிதில் பொருள் விளங்கிக்கொள்ளலாம். வரலாற்றுத் தொடர்பும் செவ்விய முறையில் அமைந்துள்ளது. இளம் மாணாக்கர்களும் கற்கவேண்டுமென்னும் நன்னோக்கம்பற்றி, இந்நூல் எளிய நடையில் அமைந்துள்ளது. சுருங்கச்சொல்லின் பெரிய புராணத்தின் பொழிப்புரைபோன்று மிளிர்வது.

இதன்கண் திருமுறைகண்ட வரலாறு, திருமுறைப் பாகுபாடு, சேக்கிழார் பெருமான் வரலாறுகள் சேர்க்கப்பெற்றுள்ளன. பெரிய புராணத் திருப்பாட்டுக்கள் இன்றியமையாத

இடங்களில் வரலாற்றுத் தொடர்பும், நெந்நெறிச் சிறப்பும், செம்பொருட்டுணிவும் சிறந்து விளங்குவனவாகச் சேர்க்கப்பெற்றுள்ளன. அப் பாட்டுக்கள் பொருள் விளங்கி நெட்டுருச்செய்து கைக்கொண்டொழுகற்கு வாய்ந்தன.

தென் தமிழ்ப் பயனுயுள்ள திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகமும், மெய்யடியார்கள் திருமரபும், அவர்கள் வீடுபே றெய்திய வழிமுறையும், அவர்கள் திருநா(குருபூசை நட்சத்திரம்) ளும், எடுத்தாண்ட திருப்பாட்டுக்கள் அகர வரிசையிலும் தொகுக்கப்பெற்றுள்ளன.

மெய்கண்டார் சிவஞான போதத்திற்குப் பேருரை கண்ட மாதவச் சிவஞான முனிவரனுர் அருளிய **திருத்தொண்டர் திருநாமக் கோவையும்** சேர்க்கப்பெற்றுள்ளது. இவைகள் கற்பார்க்கு அடியார்களின் வரலாறும் சிறப்பும் குறிப்பாக விளங்கிக்கொள்ள வழியாகும்.

திருத்தொண்டர் வரலாறு நாளும் கற்கவேண்டுவது செந்நெறிச் செல்வர்களாகிய சைவர்களின் தலையாய கடனும். அந்நூலின்கண் மூவர் முதலிகள் திருவரலாறு பேசப்படுகின்றது. அவர்கள் அருளிய ஒன்றுமுதல் ஏழுவரையுள்ள திருமுறைகளும் பேசப்பெறுகின்றன. உலகுய்யத் தோன்றிய மெய்யடியார்கள் செய்தருளிய உறுதியாம் திருத்தொண்டும், பேரன்பும், அன்பே நுகர்ந்து அடியின்பம் அருளும் ஆண்டவன் திருவருளும் பேசப்பெறுகின்றன. இவையே, 'பெருகலாம் தவத்திற்கும், பேதைமை தீரற்கும், திருகலாகிய சிந்தை திருத்தற்கும், பருகலாம் பரமாய தோர் ஆனந்தத்திற்கும், மருகலானடி வாழ்த்தி வணங்கற்கும்' வழியாகும்.

எங்கள் விருப்பத்திற்கிணங்கச் செவ்விய முறையில் இவ்வரிய உரைநடை நூலை ஆக்கித்தந்த திரு. புலவர் அரசு அவர்களுக்கு நன்றி என்றும் உரித்தாகுக.

ஆசிரியர் மாணுக்கர் பெருமக்கள் அனைவர்களும் இந்நூலைக் கற்றுச் செந்தமிழ்ப்பயனும் சிவநெறி மாண்பும் தேர்ந்து, செந்நெறி யொழுகித் திருவருட்பேறெய்தி இன்புற்று வாழ்வார்களாக!

சென்னை,
திருவள்ளுவர் ஆண்டு
கக௯௦, தை, உக. } **சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

| | | | பக்கம் |
|---|---|---|---|

# எடுத்தாண்ட செய்யுள் அகரவரிசை

சுந்தரமூர்த்திநாயனார்

# திருத்தொண்டத்தொகை

[பண் - கொல்லிக்கௌவாணம்]

**அடிமை**

*திருச்சிற்றம்பலம்*

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. க

இலைமலிந்த வேனம்பி எறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானாயற் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. உ

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினா லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. ௩

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி அப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. ௫

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. ௬

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. ௭

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை அதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரில் அம்மானுக் காளே. ௮

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்

அறைக்கொண்ட வேனம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூரா ரூரில் அம்மானுக் காளே. அ

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடி
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன் [யேன்
ஆரூரா ரூரில் அம்மானுக் காளே. கூ

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த அடியார்க்கு மடியேன்
ஆரூரா ரூரில் அம்மானுக் காளே. க0

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே.

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை சிவஞான முனிவர்
அருளிச்செய்த

# திருத்தொண்டர் திருநாமக்கோவை

**காப்பு**

*மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்*
*கையன் திருவடியே காப்பு.*

---

*தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனார்*
*இல்லை யளித்த இயற்பகையார்—தொல்லை*
*இளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரென்றும்*
*இளையா விறன்மிண்ட ரின்ப—மளவுமமர்*
*நீதி எறிபத்தர் நீண்டபுக ழேனாதி*
*நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர்—மேதகுசீர்*
*மானக்கஞ் சாறரரி வாட்டாய ரானாயர்*
*ஞானத் திருமூர்த்தி நாயனார்—மேன்மை*
*முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்*
*துரிசில் திருக்குறிப்புத் தொண்டர்—மருவுமறைச்*
*சண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்*
*கொண்ட மிழலைக் குறும்பனார்—தொண்டுசெயும்*
*நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்*
*மூளு நமிநந்தி முத்தமிழை—யாளுந்*
*திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காமர்*
*அருண்மூலர் தண்டி யடிகள்—வருமூர்க்கர்*
*சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்*
*நாமார் சிறப்புலியார் நற்றெருண்டி—னேமச்*
*சிறுத்தொண்டர் சேரமான் செய்ய கணநாதர்*
*விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத்—திறத்துமிகும்*
*பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்*
*மொய்கொணர சிங்க முனையரையர்—ஐயரதி*
*பத்தர் கலிக்கம்பர் கலியர் பகர்சத்தி*
*கைத்தபுல னையடிகள் காடவர்கோன்—மொய்த்தகணம்*
*புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்*

நல்ல முனையடுவார் நாயனார்—மல்குகழற்
சிங்க ரிடங்கழியார் தஞ்சைச செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியா—ரங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தஞ் சிவன்பாலே சேர்த்துள்ளார்—நித்தமும்
முத்திநெறி காட்டு முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தாக—ளத்தனையே
முப்போதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவார்
அப்பாலு மீச னடிச்சார்ந்தார்—மெய்ப்பூசன்
மானியார் நேசனார் வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப் பாணனார்—மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடியவன் றொண்டர்—அடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து—நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையும்—மையலுந்தீர்ந்
தத்துவிதா னந்த அகண்டபரி பூரணத்தின்
நித்தியமா வாழ்வார் நிசம்.

திருச்சிற்றம்பலம்

---

## சமயகுரவர் நால்வர் வயசு

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

திருச்சிற்றம்பலம்

---

# திருத்தொண்டர் மரபு

**சிவவேதியர் (ஆதிசைவர்):** க. இசைஞானியார், உ. சடைய நாயனார், ௩. சுந்தரமூர்த்தி நாயனார், ௪. புகழ்த்துணை நாயனார், ௫. முப்போதுந் திருமேனி தீண்டுவார்.

**திருமறையோர்-அந்தணர்:** க. அப்பூதியடிகள் நாயனார், உ. உருத்திரபசுபதி நாயனார், ௩. கணநாத நாயனார், ௪. குங்குலியக்கலய நாயனார், ௫. சண்டேசுர நாயனார், ௬. சிறப்புலி நாயனார், எ. சோமாசிமாற நாயனார், அ திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், ௯. திருநீலநக்க நாயனார், க0. தில்லைவாழந்தணர், கக. நமிநந்தியடிகள் நாயனார், கஉ. பூசலார் நாயனார், க௩. முருக நாயனார்.

**மாமாத்திரர்:** சிறுத்தொண்ட நாயனார்.

**வேந்தர்:** க. இடங்கழி நாயனார், உ. கோச்செங்கட்சோழ நாயனார், ௩. சேரமான்பெருமாள் நாயனார், ௪. நெடுமாற நாயனார், ௫. புகழ்ச்சோழ நாயனார், ௬. மங்கையர்க்கரசியார்.

**மன்னர்:** க. ஐயடிகள் காடவர்கோன் நாயனார், உ. கழற்சிங்க நாயனார், ௩. கூற்றுவ நாயனார், ௪. நரசிங்கமுனையரைய நாயனார், ௫. மெய்ப்பொருள் நாயனார்.

**வணிகர்:** க. அமர்நீதி நாயனார், உ. இயற்பகை நாயனார், ௩. கலிக்கம்ப நாயனார், ௪. காரைக்காலம்மையார், ௫. மூர்த்தி நாயனார்

**வேளாளர்:** க. அரிவாள்தாய நாயனார், உ. இளையான்குடிமாற நாயனார், ௩. ஏயர்கோன்கலிக்காம நாயனார், ௪. கோட்புலி நாயனார், ௫. சத்திநாயனார், ௬. சாக்கிய நாயனார், எ. செருத்துணை நாயனார், அ. திருநாவுக்கரசு நாயனார், ௯. மானக்கஞ்சாற நாயனார், க0. முனையடுவார் நாயனார், கக. மூர்க்க நாயனார், கஉ. வாயிலார் நாயனார், க௩. விறன்மிண்ட நாயனார்.

**இடையர்:** க. ஆனாய நாயனார், உ. திருமூல நாயனார்.

**துயவர்:** திருநீலகண்ட நாயனார்.

**பாணர்:** திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்.

**பரதவர்:** *அதிபத்த நாயனார்.*

**வேடர்:** *கண்ணப்ப நாயனார்.*

**சான்றார்:** *ஏனாதி நாயனார்.*

**சாலியர்:** *நேச நாயனார்.*

**சேக்கார்** *கலிய நாயனார்.*

**ஏகாலியர்:** *திருக்குறிப்புத்தொண்ட நாயனார்.*

**புலையர்:** *திருநாளைப்போவார் நாயனார்.*

**மரபு அறியாதவர்:** *௧ எறிபத்த நாயனார், ௨. கணம்புல்ல நாயனார், ௩. காரி நாயனார், ௪. குலச்சிறை நாயனார், ௫. தண்டியடிகள் நாயனார், ௬. பெருமிழலைக்குறும்ப நாயனார்.*



# திருத்தொண்டர் அருள்பெற்ற முறை

---

## ஆசான் அருளால் அடிசார்ந்தோர் :

௧. அப்பூதியடிகள் நாயனார்
௨. கணநாத நாயனார்
௩. குலச்சிறை நாயனார்
௪. சுந்தரமூர்த்தி நாயனார்
௫. சோமாசிமாற நாயனார்
௬. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்
௭. திருநாவுக்கரசு நாயனார்
௮. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்
௯. திருமூல நாயனார்
௧௦. நெடுமாற நாயனார்
௧௧. பெருமிழலைக்குறும்ப நாயனார்
௧௨. மங்கையர்க்கரசியார்

## அருள் அடையாளத் (சிவலிங்கம்) தால் அடி சார்ந்தோர்

௧. அதிபத்த நாயனார்
௨. அரிவாள்தாய நாயனார்
௩. ஆனாய நாயனார்
௪. உருத்திரபசுபதி நாயனார்
௫. எறிபத்த நாயனார்
௬. ஏயர்கோன் கலிக்காம நாயனார்
௭. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்
௮. கணம்புல்ல நாயனார்
௯. கண்ணப்ப நாயனார்
௧௦. கலிய நாயனார்
௧௧. கழற்சிங்க நாயனார்
௧௨. காரி நாயனார்
௧௩. குங்குலியக்கலய நாயனார்
௧௪. கூற்றுவ நாயனார்
௧௫. கோச்செங்கட்சோழநாயனார்
௧௬. கோட்புலி நாயனார்
௧௭. சண்டேசுர நாயனார்
௧௮. சாக்கிய நாயனார்
௧௯. சிறப்புலி நாயனார்
௨௦. செருத்துணை நாயனார்
௨௧. சேரமான் பெருமாள் நாயனார்
௨௨. தண்டியடிகள் நாயனார்
௨௩. திருநாளைப்போவார் நாயனார்
௨௪. திருநீலநக்கநாயனார்
௨௫. நமிநந்தியடிகள் நாயனார்
௨௬. புகழ்த்துணை நாயனார்
௨௭. பூசலார் நாயனார்
௨௮. முருக நாயனார்
௨௯. மூர்த்தி நாயனார்
௩௦. வாயிலார் நாயனார்

## அடியார் அருளால் அடி சார்ந்தோர்

௧. அமர்நீதி நாயனார்
௨. இடங்கழி நாயனார்
௩. இயற்பகை நாயனார்
௪. இளையான்குடிமாற நாயனார்
௫. ஏனாதி நாத நாயனார்
௬. கலிக்கம்ப நாயனார்
௭. காரைக்காலம்மையார்
௮. சத்தி நாயனார்
௯. சிறுத்தொண்ட நாயனார்
௧௦. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்
௧௧. திருநீலகண்ட நாயனார்
௧௨. நரசிங்க முனையரைய நாயனார்
௧௩. நேச நாயனார்
௧௪. புகழ்ச்சோழ நாயனார்
௧௫. மானக்கஞ்சாற நாயனார்
௧௬. முனையடுவார் நாயனார்
௧௭. மூர்க்க நாயனார்
௧௮. மெய்ப்பொருள் நாயனார்
௧௯. விறன்மிண்ட நாயனார்.

---

# திருத்தொண்டர் திருநாள்

## சித்திரை௴

பரணி : சிறுத்தொண்ட நாயனார்
உரோகிணி : மங்கையர்க்கரசியார்
திருவாதிரை : விறன்மிண்ட நாயனார்
அத்தம் : உமாபதிசிவாசாரியார்
சித்திரை : இசைஞானியார்
சுவாதி : திருக்குறிப்புத்தொண்ட நாயனார்
சதயம் : திருநாவுக்கரசு நாயனார்

## வைகாசி௴

பரணி : கழற்சிங்க நாயனார்
பூசம் : நமிநந்தியடிகள் நாயனார்
,, சேக்கிழார நாயனார்
ஆயிலியம் : சோமாசிமாற நாயனார்
மூலம் : திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்
,, முருக நாயனார்
,, திருநீலநக்க நாயனார்
,, திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்

## ஆனி௴

மகம் : மாணிக்கவாசகசுவாமிகள்
பூரம் : அமர்நீதி நாயனார்
இரேவதி : கலிக்காம நாயனார்

## ஆடி௴

கார்த்திகை : மூர்த்தி நாயனார்
,, புகழ்ச்சோழ நாயனார்
திருவாதிரை : கூற்றுவ நாயனார்
சித்திரை : பெருமிழலைக் குறும்ப நாயனார்
சுவாதி : சுந்தரமூர்த்தி நாயனார்
,, சேரமான்பெருமாணாயனார்
கேட்டை : கலிய நாயனார்
,, கோட்புலி நாயனார்

### ஆவணி௴

பூசம் : செருத்துணை நாயனார்
ஆயிலியம் : புகழ்த்துணை நாயனார்
,, அதிபத்த நாயனார்
மகம் : இளையான்குடிமாற நாயனார்
உத்திரம் : மறைஞான சம்பந்தசிவாசாரியார்
அநுடம் : குலச்சிறை நாயனார்
மூலம் : குங்குலியக்கலய நாயனார்

### புரட்டாசி௴

அச்சுவினி : உருத்திரபசுபதி நாயனார்
உரோகிணி : திருநாளைப்போவார் நாயனார்
பூரம் : அருணந்தி சிவாசாரியார்
சதயம் : நரசிங்கமுனையரைய நாயனார்
உத்தராடம் : ஏனாதிநாத நாயனார்

### ஐப்பசி௴

அச்சுவினி : திருமூலநாயனார்
பரணி : நெடுமாற நாயனார்
கார்த்திகை : இடங்கழி நாயனார்
பூசம் : சத்தி நாயனார்
சுவாதி : மெய்கண்டதேவர்
அனுடம் : பூசலார் நாயனார்
மூலம் : ஐயடிகள்காடவர்கோ நாயனார்

### கார்த்திகை௴

கார்த்திகை : கணம்புல்ல நாயனார்
உத்திரம் : மெய்ப்பொருனாயனார்
அத்தம் : ஆனாய நாயனார்
மூலம் : மூர்க்க நாயனார்
பூராடம் : சிறப்புலி நாயனார்

### மார்கழி௴

திருவாதிரை : சடைய நாயனார்
உத்திரம் : இயற்பகை நாயனார்
சுவாதி . மானக்கஞ்சாற நாயனார்
பூராடம் : சாக்கிய நாயனார்
இரேவதி : வாயிலார் நாயனார்

### தைமாதம்

| | |
|---|---|
| மிருகசீரிடம் : | கண்ணப்ப நாயனார் |
| திருவாதிரை : | அரிவாட்டாய நாயனார் |
| உத்திரம் : | சண்டேசுர நாயனார் |
| விசாகம் : | திருநீலகண்ட நாயனார் |
| சதயம் : | அப்பூதியடிகளாயனார் |
| இரேவதி : | கலிக்கம்ப நாயனார் |

### மாசிமாதம்

| | |
|---|---|
| அத்தம் : | எறிபத்த நாயனார் |
| பூராடம் | காரி நாயனார் |
| சதயம் · | கோச்செங்கட் சோழநாயனார் |

### பங்குனிமாதம்

| | |
|---|---|
| உரோகிணி : | நேச நாயனார் |
| திருவாதிரை : | கணநாத நாயனார் |
| பூசம் : | முனையடுவார் நாயனார் |
| சுவாதி : | காரைக்காலம்மையார் |
| சதயம் : | தண்டியடிகளாயனார் |

திருச்சிற்றம்பலம்

---

## சமயகுரவரும் சேக்கிழாரும்

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன்றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லாணிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

## சந்தான குரவர்

சித்திரை யத்தம் உமாபதி யாவணித் திங்கடனில்
உத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழாரடிகளின் திருஅருள் சிறப்பு.

மெய்கண்ட நூல் பதினான்கனுள் 'சிவப்பிரகாசம்' முதல் எண் பெரும் நூல்கள் அருளிய கோற்றவன்குடி உமாபதிசிவனார் இயற்றிய சேக்கிழார் நாயனார் புராணத்துள் விளங்கும் சிறப்பு.

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க்
கடற்கரையின் நொய்மணலை எண்ணியள விடலாம்
பெருங்கடன்மேல் வருந்திரையை ஒன்றிரண்டென் றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகும்
தருங்கடலின் மீனைஅள விடலாகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது
சிரங்கொள்திருத் தொண்டர்புரா ணத்தையள விடநம்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே.

திருச்சிற்றம்பலம்

---

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நம்மிடைத் திகழ்ந்து விளங்கிய மிகப் பெரும் புலவர் தலைமணியாம் திரிசிரபுரம் மகாவித்துவான் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சேக்கிழாரடிகளை வாயார வாழ்த்திய பிள்ளைத்தமிழில் 'பத்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய கவிவலவர்' என்பது மட்டுமன்றிச் 'செய்யுளெலாம் தெய்வம் மணக்கும்' எனவும் பாடியுள்ளார்கள். அது,

சோறு மணக்கும் மடங்களெலாம்
தூய்மை மணக்கும் சிந்தையெலாம்
சுவண மணக்கும் ஆடையெலாம்
தொங்கல் மணக்கும் தோள்களெலாம்
சேறு மணக்கும் கழனியெல்லாம்
செல்வ மணக்கும் மாடமெலாம்
தென்றல்மணக்கும் மேடையெலாம்
**தெய்வமணக்குஞ் செய்யுளெலாம்**
நீறு மணக்கும் நெற்றியெலாம்
நெய்யே மணக்கும் கறிகளெலாம்
நெருப்பு மணக்கும் குண்டமெலாம்
நேய மணக்கும் வீதியெலாம்
சாறு மணக்கும் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்ட வரலாறு

[கோற்றவன் குடி—உமாமதி சிவம்]



## க. மூவர் தமிழ்மறை எங்கே?

திருவாரூரி லமர்ந்து செங்கோ லோச்சிய இராசராச சோழரான அபய குலசேகரர், ஒருநாள் சிவனடியார் ஒருவர், மூவர் தேவாரங்களி லொன்றிரண்டைப் பாடக் கேட்டு வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார். தேவார அமிழ்து அவருள்ளத்திலே பாய்ந்து என்பையும் ஊனையும் இனிமையாக்கி இளகச் செய்தது; மெய் புளகமுற்றது; கண்ணீர் பெருகியது. சித்தத்தைச் சிவனுருக்கே ஆக்கிய சீர்பெற்ற வளவர் தேவாரப் பதிகங்களுள்ள இடமெங்கே யெங்கே யென்று தேடிக் கலங்கினார். இருக்குமிடந் தெரிந்தாலன்றோ? பசியுடன் அலையு மொருவனுக்குப் பிடி சோறு மட்டுங் கிடைத்தா லெப்படித் திகைப்பானோ அப்படித் திகைத்தார் அவர்! அவருணர்வு ஏங்கியது. 'ஆயிரக்கணக்கான இசைத்தமிழ் மறைக ளெங்கொளித்தன? இருண்ட வானத்திலே கதிரவன் எழாமலேதா னிருப்பானோ? ஊனையும் உளத்தையும் உயிரையும் தளிர்க்கச்செய்யும் ஒப்பற்ற தமிழ்மழை பெய்யாதா?' என்றெல்லா மேங்கினார் அவர்.

இந்நிலையிலே வாடிய அவரை ஒரு மொழி, உணர்வை யூட்டியது: திருநாரையூரிலே பொல்லாப்பிள்ளையா ரருள் பெற்ற ஒருவர்—நம்பியாண்டார் நம்பி யென்பவர்—நம் பிக்கை யூட்டுந் தெய்வத் திருவருள் பெற்றவரென்று செப்பினர். அவரை வினவிப் பார்க்கலாமென்று அங்கே சென்றார்.

## உ. தில்லையிலுள்ளன

நம்பியாண்டார் நம்பி அவரை வரவேற்றுப் பொல்லாப் பிள்ளையாரை வழிபடச் செய்தார். பொல்லாப்பிள்ளையா

ரருளால், ' தில்லைக்கூத்தர் பொன்னம்பலத்தின் பிற்பக்கத்திலே மூவர் திருக்கைகள் அடையாளமிட்ட அறையிலே உள்ளன ' என அறிந்தனர். கண் பெற்ற குருடன் போல மகிழ்ந்து நம்பியுடன் தில்லை சென்றார்.

அங்கே தில்லைவாழந்தணர்களைக் கண்டு, அந்த அறையின் அடையாளத்தைக் கூறித் திறந்து பார்க்க வேண்டுமென்று அரசர் வேண்டிக்கொண்டனர். அவர்கள் 'மூவரும் எழுந்தருளி வந்தால் அவ்வறை திறக்கும்' என்று விடை பகர்ந்தனர். அரசர் புன்முறுவலுடன் அப்பர், சம்பந்தர், சுந்தரர் எனும் மூவருக்குந் திருவிழா வியற்றி எழுந்தருள்வித்தார்.

அந்தணர்கள் அவர் முயற்சிக்கும் அறிவுக்கும் மெச்சி அறையைக் கண்டு காட்டினார்கள். அதனைத் திறந்து பார்த்தபோது அவைகள் புற்று மூடியிருக்கக் கண்டு அரசர் வருந்தினார். அப்போது வான்மொழியாக இறைவர், ' ஈண்டு வேண்டுவன வைத்தே மண்மூடச் செய்தோம்' என்றருளினார். கேட்ட அரசர் ஒருவாறு தெளிந்து சிவனாரடி சிந்தித்துத் தமிழ்மறைகளைப் புற்று நீக்கியெடுத்து எண்ணெய் விட்டுத் தெளிவு செய்து நம்பியாண்டார் நம்பியைக் கொண்டே அவற்றை வகுத்தார்.

**௩. திருமுறை வகுத்த முறை வருமாறு :**

| | | | |
|---|---|---|---|
| ஆளுடைய பிள்ளையார் | தேவாரம் | திருமுறை | 3 |
| ஆளுடைய அரசு | ,, | ,, | 3 |
| ஆளுடைய நம்பி | ,, | ,, | 1 |
| | | | 7 |

" அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும்
அதுபோலன் றிதுஎன்று முளதாம் உண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே அன்றிப்
பலரில்லை என்றெழுதும் பனுவல் பாரின்
எரியினிடை வேவாதாற் றெதிரே யோடும்
என்புக்கு முயிர்கொடுக்கும் இடுநஞ் சாற்றும்

கரியைவளை விக்கும்கல் மிதக்கப் பண்ணும்
கராம்மதலை கரையிலுறக் காற்றுங் காணே."

(திருமுறை-க-பு-கஎ)

[பரபதம்--மேனிலை; அழிவில்வீடு. தற்பரம்-தனிமுதல். பரன்-சிவன். பனுவல்-பாட்டு; திருநெறித்தமிழ். கரி-யானை. கராம்-முதலை. மதலை-பிள்ளை. காற்றும்-உமிழும்]

குறிப்பு—தேவாரத் திருமுறை ஏழு என்பதும், அவ்வேழும் முறையே மூன்று, மூன்று, ஒன்றாக அமைந்துள்ளன என்பதும், அம்முறையே அவரவர் அருட்செயல்களை எண்ணுற அமைத்தமையால் விளங்குவனவாம்.

| | | |
|---|---|---|
| மூவர் முதலிகள் அருளிய திருமுறை | | 7 |
| ஆளுடைய அடிகள் திருவாசகம் திருக்கோவையார் | திருமுறை | 1 |
| ஆகத் தேவார, திருவாசகங்கள் | ,, | 8 |

ஒன்பதாந் திருமுறையிலே திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், நம்பி காடவ நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மரும் பாடிய திருவிசைப்பாக்கள் இருபத்தெட்டுடன், அவர்களிற் சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டையும் சேர்த்து இருபத்தொன்பது திருப்பதிகங்களாகச் சேர்த்தனர்.

பத்தாந் திருமுறை: திருமூலர் திருமந்திரம்.

பதினோராந் திருமுறை: திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவர், கல்லாடனார், கபில தேவர், பரண தேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் பாடிய பாடல்கள்.

இவ்வாறு தேவாரப் பதிகங்களுடன் திருவாசகம் திருக்கோவையாரையும் பிற அடியார் பாடியவற்றையுந் தொகுத்துப் பதினொரு திருமுறைகளாக வகுத்தனர்.

நம்பியாண்டார் நம்பியார் சுந்தரர் பாடிய திருத் தொண்டத் தொகையை முதல்நூலாகக் கொண்டு கலித் துறையிலே திருத்தொண்டர் திருவந்தாதி பாடியருளினார். அதனைத் தாம் பாடிய பிற நூல்களுடன் பதினோராந் திருமுறையிலே சேர்த்தார்.

## ௬. பண்ணடைவு

திருமுறை வகுத்தானவுடன் திருவெருக்கத்தம் புலி யூரில் இருந்த—திருநீலகண்ட யாழ்ப்பாணரின் மரபிலே வந்த—ஒரு பாடினியை அழைத்து வந்து பண்ணடைவு செய்யும்படி ஆண்டவன் அருள் செய்ய, அவ்வாறே செய் தனர். பிறகு நம்பியாரைத் திருநாரையூருக்குச் செல்ல விடைகொடுத்துச் சோழர் திருவாரூர் வந்து சேர்ந்தார். அவரடைந்த மகிழ்ச்சியை என்னென்பது? திருமுறை கண்ட சோழர் ஆகிய அவர், பதினொரு திருமுறைகளையும் செய்பேடு செய்து தியாகப் பெருமானார் திருக்கோயிலிற் சேமித்துப், பல்லாண்டு சைவநெறி பரப்பிவாழ்ந்து, மங்கைபங்கர் திருவடி நீழலை யடைந்தார்.

நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லிஒருத் திக்கிசைகள் வாய்ப்பஅளித் தோமென்று
சொல்லஅவள் தனையழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பிஇறை உள்மகிழ்ந்தார்.

(திருமுறை க-பு. ௬௨)

[நல்லிசை யாழ்ப்பாணர் - திருநீலகண்ட யாழ்ப்பாணர். மரபு - கான்முளை; மக்கள் பெயரர் முதலியோர். சுருதி - குரல். நம்பி - நம்பியாண்டார் நம்பி. இறை - அபயகுலசேகர மன்னர். உள் மகிழ்ந்தார் - அகத்தே அளவிலாத பேரின்பப் பெருவாழ்வுற்றுக் களித்தனர்.]

திருச்சிற்றம்பலம்

---

## முதலில் இருந்த தேவாரத் திருப்பதிகத் தொகை



௧. திருஞான சம்பந்தர்: 'தோடுடைய செவியன்' முதலாகக், 'கல்லூர்' ஈறாகவுள்ள பதினாறாயிரம் ௧௬000

௨. திருநாவுக்கரசர்: 'கூற்றாயின' முதலாக 'ஒருமானைத் தரிக்கும்' ஈறாகவுள்ள நாற்பத்தொன்பதாயிரம் ௪௯000

௩. சுந்தரர்: 'பித்தா' முதலாக 'ஊழி தோறும்' ஈறாகவுள்ள முப்பத்தெண்ணாயிரம் ௩௮000

ஆக (இலக்கத்து மூவாயிரம்) ௧ நூறாயிரத்து ௩000

இப்போதுள்ளவை:

௧. திருஞான சம்பந்தர் ௩௮௪

௨. திருநாவுக்கரசர் ௩௧௨

௩. சுந்தர மூர்த்தி ௧00

ஆக ௭௯௬

(எழுநூற்றுத்தொண்ணூற்றாறு)

# சேக்கிழார்பெருமான் வரலாறு

[கோற்றவன் குடி—உமாபதி சிவம்]



## க. சேக்கிழார்—வேளாளர்

பாலாறு பாயும்—பொழில் வளம் மிகுந்த—தொண்டை நாட்டிலே, புலியூர்க் கோட்டத்திலே நீர்வளஞ் சிறந்த குன்றத்தூரிலே சேக்கிழார் குடி சிறப்புடையது. சோழமன்ன ரொருவரால் இங்குக் குடியேற்றப் பெற்ற வேளாளர்களிற் புரிசை கிழார், கூடல் கிழார் என்று கூறுவது போன்ற குடியே சேக்கிழார் குடி.

பழையனூர் நீலி செய்த வஞ்சனைக்காளான வணிக னுயிரிழந்ததைக் கொண்டு—தங்களாலேயே அது நேர்ந்ததாலே—தங்கள் சொற் பிழையாமல் எழுபது பேரும் நெருப்பில் விழுந்து உயிர்விட்ட வேளாளர் சிறப்பை விளம்புவ தெப்படி?

“மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்
குழியிலெழு பதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ.?”

(திருத்தொண்டர் புராண வரலாறு, கரு.)

காராளராகிய வேளாளர் கழனியிலே உழுது தங்கள் கையால் நட்ட முடி திருந்தினலன்றோ, பாராளும் கொற்றவர் முடி திருந்தியிருக்கும்? அவர்களுடைய ஏரடிக்

குஞ் சிறு கோலாலே இறைவருடைய செங்கோலைச் செலுத்துவர். ஐம்புல வேள்வி செய்யும் வேளாள ரின் றேல் உலகமே வாழாதென்பதில் வியப்பொன்று மின்று. 'உழுவார் உலகத்துக் காணி' 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்று வள்ளுவர் வாய்மொழி கூறுவது காண்க.

## உ. உத்தம சோழப் பல்லவர்—சைவ வழிபாடு

அத்தகைய வேளாண் மரபிலே சேக்கிழார் குடியிலே அருண்மொழித் தேவர் உலகுவாழப் பிறந்தார். அவருக்குப் பின் பாலறுவாயர் தோன்றினார். அருண்மொழித் தேவர் சிவனு ரருளால் எல்லாக் கலைகளினுஞ் சிறந்து விளங்கினார். அநபாய சோழர் அவருடைய சிறப்பை யறிந்து தம் ஆட்சியிலே தலைமை தந்து உத்தம சோழப் பல்லவரென உயர் பட்டமும் அளித்தார். உத்தம சோழப் பல்லவரான சேக்கிழார், சோழநாட்டுத் திருநாகேச்சுரத்தி லெழுந்தருளிய திங்கள் முடியாரிடம் வைத்த பேரன்பினாலே தம் குன்றத்தூரிலும் மடவளாகமுங் கோயிலும் அமைத்துத் திருநாகேச்சுரம் எனவே பெயருந் தந்து, வழிபடற்கு வேண்டும் நிலம் முதலியனவும் அமைத்தார்.

## ௩. சோழ அரசர் வேண்டுகோள்

சேக்கிழார் ஆகிய சிவனாரடி மறவாத சேக்கிழார் பெருமான் இங்ஙனம் சோழரால் நன்மதிப் படைந்து, ஆட்சிக்குத் துணைக வாழ்ந்து வரும் நாளிலே, தமிழ் நாட்டிற் சமணநெறி தழைத்திருந்தது. சோழ நாட்டு மக்களும் சோழ அரசரும் சீவகசிந்தாமணியைப் புலவர்களைக் கொண்டு கேட்டு மகிழ்ந்தனர். சீவக சிந்தாமணி தமிழில் ஐம்பெருங் காவியங்களில் ஒன்றாகும். அவ்வாறு சிறந்த காவிய மாயினும் மறுமைப் பயனைத் தரச் சைவர்களுக்குப் பயன்படா தென்பதை அறிந்த சேக்கிழார் ஒருநாள் அரசரிடம் இதைப்பற்றி உரையாட விரும்பிச் சென்றார்.

அரசர் வரவேற்று, 'விரும்பி வந்தது என்ன?' என்றார்.

சேக்கிழார் பணிவுடன், 'இம்மைக்கும் மறுமைக்கும் உறுதியைத் தரத் தக்கவாறு சிவ கதைகளிருக்கின்றன. தாங்கள் அவற்றைக் கேட்டல் நல்லது. சமணர்கள் நூலை விரும்பிக் கேட்பது பயன்தராது' என்றார்.

அரசர் இதைக்கேட்டுச் சிந்தனையி லாழ்ந்தார்.

"இம்மை மறுமை தரத்தக்க சிவ கதைகள் உளவா? அவற்றைக் கற்றவர் யார்? அவை இடையிலே வந்த புதுமைக் கதைகளா? பழங் கதைகளா? முதல் நூலுண்டோ? சொன்னவர் யார்? கேட்டவர் யார்? தவத்தின் கதைகளோ? தவம் பண்ணிப் பேறு பெற்ற கதைகளோ? சாற்றுக!"

"திருவாரூரிலே சுந்தரர்க்குச் சிவபிரானர் அடி யெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டத் தொகை சுந்தரர் பாடினர். திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி அத் திருத் தொண்டத் தொகையை வைத்துக்கொண்டு திருவந்தாதி பாடினர். அந்த அந்தாதியை இராச ராச சோழர், சிவா லய தேவர் முதலானோர் கேட்டு உலகமெல்லாம் பரப்பி யுள்ளனர்!"

அக் கதைகளைக் கூறும்படி சோழர் வேண்டிக் கொண்டார். சேக்கிழார், அந்தாதியை வைத்துக்கொண்டு திருத்தொண்டர் வரலாற்றைத்—தில்லைவாழந்தணர் முதல் திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஈறாக உள்ளவர்களின் வரலாற் றைக் கூறினர். சோழர் கேட்டு மகிழ்ந்து அக் கதைகளைக் காவிய மாக்கித் தந்தருள வேண்டினர்.

## ௬. சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடுதல்

சேவையர் காவலரான அருண்மொழித் தேவர், 'நான் பெற்ற பேறு' என ஒப்புக்கொண்டார். அரசர் அவர்க்கு வேண்டும் பொருள் கொடுத்துத் தில்லைக்குச்

செல்ல விடை கொடுத்தார். தில்லையை யடைந்த சேக்கிழார் பொன்னம்பலத்தின் முன் விழுந்து வணங்கி அன்பினால் நெகிழ்ந்து, 'அடிகளே! அடியேன் தங்க ளடியார் சிறப்பை யுரைத்திட அடியெடுத்துக் கொடுத்து அருள் செயல் வேண்டும்' என்று போற்றினார்.

அவ் வேளையில் அம்பலக் கூத்த ரருளினாலே, 'உலகேலாம்' என்னும் ஒலி யாவருங் கேட்க வானிலெழுந்தது. தில்லைவாழந்தணரும் மற்றுமுள்ள அடியவரும் வியந்து மகிழ்ந்தனர். சேக்கிழா ரடைந்த களிப்பைச் செப்புதலெப்படி? தில்லைவாழந்தணர்கள் சேக்கிழாருக்குக் கூத்தப் பெருமானார் திருமாலையும், திருநீறும், பரிவட்டமும் அளித்து வாழ்த்தினர்.

சேக்கிழார் தொண்டர் வரலாற்றை யெழுதப் புகுமுன் இசைத்தமிழ்த் தேவாரமறை பாடியருளிய மூவரையும் வணங்கிச் சைவச் சின்னங்களையுந் திருநீற்றையும் அணிந்து, ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்தார். தில்லையம்பலவாணரைச் சிந்தித்து, 'உலகேலாம்' என இறைவர் எடுத்துக் கொடுத்தவாறு தொடங்கித் தொண்டர் வரலாறெழுதத் தொடங்கினார்.

அடியார்களின் மரபு: அடியார்கள் பலவகை மரபினர்; பலவகைத் திருத்தொண்டு செய்தவர்கள். அவர்களில்,

மறையோர்: தில்லைவாழந்தணர், கலயர், முருகர், பசுபதியார், சிறப்புலியார், கணநாதர், பூசலார், சண்டேசர், சோமாசிமாறர், நமிநந்தி, சீர்காழிப் பிள்ளையார், அப்பூதி, நீலநக்கர் ஆகப் பதின்மூவர்.

சிவ மறையோர்: புகழ்த்துணையார், முப்போதும் திருமேனி தீண்டுவார் என இருவர்.

மாமாத்திரர்: சிறுத்தொண்டர் ஒருவரே.

முடிமன்னர்: செங்கட் சோழர், புகழ்ச் சோழர், மங்கையர்க்கரசியார், நெடுமாறர், இடங்கழியார், சேரமான் பெருமாள் என அறுவர்.

குறுநில மன்னர்: *நரசிங்கமுனையரையர், கூற்றுவர், கழற்சிங்கர், மெய்ப்பொருள், ஐயடிகள் காடவர்கோன் என* ஐவர்.

வணிகர்: *காரைக்காலம்மையார், மூர்த்தி, கலிக் கம்பர், அமர்நீதி, இயற்பகை என* ஐவர்.

வேளாளர்: *மூர்க்கர், செருத்துணையார், வாயிலார், கோட்புலியார், சத்தி, தாயனார், இளையான் குடிமாறர், திருநாவுக்கரசர், சாக்கியர், கஞ்சாறர், விறன்மிண்டர், முனையடுவார், ஏயர்கோன் கலிக்காமர் எனப்* பதின்மூவர்.

ஆயர்: *திருமூலர், ஆனாயர் என* இருவர்.

குயவர்: *திருநீலகண்டர்* ஒருவரே.

பாணர்: *திருநீலகண்ட யாழ்ப்பாணர்* ஒருவரே.

பரதவர்: *அதிபத்தர்* ஒருவரே.

வேடர்: *கண்ணப்பர்* ஒருவரே.

சான்றார்: *ஏனாதிநாதர்* ஒருவரே.

சாலியர்: *நேசனார்* ஒருவரே.

நீசர்: *திருநாளைப் போவார்* ஒருவரே.

ஏகாலி: *திருக்குறிப்புத் தொண்டர்* ஒருவரே.

சேக்கார்: *கலியனார்* ஒருவரே.

மரபு தெரியாதவர்: *குலச்சிறையார், தண்டி, கணம் புல்லர், எறிபத்தர், காரியார், குறும்பர், பத்தராய்ப்பணி வார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், பொய்யடிமை யில்லா தவர், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலு மடிச்சார்ந்தார் எனப் பதின்*மூவர்.

அடியார்களின் நெறி

*இவர்களிற்* குருவழிபாட்டால் வீடடைந்தோர்: *திரு ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருமூலர், நெடுமாறர்,*

மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், யாழ்ப்பாணர், குறும்பர், கணநாதர், அப்பூதி, சோமாசி மாறர் ஆகிய பதினொருவர்.

இலிங்க வழிபாட்டால் வீடடைந்தோர்: எறிபத்தர், கலயர், முருகர், கண்ணப்பர், ஆனாயர், தாயர், மூர்த்தியார், சண்டேசர், திருநாளைப்போவார், சேரமான், சாக்கியர், கூற்றுவர், தண்டியடிகள், சிறப்புலியார், பசுபதியார், கலிக்காமர், கலியர், காரியார், அதிபத்தர், நீலநக்கர், பூசலார், கணம்புல்லர், கோட்புலியார், நமிநந்தியடிகள், கழற்சிங்கர், வாயிலார், செருத்துணையார், புகழ்த்துணையார், ஐயடிகள், செங்கட் சோழர் என முப்பதின்மர்.

சங்கம வழிபாட்டால் வீடடைந்தோர்: திருநீலகண்டர், இயற்பகையார், மூர்க்கர், சிறுத்தொண்டர், திருக்குறிப்புத்தொண்டர், விறன்மிண்டர், இடங்கழியார், முனையடுவார், சத்தி, அமர்நீதியார், மெய்ப்பொருளார், ஏனாதிநாதர், புகழ்ச் சோழர், கஞ்சாறர், மாறர், காரைக்காலம்மையார், நரசிங்கர், கலிக்கம்பர், நேசர் எனப் பத்தொன்பதின்மர்.

இவர்களிற் சுந்தரமூர்த்தி நாயனார், திருத்தொண்டத் தொகை யுரைத்த நாளில் இருந்தவர் சிலர், அவருக்கு முன்னிருந்தவர் சிலர், அவர்க்குப் பிறகிருந்தோர் சிலர். எனவே திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தல் எவ்வளவு அருமை யென்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

இறைவரருளால் அழகாகப் பாடித் திருத்தொண்டர் வரலாற்றைச் சேக்கிழார் முற்றுவித்தார். அவரையன்றி வேறெவரால் இஃது இயலும்!

அறுபது பேர் தனியடியார். தொகையடியார் ஒன்பதின்மர். இவர்கள் வரலாற்றைத் திருநாவலூரிலே சிவமறையோர் மரபிலே சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் மகவாய் அவதரித்த சுந்தரர் முன்னாளில் உரைத்த திருத்தொண்டத் தொகையின் அடைவிலே, நம்பியாண்

டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியைக் கடைப்பிடித்துப் பாடினார் நம் சேக்கிழார் பெருமான்.

உட்பிரிவு: காண்டம் இரண்டு. சருக்கங்கள் பதின்மூன்று. செய்யுட்கள் நாலாயிரத்து இருநூற் றைம்பத்து மூன்று. பெயர் திருத்தொண்டர் புராணம்.

இவ்வாறு எழுதி முடித்து வைத்தார்.

## ரு. சோழர் மகிழ்ச்சி—அரங்கேற்றம். தொண்டர் சீர் பரவுவார்.

தில்லைக்குச் சேக்கிழாரைச் செல்ல விடுத்த சோழர், அடிக்கடி தூதரைச் செலுத்தித் திருத்தொண்டர் வரலாற்றின் நிலைமையை அறிந்து கொண்டிருந்தார். ஆகையால், முற்றியதென் றறிந்தவுடன் பெருங் களி ததும்ப நால்வகைப் படையுடனும் நகர மாந்தருடனுந் தில்லையை அடைந்தார். சேக்கிழார் தில்லைவாழந்தணருடனும் மடத் தலைவருடனும் அரசரை யெதிர்கொண்டார்

சேக்கிழாருடைய திருவெண்ணீறும் உருத்திராக்கக் கண்டிகையும் விளங்கும் ஒப்பற்ற சிவக்கோலத்தைக் கண்ட சோழர் உளம் நெகிழ, உரை குழற, மெய் சிலிர்க்கக் கைகளைத் தலைமீது குவித்து விழுந்து வணங்கினார். சேக்கிழாரும் எதிர் வணக்கம் புரிந்தார். பிறகு யாவருந் தில்லை யம்பலவர் திருமுன் சென்று வணங்கினார்கள்.

அப்போது அம்பலவாணர் வான்மொழி வாயிலாக, "அரசே! சேக்கிழான் நம் வாக்கால், 'உலகெலாம்' என்றடியெடுத்துக் கொடுக்க எழுதி முடித்த திருத்தொண்டர் புராணத்தைக் கேட்பாயாக!" என்று சிலம் பொலியுடன் மொழிந்தருளினார்.

அரசரும் மற்றையோரும் அத் திருவாக்கைக் கேட்டு மகிழ்ந்து மெய்யுருகி வணங்கி வாழ்த்தினார்கள். அரசர் தூதர்கள் மூலம் திருமுக மெழுதிச் செல்ல விடுத்துத் தமிழ்நாட்டிலுள்ள புலவர்களும் சைவமெய்யன்பர்களும்

மறை வல்லாரும் ஆகம நூலுணர்ந்தவரும் வந்து குழுமச் செய்தனர். தில்லை சிவலோகம் போலப் புனைவு செய்யப் பெற்றது. வந்தவர்கட்கெல்லாம் அங்கங்கே யுள்ள திரு மடங்களிலே இருக்கவும், உடை முதலியவற்றிற்கும் அறு சுவை யுண்டிக்கும் சுவை மிக்க பண்ணிகாரம் முதலிய வற்றிற்கும் எக்குறையு மில்லாதிருக்கச் சோழர் திட்ட மிட்டிருந்தார்.

பொன் மன்றின் முன்றிலே அணிசெய்து மெழுகிக் கோலமிட்டனர். அறுகாற் பீடத்தின் மேல் பசும் பட்டை விரித்து, அதன்மேல் வெண்டுகில் மடித்திட்டு மலர் தூவி மணமிக்க புகைகாட்டித் திருத்தொண்டர் புராணத்தை அதன்மேல் வைத்தனர். பிறகு, அதை வணங்கிப் பூசித்தனர். இவ் வழிபாடு முற்றிய பிறகு, அரசரும் அந்தணரும் மற்றையோருந் 'தாங்களே படித் துப் பொருள் கூறியருளல் வேண்டும்' எனச் சேக்கிழாரை வேண்டினர். சேக்கிழார் பெருமான் அவ்வாறே மங்கல முழக்குடன் இறைவழிபாடு செய்து படித்து விளக்கிக் கூறினார். எல்லாரும் பணிவுடனும் ஆர்வத்துடனுங் கேட்டனர்.

சித்திரைத்திங்களிலே, தில்லைக்கூத்தருக் குகந்த நாளும், ஆளுடைய பிள்ளையார் பிறந்த நாளும், அவர் திருஞானப் பாலுண்ட நாளும் ஆகிய திருவாதிரை நாளிலே தொடங்கி அடுத்த ஆண்டு சித்திரைத் திருவா திரை வரையிலே திருத்தொண்டர் புராண அரங்கேற்றம் நடந்தது மூவர் தேவாரமும் திருமந்திரமும் காரைக்கா லம்மையார் பாடி யருளிய இரட்டை மணிமாலை, அந்தாதி, மூத்த பதிகம் என்பவைகளும் சேரமான் பாடி யருளிய பொன்வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக் கோவை, தெய்வ வுலா என்பவைகளும் ஐயடிகள் காடவர்கோன் வெண்பாவும் உறுப்பாகவும் திருத்தொண்டர் புராணத் திருவிருத்தம் உடலாகவும் உட்பொருள் உயிராகவும் 'உலகெலாம்' (என்றெடுத்த புராணம்) நடந்தது.

வந்தவர்களிற் சிலர் திருமுறை சேர்ப்பார்கள். சிலர் எழுதுவார்கள். சிலர் வாசிப்பார்கள். சிலர் பொருளுரைப் பார்கள். சிலர் கேட்டிருப்பார்கள். சிலர் புகழ்வார்கள். சிலர் மகிழ்வர். சிலர் திருத்தொண்டர் பெருமையைச் சுவைப்பர். சிலர் சேக்கிழார் செய்த தவத்தைப் போற்று வர். சிலர் அரசரைப் புகழ்வார்கள். இவ்வாறு அவர்க ளடைந்த மகிழ்ச்சி அளவிடற் கரியதா யிருந்தது.

புராணம் முற்றியவுடன் அடியார்க ளெடுத்த சிவம் பெருக்கும் ஒலி வானத்தை முட்டியது. தில்லைவாழந் தணர் திருத்தொண்டர் புராணத்தை மலர் கொண்டு வழி பட்டனர். சோழர் அந்தத் திருமுறையைப் பசும் பட்டாற் போர்த்துப் பைம்பொற் கலத்தில் வைத்தார். அதை யானையின்மீது ஏற்றிச் சேக்கிழாரையும் அமர்வித்துச் சோழர் தாமும் பின்னு லமர்ந்து 'நான் பெற்ற பேறு' என்று கவரி கொண்டு வீசினார். இவ்வாறு யானையின்மீ தேறித் தில்லையை வலங்கொண்டு வந்தார். அப்போது சங்கு, பேரிகை, வீணை, தாளம், காளம், மணிக்காளம், பம்பை, வலம்புரி, கண்டை முதலான மங்கல இயங்கள் இயம்பின.

களிற்றின்மீது சேக்கிழாரையும் சோழரையுங் கண்ட நகரமக்கள், மலர் தூவிக் குதூகலத்துடன் வாழ்த்தி னார்கள். நகர்வலம் வந்து தில்லையம்பல முன்றிலை யடைந்தனர். திருமுறையை எடுத்துவந்து திருமுன் வைத்தனர். அரசர் கங்கைவேணியரையுங் கங்கை மரபினரான சேக்கிழாரையும் வணங்கினார். திருத் தொண்டர் புராணமாகிய இதனை முன் நம்பியாண்டார் நம்பி வகுத்த பதினொரு திருமுறைகளுடன் சேர்த்துத் திருமுறைகளைப் பன்னிரண்டாக்கினார்கள்.

"மூவ ரோது திரு முறைக ளேழுதிரு
வாதவூரர் முறை யொன்றிசைப்
பாவ ரைந்தமுறை யொன்று மூலர்முறை
யொன்று பாசுரம தாதியாக்

கோவை செய்தமுறை யொன்று சேவையர்
குலாதி நீதிமுறை யொன்றுடன்
பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை
பன்னி ரண்டென வகுத்தபின்."

(திருத்தொண்டர் புராண வரலாறு, கூ.)

செப்பேட்டி லெழுதித் தில்லை யம்பலவர் திருமுன் அமைத்தார்கள். சேக்கிழாருக்கு ஞான முடிசூட்டித் தொண்டர் சீர் பரவுவார் என்னும் சிறப்புப்பெயரும் அரசரால் அளிக்கப்பெற்றது.

பிறகு, அரசர், சேக்கிழாருடைய தம்பியார் பாலறு வாயரை யழைத்துத் தொண்டைமானெனப் பட்டமளித்துத் தம் அமைச்சராக்கினுர். சேக்கிழார் தில்லையிலேயே வாழ்ந்திருந்து சிவபிரானுர் திருவடி நீழலை யடைந்தனர்.

**சேக்கிழார் திருவடி வாழ்க!**

திருச்சிற்றம்பலம்

---

# பெரியபுராண வசனம்

## அல்லது

# திருத்தொண்டர் வரலாறு



### வாழ்த்து

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

எடுக்கும் மாக்கதை யின்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம்.

மதிவளர் சடைமுடி மன்றுளா ரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே.



*

# முதற்காண்டம்

## க. திருமலைச் சருக்கம்

### திருமலைச் சிறப்பு

(புராண வரலாறு)

பொன்மலையாகிய பனிமலையின் உயர்ந்த முடியே கயிலைமலை. அம்மலை பொன்மேனியிலே வெண்ணீறணிந்தாற்போல அழகியது; 'இப்படியர் இந்நிலையர்' என்று கூற முடியாத இறைவனாகிய சிவபெருமானார் வாழும் பேறு பெற்றது; அவர் வீற்றிருப்பதனால் மூன்றுலகும் நான்கு மறைகளும் எண்ணிலாத் தவஞ்செய்து பெற்ற புண்ணியத்தின் உருவம் போன்றது; விளக்கமுற்ற பல திருப்பதிகளையும் தளிராகக் கொண்டு படர்ந்த உலகமாகிய கொடியிலே மலர்ந்த வெண்மலர் போன்றது.

அம் மலையின் அழகிய சாரலிலே கேட்பவை: உயர்ந்த நான்மறையின் ஒலி! விஞ்சையர் யாழோசை! விண்ணவர் துந்துபியின் முழக்கம்! களிறுகள் இடியொலிக்கு மாறாகப் பிளிறும் ஒலி! பார்க்குமிடமெங்கும் காண்பவை: எண்ணிலா அமரர்கள் தண்ணிய பிறைத் திங்களை முடித்த பெருமானை வணங்கியிட்ட முடி மாலைகள்! கற்பக மாலைகள்! முனிவரர்கள் கைகுவித்துச் சிவபெருமானாரை வணங்கியிருக்கும் தோற்றங்கள்! ஐந்து பூதங்களையும் மாற்றி அமைக்கும் ஆற்றல் அமைந்த குறுங்காற் பூதங்கள் ஆடுங் காட்சிகள்!

அக் கயிலைமலையின் தூய வெண்மையை எப்படி விளம்புவது? சிவபெருமானை வழிபட நான்முகன் வரும்போது அவன் ஊர்தியான அன்னத்தை வெளியிலே விட்டுச் செல்வான். திரும்பி வரும்போது அதைக் காணமல் திகைப்பான். அன்னத்தின் வெண்மையும் கயிலையின்

வெண்மையும் ஒன்றிப் போனதால்—நிற வேறுபாடு காணப்படாததால்—அவன் விழிப்பான்! இந்த எடுத்துக்காட்டுமட்டுமே வெள்ளிமலையின் வெண்மையை விளம்பும்.

## முனிவர்களின் வியப்பு

இத்தகைய சிறப்பினையுடைய கயிலையின் அடிவாரத்திலே ஐந்தவித்த சான்றோர்களான முனிவர்கள் பலர்கூடியிருந்தனர். அவர்களுக்குத் தலைவராக உபமன்னிய முனிவர் வீற்றிருந்தார். அப் பெரியார் அந்திவண்ணத் தவரான சிவபெருமானுரை யன்றிச் சிந்தியாத சிறப்பினர். அவரையே நினைந்து நினைந்து நெகிழ்பவர்; உள்ளத்திலே வனைந்து வனைந்து மகிழ்பவர்; நாவார வாழ்த்தி வாழ்த்தி வாய் மணப்பவர்; கண்ணபிரானைச் சிவபிராளுரிடம் ஆற்றுப் படுத்தியவர்; முக்கட் பெருமானுர் அருளால் குழவிப்பருவத்திலே பாற்கடலைப் பருகிப் பசிதணிந்தவர்; பொன்மன்றத்திலே உலகுய்ய மென்மலர்த்தாளெடுத்தாடும் பெருமானுரின் சிலம்பொலியைக் கேட்டு மகிழும் புலிக்கால் முனிவரின் அருமைத் திருமகனுர்.

அப் பெரியார் முனிவர்களோடு மெய்ப்பொருளைப் பற்றி உரையாடிக்கொண்டிருந்தார். அப்போது அவர்களுக் கெதிரிலே ஆயிரம் ஞாயிறுகள் ஒன்று சேர்ந்தாற் போன்ற பேரொளி யொன்று தோன்றியது. கண்ட முனிவர்கள் கொண்டனர் பெருவியப்பு! உபமன்னியு முனிவரை வினவினர்.

உபமன்னியுவும் உற்று நோக்கினர். தம் இறைவனுரிணையடிகளை யெண்ணிச் சிறிதிருந்தனர். உண்மை விளங்கியது; உவகை யெழுந்தது. "தென் திசையிலிருந்து வன்றெண்டர் வருகிறுர்! நாவலர் பெருமான் வருகிறுர்! பரம்பொருளின் வரம் பெற்ற பாவலர் வருகிறுர்!" என வாய்விட்டுக் கூவினர். அம்மட்டிலே அமராமல் உடனே எழுந்தனர்! விழுங்கிய அன்புடனே

தொழுங் கைகள் முடிமீது குவிய விரைந்து அத் திக்கு நோக்கிச் சென்றனர்!

அந்தணர்கட்கு வந்தது ஐயம். "எம் தலைவரே! ஈதென்ன செயல்? சம்புவின் மலர்த்தாளையன்றிச் சற்றும் பிறரை வணங்காத தாங்கள் கைகூப்பி யெதிர் கொள்ளும் காட்சி மிக்க வியப்பா யிருக்கிறது! சற்று விளக்கியருள்க" என்று வேண்டினர்.

முனிவர் பெருமான் முறுவலுடன், 'தம்பிரானுரைத் தம் உள்ளத்திலே தழுவிய நம்பியாரூரர் என்னும் பெயரமைந்த இவர் நாம் தொழும் நலம் பெற்றவரே' என்றனர்.

இதைக் கேட்ட முனிவர்க ளெல்லோரும் எழுந்து அவ் வொளியை வணங்கினர். மற்றும், உபமன்னியுவை நோக்கி, "ஐயரே! தங்கள் உள்ளத்தையும் கவர்ந்த பேரொளியான அப் பெரியாரின் பெருந்தவத்தை யெங்களுக்குச் சற்றே விளக்குதல் வேண்டும்; கேட்க வேண்டுமென்னும் ஆவல் கிளர்ச்சி செய்கிறது," என்று கேட்டுக் கொண்டனர்.

## ஆலால சுந்தரர்

உபமன்னியு அதற்கிசைந்து உரைக்கின்றார்:— ஆலமுண்ட பெருமானார் தம் அடித்தொண்டு புரிபவர்களில் ஆலாலசுந்தரர் என்பவர் ஒருவர். அவர் நறுமண மலரும், திருநீறுங் கொண்டுவரும் பணிபூண்டவர். ஒருநாள் அவர் மலர் கொய்துவர மலர்ப்பொழிலை அடைந்தார். அங்கே, மலர்க்கொடிகளைப் போன்ற மங்கையரிருவர் முன்னமே வந்து மலர் கொய்து கொண்டிருந்தனர். அவர்கள் பார்வதிதேவியாரின் பணிப் பெண்கள். அனிந்திதை, கமலினி யென்னும் அழகிய பெயரினர்.

தென்னாடு செய்த சிவபுண்ணியத்தாற், குற்றமற்ற திருத்தொண்டத்தொகையை அருள வருகின்ற அப் பெரியார் அவர்களைக் கண்டதும் காதல் கொண்டனர். அப்

பாவையர்களும் ஆலால சுந்தரரைக் கண்டு காதல் வச மாயினர்.

" மாத வஞ்செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வான்அவர் மேல்மனம் போக்கிடக்
காதல் மாதருங் காட்சியில் நண்ணினார்."
(திருத் - திருமலை, உரு)

தமிழ் நாடு செய்த தவப்பயன் இது!

" கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல." (குறள் - ககOO)

ஆகவே, பேச்சொன்றுமின்றித் தத்தம் பணிகளை நிறைவேற்றச் சென்றனர்.

ஆதி முதல்வர் இதனை அறிந்தார். " மாதர்மேல் மனம் வைத்தாய் தென்னாட்டிலே தோன்றிச் சிறிது காலம் இப் பெண்களுடன் வாழ்ந்து மகிழ்ந்து திரும்புக!" எனத் தம்மை வணங்கிய சுந்தரர்க்குக் கட்டளை யிட்டனர்.

சுந்தரர் கேட்டு வாட்டமுற்றார். கலங்கிய வுள்ளத் துடன், "ஐயனே! தங்கள் திருவடித் தொண்டை விட்டுச் சிறுமை பெறவோ செல்வேன்? மக்கட் பிறவி மயக்கப் பிறவியன்றோ? மயக்கத்தால் தங்கள் மலரடியை மறக்கும் நிலை வந்துவிடுமே," என்று புலம்பினார். பிறகு, "தங்கள் திருவுளப்படியே செல்கிறேன். அங்கே, தங்கள் திரு வடியை மறந்து மயங்கினால் வந்து தடுத்தாட்கொள்ள வேண்டுகிறேன்," என்று கண்ணீர் வார வேண்டிக் கொண்டார்.

அடியார்க் கெளியவரான அண்ணலார், 'அங்ஙனமே ஆகுக!' என்று அன்புடன் அருளினார்.

அவ்வாறே தென்னாடு சென்று பிறந்து, மங்கையரொடு வாழ்ந்து, செவ்விய சைவத்தொண்டினைச் சிறப்பாகப் புரிந் தவர் வருகின்றனர்.

## தென்னாட்டின் சிறப்பு

இவ்வாறு உபமன்யு உரைத்தருள மாமுனிவர்கள் வணங்கி மறுபடியும் வினவுகின்றனர்: "நிலவுலகம் எல்லாம் ஆசைத் தளையி லகப்பட்டதே யன்றோ? அவ்வுலகில் மற்றைத் திசைகளைவிடத் தென்திசை மட்டும் எவ்வாறு சிறப்படைந்த தாகும்?"

இவ் வினவுக்கு விடையாகப் புலிக்கா லந்தணர் திருமகனார் புகல்வார்:

அந்தத் தென்னாட்டிலேதான் சிதம்பரம் என்னும் பெரும்பதி உள்ளது. சிதம்பரத்தின் சிறப்பை எப்படிக் கூறுவது? எந்தையாகிய புலிக்கா லந்தணர் கூத்தப் பெருமானை வழிபட்டது அந்தச் சிதம்பரமே என்னிரு கண் மணியாகிய இறைவனார் உலகம் வாழ ஆடிய பொன்னம் பலத்தை யுடையது அந்தச் சிதம்பரமே. அதற்குத் தில்லை யென்றும், பெரும்பற்றப் புலியூரென்றும் வேறு பெயர்களுமுண்டு. இத்தகைய சிறப்புடைய திருப்பதியை யுடையது எத் திசை?

அந்தத் தமிழ் நாட்டிலேதான் நிலமடந்தையின் உளத் தாமரையாக விளங்குந் திருவாரூர் என்னும் திருப்பதி யுள்ளது; உலகை யீன்ற கன்னிகையான உமையவள் முப்பத்திரண் டறங்களையும் உலகுக் குணர்த்தியதும் எம் பிரானைக் கம்பையாற்றில் வழிபட்டதுமான காஞ்சி விளங்குகிறது; நந்தியெம்பெருமான் தவஞ்செய்து அந்தி வண்ணனா ரருளைப் பெற்றதான திருவையாறு உள்ளது; நாடுகளிலே ஈடும் எடுப்புமற்ற சீர்காழி யிருக்கிறது. இன்னும் பல திருப்பதிகள் என்னை யாளுடைய இறைவனை வழிபடுதற் கேற்றவைகளாக அமைந்துள்ளன. ஆகவே, அத் திசைக்கு எத் திசையும் ஈடாகாது

இவ்வாறு அந்தத் தென்னாட்டின் சிறப்பைக் கேட்ட அந்தணர்கள் அகமகிழ்ந்து, 'ஆலால சுந்தரர் தென்னாடு

சென்று வந்த வரலாற்றைச் செப்பி யருள்க' என வேண்டிக் கொண்டனர்.

உபமன்யு முனிவர் உள்ளங் களித்து, 'அவர் வரலாற்றையும், அவராற் பாடப்பெற்ற சிறப்பினையுடைய மற்றையோர் வரலாற்றையும் அறிந்தவாறு செப்புவேன்' என்று கூறி யருளினர்.

---

## திருவாரூர்ச் சிறப்பு

அந்தத் தமிழ் நாட்டிலே சோழ நாடு சிறப்புடையது; காவிரி பாயும் வளமுடையது. 'சோழ வளநாடு சோறுடைத்து' என்ற பொன்மொழியாற் போற்றுவார்கள் அதனை. அதற்குத் தலைநகராகப் புகார், உறையூர், திருவாரூர், கருவூர், திருச்சேய்ஞலூர் என்னும் பல நகரங்கள் இருந்தன. அவற்றுட் சிறந்தது திருவாரூர். அது திருமகள் சிவபிரானை வழிபட்ட இடம். ஆகையால், அதற்குக் கமலாலயம் என்றும் பெயர் உண்டு. நகரத்திற்கு மட்டு மன்றித் திருக் கோயிலுக்கும், திருப் பொய்கைக்கும் அப் பெயர் வழங்குகிறது.

மநுநீதிச் சோழ ரென்பவர், அந்நகரி லரசுபுரிந்து வந்தார். அவர் தம் குடிகளுக்குக் கண்ணும் உயிருமாயிருந்தார். பூங்கோயில் (கமலாலயம்) அமர்ந்த புற்றிடங் கொண்ட பெருமானுருக்கு வழிபாடு செய்ய வேண்டும் பொருள்களைத் தவறாமல் அளிப்பார். 'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்பதை அங்குக் காணலாம். அவர் ஆணை உலகெங்கும் அமைந்தது. அவர் வாயிலில் அரசர் கூட்டம் திறையோடு காத்திருந்தது.

வீதிவிடங்கராகிய புற்றிடங்கொண்ட பெருமானருளால் அவருக்குத் திருமகனொருவன் பிறந்தான்; சைவக் கொழுந்தாய் வளர்ந்தான்; கலையின் உருவாய்க் காட்சியளித்தான்; போர்த்தொழிலுக்குப் புகலிடமாய்ப் பொருந்

தினான். அவனைக் கண்டோர் மக்கட் பிறப்பும் விரும்பத் தக்கதே என வியந்தனர். இவ்வாறு இளஞாயிறு போல வளர்ந்து, இளவரசனாகும் நிலையை அடைந்தான்.

ஒருநாள் அவன் தேர்மீ திவர்ந்து தெருவழியே சென்றான். அவனைச் சுற்றி அவன் தோழர்கள் வந்தனர். படைவீரர்கள் அணி யணியாய்ச் சென்றனர். மங்கல முரசு ஒலித்தது. அப்போது அரசர் முறையை அறக்கடவுள் ஆராய்வதுபோல ஒரு நிகழ்ச்சி நடந்தது. ஆவின் கன்றொன்று துள்ளி யோடி வந்து தேர்க்காலில் அகப்பட்டது! ஆவியும் விட்டது! ஐயோ! கன்றிறந்ததைக் கண்ட ஆவானது கதறியது! சுழன்று சுழன்று ஓடி வந்தது! சோர்ந்து விழுந்தது!

அரசர் குலக்கொழுந்து அடைந்த வருத்தத்தை யென்னென்பது? கலங்கினான்! துடித்தான்! ஏங்கினான்! கண்ணீர் வடித்தான்! சொல் தடுமாறினான்! 'பசுவுங் கன்றும் என் அறிவைப் பறித்தனவே!' என்று பதைத்தான். பசுவைப் பார்ப்பான்; கன்றைக் காண்பான்; உயிர் சோர்வான்! பெருமூச்சு விடுவான்! 'மனு நெறி தவறாத மன்னனுக்கு வசையுண்டாக்கப் பிறந்தேனே!' என மயங்குவான்.

இவ்வாறு துன்புற்ற அவன் ஒருவாறு தேறினான்; 'என் தந்தையார் அறிவதன்முன் நூல்களில் விளக்கியுள்ள கழுவாய் (பரிகாரம்) கண்டு பழியை நீக்கிக்கொள்வேன்' என்று மறையவரை நாடிச் சென்றான்.

தன் உயிரான கன்றை யிழந்த பசுவானது ஓரிடத்திலும் நிலைகொள்ளாமல் அங்கு மிங்கும் அலைந்தது! நெருப்பைப் போல மூச்சு விட்டது! விம்மியது! கண்ணீர் வடிய அரண்மனையை நோக்கி ஓடியது. ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினால் அடித்தது! அதனாலெழுந்த ஒலி, பழியை யறிவிக்கும் பறை யோசையோ, பாவத்தின் முழக்கமோ, அரசிளங் காளையின் ஆவியைப் பறிக்க வருங் கால

னூர்தியின் கழுத்துற்ற மணியின் ஒலியோ என்று ஐயுறும்படி அரசர் காதிலே தாக்கியது

வேந்தர் அதைக் கேட்டுப் பதைபதைத்து விரைந்து வெளியே வந்தார். வாயிற்காவலர் வந்து வணங்கிப் பசுவானது மணியைப் பதைப்புடன் அடித்ததைப் பகர்ந்தனர். அரசர் கலக்கத்துடன் அதை நோக்கினூர். பிறகு, அமைச்சரை இகழ்ச்சியுடன் பார்த்தார். அப்போது, அமைச்சர்களில் அறிவினும் ஆண்டினும் முதிர்ந்த அமைச்சன் அரசரை வணங்கி ஆவினுக்கு நேர்ந்ததை நடுக்கத்துடன் மொழிந்தான்.

நஞ்சுபோல அச் செய்தி அரசருக்கு அறிவைக் குழப்பியது. ஆவுற்ற துயரத்தைத் தாமும் அடைந்தார்! எவ்வாறு இவ் வினை வந்ததென் றேங்கினார்! 'என் செங்கோல் நன்று!' என நகைத்தார்! 'என் செய்தால் இப் பசுவின் வருத்தம் நீங்கும்?' என்பார்! கன்றை யிழந்து வருந்தும் அதன் முகத்தை நோக்கிச் சோர்வார்! இவ்வாறு அவரடைந்த கவலையை எப்படி யெடுத்துச் சொல்வது?

அமைச்சர்கள் அவர் நிலை கண்டு வருந்தினர். பிறகு, அவர் அடிவணங்கி மெல்லென மொழிகின்றனர் :

"உளம் வருந்துவதால் உறுவது ஒன்றுமில்லை. அரசர்குல விளக்கைக்கொண்டு, ஆவைக் கொன்றவர்க்கு மறைகளில் வகுத்திருக்கும் முறைப்படி கழுவாய் காண்பதே தக்கது"

அரசர் அறைகின்றார்: "நீங்கள் கூறும் வழக்கமென்கிற கழுவாயானது ஆவின் வருத்தத்திற்கு மருந்தாகுமா? நான் என் மைந்தனை யிழக்கிறே னென்று கருதி நீங்கள் கூறுகிறீர்கள்! நான் இதை ஒப்புக்கொள்வது தகுமா? அறம் தேய்ந்து விடுமே! 'அல்லவை செய்தல் அறமே கூற்றுவனாகும்' என்பதை மறந்தீர்களே! அரசன் உலக காவலன். அவன் தன்னாலும்

தன் வேலைக்காரர்களாலும் கள்வராலும் பகைவராலும் பிற உயிர்களாலும் உண்டாகும் அச்சத்தை ஓட்டவேண்டாமா? அறத்தைக் காப்பதும் அதுதானே?

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ."

(திருத் - திருநகர், ௩௬)

மேலும், என் மகன் செய்த தீவினைக்குப் போக்குத் தேடிவிட்டு, மற்றவன் ஓருயிரைக் கொன்றால் மட்டும் அவனுக்குக் கொலைத்தண்டனை கொடுக்கலாமா? அவ்வாறு செய்தால் மனுவின் அறம் என்னால் அழிந்ததாய் முடியுமே! ஆகவே, எனக்குப் பழியைத் தரவே நீங்கள் இதைக் கூறுகிறீர்கள்!"

மந்திரிகள் நடுங்கி, "இது உலகவழக்கம். இதைப் போல் முன்னம் நிகழ்ந்துள்ளது! கொல்வது மரபாகாது. மறைமொழிந்தவாறு அறம் புரிவதே பழமையான நெறி," என்று வணக்கத்துடன் எடுத்துக் கூறினர்.

இவ்வுரையைக் கேட்ட அரசரின் முகம் அனலிற் பட்ட தாமரை மலரென வாடியது.

"நீங்கள் கூறுவது பழுது. அறநெறியின் உண்மையை நீங்கள் அறிகிலீர். எந்த வுலகில் இவ்வாறு ஓர் ஆவானது தன் இடரை யறிவிக்க மணியை அடித்தது? கதறி யழுதது? மேலும், இத் திருநகர் நான்முகனும் திருமாலும் வழிப்படச் சிவபிரானர் வீற்றிருக்கும் இடமாகும் இத்தகைய தூய நகரத்தில் தோன்றிய உயிரைக் கொன்றானையால் அவனைக் கொல்வதே துணிவு. மேலும், பசு வருந்துவதைப்போல் நான் வருந்துவதே ஏற்றது!" என்றார் அரசர்.

இந்த முடிவை அரசர் கூறியவுடன் அமைச்சர்கள் ஒன்றுங் கூற ஒண்ணாமல் அகன்றனர்.

அரசர், உடனே தம் மைந்தனை வரவழைத்தார்! ஒரு மந்திரியைக் கூப்பிட்டார்! "இவனை அந்தத் தெருவிலேயே தேர்க்காலில் கிடத்தித் தேரை ஓட்டுக!" என்றார். ஆனால், அம் மந்திரி அது செய்யாமல் தன்னுயிரையே மாய்த்துக்கொண்டான். அரசர் அதுகண்டு வருந்தித் தம் மகனை யழைத்துக்கொண்டு அங்குச் சென்றார்.

என் னென்பது! அறத்தின் வழி செல்வதே தம் கடமை யென எண்ணினார் போலும்! தம் குலத்திற்கு ஒரே மைந்தன் என்றும் உன்னவில்லை. தம் மகன் மார்பிலே தேர் உருளை பதியும்படி தேரைச் செலுத்தினார்! அரசாள்வதன் அருமையை அறிவார் யாரோ?

குடிகள் கதறிக் கதறிக் கண்ணீர் மழை பெய்தனர்! வானவர் மலர்மழை பெய்தனர்! அருள்வள்ளலாகிய வீதிவிடங்கர் பொறுப்பரோ? அரசர் கண் காண வெள் விடைமேல் எழுந்தருளினார்; அக் காட்சியை என்னென்பது?

இளம்பிறை தங்கிய திருச்சடை! திருவிழி ஒளிரும் நெற்றி! உமை யம்மையார் விளங்கும் இடப் பங்கு! சிவகணங்கள் நெருங்கிவரும் பக்கங்கள்!

இச் காட்சியைக் கண்ட அரசர், பேரன்புடன் விழுந்து வணங்கினார்.

உடனே, இறைவ ரருளால் உயிர் நீங்கிய ஆவின் கன்றும், அரசின் கன்றும், அமைச்சனும் ஆருயிர் பெற்றெழுந்தனர்! "முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?"

"அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியு முடனெழவும்
இன்பரி சானென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?"
(திருத் - திருநகர், சஎ)

அரசர் தம்மை மறந்தார்.

அரசகுமாரன் ஓடிவந்து தந்தையை வணங்கினான். அவனைத் தழுவி அரசர் மகிழ்ந்தார். மந்திரியும் வணங்கினான் அவன் அன்புக்கு அரசர் அடைந்த மகிழ்ச்சி அளப்பரிது. ஆவின் கன்றோ துள்ளி யோடித் தன் தாயை அடைந்தது. அதன் மடியிலே தானே சுரந்து வழியும் பாலைப் பருகிக் களித்தது! பசுவும் தன் கன்றை மோந்து பார்த்து மகிழ்ந்தது. சிவபெருமான் தம் பூங் கோயிலைச் சார்ந்தார். உலகமெல்லாம் இந்த வியப்பை உன்னி யுன்னி உள்ளங் களித்தது. இவ்வாறு, மனுச் சோழருடைய மாண்பை மக்களறியச் செய்த வீதிவிடங் கப்பெருமான் வீற்றிருக்கும் திருவாரூரின் சிறப்பை எப்படி இயம்புவது?

---

## திருக்கூட்டச் சிறப்பு

பூங்கோயில் எனப் போற்றப் பெறும் திருவாரூரின் உளத் தாமரையாகிய அத் திருக்கோயிலின் எதிரே தேவாசிரியன் என்னும் திருமண்டபம் ஒன்றுளது. நான் முகன், இந்திரன், திருமால் முதலான தேவர்கள் புற்றிடங் கொண்ட பெருமானை வணங்க வந்து தங்குமிடம் ஆகை யால் அப்பெயர் பெற்றது.

அத் திருமண்டபத்திலே வீற்றிருக்கும் அடியார் களின் மெய்யிலே விளங்குந் திருவெண்ணீற்றின் ஒளி யாலும், ஐந்தெழுத் தோசையாலும், தூய நிலைமையாலும் அது திருப்பாற் கடலெனத் திகழ்ந்தது!

அங்குள்ள அடியவர்கள் பிறைமுடிப் பெருமானால் ஆட்கொள்ளப் பெற்றவர்கள்! உண்மை யன்பினர்! திருத் தொண்டு செய்யுந் திருக் கையினர்! திருவெண்ணீறு விளங்கும் மெய்யினர்! வெள்ளையாகிய தூய உள்ளத்தி னர்! உலகம் போற்றும் புகழினர்! உரைக்க முடியாத பெருமையினர்! ஐம்பெரும் பூதங்களும் நிலை கலங்கினு லும் சிவபெருமான் மலரடி யன்பிலே கலக்கமுறாத

யுற்றனர். எதிர்கொண்டு வந்து அன்புடன் வணங்கினர். அவர்கள் வணங்குமுன்னரே நம்பிகளும் வணங்கினர். பிறகு, அவர்களுடன் தில்லையின் திருவீதியினை வணங்கிச் சென்றனர்.

தில்லைத் தெருக்களில் எங்கும் மறையொலி கேட்கும்! நடன அரங்கிலே பெண்கள் நடனமாடுஞ் சிலம்பொலி கேட்கும்! மணமிக்க நறுமலர் மாலைகளிலே வண்டுகளின் ரீங்காரம் கேட்கும்! ததும்பும் அன்பினாலே நீர்வாரும் கண்களையுடைய அடியவர் கூத்தப்பெருமானை வாழ்த்தும் ஒலி கேட்கும்!

கண்ட கண்கள் வேறிடந் திரும்பாத காட்சியை யுடைய அத் தில்லையின் அழகைச் செப்புவதெப்படி? உலகிலுள்ள அழகெலாம் ஒருங்கே கொழித்துவைக்கப் பட்டிருக்கிறது என்பது மிகையாகாது. சுந்தரர் இக் காட்சிகளைக் கண்டு மகிழ்வுடன் திருச்சிற்றம்பல வடக்கு வாயிலை யடைந்தார்.

திருவாயிலைக் கண்டவுடன் பேரன்பினாலே மெய் சிலிர்க்க, இன்பக் கண்ணீர் வடிய விழுந்து வணங்கினார். எழுந்து வலங்கொண்டு திருமறையின் முதலிலும் நடுவிலும் முடிவிலும் அன்பருடைய உள்ளத்திலும் விரிந்த பேரொளி யாகிய திருச்சிற்றம்பலத்தின் திருவாயிலில் நுழைந்தார். அஞ்சலியாகக் கூப்பிய கைகளோ, பொன்னம்பலக் காட்சியிலே ஈடுபட்ட கண்களோ, உள்ளமோ அன்பிலே முந்தியதென் றறிய முடியாமற் சென்று திருக்களிற்றுப் ... யாரின் அருகில் விழுந்து வணங்கி யெழுந்தார்.

...ாது, அவருடைய ஐம்பொறிச் செயலையுங் ...ண்டன. நான்கு கரணங்களும் சிந்தையே ...ங்களும் சாத்துவிகமே யாயின. இவ் ...ந்து, அம்பலக்கூத்தனின் ஆட்டக் ... டு, வேற்றுமையில்லாத — கலப் ...ள்ளத்திலே முழுகினார்.

"ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
திருந் துசாத்து விகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

(திருத் - தடுத்தாட். ௧0௬)

அன்பினாலே, தம்மை மறந்துநிற்கும் ஆரூருடைய நம்பி கேட்கும்படி, "திருவாரூரில் நம்மிடம் வருக!" என்னும் இறைவனார் அருள்மொழி யெழுந்தது. அம்மொழி கேட்டுத் தந்நிலை யெய்திய வன்றொண்டர் மறுமுறையும் வணங்கி, வெளிவந்து, பேரம்பலத்தை வலங்கொண்டு பணிந்து, தென்வாயில் வழியாக வெளிவந்தார்.

பிறகு, கொள்ளிடத்தைக் கடந்து, சீர்காழியை நெருங்கினார். ஆளுடையபிள்ளையார் தோன்றியருளிய திருப்பதி யென அதனை மிதிக்க அஞ்சி, வெளியிலிருந்தே வணங்கினார். தோணிபுரப் பெருமானாரும் தம் திருக்கோலத்தைக் காட்டியருளினர். திருப்பதிகம் பாடி வணங்கினார். பின்னர்த், திருப்புன்கூர் முதலான தலங்களை வணங்கிக் காவிரியைக் கண்டார். மணமிக்க மலர்களையும் மணிகளையுங் கொழிக்குந் தமிழ்க் காவிரியிலே நீராடினார். பிறகு, திருஅம்பாமாகாளம், திருப்புகலூர் ஆகிய திருப்பதிகளை வணங்கித் திருவாரூரை நெருங்கினார்.

திருநாவலூர்ப்பெருமான் எழுந்தருள[illegible]
ரூர்மக்கள் சிவபிரானாருளா லறிந்திர[illegible]
யால், அமராவதி போலத் திருவார[illegible]
மங்கல முரசுகள் இயம்ப நகருக்[illegible]
கொண்டு வணங்கினர்.

## 5. திருவாரூரை வணங்குதல்—தம்பிரான் தோழர்—திருமணக்கோலப் பெருமாள்

வந்து வணங்கிய அடியார்களுக்கெதிரே அஞ்சலி செய்துகொண்டு, அவர்களுடன் திருவாரூர்த் திருவீதியிலே சென்றார். அப்போது, 'எந்தை யிருப்பதும் ஆரூர்! அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்!' என்று பேரன்புடன் திருப்பதிகம் பாடிக்கொண்டே சிவபெருமானார் திருக்கோயிலைச் சேர்ந்தார்; வாயிலில் விழுந்து வணங்கினார்; தேவாசிரிய மண்டபத்தைத் தொழுதார்; ஊனும் உயிரும் அன்பினாலே உருகத் தலைமீது குவித்த செங்கைகளோடு திருக்கோயிலினுள்ளே புகுந்தார். புற்றிடங்கொண்ட பழம்பொருளைப், பூங்கோயிலமர்ந்த இறைவரை, யார்க்கும் பற்றை யருளும் பரமனைத், திருமகளுக்கருளிய தெய்வத்தை மண்மேல் விழுந்துவணங்கி யாக்கை யெடுத்த பயனைப் பெற்றார்!

வணங்கி யெழுந்து தமிழ்த்திருமறை பாடித் தொழுதார். அப்போது, 'நம்மை உனக்குத் தோழமையாகத் தந்தோம்! நீ இனி நாம் முன்பு தொண்டுகொண்ட வேள்வியில் அன்று பூண்ட திருமணக்கோலத்துடனே நம்மைப் பாடி உலவுக!' என்றொரு திருமொழி இறைவரருளால் வானிலே எழுந்தது! அம்மொழி கேட்ட வன்றொண்டர், "மறையவராக ஆட்கொள்ள வந்தருளிய பெருமானாரே! திருவாரூர் மாணிக்கமே! உமையொரு பங்கரே! தங்கள் பேரருளின் திறத்தை யென்னென்பேன்?" என்று வாழ்த்தி வணங்கினார். பிறகு, அடியார் சூழக் கோயிலை ...லம் வந்து வணங்கி வெளிப்பட்டார். அன்று முதல், ...ரான் தோழர்' என்றே அடியவர்களெல்லோரும் ...ார். வன்றொண்டருந் திருமணக்கோலத்துடன்

## ... பரவையார் திருமணம்

... ஆலாலசுந்தரரைக் கண்டு காதலித்த ...ி என்னும் இருவருட் கமலினி

என்பவர் திருவாரூரிலே உருத்திர கணிகையர் மரபிலே பரவையார் என்னுந் திருப்பெயருடன் பிறந்தார். மானின் இளம்பிணையோ, தெய்வ அரும்போ, தேனின் இளம் பதமோ, பவளக்கொடியோ, திங்கட்கொழுந்தோ என்னும் படி வளர்ந்தார். அவரழகுடன் உமையம்மையாரிடம் வைத்த அன்பும் நாளுக்குநாள் வளர்ந்து பொங்கியது. பேதைப் பருவங் கடந்து மங்கை நிலையை அடைந்தார்.

அவர், ஒருநாள், வழக்கம்போற் புற்றிடங்கொண்ட பெருமானை வணங்க வந்தபோது வன்றொண்டர் கண்க ளுக்கு விருந்தானார். நாவலர்பெருமான் வியப்புந் திகைப் பும் அடைந்தார். 'கற்பகப் பூங்கொத்தோ! அழகு செய்த புண்ணியமோ! முகிலைச் சுமந்து குவளையும் பவளமுந் திங்களும் மலர்ந்த மலர்க்கொம்போ! சிவபெருமானு ரருளோ!' என்று மயங்கி நின்றார்.

"கற்பகத்தின் பூங்கொம்போ! காமன்தன் பெருவாழ்வோ!
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ! புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ!
அற்புதமோ! சிவனருளோ! அறியேன்" என் றதிசயித்தார்.
(திருத் - தடுத்தாட். கசம0)

பரவையாரும் இவரைக் கண்டவுடன் தம் உள்ளத் தைப் பறிகொடுத்து, 'இவர் யாரோ! முருகப்பெருமானோ! விஞ்சையரோ! சிவபெருமானு ரருள்பெற்றவரோ! என் உள்ளம் ஏன் இவரிடம் சுழல்கிறது!' என்று கலங்கினார்.

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ! பெருகொளியால்
தன்னேரில் மாரனோ! தார்மார்பின் விஞ்சையனோ! [னோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடை
என்னே! என் மனந்திரித்த இவன்யாரோ!" என
(திருத் - தடு

அவர் நோக்குடன் தம் நோக்கமும்
மாறி ஒருவருள்ளத்தே மற்றவர் புகுந்
ரருள்வழியே இருவருள்ளமும் ஒ

யார் நாணம் கொண்டு அடியவரழகிலே ஈடுபட்டு நின்றார். எனினும், சிவனாரைத் தொழவேண்டும் என்னும் பேரன்பு, காதலைத் தடைசெய்யக் கோயிலினுட் புகுந்தார்.

அவர் சென்ற பிறகு, நம்பிகள் அங்குள்ளவரை வினவி, யாவரென் றறிந்து, காதல் மிகுந்து, அவரை மணம்புரிய வேண்டுமெனும் எண்ணம் வளரத் தியாகப் பெருமானார் திருவடிகளை வணங்கி வெளிவந்து தேவாசிரிய மண்டபத்தைச் சேர்ந்து தங்கினார். பரவையாரும் தம் மாளிகையடைந்தார்.

மாலைப்பொழுது நீங்கியது. இரவு வந்தது. 'சிவ பரம்பொருளின் அருளைப் பெற்ற நாவலர் பெருமானே இவ்வாறு கலங்கினால் பெண்களின் காதலை வெல்ல வல்லவர் யார்?' என்றெண்ணி, இரவாகிய பெண் முறுவல் செய்வது போலத் திங்களும் புறப்பட்டது. அத்திங்களின் நிலவு மண்ணுலகத் துயிர்கட்கெல்லாம் இன்பமும் குளிர்ச்சியும் அளித்து, அண்டமெலாம் இறைவருடைய திருவெண்ணீற்றின் ஒளிபோன்று பரவியது. பரவையாரின் நினைவால் வன்றொண்டருக்கு அந்நிலவு வெப்பத்தை யளித்தது. பரவையாரும் தம் மாளிகையை யடைந்த பின் தம் தோழிகளை வினவினார்: வன்றொண்டரென் றறிந்தவுடன் காதல் வளர்ந்தது. அவரையே மணக்க அவர் விரும்பினார்.

தியாகர் அடியார்கள் கனவிலே தோன்றிப் பரவையாரை வன்றொண்டருக்கு மணம்புரிந்து வைக்கும்படி ஆணையிட்டருளினார். மேலும், ஆரூரர் கனவிலும் பரவை[illegible]ர் கனவிலும் சென்று திருமண நிகழ்ச்சியைத் தெரிவித்தரு[illegible]ினார். ஆகவே, நன்னாளிலே இருவருக்கும் அடியார்கள் தி[illegible]ருமணம் புரிந்து வைத்தனர். இவ்வாறு இவர்களின் கய[illegible]லக்காதல் இறைவரருளாற் கைகூடியது.

சுந்தரர் ப[illegible]ரவையாருடன் கூடி வாழும் நாளிலே, ஒரு நாள் தியாகரை வணங்கத் திருக்கோயிலை நண்ணினார். அப்போது தேவாசிரிய மண்டபத்திலே திருத்தொண்டர்

கள் குழுமியிருந்தனர். அவர்களைக் கண்டவுடன் இவர்களுக் கடியனாகும் பேறு கிடைக்குமோ என்ற எண்ணத்துடன் திருக்கோயிலினுட் புகுந்தார். அவர் கருத்தை முற்றுவிக்கக் கொன்றைமுடியார் திருவுளங்கொண்டு எழுந்தருளினார். ஆண்டவரின் அருளை நினைந்த வன்றொண்டர் நிலமிசை வீழ்ந்து வணங்கி யெழுந்து வாழ்த்திக் கைகுவித்து நின்றார்.

"நம்பியே! நம் அடியார், பெருமையினாலே தமக் கொப்பில்லாதவர்! ஒரு குறையுமற்றவர்! உலகை வென்றவர்! அரிய நிலையி லிருப்பவர்! அன்பினாலேயே இன்பத்தை யடைபவர்! அவர்களை நீ வழிபடல் வேண்டும்."

"பெருமையால் தம்மை யொப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்து நின்றார்
இவரைநீ அடைவாய் என்று."

(திருத் - தடுத்தாட். ௧௧௬)

"அடியேன் குற்றந்தீர்ந்த நன்னெறியைப் பெற்றேன்!"

"நீ அவர்களைத் தமிழ்த்தொடையாற் பாடல் வேண்டும்"

"அடியேன் அவர்களைப்பற்றி ஏதும் அறியேனே!" என்று நம்பியாரூரர் நடுக்கத்துடன் வணங்கினார்.

இறைவர் புன்முறுவல் செய்து தம் திருவாயால், "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று தொடங்கிப் பாடும்படி அருள்செய்து மறைந்தருளினார்.

திருநாவலூர்ப்பெருமான் குவித்த கைகளுடன் அரனருள்பெற்ற அடியார் இருக்குந் தேவாசிரிய மண்டபத்தை-

அணைந்தார் பலமுறை அவர்களை வணங்கினார். இறைவர் அடியெடுத்துக் கொடுத்தவாறே தில்லைவாழந்தணரை முதலாகக்கொண்டு, ஒவ்வொருவரையுந் தனித்தனிக் குறிப்பிட்டு, அவர்க்கடியேனென்று திருத்தொண்டத் தொகையைப் பாடியருளினார். என்னே அடியார் பெருமை!

## 7. குண்டையூர்க்கிழவர் திருப்பணி

திருநாவலூருக்கருகிற் குண்டையூரிற் பெரியார் ஒருவர் இருந்தார். அவரைக் குண்டையூர்க் கிழவரென்றே அழைப்பார்கள். அவர் வன்றொண்டரிடம் பேரன்புடையவர். ஆகையால், உணவுக்கு வேண்டும் நெல்லையும், கறிகாய் முதலானவற்றையும் பரவையார் திருமாளிகைக்குக் கொடுத்துவருவது வழக்கம்.

இந்நிலையில் கொடிய வற்கடம் (பஞ்சம்) உண்டாயிற்று. உணவுக்கு ஒருநாள் முட்டுப்பாடு நேர்ந்தது. பரவையார்க்குக் கொடுக்கவும் நெல்லில்லை. அன்று குண்டையூர்க்கிழவர் மிகவும் வருந்தினார். உணவை உட்கொள்ளாமல் உம்பர் தலைவர் திருவடிகளை வழுத்தியவராய்த் துயின்றார். அவ்விரவிற் கனவிலே கண்ணுதலார் தோன்றி, "ஆரூரனுக்குக் கொடுக்க நெல்லளித்தோம்," என்றருளினார்.

விடியற்காலையிலே, வன்றொண்டரை வாழ்த்தியவாறு துயில்நீங்கி யெழுந்து, பொன்மலை வில்லார் அருளிய நென்மலையைக் கண்டு திகைப்புற்றார்! இந்த நெற்குவியலை அவரிடம் எப்படிக் கொண்டு சேர்ப்பதென்று ஏங்கினார்! முடிவில் நாவலர் பெருமானையே வினவவேண்டும் என்று திருவாரூருக்கு வந்தார். அவர் வருவதை அந்திவண்ணர் அருளாலறிந்த திருமணக்கோலப்பெருமாள் எதிர்கொண்டு வந்தார். குண்டையூர்க்கிழவர் அவர் திருவடிகளில் வணங்கி, நெல் கிடைத்த வியப்பினை விளம்பினார். தம்பிரான் தோழர் அன்புடன், "தண்பிறை யணிந்தவரே உமக்கு நெல்லளித்தா ரென்றால், நீர் செய்த புண்ணியம்

மிகப் பெரிது,'' என்று முகமன் கூறினார். நென்மலையைக் காணக் குண்டையூர்க் கிழவரோடு சென்றார்; கண்டு பெருவியப்படைந்தார்!

பிறகு, அருகிலுள்ள திருக்கோளிலிக்குச் சென்றார். அங்குள்ள பெருமானார் திருவடிகளை வாழ்த்தி, நெல்லைத் திருவாரூருக்குக் கொண்டுபோம் வகையை அருள்செய்ய வேண்டினார். அப்போது, 'பகல் கழிந்தவுடன் பரவையின் மனைமட்டும் இன்றித் திருவாரூர் நிறைய நெல்லைக் கொண்டுவந்து நம் பூதங்கள் சேர்க்கும்,' என ஒரு மொழி வானில் எழுந்தது. ஆரூரர் ஆறணிந்த திருமுடியாரருளை நினைந்து மறுமுறையுந் தொழுது எழுந்து திருவாரூர் வந்து சேர்ந்தார். அன்றைய இரவிலே அரனாருளிய வாறு நெற்குவியல்கள் திருவாரூர் முற்றும் நிறைந்தன.

விடிந்தது! எங்கும் நெற்குவியல்கள்! வழி யென்பதே தெருவிலில்லை! கண்ட இடமெங்கும் கரையில்லாத நெற்குவியல்கள்! மலைமலையாக நெற்குவியல்கள்! திருவாரூர் மக்கள் செய்வதறியாமல் திகைத்து நின்றனர். பரவையார் கண்டு, பரமனார் திருவருளை நினைந்து வணங்கினார். அவரவர் வீட்டுக்கருகிலும் எதிரிலும் உள்ள நெற்குவியல்களை அந்தந்த வீட்டுக்காரரே எடுத்துக்கொள்ளலாம் எனப் பறையறைந்து தெரிவிக்கச் செய்தார்.

வன்தொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பார்
'இன்றுங்கள் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்தங்கு மாளிகையிற் புகப்பெய்து கொள்க!' என
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார்.
(திரு-ஏயர்கோன், உ௮)

"நல்லா ரொருவர் உளரேல் அவர்பொருட்டு - எல்லார்க்கும் பெய்யும் மழை,'' என்பது எவ்வளவு உண்மை மொழி! திருவாரூர்ப் பஞ்சம் தெருவோடு போயிற்று! எல்லோரும் (பரவையா ருட்பட) நெற்கூடுகள் கட்டி நெல்லைத் தொகுத்துவைத்தனர்.

## 8. சிங்கடி வனப்பகையப்பன்

திருநாட்டியத்தான்குடியிற் கோட்புலி நாயனு ரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஆரூரரிடம் பேரன்புடையவர். ஒருநாள் அவர் திருவாரூர்க்கு வந்து நம்பிகளை வணங்கித் தம் இருக்கைக்கு எழுந்தருளவேண்டு மென வேண்டினார். சுந்தரரும் அதற் கிசைந்தனர். கோட்புலியார் பெருமகிழ் வுடன் முன் சென்று நகரை அணிசெய்து, வன்றொண்டர் வருகையை எதிர்நோக்கி யிருந்தார்.

சுந்தரர், இடையிலுள்ள திருப்பதிகளையெல்லாம் வணங்கிக்கொண்டு நாட்டியத்தான்குடியை நண்ணினார். எதிர்நோக்கியிருந்த கோட்புலியார் வணங்கிப் பலவகைச் சிறப்புக்களுடன் தம் மாளிகைக்கு அழைத்துச்சென்றார். அங்கே, அளவில்லாத—கடல்போன்ற—பேரன்புடன் வழி பட்டுத் திருவமுது செய்வித்தார். பிறகு, தம் பெண் மக்கள் சிங்கடியார், வனப்பகையார் என்போரை அழைத்து வந்து வணங்கச்செய்து தாமும் வணங்கிக் குவித்த கையுடன், 'இவர்களைத் தங்கள் திருவடித் தொண்டுக் கேற்றருள வேண்டும்' என வேண்டினார்.

ஆரூரர் அருளுடன் நோக்கி, "இவர்களை என் மக்க ளாகக் கொண்டேன்," என்று கூறினார். அவர்களைத் தம் தொடைமீ திருத்தி உச்சிமோந்து வேண்டும் பொருள்களை அளித்தார். பிறகு, கோயிலுக்குச் சென்று, குன்ற வில்லியை வணங்கிப், '**பூண் நாண் ஆவதோர் அரவம்**' என்னுந் திருப்பதிகம் பாடினார். அத் திருப்பதிகத்திலே கோட்புலி நாயனாரின் திருத்தொண்டைச் சிறப்பித்தார். திருக்கடைக்காப்புச் செய்யுளிலே தம்மைச் '**சிங்கடியப்பன்**' என்று குறிப்பிட்டு வணங்கினார். 'செறிந்த' என்னும் திருப்பாட்டில் இருவருக்குந் தந்தையென அருளினார். அங்கிருந்து, திருவலிவலம் சென்று வணங்கித் திருவா ரூரை அடைந்தார்.

## 9. திருப்புகலூர்—பொற்பாளங்கள்

திருவாரூரில் திருப்பங்குனி விழா மிகச் சிறப்பாக நடைபெறும். அந்த ஆண்டிலே அவ் விழா நெருங்கிய போது, பரவையார் செலவுக்குப் பொன் பெற விரும்பித் தம்பிரான்தோழர் திருப்புகலூர் வந்தணைந்தார். அங்குத் திருக்கோயில் கொண்ட அரனாரை வணங்கித் தம் கருத்தைத் திருப்பதிகத்தி லமைத்துப் பாடினார். பிறகு, அடியாருடன் அக் கோயிலின் வாயிலிலே வந்து சிறுபோது தங்கினார். அப்போது துயில் வந்தது. ஆகவே, அங்கிருக்குஞ் செங்கற்களைத் தலைக் குயரமாக வைத்துத் தம் மேலாடையாகிய வெண்பட்டை விரித்துப் படுத்தார். அடியரும் அங்கேயே துயின்றனர்.

துயில் நீங்கிய வன்றொண்டர் தம் தலையணையாக வைத்த கற்களெல்லாம் பொற்கட்டிகளாக இருக்கக்கண்டு, வியப்படைந்து, வெண்ணிலா அணிந்த வேணியரை வணங்கித், 'தம்மையே புகழ்ந்து' என்னுந் திருப்பதிகம் பாடி வணங்கினார். அடியார்கள் கண்டு, பெருங்களிப்படைந்து, அந்தப் பொற்பாளங்களை மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஆரூரருடன் சென்றனர்.

நம்பிகள் அவரோடும் திருப்பனையூர் சென்றார். அங்கே, பேரருட் பெருமானார் திருக்கூத்தாடுங் காட்சியருளினார். கண்டு சேவித்துக் கண்களில் இன்பக் கண்ணீர் பெருக, 'மாடமாளிகை' என்று தொடங்கி, 'அரங்கில் ஆடவல்லார் அவரே அழகியரே' எனப் பாடி வழுத்தித் திருவாரூர் சேர்ந்தார்.

## 10. திருநன்னிலம் முதலிய திருப்பதிகளை வணங்குதல்

சில நாட்கள் கழித்து, அங்கிருந்து புறப்பட்டுத் திருநன்னிலம் சென்று வணங்கினார். திருவீழிமிழலை யந்தணர்கள் வணங்கி வேண்டி யழைக்கச் சென்று விடையூரும் பெருமானாரை வணங்கி, 'அடங்கல் வீழிகொண்டிருந்தீர் அடியேனுக்கும் அருளும்' எனப் பாடிப் பரவினார்.

பிறகு, திருவாஞ்சியம், அரிசிற்கரைப்புத்தூர், திருநறையூர், சித்தீச்சுரம், திருப்புத்தூர், திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், திருக்கலையநல்லூர், திருக்குடமூக்கு, திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு என்னுந் திருப்பதிகங்களை வணங்கினார். அப்புறம் திருவாலம்பொழிலை வணங்கி அங்கே அன்றைய இரவு துயின்றார். கனவிலே காளகண்டர் எழுந்தளித், 'திருமழபாடியை மறந்தனையோ?' என்றருளிச் செய்து மறைந்தார். வைகறையிலே சிவபெருமானார் திருவருளை நினைந்து நெகிழ்ந்து காவிரியின் வடகரையிலுள்ள திருமழபாடியை அடைந்தார். திருக்கோயிலினுட் புகுந்து இறைவரைப், 'பொன்னார் மேனியனே' எனத் தொடங்கி, 'அன்னே! நின்னையல்லால் இனி, யாரை நினைக்கேனே?' என்று பாடி வணங்கினார். அத் திருப்பதியிலேயே சில நாள் தங்கினார். அதன்பின் காவிரியின் இருமருங்குமுள்ள திருப்பதிகளை வணங்கிக்கொண்டு திருவானைக்காவைக் கண்டார்.

ஒருகாலத்தில் உறையூர்ச் சோழரொருவர் மாணிக்க மாலையை யணிந்துகொண்டு காவிரியில் நீராடும்போது, அது கழன்று வெள்ளத்தி லடித்துக்கொண்டு போயிற்று. அதனை யுணர்ந்த சோழர், அருகிலுள்ள திருவானைக்காவை யடைந்து ஆறணியும் பெருமானாரை வணங்கி அந்த மணி மாலையை ஏற்றருளும் என வேண்டி வணங்கினார். இறைவரும் தமக்குத் திருமஞ்சனம் ஆட்டுங் குடத்தினில் அதைச் சேரும்படி செய்தருளினார். அது திருமஞ்சனமாட்டும்போது சிவனாருக் கணியாக அமைந்தது. திருவானைக்காவை வணங்கிய திருநாவலூரர் அவ்வாறு சோழர்க் கருளியதைத் திருப்பதிகத்திலே அமைத்துப் பாடி இறைவரை வணங்கினார். பிறகு, திருப்பாச்சிலாச்சிரமத்தை யடைந்தார்.

அப்போது அவருக்குப் பொருள்முட்டுப்பாடு நேர்ந்தது. அதனால், உள்ளம் புழுங்கினார். அப் புழுக்கம் இறைவரிடத்திலே பிணக்கை யுண்டாக்கியது. ஆகையால்,

'வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்' எனத் தொடங்கி, 'இவரல்லா தில்லையோ பிரானார்?' என்று திருப்பதிகம் பாடினார். அதன் பின்னர்ச் சேவூருந் திருவினார் பொருட் குவை யளித்தருளினார். பிறகு, சுந்தரர் மகிழ்வுடன் திருப்பைஞ்ஞீலி, திருஈங்கோய்மலை என்னுந் திருத்தலங்களை வணங்கிக் கொங்குநாட்டைக் குறுகினார்.

கொங்கு நாட்டிலே, திருப்பாண்டிக் கொடுமுடிச் செல்வரை வணங்கியபோது இறைவரை மறக்க முடியாது என்னும் எண்ணம் உண்டாயிற்று. அதைத் திருப்பதிகத்திலே வைக்க விரும்பி, 'மற்றுப்பற்றெனக்கின்றி' என்று தொடங்கி, 'உன்னை நான் மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சிவாயவே' என்று நமச்சிவாயத் திருப்பதிகத்தை பாடி வணங்கினார். உலகு வாழ, அத் திருப்பதிகத்தையருளிய பின்னர்த் திருப்பேரூரைச் சேர்ந்தார். அங்கே, கூத்தப்பெருமானார் தமது பொன்னம்பலத் திருக்கூத்தைக் காட்டியருள மெய்சிலிர்த்துப் பேரின்பக் கண்ணீர் பெருக்கெடுத்தோட வணங்கினார். அவரடைந்த இன்பத்தை யென்னென் றெடுத்துரைப்பது?

'பொன்மன்றுள் ஆடுஞ் சேவடியை வணங்கும் பேறு பெற்றால் வேறு பேறு வேண்டுவதில்லை' என்னும் பெருமகிழ்வுடன் நம்பியாரூரர் அந்நகரை நீங்கினார். மலைகளையும், காடுகளையும், ஆறுகளையுங் கடந்து பரமர் வீற்றிருக்குமிடங்களை வணங்கினார். பிறகு, திருவெஞ்சமாக்கூடல், திருக்கற்குடிமலை, திருவாறை மேற்றளி, திரு இன்னம்பர்நகர் என்னும் இடங்களை வணங்கித் திருப்புறம்பயஞ் சார்ந்தார். அங்குள்ள மக்கள், 'திருவெண்ணெய்நல்லூரிற் பரம்பொருளாலே தடுத்தாட் கொள்ளும் பேறு பெற்றவர் எழுந்தருள்கின்றன' ரென்றறிந்து, எதிர்கொண்டு வணங்கி நகருக்குள் அழைத்துச்சென்றார்கள். ஆளுடைய நம்பிகள் அவர்களுடன் சென்று, திருக்கோயிலில் இறைவரை வணங்கி வெளிவந்தார்.

அந்நகருக்கருகிற் கூடலையாற்றூர் என்னும் திருப்பதியுள்ளது. அதனை வணங்காமல் திருமுதுகுன்றை நோக்கிச்

சென்றார். செல்லும் வழியிலே ஓர் அந்தணர் எதிர்ப்பட்டார். அவரைக் கண்டவுடன் வன்றொண்டர் உள்ளம் நெகிழ்ந்தது. எனவே, அவரைப் பணிவுடன் நோக்கித் திருமுதுகுன்றுக்கு வழி கேட்டார். வந்த அந்தணர் "கூடலையாற்றூர்க்குச் செல்லும் வழிதான் இது," என்றியம்பி வழிகாட்டிச் சென்றார் கூடலையாற்றூரை நெருங்கியதும் வழி காட்டினவர் மறைந்தார். பின்சென்ற வன்றொண்டர் இறைவரே யிது செய்தாரென் றறிந்து 'வடிவுடை மழுவேந்தி' எனத் தொடங்கி, 'அடிகளிவ் வழிப்போந்த அதிசயம் அறியேனே' எனப் பாடிக் கூடலையாற்றூரை வணங்கித் திருமுதுகுன்றை யடைந்தார்.

## 11 திருமுதுகுன்றிற் பொன் பெறுதல்—ஆற்றிலிட்டுக் குளத்திலே தேடுதல்

திருக்கோபுரத்தை வணங்கித் திருக்கோயிலினுட் புகுந்து வலம் வந்து வணங்கி, 'நஞ்சி யிடை' எனும் திருப்பதிகம் பாடி வணங்கினார். மற்றும், பொருள் வேண்டுமென்னுங் குறிப்பால், 'மெய்யை முற்றப் பொடிப் பூசி' என்று தொடங்கும் 'நம்பி யென்ற திருப்பதிகத்' தைப் பாடி வணங்கினார். திருமுதுகுன்றத் திறைவர் பன்னிரண்டாயிரம் பொன் கொடுத்தருளினார். ஆளுடைய நம்பிகள், 'இப் பொன்னைத் திருவாரூர் மக்கள் வியக்கும்படி அங்கே வரும்படி திருவருள் செய்யவேண்டும்' என வேண்டினார். இறைவரும், 'இப் பொன்னை மணிமுத்தாற்றிலே யிட்டுத் திருவாரூர்க் குளத்திலே யெடுத்துக் கொள்க' என்றருளினார்.

நம்பிகள் மகிழ்ந்து உரையறிய மச்சம் வெட்டி வைத்துக்கொண்டு மணிமுத்தாற்றிலே பொன்னை விடுத்தார். அண்ணலா ரருட்டிறத்தை யுலகறிய, இது சான்றாகுமென்று நினைத்தவராய்த் தில்லையை நோக்கிச் சென்றார். வழியிலுள்ள திருக்கடம்பூரை வணங்கினார். தில்லையை

காணக் காதல் பொங்கி யெழுந்தது. அன்பினாலே தம்மை மறந்து, இன்பக் கண்ணீர் வடிய, 'மடித்தாடும் அடிமைக்கண்' என்று தொடங்கித் 'தருமனார் தமர் செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வா' ராகிய 'புலியூர்ச் சிற்றம்பலத் தெம்பெருமானைப் பெற்றா மன்றே' என்று திருப்பதிகம் பாடி வணங்கினார்.

பிறகு, திருக்கருப்பறியலூரி லிறைவர் வீற்றிருக்குந் திருக்கொகுடிக் கோயிலை வணங்கிச், 'சிம்மாந்து' என்னுந் தமிழ்மாலை பாடினார். திருமண்ணிப்படிக்கரை, திருவாழ்கொளிபுத்தூர் என்னும் நகரங்களை வணங்கித் திருக்கானாட்டு முள்ளூரை நெருங்கினார். அப்போது இறைவனார் எழுந்தருளக் கண்டு தொழுதார். திரு வெதிர்கொள்பாடியையும் திரு வேள்விக்குடியையும் வணங்கித் திருவாரூரை யடைந்தார். அங்குப், பூங்கோயிலைக் கண்டவுடன் புளகமெழச் சென்று புரமெரித்த புண்ணியர் திருவடியை வணங்கிப் பரவையார் திருமாளிகையை அடைந்தார்.

பரவையார் தம் தோழிகளுடன் எதிர்கொண்டு வணங்கி, "எங்களையும் நினைந்தருளினீர்களோ?" என்று ஆராத காதலுடன் அழைத்துச்சென்றார். அவருடன் மகிழ்ந்திருக்கும் நாளிலே, திருமுதுகுன்றத்திலே மணிமுத்தாற்றிலே யிட்ட பொன்னை நினைத்துக்கொண்டு பரவையாரிடம் அதனைக் கூறினார். அவர் வியப்படைந்து காண விழைய, அவருடன் கமலாலயம் என்னும் திருப்பொய்கையை அடைந்தார். வடகீழ்ப்புறக் கரையிலே பரவையாரை நிறுத்தித் திங்களணிந்தார் சேவடியை வணங்கிக் குளத்தி லிறங்கித் தேடினார். பரமனார் இவரிடம் மேலுந் திருத்தமிழ் மாலை பெற விரும்பிப் பொன் கிடையா வண்ணம் புரிந்தருளினார். பொன்னைக் காணாமல் மயங்கி நிற்கும் கணவரைப் பரவையார் நகையாடி, "ஆற்றிலிட்டுக் குளத்திலே தேடுகின்றீர்களோ," என்றார்.

வன்றொண்டர் வெட்கமுற்றுப், "பரவையின் நகைப்பினின்று விடுவிக்கவேண்டிப் பொன்னைத் தரவேண்டும்," என வேண்டிக்கொண்டு, 'பொன் செய்த மேனியினீர்,"

என்ற திருப்பதிகத்தைப் பாடினார். அத் திருப்பதிகத்திலே எட்டுப் பாட்டு வரையினும் பொன் காட்டாதிருக்க, 'ஏத்தாதே யிருந்தறியேன்' என்னுந் திருப்பாட்டைப் பாடினார். அப்போது பொன் கிடைத்தது. அப் பொன்னை முன் கொண்டுவந்த மாற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்க, உரை தாழ இருந்தது. மறுபடியும் இறைவனைப் பணிந்து வேண்ட, மாற்றுச் சரியாயிற்று. திருவாரூர் மக்கள் யாவரும் வியப்படைய இவ்வாறு பொன்னைப் பெற்றுப் பரவையாருடன் திருமாளிகை சென்றடைந்தார்.

அங்கமர்ந்திருக்கும் நாட்களில் ஒருநாள் இறைவர் திருவருளை நினைந்து நினைந்து நெகிழ்ந்து, 'பாறு தாங்கி' யெனத் தொடங்கித் தமிழ்மாலை பாடி வணங்கினார். பிறகு, அடியார்கள் உடன் வரச் செவ்வண்ணர் திருப்பதிகளை வணங்கப் புறம் போந்தார்.

அருகிலுள்ள இடங்களை வணங்கித் திரு நள்ளாறு, திருக்கடவூர் மயானம், திருக்கடவூர் வீரட்டானம், திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு. திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி என்னுந் திருப்பதிகளை வணங்கித் திருநின்றியூரை அடைந்தார். அங்குள்ள அந்திவண்ணரை வணங்கித் திருப்பதிகம் பாடும்போது, திருநாவுக்கரசர் பாடிய நாற்பத்தொன்பதினாயிரம் பதிகங்களையுஞ் சிறப்பித்துப் பாடி வணங்கினார்.

அங்கிருந்து நீங்கும்போது திருநீடூர் வணங்காமற் சிறு தொலைவு சென்ற பின்னர் நினைந்து திரும்பினார். திருநீடூர்ப் பேரருளாளரை வணங்கி, 'ஊர்வதோர் விடை' என்று தொடங்கி நீடூர்ப் பரமனைப் பணியாமல் விட முடியுமோ என்று பொருளமைத்துத் திருப்பதிகம் பாடினார். அதன் பின்னர், அருகிலுள்ள திருப்புன்கூரை வணங்கித் திருக்கோலக்காவை அடைந்தார். அங்குள்ள பரமனார் எதிரே வந்து காட்சி கொடுத்தருளப் பேரன்புடன் விழுந்து வணங்கிப் பாடினார். அப் பதிகத்திலே, '**நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தனுக் குலகவர்முன்**—

தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும் தன்மையாளன்' என இறைவர் திருவருளைப் புகழ்ந்தார். அண்மையிலுள்ள சீர்காழியை வலம் வந்து வணங்கித் திருக்குருகாவூர் நெறி பற்றிச் சென்றார்.

## 12. திருக்குருகாவூர்—பொதி சோறு

அப்போது நீர் வேட்கையும் பசியும் நெடிது வருத்தக் களைப்புடன் சென்றனர். அந்நிலை யறிந்த ஆண்டவர் வெம்மை தவிர்க்கும் குளிர்ந்த பந்தலொன்றை அமைத்தார். தாம் ஓர் அந்தணரானார். தண்ணீரும் பொதி சோறும் வைத்துக்கொண்டு வன்றொண்டரை யெதிர் நோக்கி யிருந்தார். அவ்வழியே அடியருடன்வருந் திருநாவலூராளி தண்ணீர்ப் பந்தலிலே தங்கினார். அங்கிருந்த அந்தணரிடம் ஆர்வம் பெருக ஐந்தெழுத்தை யோதிய வாறே உரையாடினார் அந்தணர் புன்முறுவலுடன், "மிகவும் பசியோ டிருக்கிறீர்கள். காலம் போக்காமல் அடியருடன் இப் பொதிசோற்றை யருந்தித் தண்ணீரையும் பருகுங்கள்," என்று அன்புடன் இயம்பியருளினார்.

வன்றொண்டர் அதனை மறுக்கக்கூடாதென்று ஏற்றுக் கொண்டு அடியருடன் ஒரு பக்கம் போய் உண்டு நீரருந்திப் பசி தீர்ந்தனர். பொதிசோறு எல்லோருக்கும் போதுமானதாக அமுதம்போ லிருந்தது தண்ணீரோ சங்கரனார் திருவருள் போலச் சாலவும் இனிமையா யிருந்தது. இவ்வாறு உண்டு பருகிக் களைப்புத் தீர, அடியாருடன் கண்ணயர்ந்தார். களை தீர்ந்து விழித்துப் பார்க்கும்போது, தண்ணீர்ப் பந்தரும் அந்தணரும் மறைந் தருளியதைக் கண்டு, தம் இறைவரே யிது செய்தாரென் றறிந்து, 'இத்தனையா மாற்ற மறிந்திலேன்' எனத் தொடங் கிப் பாடி வணங்கினார். பிறகு, அடியாருடன் திருக்குருகாவூரை வணங்கித் திருக்கழிப்பாலை சென்று வணங்கினார். திருத் தில்லையைச் சேவித்தார். திருத்தினை மாநகரை யிறைஞ்சினார். திருநாவலூருக்கு வந்தார். திருநாவலூர்

மக்கள் எதிர்சென்று வணங்கி அழைத்து வந்தனர். அவர்களுடன் சென்று தம்மை யாட்கொண்ட தலைவரைக் 'கோவலன் நான்முகன்' என்றெடுத்துப் பாடி வணங்கினார்.

## 13. திருக்கச்சூர்—இரந்து அளித்த சோறு

திருநாவலூரை விட்டுத் திங்களணிந்தாருடைய பதிகள் பலவும் வணங்கிக்கொண்டு திருக்கழுக்குன்றரைப் பாடி வணங்கினார். வணங்கி வெளிப்போந்து திருக்கச்சூர் சென்றார். அங்கு ஆலக்கோயிலில் எழுந்தருளிய இறைவரைப் பரவி வெளிவந்தார். அப்போது உணவுக்குரிய பொழுதாகையாற் பசியினாலே சோர்ந்து அமர்ந்தார். அவர் நிலையறிந்த அண்ணலார் அந்தணராகி வந்து, 'அன்பரே! பசியால் வாடிவிட்டீர் இங்கேயே இருந்தால் நான் விரைவில் வீடுதோறும் சோறிரந்து கொண்டுவந்து தருவேன்' எனக் கூறி அவரை அங்கேயே யிருத்தித் திருக்கச்சூருட் புகுந்தார். இறைவர் பேரருளை என்னென்பது! அடியவர்க்காக வீடுதோறும் இரந்தார்! நண்பகலிலே கொடிய வெயிலிலே தம் திருவடியால் நடந்து சென்றார்! உணவு பெற்றார். கொண்டுவந்து தம் அடியவரிடம் அளித்தார். அந்தணர் தம் அருளை நினைந்த வன்றொண்டர் தொழுது வாங்கி அடியருடன் உண்டு பசி தணிந்தார். பசி தணிந்து பார்க்கும்போது பரிவுடன் உணவளித்த அந்தணரைக் காணவில்லை! உண்மை யுணர்ந்தார் நம்பி யாரூரர். 'பெருமை மிகும் நாதச் சிலம்பணிந்த சேவடி வருந்தக் கடும் பகலில் என்பொருட் டெழுந்தருளினாரே!' என என்புருக வுருகினார். திருக்கச்சூர்ப் பெருமானாரை, 'முதுவாயோரி' எனத் தொடங்குந் திருப் பதிகத்தால் வணங்கினார்.

## 14. காஞ்சி—பொன் பெறுதல்

பிறகு, இறைவ ரருள்பெற்ற இடங்களெங்கும் வணங்கிக்கொண்டு காஞ்சியம் பதியை நண்ணினார். காஞ்சி நகரிலுள்ள அரனாரடியவரெலாம், 'அன்று வெண்ணெய்

நல்லூரி லிறைவர் அந்தணராய் வந்து, வழக்குரைத்துத் தடுத்தாட்கொள்ளப்பெற்ற பெரியார் இன்று இங்கு எழுந் தருளும் பேறு பெற்றோ' மென்று மகிழ்வுடன் நகரை யணி செய்தனர். நிறைகுடம், தீபம், அகிலின் தூபம், கொடி முதலானவற்றால் அழகுபெற்ற நகரிலிருந்து மங்கல முரசுகளுடன் சென்று எதிர்கொண்டு வணங்கினர். அடி யவர் வணங்குமுன் ஆரூரரும் வணங்கினார். பிறகு, அவர்களுடன் சென்று திருவேகாம்பரரை முதலில் வணங்கிப் பாடி மகிழ்ந்தார்.

பிறகு, திருக் காமக்கோட்டத்தைத் தொழுதார். திரு மேற்றளியை அடைந்து, 'நுந்தா ஒண்சுடரே' எனப் பாடி னார். திருஓணகாந்தன்றளிச் செல்வரைப் பொன் வேண்டி, 'நெய்யும் பாலும்' எனப் பாடி அளவில்லாத பொன் பெற்றிருந்தார். திருக்கச்சி அனேகதங்காவதத்தைத், 'தேன் நெய் புரிந்து' என்றெடுத்துத் தமிழ்மாலை தொடுத்தணிந்து பரவினார்.

பிறகு, கச்சிமாநகரைவிட்டுத் திருவன்பார்த்தான் பனங் காட்டூர், திருமாற்பேறு, திருவல்லம் என்னும் இடங்களைத் தொழுது, திருக்காளத்தியைச் சேர்ந்தார். தடுக்க வொண் ணாத பெருங் காதலிலே தலைநின்றருளிய கண்ணப்பரின் இடக்கண் களைந்தருளிய இறைவர் மகிழ்வுடன் அமர்ந் தருளிய காளத்தி மலையை நெருங்கியவுடன் பணிந்தார். அருளினால் ஏறி அன்பாற்றிலே முழுகிக் காளத்தியப்பன் திருமுன் சென்று பணிந்தார். இனிய தமிழால், 'செண் டாடும்' எனத்தொடங்கிப் பாடினார். திருக்கண்ணப்பரை— அன்புருவரை—ஆராத காதலுடன் விழுந்து வணங்கி யெழுந்து மகிழ்ந்தார். அடியருடன் சில நாட்கள் அங்கே தங்கினார். அங்கிருக்கும் நாட்களிலே, அங்கிருந்தவாறே, திருப்பருப்பதம், திருக்கேதாரம் என்னும் வடநாட்டுத் திருப் பதிகளை மனத்தாலே தொழுது பாடினார். பின்னர், அங்கிருந்து புறப்பட்டுக் கிழக்கு நோக்கிச் சென்று திருவொற்றியூரைக் குறுகினார்.

## 15. திருவொற்றியூர்—சங்கிலியார் திருமணம்

திருவொற்றியூர் அன்பர்கள் திருநாவலூரார் எழுந்தருள்வதை அறிந்து மகிழ்ந்து நகரை அலங்கரித்துச் சகல சிறப்புக்களுடனும் எதிர்கொண்டனர். நம்பிகளைக் கண்டு பேரன்புடன் வணங்கி யெழுந்தனர். கடல்போன்ற அந்த அடியார்களைக் கண்ட ஆளுடைய நம்பிகள் வியப்படைந்து குவித்த கைகளுடன் வரவேற்றார். அவர்களுடன் ஒற்றியூரண்ணலார் தம் திருக்கோயிலின் வானை யளக்குங் கோபுரத்தைக் கண்டவுடன் மெய்சிலிர்க்க மண்மிசை விழுந்து வணங்கினார். பிறகு, உட்புகுந்து வலங்கொண்டு வந்து திருமுன் சென்றனர். ஊனும் உயிரும் கரைந்து உருக, உச்சியிற் குவித்த கைகளுடன், வளர்ந்த காதலுடன் வீழ்ந்து வணங்கிப், 'பாட்டும்பாடி' எனும் பாட்டைப் பாடினார். பின்னர், அடியார்களுடன் தமக்கென் றமைத்த இருக்கையிலே சென்று தங்கி நாள்தோறும் வழிபாடு செய்துகொண் டிருந்தார். திருக்கைலையிலே உமையம்மையார்க்குப் பணிபுரிந்த பணிப்பெண்களில் அனிந்திதையார் என்பவர் திருவொற்றியூருக் கருகிலுள்ள ஞாயிறு என்னும் நகரிலே வேளாளர் மரபிலே, செல்வம் நிறைந்த ஞாயிறு கிழவர் என்பவருக்குத் திருமகவாய்ப் பிறந்தருளினார்.

மலைமகளார் மலரடி மறவா அன்புடனே பிறந்து, சங்கிலியா ரென்னுந் திருப்பெயர் பெற்றார். தம்மை யொத்த சிறுமகளிரொடு விளையாடிப் பேதைப் பருவங் கடந்து மங்கைப் பருவம் அடைந்தார். மரபுக்கேற்ற பண்புகளே யன்றித் தெய்வத்தன்மை காணப்பெறும் பண்புகளும் நிறைந்தன. கண்டோர் வியந்து பாராட்டுங் காரிகையராயினர்.

திருமணப்பருவம் வந்ததனாற் பெற்றோர் தக்க வரன் ஒருவனுக்குக் கொடுக்கவேண்டுமென உரையாடிக்கொண்டிருந்தனர். அதனை யுணர்ந்த சங்கிலியார் மூர்ச்சித்தனர். தந்தையருந் தாயாரும் அதுகண்டு கலங்கி மூர்ச்சை தெளி

வித்து, "உனக்கென்ன நேர்ந்தது?" என்று வினவினர். சங்கிலியார், "இன்று எனக்காக நீங்கள் மொழிந்தது தகாது. விடையேறும் பெருமானுர் அருள்பெற்ற ஒருவரையே நான் மணப்பேன். இனி, நான் திருவொற்றியூர் சென்று அரனுரருளின்வழி நடப்பேன்," என உளம்விட்டுரைத்தார்.

பெற்ருேர் அதுகேட்டுப் பெரிதும் வியப்பும் சோர்வுங் கொண்டனர். 'நம்மா லியலாத வொன்றை நினைந்தனளே' யென ஏங்கினர். மற்றவரிடம் இதைக் குறிப்பிடாமற் காலங்கடத்தி வந்தனர். ஒருநாள் இவர் குலத்தானெருவன் இந்த வுண்மை யறியாமற் பெண் பேசி வரும்படி சிலரை இவரிடம் அனுப்பினுன். அவர்களுக்குக் குற்றமிலா வகையிலே இணங்கமுடியாதெனை விடை கூறி விடுத்தனர். பெண் பேச வந்தவர் செல்லுமுன் அவர்களை விடுத்தவன் இறந்துபோயினுன். இதைச் சங்கிலியாரின் பெற்ருேர் கேட்டு அச்சமுற்றனர். உறவினரும் உண்மை யறிந்து நடுங்கினர். எல்லோரும், 'இவள் செயல் தெய்வத்தன்மை பொருந்தியது. அறிந்தோர் இனிப் பெண் பேசமாட்டார். இவள் அரனுர் செயலன்றி மற்ருென்றையும் பேசி யறியாள். இவள் விரும்பியவாறே திருவொற்றியூர் செல்ல விடுப்பதே நன்று' என்று முடிவுசெய்தனர்.

ஆகவே, திருவொற்றியூரிலே காவலையுடைய கன்னிமாட மமைத்தனர். பெற்ருேரும் உற்ருேரும் சங்கிலியாரை அழைத்துச்சென்று வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களமைத்து இருத்தினர். இறைவர் திருக்கோயிலை வணங்கிச் சங்கிலியாரை விட்டுவிட்டுத் தம் நகர் திரும்பினர். சங்கிலியார் சிவனுர் சேவடியை வழிபட்டுக்கொண்டு கையிலே கைக்கொண்டிருந்த மலர் தொடுக்கும் பணியிலே மனஞ்செல்லத், தக்க பணி அதுவே யெனத் துணிந்தனர். மலர்மண்டபத்திலே திரையிட்ட ஒரு சார்பிலே அமர்ந்து மலர் தொடுத்துக் காலங்களுக் கேற்பக் கடவுளுக் கணியக் கொடுத்துவிட்டுச் சிவனுரடியை வணங்கிவருதலை மேற்கொண்டார்.

இந்த நிலையிலேதான் ஆரூரர் திருவொற்றியூர்க்கு வந்தார். ஒருநாள் அவர் திருக்கோயிலுக்கு வரும்போது, மலர் மண்டபத்தின் வழியாக வந்தார். அப்போது திரை மறைவிலிருந்து மலர்மாலையைக் கொடுக்க வெளிவந்த சங்கிலியாரை ஒரு நொடி நோக்கினார் அவர் தோன்றி மறைந்தது மின்னற்கொடியின் செயல்போல இவருக்குப் புலப்பட்டது.

கோவாத முத்தும் வண்டு தொடாத அரும்பும் போன்ற அவரைக் கண்ட ஆரூரர் உள்ளம் நிலைகலங்கியது! அங்குள்ளவரை நோக்கி, "இங்குத் திரைமறைவிலே வந்து மறைந்தவள் அமுதத்திலே திங்களின் குளிர்ச்சியைக் கலந்து குழைத்துச் செய்த மின்னற்கொடியிலே பொன்னு மணியும் மலர்ந்திருப்பதைப்போற் காணப்பட்டாள். அவள் என்னுள்ளத்தைத் திரித்ததை எப்படிக் கூறுவேன்? அவள் யார்? ' என்று வினவினார்.

அவர்கள் சங்கிலியாரின் சிறப்பை யறிவித்தனர். 'என் பிறப்பு இருவரால் நேர்ந்தது அவர்களில் ஒருத்தி பரவை. மற்றொருத்தி யிவள்போலும்!' என எண்ணி மயங்கிய சுந்தரர், இவளை யிறைவரிடம் வேண்டுவேன் என்று திருமுன் சென்றார். செங்கைகளைத் தலைமேற் குவித்து வணங்கி, "என் உள்ள உறுதியைக் சலைத்துத் தன்னிடம் பிணித்த சங்கிலியை அளித்து என் வருத்தத்தைத் தீர்க்க வேண்டும்," என வேண்டிக்கொண்டு திருக்கோயிலின் ஒரு புறத்தே வந்து தங்கியிருந்தார்.

அப்போது கதிரவன் மேலைக்கடலைக் கண்டான். சுந்தரரோ மாலைக்கடலைக் கண்டு சோர்வுற்றார். இரவும் வந்தது. இறைவர் சுந்தரரின் இன்னல் கண்டு இரங்கினார். அவரிடம் வந்து, "வருந்தாதே! நாம் இவ்வுலகோர்க் கெட்டாத தவமுடைய சங்கிலியை உனக் களிப்போம்!" என மொழிந்தருளினார். வன்றொண்டர் மகிழ்ந்து, "அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய ஆட்கொண்டருளிக் காத்தீர்! இன்றும் சங்கிலியை யளித்து நீங்கும் உயிரைக் காக்க

மூன்வந்தருளினீர்! என் தவம் மிகப் பெரியது!'' என்று பணிந்தார்.

நம்பிக்கருளிய நம்பர், நள்ளிரவிலே சங்கிலியாரின் கனவிலே தோன்றினார். சங்கிலியார் பேரன்புடன் வணங்கி யெழுந்து வாழ்த்தி நின்றார். அவரை நோக்கிய இறைவர், "எப்பால் அன்புடையவன், மேருமலையைவிட மேம்பட்ட தவமுடையவன், வெண்ணெய் நல்லூரி லெம்மால் ஆட் கொள்ளப்பட்டவன். அவன் எம்மை வேண்டியதால் வந்தோம். நீ அவனை மணந்துகொள்ளவேண்டும்,'' என்று மொழிந்தருளினார்.

"சாருந் தவத்துச் சங்கிலிகேள்! சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான்ஆள உரியான் உன்னை எனைஇரந்தான்
வார்கொள் முலையாய்! நீஅவனை மணத்தால் அணைவாய் மகிழ்ந்''
[தென்றார்.
(திரு-ஏயர்கோன், உ௩௧)

சங்கிலியார் அவர் மலரடியில் விழுந்து வணங்கி, நடுக் கத்துடன், "இறைவரே! தாங்கள் அருளிச் செய்தவர்க்கு நான் உரியவளாவேன். எனினும், அவர் திருவாரூரிலே பரவையாரை மணந்தவ ரென்பதை உலகமறியுமே!'' என்று நாணத்துடன் நவின்றனர்.

ஒற்றியூருடையார் புன்முறுவலுடன், "அவன் உன்னை விட்டுப் பிரியாதிருப்பதாக உறுதிமொழி கூறுவான்,'' எனத் தேறுதல் கூறினார். பிறகு, நாவலர் பெருமானிடம் எழுந்தருளி, "நீ அவளுக்காக ஒரு குறையை நிறைவேற் றித் தரவேண்டும்'' என்றனர்.

வன்றொண்டர் மனக்களிப்புடன் வணங்கி, "அஃது என்ன?'' என வேண்டினார்.

"உன் மணம் விரைவில் நிகழவேண்டுமானால் இன் றிரவே அவளுக்கு அவளை விட்டுப் பிரிவதில்லை யென ஓர் உறுதிமொழி கொடுக்கவேண்டும்,'' என்றனர்.

நாவலூராளி நம்பரை மறுபடியும் வணங்கி, "என்ன செய்தால் இந்தத் திருமணம் முடியுமோ அதைச் செய்யக் கடவேன். ஆனால், தங்கள் அருள் வேண்டும்," என்று வேண்டினார்.

"வேறென்ன செய்தல் வேண்டும்?" என்றார் விரிசடையார். தமிழ் வேந்தர் சம்புவின் மலரடியை வணங்கி நாணத்துடன், "அவளைப் பிரியாதிருப்பதாகத் தங்கள் திருமுன் உறுதிசெய்து தர வருவேன். தாங்கள் அப்போது திருக்கோயிலை விட்டு மகிழின்கீழ் இருந்தருள வேண்டும்," என இரந்து வேண்டினார்.

தம்பிரான் தோழர் வேண்டியதைத் தம்பிரானார் ஒப்புக்கொண்டார். எனினும், ஒரு திருவிளையாட்டைத் திருவுளத்திற்கொண்டு மீண்டுஞ் சங்கிலியார் மாடத்திற் கெழுந்தருளினார். அவர் கனவிலே, "ஆரூரன் நம் திருமுன்னே சூளுரைக்க வந்தால், அதற்கு நீ ஒப்பாமல் மகிழின்கீழ் செய்துகொடுக்கும்படி கேட்கவேண்டும்," என்றனர்.

"மாலுக்கும் அயனுக்கும் அறிய முடியாத தாங்கள் மறைவாக அடியேனுக் குரைத்தருளியவாறு நடந்துகொள்ளும் பேறுடையேன்," என்று சங்கிலியார் அன்பினலுருகிக் கண்ணீர் வார விழுந்து வணங்கி மொழிந்தார்.

எழுத்தறியும் பெருமானார் சங்கிலியார்க் கிவ்வாறருளித் தம் திருக்கோயிலுக் கெழுந்தருளினார். சங்கிலியார் கனவு நீங்கி விழித்தெழுந்தார். ஒற்றியூராரின் பேரருளை நினைத்து வாழ்த்தினார்; வியப்படைந்தார். தோழிகளை யெழுப்பித் தாங் கண்ட கனவைக் கிள்ளையென மிழற்றினார். அவர்கள் வியந்து மகிழ்ந்து சங்கிலியாரை வணங்கினர்.

பிறகு, திருப்பள்ளியெழுச்சிக்கு மலர் தொடுக்கும் பொழுது வந்ததால், தொழில் புரிவோருடன் திருக்கோயிலுக்குச் சென்றார். ஆரூரரும் அதுவே காலமாக உறுதி

மொழி கொடுக்க இவர் வரவுநோக்கி வந்திருந்தார். ஆகையால், இவரைக் கண்டவுடன் அருகிற்சென்று ஒற்றியூரானர் திருவருளைக் கூறினர். சங்கிலியார் மறுமொழி கூருமல், நாணத்துடன் பெண்களுடன் ஒதுங்கிக் கோயிலினுட் சென்ருர்

அவர் பின் சென்ற ஆரூரர், "நான் உம்மைப் பிரியாதிருப்பேனென்பதை நம் இறைவர் திருமுன் உரைக்க விரும்புகிறேன். அங்கே வருவீராக," என மொழிந்தார்.

தோழியர், "தாங்கள் இதற்காக இறைவர் திருமுன்பு கூறுவது தகாது," என்றனர்.

"நான் பின் எங்கு உறுதி கூறவேண்டும்?"

"மகிழின்கீழ் உரைத்தலே போதும்"

இப்மொழி கேட்ட ஆரூரர் மருண்டார்; எனினும், மறுப்பது ஐயத்துக்கிடமாகும். ஆகையால், இனி உடன், படலே தக்கது என முடிவு செய்து, 'நன்று! அங்கேயே வாருங்கள்," என்று தாமே முன் சென்ருர். சங்கிலியாருந் தோழிகளுமுடன் சென்றனர். திருமகிழடியிற் சென்றவுடன் ஆரூரர் அதனை முக்காலும் வலம் வந்து, 'உனை விட்டுப் பிரியேன்," என்று விளம்பினர்.

சங்கிலியார் அச்சமுற்று, 'இறைவர் கட்டளையினுற் பாவியேன் இதைக் கண்டேன்' என்று ஒரு பக்கத்திலே அயர்ந்து மறைந்தார். திருநாவலூராளி திருக்கோயிலினுட் புகுந்து, 'தங்களருள் மிக அழகியது' என்று இறைவரை வணங்கி மகிழ்ச்சியுடன் வெளிவந்தார்.

சங்கிலியார் வன்றொண்டர் சென்ற பிறகு மாலை கட்டும் மண்டபத்துக்குச் சென்ருர். தம் திருப்பணியை அமைதியுடன் செய்துவிட்டுக் காளகண்டர் திருவருளை நினைந்து தமது கன்னிமாடத்திற்குச் சென்ருர். பொழுது புலர்ந்தது.

எழுத்தறியும் பெருமானார் அன்றிரவிலே அவ்வூரி லுள்ள அடியார்கள் கனவிலே தோன்றிச், 'சுந்தரனுக்கும் சங்கிலிக்கும் திருமணம் புரிக!' என்றருளினார். அடியார்களெல்லாம் மகிழ்ச்சியுடன் அரனாருளைத் தலைமேற் கொண்டு திருநாவலூரண்ணலுக்குச் சங்கிலியாரை அங்கி சான்றாக வாழ்க்கைப்படுத்தினார்கள்.

## 16. கண்ணிழத்தல்

பசுபதியா ரருளால், திருமகளை வென்ற அழகினை யுடைய சங்கிலியாரை மணந்து திருவொற்றியூரிலே நீண்ட நாள் மகிழ்ந்திருக்கும் ஆரூரர்க்கு வீதிவிடங்கப்பெருமான் நினைவு வந்தது. அதை வளர்க்க வேனிலும் வந்தது. பொதியமலையிலே பிறந்து, சந்தனத்தின் நறுமணத்திலே பழகி, அம்மலையின் குளிர்ந்த சாரலிலே வளர்ந்த, வளம் பொருந்திய தென்றலும் வந்தது. திருவாரூர் வீதிவிடங் கப் பெருமானுக்குச் செய்யும் வேனில் விழாவையும் நினைத்தார். வீதிவிடங்கருடைய திருவோலக்கத்திலே பரவையாரின் நடனத்தையும் மனக்கண்ணிற் கொண்டு வந்தார். திருவாரூர் நினைவாலே விழுங்கப்பெற்றார்! மனங் கலங்கினார்!

பூங்கோயில் அமர்ந்த புண்ணியரைப் — புற்றிடங் கொண்டவரைப், பரவையாருடன்—தம்மையே காதலித்து நினைந்தவருடன்—நினைப்பவருடன் — சென்று பணிவத னால் உண்டாகும் இன்பம் அலைகடல்போல உள்ளத்தைத் தாக்கியது. ஆகவே, மின்னல்போல ஒளிவிடுஞ் செஞ் சடை யண்ணலாரை—மறை முதல்வரை—திருவாரூர் வாழ்வாரை மறந்தேனே யென்று வாடினார். 'பத்திமையும்' என்னுந் தமிழ்மாலையைத் திருவாரூரண்ணலை நினைந்து பாடிப் பரவினார்.

ஒருநாள், திருவாரூர் நினைவு தவிர்க்கமுடியாமற் பெருகியதனால், ஒற்றியூர் எழுத்தறியும் இறைவரை வணங் கியவுடன் திருவாரூர் நோக்கிச் செல்லத் தொடங்கினார். எல்லையைத் தாண்டியவுடன், அந்தோ! கண்களிரண்டும்

பார்வை யிழந்தன! இசைத்தமிழ் நாவலர் ஏங்கி நிலை விழுந்து விழுந்தார். சிறுபோது சென்று நினைவு வந்தது. 'உறுதி மொழியை மறந்து வெளிவந்ததால் உற்றது இக் கெடுதி', யென உணர்ந்தார் இந்த இன்னலைப் போக்கு வார் அதனை யுண்டாக்கிய இறைவரே யெனத் துணிந்து, அவரைப் பாடிப் பயன்பெற நினைந்தார். ஒற்றியூர்ப் பெருமானுரை உள்ளத்திலே அமைத்து, 'அழுக்கு மெய் கொடு' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். கண்ணொளி யிழந்ததால் வரும் இடையூற்றினுக்கும் பழிக்கும் அஞ்சி யிறைவரைக் கண்ணொளி தர வேண்டினார்.

கண்ணுதலார் தமது கண்ணொளியை மறைத்தாலும் திருவாரூர் செல்வதற்கே சிந்தை கொண்டார். கூட வரும் அடியார் வழிகாட்டத் திருமுல்லைவாயிலை யடைந் தார். அங்கு எழுந்தருளிய திங்கள் வேணியரைச் 'சங் கிலிக்காக என் கண்களை மறைத்தீர்!' என்னும் பொருளிலே 'திருவும் மெய்ப்பொருளும்' என்னுந் தமிழ்த்தொடை யமைத்து வணங்கினார். அங்கிருந்து திருவெண்பாக்கத்தை அடைந்தார். அடியார்கள் எதிர்கொளச் சென்று, 'கோயி லுளீரே!' என்று வணங்கினார். இறைவர் அவருக்கு ஊன் றுகோல் அளித்து, 'உளேம் போகீர்!' என்று அன்பிலார்போல இயம்பியருளினார்.

நாவலர் பெருமான் வணங்கிப் 'பிழையுளன பொறுத் திடுவர்' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடி வணங்கி னார். பிறகு, இறைவர் திருவுள்ளம் இதுபோலு மென்று தொண்டருடன் அத் தலத்தை நீங்கி மேலே சென்றார். பழையனூரை யடைந்து திருவாலங்காடு காரைக்காலம்மை யார் தலையாலே நடந்த திருப்பதி யாகையால் வெளியி லிருந்தே 'முத்தா!' என்னுந் திருப்பதிகம் பாடி வணங்கி னார். திருவூறலைச் சென்று வணங்கினார்.

## 17. இடக்கண் பெறுதல்

காஞ்சிமாநகரை யடைந்தார். திருக்காமக்கோட்டத்தை வணங்கித் திருவேகம்பத்தைச் சார்ந்தார். ஏகம்பநாதரை

வணங்கிக் 'குற்றமுடையேன் திருமுன்பே என் சொல்லி வணங்குவேன்' என ஏங்கித் தொழுதார்.

"வானவர் வாழக் கொடிய நஞ்சினையுண்ட அருளாளரே! கச்சி யேகம்பரே! பவள வண்ணரே! கடைப்பட்ட நான் செய்த பிழையைப் பொறுத்துக் கண்ணளித் தருள்வீராக!" என்று வேண்டினார். உமையம்மையார் தம் தாமரை மலர்க்கைகளாற் பல மலர்களைக்கொண்டு இட்டு வணங்கிய சேவடியை எண்ணிப் பேரன்புடன் வழிபடுகின்ற ஆரூரர்க் கிரங்கிய அண்ணலார், இடக்கண்ணின் ஒளி விளங்க அருள் செய்தார்.

திருநாவலர் பெருமான் அடைந்த மகிழ்ச்சியை எப்படி யியம்புவது? பெருமகிழ்ச்சியுடன், 'ஆலந்தான்' என்னுந் திருப்பதிகம் பாடித் தம்மை மறந்து வணங்கினார். பிறகு, அங்கிருந்து, திருவாரூரை நோக்கிச் செல்பவர், 'அந்தியும் நண்பகலும்' எனத் தொடங்கி, 'எந்தை பிரான் திருவாரூ ரென்றுகொல் எய்துவது?' என்னும் பொருளமைத்துப் பாடிக்கொண்டே சென்றார். வழியிலுள்ள திருப்பதிகளை வணங்கி வழிபட்டுக்கொண்டு திருவாமாத்தூர் சென்று வணங்கினார். இவ்வாறு தொண்டை நாடு கடந்து சோழநாடடைந்தார்.

## 18. நோய் நீக்கம்

சோழநாட்டிலே திருவரத்துறையை அடைந்து, 'கல்வாய்' எனத் தொடங்குந் தமிழ்மாலை புனைந்து தொழுதார். திருவாவடுதுறையை அடைந்து, ஒரு கண்ணில்லாமையைக் குறிப்பிட்டு வருந்திக் 'கங்கைவார் சடையாய்' எனப் பாடினார். திருத்துருத்தியை அடைந்து, தம் உடலில் உண்டான நோயை நீக்க வேண்டினார். அப்போது இறைவரருளால், 'இக் கோயிலின் வடபுறத்திலே உள்ள மலர் நிறைந்த பொய்கையிலே முழுகு', என ஒரு வாக்குண்டாயிற்று. தமிழ் நாவலரும் அவ்வாறே திருத்துருத்தி யிறைவரை வணங்கி, அக் குளத்தில் மூழ்கி நோய் நீங்கிக் கண்டவர் வியக்கும் ஒளிபொருந்திய யாக்கையுடன் எழுந்தார்.

நோய் நீங்கி மகிழ்வுற்ற வன்றொண்டர், 'மின்னுமா மேகங்கள்' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடி வணங்கினார். பிறகு, வழியிலுள்ள சைவத் திருப்பதிகளை வழிபட்டுக்கொண்டே திருவாரூரை நெருங்கினார்.

## 19. திருவாரூர்—வலக்கண் பெறுதல்

தம் இடக் கண்ணாலே திருவாரூரைக் கண்டு அமைதியடையாதவராய்க் கலங்கி நிலமிசை விழுந்து வணங்கிப் பெருமூச்செறிந்தார். மாலைப் போதிலே—பொருள்களின் வடிவம் மயங்கும் நேரத்திலே—திருவாரூருக்குட் புகுந்தார். அடியார்களுடன் முதலிலே, பரவையுண் மண்டளி என்னும் திருக்கோயிலிலே தூவாயரை வணங்கித் "தூவாயா!" எனத் தொடங்கிப் பாடி "இங்கு எமது துயர்களைந்து கண் காணக் காட்டுவாய்!" என்று வணங்கினார். பிறகு தொண்டர்களுடன் திருவாரூர் திருமூலட்டானச் செல்வரை வணங்க வந்தார். அவரெதிரே முன் பழகிய திருத்தொண்டர்கள் வந்தனர். அவர்களைக் கண்டவுடன், மனங்கசிந்து, குருகுபாய என்னுந் திருப்பதிகத்தைக் கைக்கிளைப் பொருளிலே பாடிக்கொண்டு சென்றார். தேவாசிரிய மண்டபத்தைத் தொழுதார். திருக்கோபுரத்தைச் சேவித்தார். கைகுவித்தவாறே பூங்கோயிலை வணங்கி ஆர்வமிகுங் காதலினாலே நிலமிசை வீழ்ந்து தொழுதார். இறைவரைக் காண ஒற்றைக் கண் போதவில்லையே யென்று வருந்தி, "அடியேனைத் துயர்க்கடலினின்றும் எடுத்தருள வேண்டும்," என வேண்டினார். மீளா அடிமை எனத் தொடங்கிப் பாடிப் பரவினார்.

புற்றிடங்கொண்ட பெருமானார் அன்பருடைய துயரைக் கண்டு திருவுளமிரங்கி வலக்கண் பார்வையையும் வழங்கினார். திருநாவலூராளி செவ்வையாக விழித்து வியப்படைந்தார்; முகம் மலர்ந்து விம்மிதமடைந்தார். இரு கண்களாலும் இறைவரைப் பருகுவார் போலப் பார்த்துப் பார்த்துக் களித்தார். ஆடிப்பாடி யின்புற்றார். நீண்ட நேரம் இவ்வாறு தொழுது பூங்கோயிலை வலங்கொண்டு

திருவாயிலைக் கடந்து தேவாசிரிய மண்டபத்தை யடைந்தார்.

## 20. பரவையார் பிணக்கு—பரமனார் தூது

நம்பியாரூரர் சென்ற பிறகு, பரவையார் தனிமையாலே தளர்ந்தார். இரவு பகலாகியது. பகல் இரவாகியது. கணவர் பிரிவாற் கலங்கினார். சில நாட்கள் இவ்வாறு கழிந்தன. சங்கிலியாரை ஒற்றியூரில் ஆரூரர் மணந்த வியப்பைக் கேட்டார்; வெகுண்டார்; சோர்ந்தார். பூம் படுக்கையிற் பொருந்தார்; விழித்து மிரார். இருக்கையிலே பொருந்தார்; நடவார்; நில்லார். ஆரூரரை மறவார்; நினையார். அவர்கொண்டது பிணக்கோ, பிரிவோ என அறிய முடியாம லிருந்தது!

இவ்வாறு செயலற்றுத் தியங்கும் நாளிலே, வன்றொண்டர் திருவாரூர் வந்ததைக் கேள்வியுற்றார். வன்றொண்டர் அடியார் பரவையார் மாளிகையைக் குறுகினர். அவர்களைப் பரவையார் பாங்கிகள் கதவடைத்துப் போக்கி விட்டனர். அவர்கள் ஆரூரரிடஞ் சென்று பரவையார் நிலையைப் பகர்ந்தனர். ஆரூரர் புன்முறுவலுடன், உலகிய லுணர்ந்த சிலரைத் தூதாகச் செலுத்தினார். அவர்கள் பரவையாரிடஞ் சென்று, 'இது தகாது' என்று பலவகையானும் உலகியல் உரைத்தனர். ஆனால், அரிவையார் சீற்றம் அகலவில்லை. 'குற்றம் நிறைந்த அவருக்காக இம் மொழிகளை இனி எடுத்துரைத்தால் என் உயிர் நில்லாது' எனும் மாற்றமே வந்தது. வந்தவர் நடுங்கிச் சென்று வன்றொண்டர்க் குரைத்தனர்.

அம் மாற்றங் கேட்ட தமிழ்வேந்தர் அச்சமுற்றார். துயர்க்கடலை நீந்தத் தெரியாமல் விழித்தார். இரவுக் கடலும் வந்தது! கவலைக்கடல் உள்ளத்தைக் கலக்கியது. அருகிலிருந்தோர் துயின்றனர். உலகுந் துயின்றது. பேயும் உறங்கியது. எனினும், நாவலர் கண்கள் உறக்கத்தைக் காணுமல் ஏங்கின! அந்த நள்ளிரவிலே, பரவையார் பிணக்கைத் தீர்க்கவல்லார் பரமனாரே யென்று

துணிந்து, பெருமானார் திருவடிகளை நினைந்தார். அடியாரிடுக்கணடையப் பொறாத அந்திவண்ணர் அவ்விரவிலே தம் மலரடி நிலமிசைப் படிய எழுந்தருளி வந்து எதிர் நின்றருளினார்.

தம்பிரானாரைக் கண்ட நம்பியாரூரர் மெய் சிலிர்த்து மலர்க்கை தலையிலே குவிய மலரடியிலே விழுந்து வணங்கினார். எழுந்து நின்று பணிவுடன் தம் குறையைச் சாற்றினார். "அடியேன் தங்கள் அடிமை. தாங்கள் தாயினும் நல்ல தோழர்; தலைவர். ஆகையால், அடியேன் அயர்வைத் தீர்த்தருள வேண்டும்," எனக் குறையிரந்தார். இறைவர், "நீ வருந்தாதே! நாம் உனக்குத் தூதாக இப்போதே பரவையிடஞ் செல்வோம்," என்றருளினார். வன்றொண்டர் களிப்புக் கடலைக் கண்டார். பரவையாரின் புலவிக்கடல் வற்றி விடுமென மகிழ்ந்தார். பரமனாரடிகளைகளை வணங்கி நின்றார்.

வானவர் வாழும் வண்ணம் கொடிய நஞ்சைப் பருகிய வள்ளலார் தம்மைச் சூழ்ந்து, அமரரும் முனிவரும் சிவ கணங்களும் அடியார்களுமாக நெருங்கித் திருவீதியி லிடமின்றி வர, வானவர் மலர் மாரி பொழியப் பரவையார் திருமாளிகை யடைந்தார். என்னே யிறைவர் பேரருள்! அங்குச் சென்றவுடன் உடன் வந்தோரைப் புறத்திலே நிறுத்தித் தம்மை வழிபடும் ஆதி சைவ அந்தணரொருவர் போலத் தோற்றங்கொண்டு தனியே சென்று கதவைத் தட்டினார். "பரவையே! கதவைத் திற!" எனப் பவளத் திருவாய் மலர்ந்தார்.

அரனார் குரலோசை அந்த அந்தணர் குரலோசை போலவே பரவையார் காதில் விழுந்தது. 'பாதியிரவிலே, பாதிமதி யணியும் பரமனார்க்கு வழிபாடு செய்வோர் வருங் காரணம் என்ன?' என்று பாதி மதி போன்ற நெற்றியையுடைய அவர் துணுக்குற்றார். பாதி வடிவிலே பார்வதியாரை உடையவரென் றெவ்வாறறிவார்? எழுந்து வந்து கதவைத் திறந்தார். வணங்கினார். "உலக முறங்கும் இவ் விரவில் எழுந்தருளியது ஏன்?" என்று வினவினார்.

"நான் வந்ததை உரைப்பேன். ஆனால், நீ அதை மறுத்தல் கூடாது!"

"என்ன என்று அருளிச் செய்யுங்கள். என்னால் இசையுமானால் ஏற்றுக்கொள்வேன்,"

"நம்பிகள் இங்குவர நீ இசைய வேண்டும்."

"நம் பெருமை மிக நன்று! பங்குனித் திருநாளுக்கு எப்போதும்போல் வருவாரென்றிருந்தேன். திருவொற்றியூரிலே சங்கிலியாலே கட்டப்பட்டவருக் கிங்கென்ன தொடர்பு? இரவில் வந்து நீங்கள் கூறிய இது மிக அழகானது!"

"நீ அவர் செய்த குற்றத்தை உள்ளத்திற் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளத்தானே நாம் வந்தோம். எமக்காகவேனும் நீ மறுமல் அவரை யேற்றுக் கொள்!"

"இதுதான் தாங்கள் வந்த வேலையானால், உங்கள் பெருமைக்குத் தகாது. ஒற்றியூரிலே உறுதி கூறியவர் இங்குவர எட்டுணையும் இசையேன். தாங்கள் செல்லலாம்!"

நம்பர் இம்மொழி கேட்டு உள்ளத்திலேயே நகைத்துக்கொண்டார். தம் தோழருடைய காதலை மேலும் நீடித்துப் பார்க்க நினைந்தார். ஆகவே, தம்மை யின்னாரெனப் பரவையார்க் கறிவியாமலே வந்த சுவடு தெரியாமல் திரும்பினார்.

ஆரூடைய நம்பிகள், 'ஆண்டவர் தூது செல்லும்படி நேர்ந்தது என் அறிவின்மை' யென்று நாணினார். அவ்வாறு செலுத்தியதற்காக வருந்திப் புலம்பினார். எப்படியும் பரவையார் ஒப்புக்கொள்வாரென் றெண்ணினார். அவரிருப்பினும் அவருள்ளம் ஊசலாடியது.

"அவள் மனைக்குச் சென்ற அண்ணல் எப்படிப் பேசினாரோ? அவர் கூறினால் அரிவை மறுப்பாளோ?

என் அல்லலை நன்றாக அறிந்து சென்றவர் அவள் புலவியை நீக்கித்தான் மீள்வார்!'' என்று எதிர்கொண்டழைத்து வரச் சிறுதொலைவு செல்வார்! வரவு காணாமல் திரும்புவார்! மயங்கி நிற்பார்! உலவுவார்! அமர்வார்! இறைவர் காலங் கடத்துகிறாரே யென்று எழுந்து செல்வார்! அவருள்ளம் மலைந்ததை எப்படிக் கூறுவது?

இரவு பகலாகுந் திருக்கோலத்துடன் இறைவர் எழுந்தருளினார். கண்ட நாவலர் 'அணையை உடைத்து வரும் வெள்ளம்போல' எதிர்கொண்டு வந்து வணங்கினார். புன்முறுவலுடன், "அன்று அடியேனை ஆட்கொண்டதற்கேற்றவாறு, அவள் வெகுளியை மாற்றி யெழுந்தருளினீர்கள்,'' என்று போற்றினார்.

ஐயர் அடியவரை நோக்கி, "நாமே உன்னிலையைக் கூறி, வேண்டினும் அவள் ஏற்றுக்கொள்ள மறுக்கிறாள்,'' என்றார்.

இம் மொழிகேட்ட இசைத்தமிழ் வேந்தர் நடுக்கமுற்றார். இறைவரடியை வணங்கித், "தாங்கள் அருளினால் பரவையோ மறுப்பவள்? வானவர்க்காக நஞ்சுண்டீர்கள்! புரமெரித்தபோது அத்தீயில் வேகாமல் மூவரைத் தவிர்த்தாட்கொண்டீர்கள்! மார்க்கண்டனுக்காக மறலியை மாய்த்தீர்கள்! அடியேன் தங்களுக்கு வேண்டாமென்று நினைத்தீர்கள்போலும்! அதனாலேதான் திரும்பி வாளாவந்தீர்கள்! என் அடிமை வேண்டீர்களானால் அன்று வலிய ஆட்கொண்டது எதன்பொருட்டு? இப்போது என் செயலற்ற நிலையைக் கண்ட தாங்கள் அவளை அடையும் வண்ணம் புரிந்தருளீராகில் என் உயிர் நீங்கும்,'' என்று திருவடிகளிலே வீழ்ந்தார்.

மயங்கிய அடியவர் உணர்ச்சி பெறும்படி, அவரை அருளுடன் நோக்கி, "நாம் மறுமுறையும் அவளிடம் சென்று நீ கூறியவாறு கூறுகின்றோம்! துயரை விடு,'' என்றருளினார். நம்பிகள் மகிழ்ந்து, "இதுதான் அடியேனை அச்சங் கெடுத் தாட்கொள்ளும் முறை!'' என்று போற்றினார்.

இறைவனார் தம்முடன் முன் வாராதவர்களெல்லோரும் சூழ்ந்து தொடர, முன் வந்தவர்களுந் தொடர, திருச் சடையிலணிந்த கங்கை தொடர, இளம்பிறை தொடர, அதனுடன் அணிந்த அறுகுந் தேன் பிலிற்றுங்கொன்றை யுந் தொடர, அம் மலர்த்தொடையிலமைந்த வண்டுகள் தொடர, மறை தொடர, நாவலூராளி மனந் தொடரப் பரவையார் மாளிகையை அடைந்தருளினார்.

அந்தணர் கோலத்துடன் முன் எழுந்தருளியபோது மறுத்த பரவையார், அவர் சென்றபின் சிந்தை கலங்கி னார். வந்தவர் அந்திவண்ணராகவே யிருக்கவேண்டு மென்ற எண்ணம் எப்படியோ அவருக் குண்டாயிற்று. "என் செய்தேன்? எம்பெருமானார் மொழியை மறுத் துக் கெட்டேன்!" என்றேங்கினார். உறங்காமல் மனங் குழம்பித் தோழியருடன் வாயிலையே நோக்கி நோக்கி வருந்தியிருந்தார். இந்நிலையிலே இறைவர் அமரரும், முனிவரும், சிவகணங்களும் சூழப் போந்து மாளிகைக் குட் புகுந்தார். பரவையார் செய்த தவத்தின் பெருமை யைப் பகர்வ தெப்படி? அடியர்க் கெளியரான ஆண்ட வர் வருகையாற் பரவையார் மனை வெள்ளிமலையாய் விளங்கியது.

கண்டனர் பரவையார்! கொண்டனர் நடுக்கமும் மகிழ்ச்சியும்! ஓடினார் இறைவர் முன்! பாடினார் அவர் புகழை! விழுந்தார் திருவடிகளில்!

இறைவர் அவரை நோக்கி, "ஆரூரன் அடிமையாம் உரிமையால் மீளவும் எம்மை யேவினான். முன்புபோல் இப்போதும் மறாதே. உன் பிரிவால் அவன் மிக மிக வருந்துகிறான். அவனை வரவேற்பாயாக!" என்றருளினார்.

தையலார் ஆண்டவர் முன்பு மிகவும் அச்சத்துடனும் வருந்திய உள்ளத்துடனும் மலர்க் கைகளைத் தலைமேற் குவித்து விண்ணப்பிக்கின்றார்:

"முன்னர் அடியேன் செய்த தவத்தின் பயனால் அந்தணர்போல எழுந்தருளினீர்கள். அப் பண்பை அறி கிலேன்."

இவ்வாறு மொழிந்தபின், கண்ணீர் வடியத்தொழுது, "தங்கள் சேவடி வருந்த ஓரிரவு முற்றும் அடியவர்க்காக அலேவீர்களாகில் அடியேன் இசையாமல் என்னசெய்வேன்?" என்று மறுபடியும் விண்ணப்பித்துக்கொண்டார்.

"துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்
ஒளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறு
தளிவரு மன்பர்க் காக அங்கொடிங் குழல்வீ ராகி
எளிவரு வீரு மானல் என்செய்கேன் இசையா" தென்றார்.
(திருத்-ஏயர்கோன், ௩௯௯.)

இறைவர் அதுகேட்டு மகிழ்ந்து, "உன் இயல்புக் கேற்றவாறு நன்றே மொழிந்தனே!" என்று கூறியருளித் திரும்பினார். பரவையாரும் உடன்சென்று வழிவிட்டு வணங்கித் திருமனையிற் புகுந்தார். ஆறு தரித்த முடியினார் ஆரூரரை யடைந்து, "பரவையின் வெகுளியை ஆற்றி விட்டோம். நீ இனி அவளிடம் செல்லலாம்," என்றுரைத் தருளினார். நம்பிகள் அவர் மலரடிகளில் விழுந்து வணங்கி, "இனி எனக் கிடரேது? பந்தமும் வீடும் தாங்கள் அருளியவாறு அளித்தீர்கள்!" என்று பரவினார். வீதிவிடங்கப்பெருமான் மறைந்தருளினார். நம்பிகளும் பரவையார் திருமனைக் கெழுந்தருளினார். அப்போது, அவரைச் சூழ அடியவர் வந்தனர். வானவர் மலர்மாரி பெய்தனர். தென்றல் இனிய மணத்தையும் வண்டிசையையுங்கொண்டு முன்னே சென்றது.

பரவையார் தம் காதலரை யெதிர்கொள்வதற்காக விரைந்து தம் திருமனையை அழகுபடுத்தினார். மலர்மாலைகளையும் மணிமாலைகளையும் தூக்கி, நிறைகுடம் நிரைத்துத் தூபதீபங்களை அமைத்தார்.. நறுமணப் பொடிகளைத் தெளித்தார். அரிவையர் சூழ அவரை யெதிர்நோக்கி யிருந்தார். வன்றொண்டரும் வந்தார். அவரைக் கண்டவுடன் காதல் வெள்ளங் கரைகடந்து ததும்ப, நாணமும் அச்சமும் மிக வந்து வணங்கினார். ஆரூரர் அவரை யெழுப்பி மலர்க்கை பற்றி மனைக்குட் புகுந்தார். இருவரும் இறைவருடைய பேரருட் பெருமையைப் பேசிப்

போற்றி மகிழ்ந்தனர். 'பிரிந்தவர் கூடினாற் பேசவும் வேண்டுமோ?'

## 21. ஏயர்கோன் கலிக்காமர் சீற்றம்—சூலைநோய்—நட்பு

சோழநாட்டிலே, காவிரியின் வடகரையிலே, கீழ்த் திசையிலே, திருமங்கலம் என்னும் நகரமொன்றுளது. அதனை அகழியும் மதிலும் அரண்செய்தன. அங்கே, எப்போதும் தெருக்களில் திருவிழா வொலி! நடன அரங்குகளில் முழவொலி! மங்கலம் நிறைந்த மனைக ளெங்கும் சிறுவர்களின் மழலை யொலி! கழனிகளில் உழவர் ஒலி! அந்நகர் சைவர்கள் நிறைந்து சிவபுரியெனத் தகுஞ் சிறப்பினைப் பெற்றது.

இந்நகரிலே ஏயர்தம் கோக்குடியே சோழருடைய படைத்தலைமை வகிக்கும் பெருங்குடியாயிருந்தது. அக் குடி பழமை பொருந்தியது; சோழநாட்டு வேளாண்மை யிலே சிறந்தது. அக்குடியிலே சிவனாரடிக் கன்புபூண்ட **கலிக்காம** ரென்பவர் ஒருவரிருந்தார். அவர் திருப்புன் கூருக்கு மிகுதியான திருப்பணி செய்தவர். சிவனாரடி யைச் சேவிப்பதே செல்வமென்று கொண்டவர்.

அவர், நம்பியாரூரர் நெஞ்சிற் சிறிதும் நடுக்கமின்றித் தம்பிரானாரைத் தையலாரிடந் தூதுவிட்டா ரென்பதைக் கேள்வியுற்று வெகுண்டார்! வியந்தார்! அஞ்சினார்.

"அடிமை, ஆண்டவரை யேவல்கொள்வது மிக நன்று! இதனைச் செய்வோன்—தூதனாக இறைவரை அனுப்புவோன்—ஒரு தொண்டனும்! என்ன கொடுமை! பொறுக்கவொண்ணாப் பிழையான இதைக் கேட்டும் பேயனேன் ஆவி பிரியாதிருந்ததே! ஒப்பற்ற இறைவர் தம் சேவடி நோவ ஓரிரவெல்லாம் போவதும் வருவது மாகப் பூமியில் நடப்பதா? அதுவும் தன் மனைவியிடங் கொண்ட காதலால் ஒருவன் ஏவ உழல்வதா? நன்றே இச் செயல்! நம்பர் தாம் அடியார் துயருக் காற்றாமல் ஒப்புக்கொண்டாலும் அவரை அடியான் ஏவுவதா?

மாலும் அயனும் அறியாத மலரடியாரை ஏவுவதற்கு நடுங்காதவனைக் காணும் நாளும் வருமோ? அவனைக் கண்டால் என்ன நேருமோ?”

இவ்வாறு வெதும்பினார் கலிக்காமர். இதனைக் கேள்வியுற்றார் நம்பியாரூரர். தாம் செய்தது பிழையென வுணர்ந்தார். ‘இதற்குத் தீர்வு வேண்டும்’ என எண்ணி இறைவரிடம் ஒவ்வொருநாளும் முறையிட்டார். பிறை முடிப் பெம்மானார் இருவரையும் ஒன்றுபடுத்தத் திருவுளங் கொண்டார். ஏயர்கோவுக்குச் சூலைநோயை யருளினார். அனலாற் பற்றப்பட்ட வேலாற் குடைவதுபோல வருத்துஞ் சூலைநோய்க் காற்றாமற் கலிக்காமர் கண்ணுதலாரிடம் முறையிட்டார்.

கண்ணுதலார் கனவிலே தோன்றிச், “சுந்தரனாலே இந்நோய் தீரும்,” என்றருளினார். கேட்ட கலிக்காமர் நெஞ்சம் ஆட்டமுற்றது.

“எம்பிரானாரே! நானும் என் தந்தையும் அவர் தந்தையும் அவருக்குத் தந்தையும் என்று வழிவழியாக எங்கள் கூட்டமெல்லாம் தங்களைத் தலைவரென்று கொண்டிருக்கிறோம். அத்தகைய மரபிலிருக்கும் என்னைச் சூலைநோய் வருத்தினால், அதனைத் தாங்கள் சென்று புதுமையாக ஆட்கொண்ட ஒருவனோ வந்து தீர்ப்பது? அவனால் தீர்க்கப் பெறாமல் இது என்னை வருத்துவதே நல்லது! தாங்கள் அவனுக்குச் செய்யும் பெருமையை அறியக் கூடியவர் எவருமில்லை! அந்த வன்றொண்டனுக்கான நன்மையையே செய்யுங்கள்!”

என்று இவ்வாறு படபடப்புடன் பகர்ந்தார். இறைவர் ஒன்றுங் கூறாமல் மறைந்தார். வன்றொண்டரிடம் சென்றார். “எம் ஏவலாலே ஏயர்கோன் சூலைநோய் பெற்றான். நீ சென்று தீர்ப்பாயாக,” என அருளிச்செய்தார். ‘நன்று’ என நாவலூரர் வணங்கினார். அதன்பின்னர், தாம் வருவதாகக் கலிக்காமர்க்குச் சொல்லிவிட்டார்.

இது கலிக்காமர்க்கு, 'உகிர்ச்சுற்றின்மேல் உலக்கை விழுந்தது'போலாயிற்று. இறைவரருளாலுண்டான சூலையும் இறைவரே அறைந்த மொழியும் வருத்த வருந்துகின்றவர் வன்றொண்டர் வரவையுங் கேட்டால் என்ன ஆவார்? என்செய்வதென்று திகைத்தார். பிறகு, 'அவன் வந்து தீர்ப்பதன்முன், இந்தப் பாதகச்சூலை மாயும்படி அது பொருந்திய வயிற்றினோடுங் கிழிப்பேன்!' என்று முடிவுசெய்து அவ்வாறே செய்தார்! என்னே அவர்தம் உறுதி! உயிருஞ் சூலையும் ஒழிந்தன!

கலிக்காமர் மனைவியாரும் தம் கணவருடன் உயிர் விடத் துணிந்தார். அந்நிலையிலே, சுந்தரர் எழுந்தருள்கிறாரென வந்தவர் கூறினர். உடனே, ஒருவரையும் அழாமல் இருக்க அமைதி செய்து, வன்றொண்டரை யெதிர்கொள்ள முடிவு செய்தார். கணவர் இறந்ததை வெளியிடாவண்ணம் உறவினர்கட் குரைத்தார். வாயிலில் நிறைகுடமும் விளக்கும் புகையும் ஆக்கினர். மலர்மாலைகளையும் தோரணங்களையுங் கட்டினர். இவ்வாறு எதிர்கொண்டு நம்பிகளை வணங்கி வரவேற்றார். அவரிடம் இன்மொழி பேசியவராய்த் திருமாளிகையினுட் புகுந்து தவிசின்மீ தமர்ந்தார். அவரை முறைப்படி அம்மாதரார் வழிபட்டு உபசரித்தார்.

நம்பியாரூரர், "ஏயர்கோவைக் காணவேண்டும். அவருற்ற சூலைநோயைத் தணிக்கவேண்டும். அவர் எங்குளார்? விரைந்து காட்டுங்கள்," என வேண்டினர். ஏவலாளர் 'அவர் பள்ளிகொண்டிருக்கிறார் நோயொன்று மில்லை' என்று அம்மையார் ஆணைப்படி மொழிந்தனர். 'என் மனம் கலங்குகிறது. அவரைக் காணவேண்டும். தீதொன்று மில்லையேனும் காட்டுங்கள்,' என்று துடித்தார். வேறு வழியில்லாமையால் ஏவலாளர் கொண்டுசென்று காட்டினர்!

குருதி பொங்கி வடியக், குடர் சரிந்து, உயிர் துறந்து கிடந்த கலிக்காமரை நம்பி கண்டு துணுக்குற்றார். "நிகழ்ந்தது நன்று!" எனக் கூறி, "நானும் இவர்க்கு

முன்னரே பொன்றுவேன்," என்று உடைவாளைக் கையி லேந்தியவுடன் இறைவரருளாற் கலிக்காமர் உயிர்பெற் றெழுந்தார். உள்ளத்திருந்த பகைமை யொழியக் கேளி ராகி, "கெட்டேன்! என்னே யிது!" என்று வாளைப் பற்றினர். வன்றொண்டர் கலிக்காமரை விழுந்து வணங் கினர். கலிக்காமரும் விழுந்து வணங்கினர். உறவினரும் மனைவியாரும் மகிழ்ந்தனர்!

"கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற
ஆளுடைத் தம்பிரானர் அருளினல் அவரும் உய்ந்து
கேளிரே யாகிக் 'கெட்டேன்;' எனவிரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள வன்தொண்டர் வணங்கி
[வீழ்ந்தார்"
(திருத்-ஏயர்கோன், ௪0௪.)

இருவரும் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டனர். மகிழ்ச்சியுடன் திருப்புன்கூர் சென்று சிவனரடியை வணங்கினர். வன்றொண்டர், அந்தணளன் என்னுந் தமிழ்த் தொடையைச் சூட்டி மகிழ்ந்தார்.

சிலநாள் ஏயர்கோவுடன் இருந்து, பிறகு அவரையும் அழைத்துக்கொண்டு திருவாரூர் வந்தார். பூங்கோயிலிறை வரை வணங்கினர். சிலநாட்கள் வன்றொண்டருடனிருந்த கலிக்காமர் திரும்பத் திருமங்கலஞ் சென்று மனைவியா ருடன் வாழ்ந்து சிவத்தொண்டு செய்திருந்து, சிவனரடி யைச் சேர்ந்தார்.

## 22. சேரமான் தோழர்

சேரநாட்டிலே அந்நாளில் அரசராயிருந்தவர் **பெரு மாக்கோதையார்**. அவர் **சேரமான் பெருமாள்** எனப் பெறுவார். ஒவ்வொரு நாளும் சிவவழிபாட்டின் நிறை விலே கூத்தப்பெருமானர் சிலம்பொலி கேட்குந் திருவினர். தம் ஆட்சியிலே குடிகள் பேசிக்கொள்வதையும் அரனருளாலே அறியும் பேறுடையவர். அதனலே **கழறிற்றறிவா** ரென்னுஞ் சிறப்புப் பெயருடையவர். அந்நாளிலே சேர

நாட்டின் தலைநகர் கொடுங்கோளூர். அங்கே முக்கட் பெருமானார் வீற்றிருக்குந் திருக்கோயில் திருவஞ்சைக்களம்.

சேர அரசர் ஒருநாள் சிவவழிபாட்டி னிறைவிலே சிலம்பொலி கேளாமல் திடுக்குற்றார். ஏதோ தவறு செய்துவிட்டதாக எண்ணி உடைவாளால் தற்கொலை செய்துகொள்ள வாளையெடுத்து மார்பில் நாட்டினார். உடனே சிலம்பொலி உற்றது. வியப்படைந்து காலந் தாழ்த்ததற்குக் காரணம் என்னேவென்று திகைத்தார். அத் திகைப்பு நீங்கும் வண்ணம், "பொன் மன்றிலே வன் றொண்டன் வந்து நமது கூத்தை வணங்கி மனமொன்றித் தமிழ்ப்பாடல் பாடுகின்றான். அப்பாடலில் ஈடுபட்டதனாற் காலந் தாழ்ந்தோம்," என்று வானொலி யொன்று கேட்டது.

அதனைக் கேட்ட சேரமான் பெருமாள் வியப்படைந் தார். பொன்னம்பலத்தையும், ஆரூரரையும் வணங்கு வேன் என்று பேரன்பு கொண்டார். அமைச்சர்களுக் கறிவித்தார். அவர்களும் நகரமும் வந்து வழிவிட, அவர் களை நிறுத்திச் சில தொண்டர்கள் மட்டும் வரத் தில்லையை அடைந்து, கூத்தப்பெருமானார் கூத்தை வணங்கிப் பொன்வண்ணத் தந்தாதி பாடினார். இறைவரும் அதற்குப் பரிசிலாகத் தம் சிலம்பொலி யருளினார். ஆராத காத லுடன் அந்திவண்ணரை வணங்கித் திருவாரூரை அடைந் தார்.

நாவலர் பெருமான் அப்போது திருநாகைக்காரோ ணத்திலிருந்து திருவாரூருக்கு வந்துகொண்டிருந்தார். அந்நிலையிலே சேரர்பிரானைக் கண்டார். பேராத அன்பு டன் வரவேற்கச் சென்றார். சேரர் முன் வணங்கினார். அவரை வன்றொண்டரும் வணங்கினார். இருவரும் உள் ளங் கலந்து முகமன் வேண்டாக் கெழுதகை நண்பராயி னர். நாவலர் பெருமான் சேரர் பெருமானுடைய பருவ மழை போன்ற செங்கைகளைப் பற்றித் தேவாசிரிய மண்ட பத்தை யடைந்தார். அடியாரர்க ளெல்லோரும் நம்பி யாரூரைச் சேரமான் தோழரெனக் கூறியாரவாரித்தனர்.

இருவரும் தேவாசிரிய மண்டபத்தை வணங்கிப் பூங் கோயி லமர்ந்தபிரான் திருமுன் சேர்ந்தனர். நம்பிகளை முன்னிட்டுச் சென்ற சேரர் வீதிவிடங்கரை வணங்கித் திரு மும்மணிக்கோவையை நாவலர்பெருமான் முன்பு கேட்பித்தார். பிறகு இருவரும் இறைஞ்சித் திருக்கோயிலி லிருந்து பரவையார் திருமாளிகையை அடைந்தனர். பரவையார் முன்னமே யிவர்கள் வருவதை யறிந்து தக்க முறையிலே யிருவரையும் எதிர்கொண்டார். நாவலர்பெரு மான் தம் நண்பரைத் திருமாளிகைக்குள் அழைத்துச் சென்று பொன்னணையி லிருத்தித் தாமும் அமர்ந்தார். பரவையார் தம் கணவர்க்கும் நண்பர்க்கும் முறைப்படி வழிபாடு செய்தார்.

ஆரூரரருளியவாறு பரவையார் சேரமான் பெருமா ளுக்கும் அவர் அடியார்கட்குமாகப் பெருவிருந்தொன்று சமைத்தார். ஆரூரருடன் ஒருங்கிருந்து விருந்துண்ணச் சேரர் அஞ்சினார். ஆரூரர் அவர் அச்சத்தை நீக்கியபின் இருவரும் உடனமர்ந்தனர். பரவையார் அவர்கட்கும் மற்றைய அடியார்க்கும் அறுசுவை யுண்டியை அமர்ந் தூட்டினர். உணவுண்டு வாய் பூசி யாவரும் அமர்ந்தனர். பணிப் பெண்கள் பனிநீர் கலந்த சந்தனமும் கலவையும் இருவருக்கும் ஏந்தினர். பிறகு ஐவகை முகவாசங் கலந்த அடைக்காயை யேந்தினர். எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்ட சேரனார் ஆரூர ரடியை வணங்கித் தங்கள் அன் புக்கு எல்லையில்லை யென்றார். ஆரூரரும் வணங்கி, 'இறை வர் தங்கள் நட்பை யளித்தது கிடைத்தற்கரிய பேறு' என்றார். இவ்வாறு இருவரும் முகமன் கூறிக்கொண்டு மகிழ்ந்தனர்.

## 23. பாண்டிய நாடு செல்லுதல்—கானப்பேர்க் காளை

"முந்நீர் வலங்கொள் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென் [றிறைஞ்சிச்
செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்றும்
அந்நேர் 'திறக்க அடைக்க' எனப் பாடுந் திருவா யிலையணைந்து
நன்னீர் பொழியும்விழியினராய் நாயன் மாரை நினைந்திறைஞ்சி"
(திருத்—கழறிற். அசு)

கழறிற்றறிவார் தம் தோழருடன் சிலநாட்கள் அங்கேயே தங்கியிருந்தார். பிறகு, இருவரும் மதுரைமாநகர் செல்ல விரும்பி அடியாருடனும் வாகனங்களின்மேற் பொருள்களுடனும் புறப்பட்டனர். திருநாகைக்காரோணம் வணங்கித் திருமறைக்காடு சேர்ந்தனர். அப்பராலும் சம்பந்தராலுங் கதவு திறந்து மூடும் பெருமைபெற்ற மறைக்காட்டுக் கோயிலை வணங்கினர். நாவலர்பெருமான், 'யாழைப்பழித்தன்ன' என்று தொடங்குந் தமிழ் மறைபாடி வணங்கினார். அகத்தியான்பள்ளியிலே கோடிக் குழகர் எனச் சிவனாரெழுந்தருளிய திருக்கோயிலை வணங்கிக், 'கடிதாய்' என்னும் பதிகத்தைப் பாடினர் ஆரூரர்.

இவ்வாறு சேரருடன் வர நாவலர்பெருமான் சோழ நாட்டை வணங்கிப் பாண்டிய நாட்டை யடைந்து திருப்புகலூரை வணங்கினர். பாண்டியர் இவர்கள் வருகையை அறிந்து எதிர்கொண்டு வரவேற்றார் சோழரும் பாண்டியர் மகளை மணந்து மதுரையிலே தங்கியிருந்தார். அவரும் எதிர்கொண்டார். எல்லோருங் கலந்த காட்சியை என்னென்பது? தமிழ் நில வேந்தர் மூவரும் தமிழ் மொழி வேந்தரொருவரும் ஆக நான்கு வேந்தருங் கூடி மகிழ்ந்தனர். எல்லோரும் சொக்கநாதப் பெருமானார் எழுந்தருளிய திருவாலவாயை அடைந்தனர். ஆரூரரும் சேரரும் மெய் சிலிர்ப்பக் கண்பனிப்பத் திருவாயிலில் வீழ்ந்து வணங்கினர். திருக்கோயிலினுட் புகுந்து திருமுன் சென்றனர்.

பன்முறை விழுந்தெழுந்து வணங்கினர். ஆரூர் வள்ளல் தமிழ்மாலை புனைந்து வாழ்த்தினார். சேரர்பெருமான், 'அடியேனையும் பொருளாகக்கொண்டு அருள் செய்தமைக்கு முடிவு காணேன்' என மொழிந்து அன்புமாலை புனைந்து வாழ்த்தினார். இருவரும் திருக்கோயிலிலிருந்து வெளிவந்தனர். பாண்டியர் அவர்களைப் பணிவுடன் அழைத்துச் சென்று, அரண்மனையிலே இருக்கை யமைத்துக் கொடுத்தார். காலந் தவறாமல் யாவருக்கும் விருந்து படைத்தார்.

சேரரும் ஆரூரரும் அங்கிருந்தே அருகிலிருந்த திருப்பதிகளை வழிபட்டனர். ஒருநாள் திருப்பூவணத்திற்குச் சென்று 'திருவுடையார்' என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டே திருக்கோயிலை யடைந்து வணங்கினர். அந் நகரிலே சில நாட்கள் பூவேந்தருடனே ஆரூரர் தங்கினார். பின்னர், மதுரை யடைந்தார். அங்கிருந்தவாறே, திருவாப்பனூர், திருவேடக மென்னு மிடங்களைச் சென்று தொழுது வந்தனர் ஒருமுறை திருப்பரங்குன்றத்திற்குச் சென்று இறைவரை வணங்கி, 'கோத்திட்டையுங் கோவலும்' என்று தொடங்கி, 'அஞ்சுதும்' என்று ஒவ்வொரு திருப்பாட்டிலும் நிலவுகிற திருப்பதிகம் பாடினார். அப்பதிகத்திலே அரனார் சேவடித் தொண்டின் அருமை புலப்பட்டதனால், பூவேந்தரும் திருத்தொண்டின் நிலைக்கு அஞ்சி நாவலூராளியை வணங்கினர். பின்னர் அங்கிருந்து மற்றுமுள்ள திருப்பதிகளை வழிபட நினைந்து சோழரையும் பாண்டியரையும் விடைகொடுத்துச் செல்லவிட்டனர். அவர்களும் தென்னாட்டில் வேண்டுவன செய்வாரை விழைவுடன் விடுத்தனர். நம்பியாரூரரும் சேரருடன் வழிக்கொண்டனர்.

திருக்குற்றாலத்தைச் சார்ந்து அங்கமர்ந்த கூத்தனை வணங்கிக் குறும்பலாவைத் தொழுது புறம் போந்து இடையிலுள்ள திருத்தலங்களைச் சேவித்துத் திருநெல்வேலியைச் சேர்ந்தனர். அங்குள்ள திருநீற்றழகரைத் தொழுது, திருவிராமேச்சுரம் அடைந்து வணங்கினர். அங்கேயே அமர்ந்திருந்து திருக்கேதீச்சுரப் பெருந்தலத் திறைவரைச் சேவித்தார். திருச்சுழியலை யடைந்து, 'ஊனாய்' எனுந் தமிழ்த்தொடை யணிந்து கும்பிட்டார். சுருச்சுழியலை யகற்றுந் திருச்சுழியலி லிருக்கும்போது கனவிலே ஒரு வியக்கத்தக்க—எங்குமிலாத—காட்சியைக் கண்டார். ஒரு காளை! கையிலே பூச்செண்டு! முடியிலே சுழியம்! இக் கோலத்துடன், 'யாமிருப்பது கானப்பேர்' என்று மொழிந்தது. விழித்தெழுந்து, விரிசடையார் திருவருளைத் தொழுது சுழறிற்றறிவார்க்குக் கனவின் பரிசை

மொழிந்தருளினார். பிறகு, அவருடன் திருக்கானப் பேரைச் சாரும்போதே, 'தொண்டரடித்தொழலும்' என்று தொடங்கி, 'கண்டு தொழப் பெறுவ தென்றுகொலோ அடியேன் கார்வயல்சூழ் கானப்பேருறை காளையையே' எனப் பாடிக்கொண்டே திருக்கோயிலிற் சென்று சேவுகைத் தாரைத் தொழுதார். அங்குச் சிலநாள் தங்கினார். திருப் புனவாயில் சேவித்தார். சோழநாடடைந்து திருப்பாம் பணிமாநகரிற் பாதாளீச்சுரம் என்னும் திருக்கோயிலை வணங்கினார். திருவாரூர் வந்து சேர்ந்தார்.

அங்குப் பல நாட்கள் வரையிற் பெருமாக்கோதை யாரை இருக்கக் கேட்டுக்கொண்டார். பூங்கோயிற் புற்றிடங்கொண்டாரைப் போந்து தொழுவதுடன், நிலைப் பந்து பரிப்பந்து முதலான பந்து விளையாட்டுக்களும் ஆட்டுக்கடாச் சண்டை, கோழிச் சண்டை, கவுதாரிச் சண்டை முதலான வேடிக்கைகளும் நடத்தி மகிழ்வுற்றிருந்தார்.

## 24. சேரநாடு செல்லுதல் - காவிரி வெள்ளம் தடைப்படல்

பல நாட்கள் இனிமையாகக் கழிந்தன. சேரமான் பெருமாள் ஆரூரரை வணங்கித் திருவஞ்சைக் களத்திற் கெழுந்தருளும்படி வேண்டினார். ஆரூரர் அதற்கிசைந்து பரவையாரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார். சேரரோடு சென்று புற்றிடங்கொண்டவரை வணங்கிப் பரிவாரங்களுடன் திருவாரூரைக் கடந்து சென்றனர். காவிரியின் தென் கரையிலே திருக்கண்டியூரைச் சேவித்தார்கள். காவிரியின் வடகரையிலே திருவையாறு இருந்தது. அதனைத் தொழ வேண்டுமென்ற பேரன்பு வெள்ளம்போல இருவருக்கும் பெருகியது. ஆனால், ஆற்றிலோ இருகரையும் புரண்டு சென்றது நீர் வெள்ளம். ஆகவே, இருவரும் சிறிது கலங்கினர். பெருமாக் கோதையார் எப்படியும் செல்ல வேண்டுமென்று தமது ஆவலடங்காமல் ஆரூரரிடம் முறையிட்டார். ஆரூரர், 'பரவும் பரிசு' எனத் தொடங்கித் திருப் பாட்டுக்களின் முடிவிலே, "ஐயா

றுடைய அடிகளோ!'' என அவரையே வழிவிடும்படி வேண்டிப் பாடினார்.

இறைவர் அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளங் கொண்டார். கன்று தடைப்பட்டுக் கூப்பிடும் போது எதிராகக் கதறிக் கனைத்துக் கூப்பிடும் இளங் கன்றுப் பசுப்போல, எங்கும் கேட்கும்படி ஒரு முறை, 'ஓலம்' என்றார். உடனே காவிரியின் வெள்ளமானது மேற்புறத்திலே தடையுற்றுப் பளிங்கு மலைபோல நின்றது. கீழ்த்திசையிலே வடிந்து மணலுந் தெரிந்தது. தொண்டர் கண்டு வியப்படைந்தனர், மயிர்ப்புளகம் எழக் கைகுவித்து நின்றனர். சேரமான் நம்பிகளின் திருவடிகளிலே விழுந்து வணங்கினார். ஆரூரரும் எதிர்வணங்கித் 'தங்களுக்காகவே இறைவர் இவ்வாறு பேரருள் செய்தார்' என்றார். இவ்வாறு இருவரும் இறைவர் திருவருளை வாழ்த்தியவர்களாய் அடியருடன் மணல் தெரிந்த நெறியிலே சென்று காவிரியைக் கடந்தனர். திருவையாற்றை யடைந்து ஐயாறுடைய அடிகளின் திருவடிகளிலே விழுந்து எழுந்து வாழ்த்தினார்கள். ஆராத அன்புடன் திரும்பத் திரும்ப வணங்கினார்கள். பிறகு, வந்த வழியே சென்று காவிரியைக் கடந்தனர். இவர்கள் கரையேறிய பிறகு வெள்ளம் முன்போலப் பெருகியது. இவ் வியப்பைக் கண்டு மகிழ்ந்தனர். பிறகு, மேற்றிசையை நோக்கிச் சென்று கொங்கு நாட்டைக் கடந்து மலைநாட்டெல்லையை அடைந்தனர்.

சேரருடைய அமைச்சர்கள் இவர்கள் எழுந்தருள்கின்றார்களென்று தெரிந்து நாட்டையே புனைவு செயத் தொடங்கினர். ஊர்தொறுந் தோரணங் கட்டினர்! பல வகை வளங்களை யுண்டாக்கினர்! வழிகளெங்குந் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்தனர்! மனைகளெங்கும் அகிற்புகை கிளம்பியது! எங்கும் மங்கல முரசுகள் ஒலித்தன! இவர்கள் வரும் வழியிலே மலர்கள் பரப்பப் பெற்றன!

காவிரியின் நீர் வெள்ளத்திற்குக் கறைமிடற்றரை வேண்டிய இருவரையும் காலாட்படை வெள்ளமும் குதிரைப்படை வெள்ளமும் யானைப்படை வெள்ளமும் எதிர்

கொண்டன! இருவர்களும் அந்த வெள்ளங்களைக் கடக்க இன்ப வெள்ளத்திலே அமர்ந்து சென்றார்கள். கொடுங் கோளூரை யடைந்தனர்.

கொடுங்கோளூரின் மதில்வாயில் அணிசெயப்பட்டிருந்தது. கோபுரங்கள், மாளிகைகள், ஆடரங்குகள் முதலான இடங்களில் மலர்மாலைகளைத் தொடுத்துக் கட்டி அலங்கரிக்கப்பெற்றிருந்தன. அமைச்சர்கள் நகர மாந்தர்களுடன் இருவரையும் எதிர்கொண்டு வணங்கி வரவேற்றனர். பெருமாக்கோதையார் திருநாவலூரரைத் திருவஞ்சைக் களத்திற்கு முதலில் அழைத்துச் சென்றார். இருவரும் வலம் வந்து இறைவரை வணங்கிப் பரவினர். ஆரூரர் 'முடிப்பது கங்கை' எனத் தொடங்கிப் பாடி வணங்கினார்.

பிறகு, வெளியே வந்தவுடன் நம்பிகளை ஒரு பிடியின் மேலேற்றிச் சேரர்பெருமான் தாமும் பின்னால் அமர்ந்தார். கையிலே மாணிக்கக் கவரியை யெடுத்து நாவலர் பெருமானுக்கு வீசினார். தெருவிலே செல்லும்போது இருமருங்கினும் நின்ற குடிகள் இருவரையும் வாழ்த்தி வணங்கினர்.

"நம் இறைவர்க்கு இவரே நல்ல தோழர்! இவர்களைத் தொழ நாம் முன்பு எல்லையில்லாத் தவம் புரிந்திருக்கவேண்டும்! இனி நம் மலைநாட்டுக்கு வேறு செல்வம் ஏன்? பெருமாள் செய்யுந் திருப்பணியைப் பாருங்கள்! நம்பிகளிடம் அவருக்கிருக்கும் அன்பு சொல்லுக் கடங்காது! நம்பிகளிருக்கும் சோழநாடே புவிக்குத் திலகம்!" இவ்வாறு கூறி எல்லோரும் மலரும் நெற்பொரியும் பொன்னும் எடுத்து அவர்கள் திருவடிகளிற் பெய்து பணிந்தனர். இருவரும் அரண்மனை வாயிலை யடைந்தனர்.

பெருமாக்கோதையார் ஆரூரரை உள்ளே அழைத்துச் சென்று அரியணையி லமர்த்தினர். தாம் எதிரிலே நின்று தம் மனைவியார் நீர் வார்க்கத் தாம் அவருடைய திருவடி

களை விளக்கத் தொடங்கினர். ஆரூரர் அஞ்சி இச் செயல் வேண்டாமென்று தடுத்தனர். சேரர் விழுந்து வணங்கி, 'எம் அன்பினாலே செய்யும் எதனையுந் தடுத்தலாகாது' என வேண்டினர். அவருடைய அன்பினுக் கஞ்சிய ஆரூர் நம்பி பேசாமல் அவர் செய்வன ஏற்கத் துணிந்தார். பிறகு, சேரர் அவருடைய திருவடிகளை விளக்கி முறைப் படி வழிபட்டார். அறுசுவை யுண்டியைத் தாமும் உட னிருந் துண்பித்தார். அன்புக் கெல்லை யேது? உண்ட பிறகு, கலவைச் சந்தனம் அணிவித்தார். மெல்லிய ஆடை களும் அணி மணிகளும் மலர் மாலைகளும் எடுத்து வைத்து அணிந்துகொள்ளச் செய்தார். அவரணிந்த மிகுதியைத் தாமெடுத் தணிந்தார்.

நாவலூராருக்கு வேண்டும் பணிவிடைகளைத் தவறாமல் தாமே செய்தார். நடன அரங்குகளிலே நாட்டியம், இசைக்குழு, பலவகைப் பொழுது போக்குகள் எல்லாம் நாவலர் பெருமானுக்கு விருந்தாயின. பந்து விளையாட்டு, சிறுசோறுண்ணுதல், நீர் விளையாட்டு, களிற்றுப்போர், மற்போர் ஆகியவற்றால் வன்றொண்டர் மனங்களித்தார்.

## 25. திருவாரூர் திரும்புதல்—வேடர் பறி

நீண்ட நாட்கள் இந்த இனிமையிலே நெகிழ்ந்தன. ஒருநாள், ஆரூரர் திருவாரூரண்ணலை நினைந்து பிரிவாற்றா மல், 'பொன்னும்' எனத் தொடங்குந் திருப்பதிகத்தைத் தொடங்கி "ஆரூரானை மறக்கலுமாமே?" எனப் பாடி நடுங் கினர். உடனே யெழுந்து, திருவாரூர்க்குச் செல்வேன் என்று அடியார் பின் வரப் புறப்பட்டார். உதியர் பெருமான் பின் தொடர்ந்து வணங்கிப் பிரிவாற்றாமற் பின் சென்றார்.

"தங்கள் பிரிவாற்றேன்! என் செய்வேன்?"

"நீர் வருந்தாமல் உம் நகரிலிருந்து, பகைவரை வென்று அரசாளும்!"

"அடியேனுக்கு நிலவுலகு மட்டுமன்று; அமரருலக ஆட்சியும் தங்கள் திருவடி மலரே! தங்கள் திருவாரூர்க் காதலை எவ்வாறு தடுப்பேன்?"

"வன்மனக் கள்வனேன் என் உயிர்க்குயிரை—ஆரூர் வள்ளலை—மறந்திருக்க இயலேன். பிறைமுடியா ரருளால் இருந்து அரசு புரிவீராக! இங்கேயே இருப்பீராக!"

இவ்வாறு கூறி வன்றொண்டர் வானவரம்பனை வணங்கினார். தடைசெய்ய முடியாதென்றுணர்ந்த உதியர் அஞ்சி எதிர்வணங்கி உடனிருந்த மந்திரிகளை நோக்கிப், "பல் வகைப் பண்டாரங்களைப் பல ஆட்களின்மீது கொடுத்து விடுங்கள்," என்று கட்டளையிட்டார். அவ்வாறே அமைச்சர்கள் செய்தனர். ஆரூர ரடியாருடன் அந்த ஆட்கள் செல்வக்குவியலை எடுத்துச் சென்றனர். சேரர், சுந்தரர் திருவடிகளைக் கண்ணீர் வார வணங்கி வழிவிட்டார். சுந்தரர் அவரை அன்புடன் தழுவிப் பிரிந்தார்.

மலைநாட்டைக் கடந்து, கற்கள் நிறைந்த வழியை நீங்கினர். கான்யாறுகள் பல நீந்தினர். காடுகள் பல வற்றைத் தாண்டினர். திருமுருகன்பூண்டிக்கருகிற் சென்றனர். இறைவர் திருவுள்ளத்தி லென்ன நினைந்தாரோ? தாமே ஆரூரர்க்குப் பொருள் கொடுக்க வேண்டுமென் றெண்ணியிருக்கலாம். பூதங்கள் பல வேடர் வடிவாகப் பொன்னும் மணியும் பூந்துகிலுஞ் சுமந்து செல்லும் ஆட்களை மடக்கிக்கொண்டன. அம்பை வில்லில் வைத்துக் காட்டி அச்சுறுத்திப் பொருள்களைப் பறித்துக்கொண்டு மறைந்துவிட்டன. ஆரூரரை அணுக வில்லை. ஆட்கள் ஆரூரரிடம் ஓடிவந்து முறையிட்டனர்.

வன்றொண்டர் திருமுருகன்பூண்டியை அடைந்து திருக்கோயிலை வலம் வந்து வணங்கினார். 'கொடுகு வெஞ் சிலை' எனத் தொடங்கி, "வேடுவர் பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிருந்தீர்?" என்று பாடினார். உடனே, பரமரருளால் அப் பொருள்கள் யாவும் திருவாயிலின் முன் வந்து குவிந்தன! ஆட்கள் வியந்து, அப் பொருள்களை மகிழ்

வுடன் முன்போல் வணங்கி எடுத்துக்கொண்டனர். அவர்க ளோடு ஆரூரர் திருவாரூர் வந்து சேர்ந்தார். பிரிவின் வருத்தம் நீங்கப் பூங்கோயிற் புனிதரைப் போற்றி வணங்கி மகிழ்ந்தார். பிறகு, பரவையார் மனை புகுந்தார்.

## 26. திரும்பவுஞ் சேர நாடு செல்லுதல்— முதலையுண்ட பாலனை அழைத்தது

திருத்தொண்டத்தொகை பாடியருளிய செல்வரின் திருமேனி சிவனுரிடம் வைத்துள்ள பேரன்புநீரினுற் பணைத்து வளர்ந்தது. இருவினைக் களையை நீங்கிச் சிவ போகக் கதிர்விட்டது; முற்றி விளைந்தது.

> "படியில் நீடும் பத்திமுத லன்பு நீரிற் பணைத்தோங்கி
> வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்
> கடிய வெய்ய இருவினையின் களைகட்டெழுந்து கதிர்பரப்பி
> முடிவி லாத சிவபோகம் முதிர்ந்து முறுகி விளைந்ததால்"
> (திருத்-வெள். உ.)

இந்நிலையிலே அவர் மற்றொரு முறை சேரரைக் காண விரும்பிப் பூங்கோயிற் கடவுள் மலரடியை வணங்கிப் புறம் போந்தார்.

கொங்கு நாட்டிலே திருப்புக்கொளியூரை யடைந் தார். ஒரு தெருவில் எதிரெதிராக வுள்ள வீடுகளில் ஒன்றில் மங்கல வொலியும் மற்றொன்றில் அழுகை யொலி யுங் கேட்டது. அங்குள்ளோரை ஆரூரர் வினவினுர். " ஐந்து ஆண்டு நிரம்பிய இரு சிறுவர்கள் குளிக்கச் சென் றனர். ஒருவனை முதலை தின்றுவிட்டது. மற்றொருவன் பிழைத்து வந்தான். பிழைத்தவனுக்குப் பூணுநூலணிவ தால் மங்கல வொலி. இறந்தவனை நினைத் தழுவதால் அழுகை யொலி " என ஓரந்தணர் கூறினுர்.

இம்மொழி கேட் டிரங்கி யிருக்கும்போது, மகவை யிழந்த மறையவர் நாயனுர் வருகையைக் கேள்வியுற்று

மனைவியுடன் ஓடிவந்து வணங்கினர். அவர்கள் குழந்தையை யிழந்த கவலையை வெளிக் காட்டவில்லை.

“நீங்களா சிறுவனை யிழந்தவர்கள் ?”

“ஆம். அது முன்பு நிகழ்ந்தது. தங்களை வணங்க விரும்பியிருந்தோம். அது வாய்ப்புற்று மகிழ்ந்தோம்.”

அவர்கள் அன்பு ஆரூரரைப் பிணித்துவிட்டது. “சிறுவனை யிழந்ததற்குரிய வருத்தத்தை மறைத்து, நான் வந்ததற்கே மகிழ்கின்றனர். இவர்கள் வாட்டத்தைத் தவிர்க்க வேண்டும். சிறுவனை முதலை வாயிலிருந்து அழைத்துக் கொடுக்கும்படி இறைவரை வேண்டுவேன். பிறகுதான் அவிநாசியை வணங்குவேன்’ என எண்ணினுர்.

அந்த மடுவை அடைந்து, ‘எற்ருன் மறக்கேன்’ என்று தொடங்கி யிறைவரைப் பாடினுர். ‘உரைப்பாருரை’ என்னும் நான்காந் திருப்பாட்டு முடியுமுன் முதலை சிறுவனைக் கரையிற் கொண்டுவந் துமிழ்ந்தது. பெற்ருேரும் மற்ருேரும் அடைந்த வியப்பையும் மகிழ்ச்சியையும் பேசுவ தெப்படி ? சிறுவனும் பெற்ருேருந் திருநாவலூராளியைச் சேவித்துப் போற்றினர். அவர்களுடன் அவிநாசி யிறைவரை அடிபணிந்தார். பிறகு, சிறுவனுக்குப் பூணு நூலணிவித்து மலைநாட்டை யடைந்தார்.

சேரர் பெருமானுக்கு ஆரூரர் பெருமான் வருவதைச் சிலர் சென்று தெரிவித்தனர். கழறிற்றறிவார் அவர்களுக்கு மகிழ்ச்சியினுல் வளநிதி யளித்தார். செய்வதறியாக் களிப்பினுல், “ஐயர் வந்தார் ! எனை ஆளும் அண்ணல் வந்தார் ! ஆரூர்ச் சைவர் வந்தார் ! என் துணையாகிய தலைவர் வந்தார் ! உலகு வாழ வந்தார் ! வந்தார் !!” என நாடெங்கும் முரசறையச் செய்தார். மதிநூல் அமைச்சர்களைக் கூப்பிட்டு, நகரை யலங்கரிக்க ஆணையிட்டார். யானையின்மீதமர்ந்து நால்வகைப் படையுடன் நம்பிகளை யெதிர் கொள்ளப் புறப்பட்டார். மலைநாட்டின் எல்லையிலேயே ஆரூரரைக் கண்டார். களிற்றினின்றும் இறங்கிச் சென்று

பரிவாரங்களுடன் வணங்கினார். ஆரூரரும் எதிர்வணக்கம் புரிந்தார். நீண்ட நாட்கள் பிரிந்திருந்த ஆற்றாமை தீரத் தழுவிக்கொண்டு நலம் வினவிக்கொண்டனர். களிற்றின் மேலே ஆரூரரை யேற்றிக் கொண்டு தாம் பின்னே அமர்ந்து குடை பிடித்தார். மங்கல முரசொலிக்க அரண் மனையை அடைந்தனர். அங்கே சில நாட்கள் ஆரூர்ப்பெரு மான் தங்கியிருந்தார். அருகிலுள்ள திருப்பதிகளைச் சென்று வணங்கினார்.

ஒருநாள், சேரர் நீராடிக் கொண்டிருக்கும்போது, ஆரூரர் திருவஞ்சைக்களத்தை யடைந்தார். திருக்கோயிலை வலம் வந்தார். இறைவர் திருமுன்னே விழுந்து வணங்கி நின்றார். காதல் வடிவானார். கண்ணீர் பெருகியது. கைகுவித்தார். மனைவாழ்க்கையிலிருந்து விடுதலை பெறும் வேட்கை கரைகடந்து பொங்கத், 'தலைக்குத் தலைமாலை' என்னுந் திருப்பதிகம் பாடினார். நீண்டநாள் பிரிந்திருந்த அணுக்கத் தொண்டரைத் திரும்பவும் அழைத்துக் கொள்ள அரனாரும் விரும்பினார். அருகிலிருந்த அமரர் களை 'வெள்ளானைமீது சுந்தரனை அழைத்து வருக' என் றேவினார்.

அமரர்கள் திருவஞ்சைக்களத்தை யடைந்து வலம் வந்து, ஆரூரரிடம் அரனார் திருவருளை மொழிந்துவணங்கி னார். இறைவர் ஏவ லென்றதனால் மறுமொழியின்றி வணங்கி யானையின்மீதமர்ந்தார். ஐவகை அமர துந்துபி கள் ஆர்த்தன! வானவர் மலர்மழை பொழிந்தனர். வான வழியே சென்றார். அப்போது சேரர் பெருந்தகை யைச் சிந்தனை செய்தார். ஆரூரர் செல்வதை யறிந்த பெருமாக்கோதையார் பரபரப்புடன் திருவஞ்சைக்களம் அடைந்தார். விண்ணிற் செலும் தமிழ்வேந்தரைக் கண் டார். தம் குதிரையின் காதிலே அஞ்செழுத்தை யோதி னார். ஏறி அமர்ந்தார். அது கடுகிச் சென்று வானிலே வெள்ளானையை வலம் வந்து அதற்கு முன் சென்றது. சேரர் படைவீரர் தம் தலைவர் தங்களைப் பிரிந்து செல் வதைத் தாங்கவில்லை. அவருடன் செல்ல விரும்பினர்.

தம் வாளால் மெய்யை வீழ்த்திச் சேரருக்கு முன் அவரு டன் சென்றனர்! என்னே வீரர்தம் அன்பு!

திருமலையை அணுகும்போது ஆரூரர் பெருமான், 'தானெனை முன்படைத்தான்' என்னுந் தமிழ்மாலை பாடிக் கொண்டு தென்திசை வாயிலை அடைந்தார். அங்கே சேர ருடைய குதிரை தடையுற்று நின்றது. வெள்ளானை மட்டுந் திருவாயிலினுள்ளே சென்றது. கண்டனர் கண்ணு தலை! கைகுவித்து மெய்ம்மறந்து வீழ்ந்தார்; எழுந்தார். நீண்டநாள் பிரிந்திருந்த கன்று ஆவினைக் கண்டதுபோன்ற காதலொடு வாழ்த்தி நின்றார்.

"ஆரூரனே! வந்துவிட்டாய்!"

"அடியனேன் பிழை பொறுத்தீர்கள்! தடுத்தாட் கொண்டீர்கள்! முடிவிலா நெறியை அருளினீர்கள்! தங்கள் அருள் என் தரத்ததோ?" என்று பன்முறை படிந் தெழுந்தார் வன்றொண்டர். அவர் வழிவழியாக வந்த பேரின்ப வடிவுபோல் இன்பத்திலே மலர்ந்தார். பிறகு, மெதுவாகச், 'சேரர் வெளியிலே நிற்கிறார்' என்றார்.

குன்றவில்லியார் தேவர் தலைவர்களைப் போய்ச் சேரரை அழைத்துவர ஏவி யருளினார். தேவர் சென் றழைத்து வந்தனர். சேரர், பேரன்பு வெள்ளத்திலே முழுகி மெய்ம்மறந்து வாழ்த்தி வணங்கினார். இறைவர், "நாம் அழையாமல் நீ ஏன் இவ்வளவு விரைவில் இங்கு வந்தாய்?" என்று புன்முறுவலுடன் வினவியருளினார். சேரர் கைகளைக் குவித்து நின்று, 'அடியேன் ஆரூரர் கழல் வணங்கிக் களிற்றின்முன் சேவித்து வந்தேன். அடிகளின் அருள் வெள்ளம் இங்கு எளியேனைக் கொண்டு வந்தது. ஆகையால், திருமுன் வரும் பேறு பெற்றேன்!' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார். 'அடியேன் வெளியே நிற்கும்போது தங்கள் வணக்கமாக ஒருலாப் பாடினேன். ஆரூரர் கேட்கும்படி திருமுன் அதை ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்' என்று மேலும் வணக்கமுடன் வேண்டிக்கொண்டார். இறைவர் இசைந்தருள அந்த

'ஞானவுலா' என்னுந் திருக்கைலாய உலாவைப் பாடினார். இறைவர் திருவுளம் மகிழ்ந்தார்.

"பெருகு வேதமும் முனிவருந் துதிப்பரும் பெருமையாய்! உனை
[அன்பால்
திருவு லாப்புறம் பாடினேன் திருச்செவி சாத்திடப் பெறவேண்டும்
மருவு பாசத்தை அகன்றிட வன்தொண்டர் கூட்டம்வைத்
[தாயென்ன
அருளும் ஈசருஞ் 'சொல்லுக!' என்றனர் அன்பருங் கேட்பித்தார்"
(திருத்-வெள், சுஎ.)

பிறகு இருவரையும் சிவகணத் தலைவர்களாக இருக்கும்படி இறைவர் அருளினார். வன்றொண்டர் ஆலால சுந்தரராய், அணுக்கத் தொண்டராய் முன்போல் திருப்பணி செய்துவந்தார். சேரர்பெருமானும் கணநாதராய் தம் முன்னைத் திருத்தொண்டாம் பணியில் திகழ்ந்தனர். பூவுலகிலே யிருந்த பரவையாரும் சங்கிலியாரும் தம் உலகத் தொடர்பை விட்டு முறையே கமலினி, அனிந்திதை யென்னும் திருப்பெயர்களுடன் கைலையிலே உமையம்மையாரின் பணிப்பெண்களாயினர்.

சுந்தரர் திருவடி வாழ்க! சேரர் திருவடி வாழ்க!

சுந்தரர் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்.

---

# உ. தில்லைவாழந்தணர் சருக்கம்

## உ. தில்லைவாழந்தணர்

[செந்தமிழ்ப்பாட்டால் சிவனடி தொழுதலே நோன்பு (கிரியை) அந் நோன்பினைப் பொன்னம்பலக் கூத்தன் அடியிணைக்கு அன்பால் இயற்றி அவனை இம்மையே பெற்றாவாழ் அந்தணர்.]

"ஆதியாய் நடுவு மாகி அளவிலா அளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா ஏக மாகிப் பெண்ணுமாய் ஆணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி! போற்றி!!"

"கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோலம் நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி! போற்றி!!"

இறைவர் திருவருளை முன்னிட்டு, இனித் தில்லைவாழந்தணர் திறம் புகலுகிறேன். அவர்கள் திருவெண்ணீறணிந்த திருக்கோலத்தினரான கூத்தருக்குத் தொண்டர்கள்; பெருமைக் செல்லை யாயினவர்; இறைவரையே வழிபட்டு வாழும் பேறுடையவர்கள்; செல்வ மிக்க அழகிய அணிகளை அணிந்து, அத் திருக்கோயிலிலே நலம் பெருகுந் திருத்தொண்டு செய்வார்கள்; திருமறை யோதுவார்கள்; மற்றுந் தங்களுக்கேற்ற தொண்டுகளிலே ஈடுபடுவார்கள்.

முத்தீ வளர்ப்பவர்; பிற வுயிர்களிடம் அருளுடையவர்; நான்கு மறைகளையும் ஆறு அங்கங்களையும் பயின்றவர்; கூத்தப்பெருமானுர்க்குத் தொண்டுபுரியுந் திருவிலே சிறந்தவர்; குற்றமற்ற மரபினர்; நல்லொழுக்கந் தவறாதவர்; தங்களுக்குரிய ஆறுவகைத் தொழிலாலே உலகின் வறுமையை யொழித்தவர்; தங்களுக்கு நன்மை தருவது திருநீற்றுச் செல்வமே என்று கொண்டவர்; சிவனார் அன்பே செல்வமென ஏற்றவர்.

அப் பெரியோர்கள் தானமுந் தவமும் வல்லவர்; ஞானம் முதலான நான்கையுங் குற்றமற உணர்ந்தவர்; குற்றமொன்று மில்லாதவர்; மானமும் பெருமையும் வாய்ந்தவர்; செம்மன முடையவர்கள்; தெய்வ மறையோ ரெனும் புகழ் பெற்றவர்; இறைவரருளை யிப்பிறப்பிலேயே பெற்று வாழ்வோர்; இனி, வேறு பேறு வேண்டாதவர்; தமக்குத் தாமே உவமையான தலைவர்கள். இவர்கள் மூவாயிரவராவர். இல்லறத்திலே நிற்பவர்.

இவர் பெருமையை எப்படி யெடுத்துக் கூறுவது? தமிழ் மறையாயுள்ள திருத்தொண்டத் தொகையைப் பாடுவதற்குத் 'தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என இறைவரே நாவலர் பெருமானுக்கு அடியெடுத்துக் கொடுக்கும்போது கூறப்பெற்ற பேறு பெற்றவர்கள். அவர்கள் வாழ்க!

"தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## ங. திருநீலகண்ட நாயனார்

### 1. பண்பு

திருத்தில்லையிலே குயவ ரொருவ ரிருந்தார். அவர் தில்லைக் கூத்தரின் திருவடிகளிலே பதிந்த உள்ள முடையவர். பொய்ம்மை யறியாத புகழாளர். இல்லறத்தை நல்லறமெனக் கொண்டவர். சைவநெறி செல்வமே செல்வநெறியெனத் தேர்ந்தவர். மரபின் வழக்கப்படி மட்கலங்களைக் கொடுத்து உணவுக்குரிய பொருள்களைப் பெற்றுக்கொள்வார். சைவமெய்யடியார்கட்குப் பணி செயும் விருப்பத்தினால் அவர்களுக்குத் திருவோடளிக்குந் திருத்தொண்டிலே தலை நின்றார்.

உலகமெலாம் வாழ்வதற்குக் கொடிய நஞ்சை அரனா ருண்டபோது அவருடைய கண்டம் (கழுத்து) அந்த

நஞ்சை உள்ளே செல்லாமல் தடுத்துத் தரித்ததை நினைந்து நினைந்து இக் குயவர் நெகிழ்வார். அக் கண்டத்தைத் 'திருநீல கண்டம்' என்றே சிறப்பிப்பார். ஆகவே, அவரைத் திருநீலகண்டரென்று யாவரும் செப்பினர்.

இத்தகைய சிறப்புடைய இவர், இளமைக்குரிய இயல் பின்படி இன்பத்துறையிலே மிகுதியும் ஈடுபட்டார். ஒருநாள் ஒரு பரத்தையின் வீட்டிற்குச் சென்று வந்தார். கற்பிற்சிறந்த அவர் வாழ்க்கைத் துணைவியார் இதைப் பொறுப்பரோ? 'இனி எம்மைத் தீண்டுவீராயின் திருநீல கண்டம்' என்று தம்மைத் தொடாமல் தடுத்தார்.

திருநீலகண்டத்தையே வழிபடுந் திருவாளர் இதைக் கேட்டுத் திடுக்கிட்டார். இடியோசை கேட்ட அரவமென ஏங்கினர். தம் இறைவருடைய திருநீலகண்டத்தின் திருப்பெயராலேயே தம்மைத் தடுத்தது அவருடைய வாழ்க்கையிலேயே வேறு நெறியை விளைத்துவிட்டது. "எம்மை என்றதனால், மற்றை மாதரார் தமையும் என்றன் மனத்தினும் தீண்டேன்" என்று உறுதி செய்தார். தம் காதல் மனைவியாரைப் பிற மாதரை நோக்கும் நிலையிலேயே நோக்கினர்.

மனைவியாரும் கணவருக்கேற்ற பணிகளைக் கருத்துடன் புரிந்து வந்தார். இவர்களுடைய நிலையை அயலார் எவரும் அறியார். இவ்வாறு ஒருவரையொருவர் தொடாமல் இளமைப்படியைக் கடந்து முதுமை நிலையத்தை அடைந்தனர். முதுமையால் உடல் தளர்ந்தாலும் இறைவரன்பிலே—திருவோடளிக்குந் திருத்தொண்டிலே—தளராமல் வாழ்ந்தனர்.

## 2. தேர்வு

இவர்களுடைய நிலையை உலகிற் குணர்த்த இறைவர் தம் திருவுளங் கொண்டார். எக்குலமாக இருப்பினும் என்? 'செயற் கரிய செய்வார் பெரியர்' ஆவது இயல்பேயன்றோ? அப் பெரியாருடைய 'திருநீலகண்ட'

அன்பு அழகியது! அழகியது!! இறைவர் சிவயோகியரானார். கீளுங் கோவணமும் அணிந்தார். திருநீறு ஒளி விடும் மார்பிலே முந்நூலணிந்தார். நெற்றியிலே நிலவொளி செயும் திருநீற்றை முப்பட்டையாக அணிந்தார். சடையை மறைத்துத் தலையைப் பம்மையாக்கினார். கையிலே திருவோடு ஏந்தினார். ஒளி வீசும் முறுவலுடன் திருநீலகண்டர் திருமாளிகையைச் சேர்ந்தார்.

அடியார் சிவயோகியாரைக் கண்டவுடன் எதிர் கொண்டு வணங்கினார். மனைக்குள் அழைத்துச் சென்று, தவிசிலிருத்தி, முறைப்படி வழிபட்டார். பிறகு, "அடியேன் செய்யும் பணியாது?" என்று பணிவுடன் வினவினார். கொன்றைச் சடையர் கையிலிருந்த திருவோட்டைக் காட்டினார். "இஃது உவமையற்றது! தன்னிடம் வைத்த பொருள்களைத் தூய தாக்குவது! பொன்னையும் மணியையும் விடச் சிறந்தது! இத்தகைய திருவோட்டை உன்னிடம் அளிக்கிறேன். வைத்திருந்து நாம் வேண்டும் போது திருப்பித் தரவேண்டும்" என்று கொடுத்தார். திருநீலகண்டர் அதைப் பணிவுடன் பெற்றுச் சென்று காவலான இடத்திலே வைத்தார். திரும்பி வந்து சிவயோகியாரை வணங்கி வழிவிட்டார்; சிவயோகியார் தில்லை மன்றைச் சேர்ந்தார்.

நீண்ட நாட்கள் கழிந்தன. இறைவர் தாம் அடியவரிடம் அளித்த திருவோட்டை மறைத்தார். முன்பு போற் சிவயோகியாராய் அவர் திருமனையை அடைந்தார். தொண்டர் எதிர்கொண்டார். வணங்கி அழைத்துச் சென்று தவிசிலிருத்தி வழிபட்டார். "தாங்கள் திருவுளம் வைத்தது அடியேங்கள் செய்த தவம்," என்றார். வந்த பெரியார், "உன் பால் வைத்த ஒளிமிக்க ஓட்டைக் கொடுத்துவிட்டுப் பேசு," என்று பரபரப்பாய் வினவினார். எப்பொருளையும் வைத்து வாங்கவல்ல இறைவர் விரைவையறிந்து, தாமும் விரைந்து வைத்த இடத்திற்குச் சென்றார். பார்த்தார்! தேடினார்! எப்படியிருக்கும்? வைத்தவர் எடுத்துக்கொண்டாரே! அடியவர் நடுங்கினார். திகைத்தார்.

உணர்வு கலங்கினார். உரை யிழந்து நின்றார். உலக மிருண்டது! அவருக்கு நினைவை யுண்டாக்கியது ஒரு குரல்:

"விரைவாக வெளியே வா! தாழ்ப்பது ஏன்?" ஒருவாறு துணிந்து வெளியே வந்தார்.

"அந்தணரே! தாங்கள் அளித்துப் போன அழகிய ஓட்டைத் தனியாக வைத்த இடத்திற் காணேன். பழைய தான அதைவிட நல்ல புதிய திருவோடு தருவேன், பெற்றுக்கொண்டு பிழையைப் பொறுக்கவேண்டும்."

இவ்வாறு கூறி வணங்கினார். சிவயோகியார் முகங் கறுத்தது! "என்ன கூறுகிறாய்? நான் வைத்த மண்ணோடே வேண்டும். வேறு பொன்னோடு கொடுத்தாலுங் கொள்ளேன்! முன்னே வைத்த ஓட்டையே கொண்டு வா!" என்று அறைந்தார்.

"நற்குண முள்ள பெரியோரே! என்னிடம் வைத்தது காணப்படவில்லை. தேடியுங் காணேன். வேறு நல்ல ஓடு-நீண்ட நாளுழைப்பது-தருகின்றேன். இதைத் தாங்கள் செவியிலேற்காவிட்டால் என் உணர்வு போய் விடும்."

"இனி ஆக வேண்டியது என்ன? உன்னிடம் வைத்த அடைக்கலப் பொருளைக் கவர்ந்து கொண்டாய், பழிக்கு நீ சிறிதும் நாணவில்லை. எல்லோரும் அறிய உன்னைச் சூழ்ந்து அப்பொருளைக் கைப்பற்றியன்றிப் போகமாட்டேன்."

"நல்ல ஓடுதான் அது! அதை நான் திருடவில்லை. என் உள்ளத்திலே மறைப்பில்லை யென்பதை எப்படித் திறந்து காட்டுவேன்?"

"அஃது உண்மையானால் உன் அன்புக்குரிய மகனைக் கைப்பற்றிப் பொய்கையிலே முழுகிக் கூறு"

"புதல்வன் இல்லையே!"

"குற்றமற்ற உன் மனைவியின் கையைப் பற்றி மூழ்கு!"

"எங்களில் ஓர் சூளுறவால் உடன் மூழ்க முடியாது. நான் மூழ்கிக் கூறுகிறேன்"

"தந்தையுந் தரவில்லை! கவர வில்லையென்று மனைவியின் கையைப் பற்றி மூழ்காமலும் இருக்கிறாய்! உன் உள்ளம் மிக வுறுதி பெற்றது! இனி என் செய்வது? தில்லைவாழந்தணர் அவைக்குச் செல்வேன்."

சிவயோகியார் தில்லைவாழந்தணரை நாடிச் சென்றார். திருத்தொண்டரும் பின் சென்றார். வேறு என்ன செய்வர்? அவருக்குச் சிவயோகியாரிடம் அவரை யறியாமலே காதல் பெருகியது! "ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே!" அந்தணர் வழக்கென் என்றனர்.

சடை முடியையும் நான்கு தோள்களையும் மூன்று கண்களையும் திருநீலகண்டத்தையும் மறைத் தெழுந்தருளிய மறையவர் பகர்வார் :

"இந்தக் குயவனிடம் நான் ஓர் ஓடு வைத்திருக்கக் கொடுத்தேன். அதைத் தரவும் மாட்டானாம்! அவன் மனைவியின் கையைப் பற்றி மறைக்கவில்லை யென்று நீரிலே மூழ்கவும் மாட்டானாம்! அடம் பிடிக்கிறான்!"

தில்லை வாழந்தணர், "நீர் மொழிவதென்ன?" என்று திருத்தொண்டரை வினவினர்.

தொண்டர், "பெருஞ் செல்வம் இஃது என்று கொடுத்த ஓட்டை வைத்த இடத்திற் காணேன். இது தான் நிகழ்ந்தது?" என்றனர்.

"அப்படியானால் மனைவியின் கையைப் பற்றி மூழ்கிக் காட்டுவதே உரியதாகும்" என்றனர் அவையோர்.

திருநீலகண்டருக்குத் தம் நிலையைக் கூற வெட்கமாயிருந்தது. ஆகையால், "பொருந்திய வகையால்

மூழ்கித் தருவேன்,'' என்று கூறி வீட்டிற்குச் சென்று மனைவியாரை அழைத்து வந்தார். தில்லை வாழந்தணர்களுஞ் சிவயோகியாரும் அங்கு வந்து நின்றனர். திருத்தொண்டர் கையிலே ஒரு தண்டிருந்தது. அதை மனைவியார் பக்கம் நீட்டினார். மற்றொரு முனையை அவர் பற்றினார். இருவரும் நீரில் இறங்கினர்.

சிவயோகியார், "மனைவியைத் தொட்டுக் கையைப் பற்றி முழுகுக" என்றார். என் செய்வார் அடியார். வெட்கம் விட்டு முன் தமக்கும் மனைவியார்க்கும் இடையில் நிகழ்ந்ததை யாவருங் கேட்க இயம்பித் தண்டைப் பிடித்தே முழுகி யெழுந்தனர்.

### 3. பரிசு

இறைவர் அருளை எப்படிக் கூறுவது! இருவரும் முதுமை நீங்கி இளமை பெற்றனர்! நீரிலிருந்தெழுந்தவர் வானவர் பொழிந்த மலர் மழையிலே முழுகுவாராயினர்! இதைக் கண்டவர்களெல்லோரும் வியப்பிலே முழுகுவாராயினர்! சிவயோகியாரைக் காணவில்லை! இஃது என்ன! இஃது என்ன!! என்று மயங்கினர். எனினும், விடை மீது விளங்கும் பேரொளியை உமையம்மையாருடன் வானத்திலே கண்டனர்! எல்லோருங் கைகளாரத் தொழுது வாயார வாழ்த்தினர். திருநீலகண்டர் மனவுறுதியைக் கண்டு வானவரும் வணங்கினர். தொண்டரும் அவர் மனைவியாருந் தோன்றாத் துணைவரைக் கை குவித்து, நிலத்தில் விழுந்து தொழுது வாழ்த்தினர்.

**"ஐம்புலனை வென்ற அடியவர்களே! என்றும் இளமை மாறாமல் எம்முடன் இருக்க!"** என்று அருளி இறைவர் மறைந்தனர்.

மன்றுளே திருக்கூத் தாடி அடியவர் மனைகள் தோறும்
சென்றவர் நிலைமை காட்டுந் தேவர்கள் தேவர்தாமும்,
"வென்றஐம் புலனால் மிக்கீர்! விருப்புடன் இருக்க நம்பால்
என்று மிவ்விளமை நீங்கா" தென்றெழுந் தருளினாரே.

(திருத் - திருநீல, சஉ.)

வெற்றிமிக்க திருத் தொண்டரும் மனைவியாரும் இறைவரருளைப் பெற்றுச் சிவலோகம் அடைந்து பேரின்பம் உற்றனர்.

" திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன் "

திருச்சிற்றம்பலம்.

---

## ௬. இயற்பகை நாயனார்

### 1. பண்பு

வெண் கொற்றக் குடையை யுடைய அநபாயன் திருக் குலத்தோர் ஆட்சியினாலே வளம் பெற்றது சோழநாடு. அந் நாட்டுக்கு அவர்கள் தலைநகராக விளங்கியது புகார் என்னும் காவிரிப்பூம் பட்டினம். அந் நகர் பொன்னியாலே பொன் கொழிக்கப் பெற்றது. அந்நகரிலே வணிகர் மரபிலே இயற்பகையா ரென்பவ ரொருவரிருந்தார். அவர் உலகியலுக்குப் பகையானவர். எனினும், பிறை சூடியா ரடிமைத் தொண்டிலே பிழை யற்றவர். அரனு ரடியார் வேண்டுவன இல்லை யெனுமற் கொடுக்கும் இயல்பினை யுடையவர். திருநீறணிந்த மெய்யினர் யாவராயினும் அவர் நினைவின்படி முடித்துத் தருவார். அவர் மனைவியார் கணவர் கருதியதே தாமும் கருதும் ஒன்றுபட்ட வுள்ளத்தினர். அவர்கள் இல்லறம் நல்லறமாக விளங்கியதில் வியப்பில்லை.

### 2. உலக இயற்கைக்குப் பகைவர்

ஆராயுந் தோறும் அறியவியலாமல் நுண்பொருளாக இருப்பினும் அடியார்க் கெளியராக அம்பலத்தாடும் அந்தி வண்ணர் ஓர் அந்தணராக இயற்பகையார் திருமனைக் கெழுந்தருளினர். அவர் மெய்யிலே வெண்ணீறு விளங்கியது. எனினும் அவர் தோற்றமோ காமுகர் தோற்ற மாயிருந்தது! கண்டோர் ஐயமுறும் மாயத் தோற்றம்!

புகார் வணிகர் கண்டார். எதிர்சென்று வணங்கினார். திருவடிகளைக் கழுவி மலரிட்டுத் தொழுதார். "எம் பெருந்தவ மென்ன?" என்று முகம னுரைத்தார்.

"கொன்றைச் சடையாரடியார்கள் குறித்த வெல்லாங் கொடுப்பீராமே! ஒன்றும் மறுக்க மாட்டீராம்! நாம் ஒன்று விரும்பி வந்தோம். மறுமற் கொடுப்பீரா?"

"என்னிடம் உள்ள எதனையும், மறுக்காமற் கொடுப்பேன். எளியேனுடைமை அரனாரடியவ ருடைமையே."

"உம் மனைவியை விரும்பியே இங்கு வந்தோம்" இயற்பகையார் இம்மொழி கேட்டும் மறுக்கவுமில்லை; திகைக்கவுமில்லை! மகிழ்ச்சியுடன், 'என்னிடம் உள்ளதையே கேட்டீர்கள். தங்கள் அருளுக்கு நன்றி' எனக் கூறி மனைக்குட் புகுந்தார். பக்குவமாக மனைவியாரிடம் தாம் ஒப்புக்கொண்டதை யுரைத்தார். வாழ்க்கைத் துணைவியார் கேட்டுத் திகைத்தார். சிறிது கலங்கினார்; எனினுந் துணிந்தார். "எனக்கென வேறு உரிமை யுண்டோ? தாங்கள் விரும்பியதே என் விருப்பம்!" என்று வணங்கினார்.

இயற்பகையார் மகிழ்ந்தார். இனி அவர் சிவனாரடியார்க்குரிய ராதலினாலே, தாமும் மனைவியாரை வணங்கினார். நன்றி யறிதலுடன் நோக்கினார். மனைவியார் சென்று தூர்த்த அந்தணரை வணங்கினார். இயற்பகையாரும் வணங்கி, 'இனியும் என்பணி யென்ன?' என்று வேண்டினார். "இம் மங்கையை நான் அழைத்துக் கொண்டு உன் உறவினரையும் நகரையும் கடந்து செல்லும் வரையிலே துணைவர வேண்டும்" என்றார் மாய அந்தணர். "நானே அறிந்து செய்ய வேண்டிய சிறு பணி இஃது! இதனைப் பெரியார் அருளிச் செய்ய நின்றது பிழை" என இயற்பகையார் எண்ணி 'இதோ வந்தேன்' என உட்புகுந்தார்.

உட்சென்றவர் போர்க்கோலம் பூண்டு வாளும் பலகையும் ஏந்தி வெளியே வந்தார். இருவரையும் முன்

செலுத்திப் பின் சென்றார். இவர் செயலறிந்தனர் உறவினர். "இவ்வகை செய்வார் யார்? இயற்பகைதான் பித்தனென்றால் அந்தத் தூர்த்தன் கற்பிற் சிறந்த காரிகையை அழைத்துச் செல்வதா?" என வெகுண்டனர். 'இப்பழியைப் போக்குவோம்' என்றெழுந்தனர். மேலும் வில்லும் வாளும் சுரிகையும் எடுத்துக்கொண்டு மூவரையும் வந்து வளைத்துக்கொண்டார். "அழியத்தக்கவனே! நில்; எங்கள் குலக்கொடியை விட்டுச் செல்." என்று கூவினர்.

அந்தணராக வந்தவர் அஞ்சினார் போல அரிவையரை நோக்கினர். அந்த அம்மையார், 'இறைவரே! அஞ்சல் வேண்டாம். அவர் வெல்வார்' என்றனர். இயற்பகையாரும், 'தளரல் வேண்டா. அவர்களைத் தரையிலே வீழ்த்துவேன்' என்று ஆறுதல் கூறினார். பிறகு சிங்கம் போல, நெருப்புப் பொறி சிதற உறவினரை, நோக்கினார். "ஒருவரும் நில்லாமல் ஓடிப் போக வேண்டும். இன்றேல், வாளாற் பிளவுண்டு துடிப்பீர்கள்!" என்று முழங்கினார்.

அவர்கள், "அடே! நீ என்ன செய்கிறாய்? என்ன பேசுகிறாய்? நாடு பழிக்குமே! பகைவர் நகைப்பார்களே! மனைவியைப் பார்ப்பானுக்குக் கொடுத்துவிட்டா வலிமை பேசுவது? ஒருங்கே மடிவோம்! ஆனால், இவளைக் கொடுக்கமாட்டோம்!" என்றார்கள்

அடியவர் அடியுண்ட வேங்கை போற் சினந்தார். 'அப்படியானால் உங்கள் உயிரைப் போக்கிய பிறகு இவர்களை அனுப்புவேன்' என்று வாளுந் தாமுமாகத் தடுத்தவர் மேற் பாய்ந்தார். போரென்றால் உயிரை ஒழிப்பது தானே? உறவினருடைய தலையுந் தோளுங் காலுங் கையும் துணியுண்டு வீழ்ந்தன! கூட்டமாய் வந்தனர்! தனித்தனி வந்தனர்! ஒவ்வொரு திசையினும் வந்தனர். அவர்களையெல்லாம் தாமொருவரே நின்று தடுத்தார். எங்கும் குடர்கள் சரிந்தன! எங்கும் உடல்கள் துணிந்தன! எங்

கும் தலைகள் சிதறின! இவ்வாறு போர்க்களத்திலே ஒருவரின்றி யொழிந்தனர்! உறவினரின் மான வாழ்வை உரைப்ப தெப்படி? எதிரின்றி நின்றார் இயற்பகையார்.

"இனி, நீங்கள் அஞ்சாமற் செல்லலாம். காடு நீங்கும் வரையில் அடியனேனும் உடன் வருகிறேன் என்று அவர்களுடனே சென்றார். மூவரும் சாய்க்கா டருகிலே சென்றார்கள். அங்கே சென்றபின் அந்தணர், வணிகரை, 'நீ திரும்பலாம்' என்றார். வணிகர் அவர் மலரடிகளில் விழுந்து வணங்கி எழுந்து அஞ்சலி செய்து வாழ்த்தினர். 'தங்கள் அருள் பெற்று வாழ்ந்தேன்' என்று கூறித் திரும்பினார்.

செய்வதற்கரிய செயலைச் செய்து மீளுந் தொண்டரை இறைவர் மகிழ்வுடன் நோக்கினார். "உண்மையான உள்ள முடையவன் செல்கிறான்' என்று நினைத்தார். சிறிது தொலைவு சென்றவுடன் திரும்பவும், 'இயற்பகையே! ஓலம்! தளர்ச்சி யற்றவனே! ஓலம்! இங்கே வருவாய் அன்பனே! ஓலம்! ஓலம்!! செயற் கரிய செய்த வீரனே! ஓலம்! ஓலம்!!" என்றார் மறைகள் ஓலமிடவும் மாலு மயனுந் தேடவும் நின்ற வள்ளலார்.

"இயற்பகை முனிவா! ஓலம்! ஈண்டுநீ வருவாய் ஓலம்;
அயற்பிலா தானே! ஓலம்! அன்பனே! ஓலம்! ஓலம்!!
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே! ஓலம்!" என்றான்
மயக்கறு மறையோ லிட்டு மாலயன் தேட நின்றான்,

(திருத்-இயற், உக)

"அடியனேன் வந்தேன்! வந்தேன்!! தவறு செய்த வர்களை வாளால் தடுப்பேன்! தடுப்பேன்!" என்று ஓடி வந்தார் இயற்பகையார், மறையவரைக் காணார்! மங்கை யரை மட்டுங் கண்டார்! ஆனால், உமையம்மையாராகிய தம் துணைவியாருடன் இறைவர் வானிலே விடைமேல் வரக் கண்டார்.

கண்ட அடியார் கைகுவித்து நிலத்திலே விழுந்தார், எழுந்தார், வாழ்த்தினர். விண்ணிலெழுந்தருளிய இறை

வர், 'இவ்வாறு நம்மிடம் அன்பு செலுத்தியதற்கு மகிழ்ந் தோம். மனைவியுடன் நம்முடன் வருக' என்று இருவருக்கும் பேரின்பப் பேறளித்தார். வானவர் வாழ்த்தி மலர்மாரி பெய்தனர்! வணிகருடைய சுற்றத்தாரும் விண்ணுலகிலே மேம்பாட்டினை அடைந்தனர்.

"இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்."

திருச்சிற்றம்பலம்.

---

## ரு. இளையான்குடி மாற நாயனார்

### 1. பண்பு

இளையான்குடி என்பது வளத்தில் இளையாத குடிகள் நிறைந்த ஓரூர். அவ்வூரிலே வேளாளர் மரபிலே **மாறனார்** என்பவர் தில்லைக் கூத்தர் திருவடி மறவாச் சீர்மையராயிருந்தார். அவர் உழவே தலையாகக்கொண்டு வளர்ந்த உயர்ந்த எல்லையற்ற செல்வர்; அரனா ரடியாரிடத்திலே அளவற்ற அன்புடையவர்.

அடியார் எவராயினும் வந்தால் எதிர்கொண்டு கை குவித்து வணங்குவார். செவி யினிக்க இன் சொல் செப்புவார்; இல்லத்திற்குள் அழைத்துச் செல்வார்; தவிசிலே அமர்த்துவார்; திருவடிகளை விளக்குவார்; மலரிட்டு வணங்குவார்; நால்வகை உண்டியை ஆறு சுவையுடன் அவர்கள் விரும்பிய முறையிலே படைப்பார். இதுதான் அவருடைய அன்றாடத் திருப்பணி. வருந்தி வந்தவர் அரும் பசியைக் களைந்து, அவருடைய திருந்திய—மகிழ்ந்த—முகத்தைக் காணும் திருத்தொண்டுக் குவமையுமுண்டோ? இவருடைய திருத்தொண்டை யறிந்து அளவிலா அடியார் வந்து பசி தீர்ந்து மகிழ்ந்தனர். "மரம் பழுத்தால் வெளவாலை வா என்று கூவி—யிரந்தழைப்பார் யாவர்?"

## 2. வறுமை

அளகை வேந்தனென வளம் பெற்ற மாறனார்க்கு ஒரு காலத்திலே வளங் குன்றியது. செல்வம் நிறைந்த காலத்திலேயன்றி வறுமையிலும் மனங் குறையாமல் உண வளிக்குஞ் செல்வரென உலகறியச் செய்யவே, நாளுக்கு நாள் வளஞ் சுருங்கி வறியராகும்படி யிறைவர் செய்தருளி னார். எனினும், மனஞ் சுருங்காமலே திருத்தொண்டு செய்தார். அதற்காகத் தம்மிடமுள்ள பொருள்களை யெல் லாம் மாறனார் மாறினார்! அம்மட்டோ? தம்மையே மாறும்படியான கடனுடையவருமானார். அப்போதும் எப்போதும் போல அடியார்க் குணவளித்து வந்தார்.

## 3. தேர்வு

இங்ஙன மிருக்குநாளில், யாவராலும் அறிய வியலாத திருவிளையாடல் புரியும் சிவபெருமானார் ஊர்தியையும் உமை யம்மையாரையும் நீங்கித் தவத்தராக மாறனார் மனை யகம் புகுந்தார். அவர் சென்ற காலம் மாரிக் காலம்! யாவரும் கதவடைத் துறங்கும் இராக் காலம்! உணவும் இராக் காலம்! இக் காலத்திலே மாறனார் விருந் தெதிர் கொண்டார்.

வந்தவர் மழையில் நனைந்திருந்தார். அவருக்கு வேறுடை கொடுத்து மெய்யின் ஈரத்தைப் போக்கிக் கொண்டு அமரச் செய்தார். பிறகு, மனைவியாரிடஞ் சென்றார்.

"நமக்கு உணவில்லாவிட்டாலும் அரனா ரடியவரை எப்படிப் பசியுடன் வாட விடுவது? ஏதாவது வழி யுண்டா?"

"ஒன்றையுங் காண்கிலேன்! அயலாரும் இனி அளிக்க மாட்டார்கள்! பொழுதும் உலகுறங்கும் காலம்! போக் கிடமில்லையே!"

இவ்வாறு வருந்தினர் மனைவியார். ஒரே யொருவழி தான் இருந்தது. அதைத்தான் கையாள வேண்டுமென முடிவு செய்தார். கணவரைக் கனிவுடன் பார்த்தார். "இப்போது எப்படியும் உணவு சமைக்க வேண்டும் அன்றோ? காலையிலே கழனியிலே விதைத்த முளைநெல்லை வாரிக்கொண்டு வாருங்கள். எப்படியாவது...." அதற்கு மேல் மாறனார் காலந் தாழ்க்கவில்லை. வளநிதி பெற்றவர் போல் வயலை நாடி விரைந்தார்.

மழை பொழியும் இருளிரவு! முன்னும் தெரியாது! பக்கமுந் தெரியாது! இருளானது கட்டுவிட்டு உருகி உலகெலாம் பரந்தது போன்ற நிலை! மைக்குழம்பு பொங் கித் ததும்பி நிற்கின்றது போன்ற காட்சி! ஒருவரும் வெளியே வரவொண்ணாத காலம்! மாறனாருக்கு அந்த இருளிலே செல்லும் வலிமையைக் கொடுத்தது அடியா ரன்பு ஒன்றே அந்த அன்பு ஊக்குவதால், தலையிலே இறைகூடை யொன்றைக் கவிழ்த்துக்கொண்டு, வழக்க மான வழியைக் குறிப்பாக உணர்ந்து காலே கண்ணாகக் கொண்டு சென்றார். கழனியை அடைந்தார். கூடை நிறையக் கைகளாலே தடவி விதைகளைச் சேர்த்தார். சுமந்துகொண்டு வீடு வந்தார்.

மனைவியார் அதை வாங்கினார். சேற்றோடு கலந் திருந்த நெல்லைக் கழுவியெடுத்தார். வீட்டிலே கூரையோடு கட்டப்பட்டிருந்த அலக்குகளைக் கணவனார் அறுத்தெடுத் துக் கொடுத்தனர். அதை விறகாகப் பயன்படுத்தி நென் முளைகளை வறுத்துப் பதமாக்கிக் குற்றி அரிசியாக்கி உலையி லிட்டுச் சோறாக்கினார். கறிக் கென்செய்வது? மனைவி யார் கணவரைப் பார்த்தார். கணவர் புறக்கடைத் தோட் டத்தைப் போய்ப் பார்த்தார். பாத்திகளிலே தலை நீட்டிக் கொண்டிருந்த கீரைகளைத் தமது "பாசப் பழி முதல் பறிப் பார் போலப்" பறித்து வந்தளித்தார். வாழ்க்கைத் துணைவி யார் அவற்றை வாங்கித் தம் கைத்திறத்தாலே பலவகைக் கறிகளாகப் பக்குவப்படுத்தினார்.

## 4. வெற்றி

இவ்வாறு ஒருவகையாக உணவு சமைப்பதில் வெற்றி யடைந்தபின் மாறனார், 'வழிவந்த களைப்பினோடும் வருத் திய பசியினோடும்' உறங்கிக்கொண்டிருக்கும் விருந்தி னரை எழுப்பச் சென்றார். "என் இடரைப் போக்கி, வாழ்விக்க எழுந்தருளிய பெரியோரே! அமுது செய்தருள எழுந்தருள்க!" எனக் கூறினார். அப்போது, வந்தவ ரிருந்த இடத்திலே அவரெழவில்லை! பேரொளி யொன்று எழுந்தது! தொண்டரும் துணைவியாருந் திகைத்து நின்ற னர். திகைப்பு நீங்கு முன்னரே மலைமகளாருடன் வள்ள லார் இடபத்தின்மே லெதிரெழுந்தருளினார்!

## 5. பரிசு

இருவரும் இன்ப வடிவினராகி விழுந்து வணங்கி இறைவரை வாழ்த்திக் கைகுவித்து நின்றனர். முக்கண் ணர் முகமலர்ந்து நோக்கினார். "அன்பனே! அடியார்க் குத் திருவமுது செய்வித்த நீயே சிறந்த தொண்டன்! மனைவியுடன் எம் உலகத்தை அடைவாயாக! அங்கே குபேரன் உனக்குக் குற்றேவல் செய்ய வாழ்ந்திருப்பீர் கள்!"

இவ்வாறு கூறி மதிச்சடையார் மறைந்தருளினார். மாறனார் மனைவியாருடன் மாளாப் பேரின்ப வாழ்வு பெற் றனர். "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே."

"இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

## சா. மெய்ப்பொருள் நாயனுர்

மலையமான் நாட்டை மலாடு என்றும் வழங்குவர். இதற்குச் சேதிநாடு என மற்றொரு பெயருமுண்டு. இதன் தலைநகர் திருக்கோவலூர். தென்பெண்ணையின் கரையிலே சிறப்புடன் இன்றுமுள்ள நகரம் அது. மங்கை பங்கரின் திருவடியிலே தங்கிய உள்ளமுடைய மலாடர் மரபிலே ஓரரசர் அந்நகரிலிருந்து சைவ நெறியின் வழியே தம் அரசு செல்ல அரசாட்சி செய்துவந்தார். அவர் அரசியல் நெறி சிறிதும் தவருத அண்ணல்; குடிகளைத் தம் மக்கள் போலக் காக்கும் கோமான்; பகைவரை வென்ற வீரர்; சிவனுர் திருக்கோயில்களிலே வழிபாடு, ஆடல், பாடல் முதலியவை தவருமல் நடக்கப் பொருள் கொடுக்கும் புண்ணியர்.

அவருள்ளத்திலே எழுதப் பெற்றது சிவனுரடியார் திருவேடமே. அவருடைய சார்பு அந்திவண்ணனு ரடியா ரடியே. அவர் தேடிய மாடமாளிகைகளும் செல்வங்களும் தில்லைக்கூத்த ரடியார்க்குச் சேர்க்கப்பெற்றவையே.

இத்தகையார்க்கும் பகைவ னொருவன் இருந்தான். அவன் பெயர் முத்தநாதன். அவன் பலமுறை இவருடன் போர்செய்தான். ஒவ்வொரு போரிலும் நால்வகைப் படைகளையும் இழந்து நலிவுற்றுன். இவரைப் போரில் வெல்ல வகையில்லாமையால் வேறு வகையிலே வெல்லத் துணிந்தான். திருவெண்ணீ றணிந்தவரை ஒன்றுஞ் செய்யமாட்டா ரென்பதைத் தன் கோழைச் செயலுக்குப் பயன்படுத்திக்கொள்ளத் துணிந்தான். திருக்கோவலூரை யடைந்தான்.

திருவெண்ணீறணிந்த மெய்! சடைமுடி! கையிலே சுரிகை மறைந்த புத்தகக் கட்டு! இதுவே முத்தநாதன் கொண்ட பொய்த்தவ வேடம். அவன் உள்ளத்திலே கரவடத்துடன் அரண்மனையை அடைந்தான். கடை காவலர் இவன் தவவேடத்திற்கு மதிப்புக் கொடுத்து,

'உள்ளெழுந்தருள்க !' என்றனர். இவ்வாறே தடை யொன்றுமின்றிப் பல வாயில்களையுங் கடந்தான். அப் போது மலையமானாட் டரசர் துயின்றுகொண்டிருந்தார். அரசரின் மெய்க்காவலனான தத்தன் மட்டும் பள்ளி யறைச்கு வெளியே இருந்தவன், 'இறைவர் துயில்கிறார். கால மறிவது நல்லது' என்றான்.

முத்தநாதன் சித்தங் கலங்காமல், 'யாம் அரசர்க்கு நன்மை கூறவே செல்கிறோம். நீயும் நின்றிடு' என்ற றைந்து விரைவாக உட்புகுந்தான். தத்தன் ஐயமுற்றுப் பின்பற்றிச் சென்று மறைந்து நின்றான். அரசர் கள்ளங் கபடற்ற உள்ளத்தராய்த் துயின்றுகொண் டிருந்தார். அரசியார் அருகிலமர்ந்திருந்தார்.

சைவ வடிவத்தானைக் கண்ட அரசியார் விரைந் தெழுந்து, அரசரை எழுப்பினார். துயில் நீங்கி யெழுந்த தூயவர், 'பிறைமுடியா ரடியார் இவர்' எனத் திடுக் கென்று இருகை கூப்பி அடியிலே முடிபட விழுந்து வணங்கினார். 'நன்மைதர என் வாழ்வு வந்தது' என முகமன் கூறினார். பிறகு, 'இங்கு எழுந்தருளியது என்ன கருதி ?' என்று பணிவுடன் வினவினார்.

உங்கள் தலைவர் முற்காலத்தில் உரைத்தருளிய ஆகம நூல் இஃது ! இதுவரையில் வெளிவராதது! இதனை உனக் கியம்பக் கொண்டு வந்தேன் !'

[உள்ளும் புறமும் ஒத்தில்லாமையாலேதான் 'உங்கள் தலைவர்' என்றான்.]

"இதைவிட எனக்குப் பேறு வேறு வேண்டுமோ ? இந்த ஆகமத்தை வாசித்தருள்க"

"நீயும் நாமும் தனியே இருக்கவேண்டும். உன் மனைவியை உள்ளே அனுப்பிவிடு."

அரசர் அரசியாரை நோக்கினார். அவர் வணங்கி அந்தப்புரம் சென்றார். பிறகு, குற்றமறியாத அரசர்

அந்த வஞ்சகனைத் தவிசில் இருத்தினார். தாம் நிலத்திலே இருந்தார். 'இனி அருள் செய்க!'' என்று வணங்கினார். என்னென்பது! பகைவன் புத்தகக்கட்டை அவிழ்ப் பவன் போலச் சுரிகையை யெடுத்தான். அவர் வணங்கும் போது 'தான் நினைந்த அப்பரிசே செய்தான்' அரசரோ, 'மெய்த் தவ வேடமே மெய்ப்பொருள் எனத்' தொழுதார்! தம்மை மாற்றான் வஞ்சகமாகத் தாக்குகிறானென் றறிந்தும் தவ வேடத்திற்கு மதிப்புக் கொடுக்கும் தம் கொள்கையை விடாது—அவனை ஒன்றும் செய்யாது—வெற்றி வீர ரானார்! பகைவன் இழி செயலையும் இவர் உயர் செயலை யும் எப்படி மதிப்பிடுவது?

பொய்யன் உள்ளே புகுந்தபோதே மறைந்து உடன் வந்திருந்த தத்தன் நொடியிலே நெருங்கினான். முத்த நாதனை வீச வடிவாளினைத் தூக்கினான். குபு குபு வென்று குருதி பொங்க வீழ்கின்ற மெய்ப்பொருளார், 'தத்தா நமர்' என்று தடுத்து வீழ்ந்தார். வேதனை யடைந்த தத்தன் விலக்கியவரைத் தாங்கி மெல்ல நிலத்திலே விடுத்தான். வணங்கி, 'நான் யாது செய்வேன்?' என்றான்.

"அடியவர் செல்லத் தடை யொன்றுமின்றி நம் நகரைக் கடந்து விட்டு வருக! எவரும் இடையூறு செய்தல் கூடாது!''

தத்தன் வாய் பேசாது வணங்கி வஞ்சகனை அழைத் துக்கொண்டு வெளியே வந்தான். அவன் உள்ளம் அரச ருடைய மலர்ந்த முகத்திலே சிறிதும் வாட்டமில்லாதிருந் ததை எண்ணி யெண்ணித் துடித்தது! குமுறியது! வஞ்சகன் செயலைவிடத் தலைவர் அருள்மொழியே தன்னை வருத்துகிறது என்னும் உண்மையை நினைத்துப் புழுங்கி னான். வெளியே வந்தவுடன், அரசர்க்கு நேர்ந்ததை அறிந்தவர் பலரும் 'பொய்த் தவனைக் கொல்வோம்' எனப் புற்றீசல் போலப் புறப்பட்டனர். தத்தன் அவர்களைத் தடுத்து, 'இத்தவன் போகப் பெற்றது இறைவனாராணை' என்றான். அனைவரும் வியந்து அஞ்சி யகன்றனர். நகரெல்

லையைக் கடந்தபின் முத்த நாதனைப் போகவிட்டுத் தத்தன் திரும்பினான்.

அரண்மனையை அடைந்தான். அரசர் தத்தன் சென்ற வழிமேல் விழி வைத்து உயிர் தாங்கியிருந்தார். தத்தன் வந்து வணங்கிச், 'செய் தவ வேடத்தாலே வென்றவனுக் கிடையூறின்றி விட்டுவிட்டேன்' என்றான். அவன் கண்களில் நீர் பெருகியது! அரசர் முகம் மலர்ந்து அருளுடன், 'இன்றெனக்கு ஐயன் செய்தது யார் செயவல்லார்?' என்றார்.

பிறகு தம்மைச் சூழ்ந்துநிற்கும் அரசியல் முதன்மையாளர்களையும் மனைவியாரையும் உறவினரையும் நோக்கி, 'என் ஆணையாகக் கொண்டு, திருவெண்ணீற் றன்பைப் பாது காப்பீர்களாக!' என்று சிவபிரானார் திருவடிக் கமலங்களிலே சிந்தைவைத் தடைந்தார்.

"அரசியல் ஆயத் தார்க்கும் அழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை யெல்லாம் விளம்புவார் "விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர்" என்று
புரவலர் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார்."

(திருத்-மெய்ப். உஉ.)

இத்தகைய மெய்ப்பொருள் நாயனாரின் வீரமும் மெய்யன்பும் நமக்குங் கிட்டுமாக!

"வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்."

திருச்சிற்றம்பலம்.

---

## எ. விறன்மிண்ட நாயனார்

திரை கடலிற் கிடைக்கும் முத்தையும், கரும்பில் விளையும் முத்தையும், மூங்கிலிற் காணும் முத்தையும் யானை மருப்பில் அகப்படும் முத்தையும் முத்துப்போன்ற பற்களையுடைய சிறுமிகள் எடுத்துக் கோத்தணியும் வளமுடைய நாடு மலை நாடு. அந்த மலை நாட்டிலே விளங்குவது செங்குன்றூர்.

அந்த அழகிய நகரில் வேளாளர் மரபிலே விறன் மிண்டர் என்பவ ரொருவரிருந்தார். அவர் சிவபிரானு ரடியைப்பற்றி மற்றைப் பற்றையெலாம் விட்டவர்; சைவ அடியார்களிடம் பேரன்புடையவர்; கொன்றையஞ் சடை யார் எழுந்தருளிய திருப்பதிக ளெங்குஞ் சென்று வணங்கு மியல்புடையவர்; அங்கெல்லாம் அடியாரை முதலில் வணங்கியே அரனுரை வணங்குவார்.

அவர் அன்பு விளைந்த அகத்துடன் ஒருமுறை திரு வாரூர் சென்றார். அங்கே தேவாசிரியனிலே கூடியிருக் கும் அடியார்களை வணங்கினார். அப்போது, அவ்வழியே பூங்கோயிலுக்குச் செல்லும் சுந்தரர் அடியார்களை வணங் காமல் ஒருபுறமாய்ச் செல்வதை நோக்கினார்; சினங் கொண்டார் "அடியார்களை வணங்காமல் ஒதுங்கிச் செல் லும் சுந்தரனும் புறகு! அவனை ஆட்கொண்ட இறைவராகிய சிவனும் புறகு!" என்று கூறினார்.

அம்மொழி கேட்ட சுந்தரர் அஞ்சி வீதிவிடங்கர் அருளைப் பெற்றுத் திருத்தொண்டத் தொகை பாடி அடி யார்களை வணங்கினார். இவ்வாறு சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடியருளி, நம்மையும் உலகையும் வாழ்விப்ப தற்குக் காரணராயிருந்த விறன்மிண்டரின் பெருமையை எப்படி எடுத்துக் கூறுவது? அப்பெரியார் திருக் கைலை யிலே சிவகணங்களுக்குத் தலைவரானார்.

"விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்கு அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

*

# அ. அமர்நீதி நாயனார்

## 1. பண்பு

சோழநாட்டிலே, மலர்ப்பொழில் சூழ்ந்ததும் வளமிகுந்த தெருக்களையுடையதுமான பழையாறை என்னுந் திருநகர் ஒன்றுள்ளது. அந்நகரில வணிகர் மரபில் அமர்நீதியார் என்னும் சைவ மெய்யன்பர் ஒருவ ரிருந்தார். அவர் உள்ளத்தில் எப்போதும் சிவனு ரடிமலர்களே மலர்ந்திருக்கும். அவர் வரும் அடியவர்கட்கு உணவளித்து, ஆடையும் கீளும் கோவணமும் அளிப்பது வழக்கம்.

## 2 தேர்வு

அவர் ஒருமுறை திருநல்லூரிலே மணிகண்டரின் திருவிழாவைக் கண்டு சேவிக்கக் குடும்பத்துடன் சென்றார். அங்குள்ள தம் திருமடத்திலே தங்கினார். தம் திருத்தொண்டைச் செய்துகொண் டிருந்தார் அந்நாளில் நல்லூர்ப் பெருமானார் ஓர் அந்தண பிரமசாரி வடிவங் கொண்டு அங்கே எழுந்தருளினார். அவருடைய திருமுடியிலுள்ள சிகையையும் வெண்ணீறு விளக்குந் திருநெற்றியையும் மார்பில் அசையும் மான் தோலுடன் இழைந்த முப்புரிநூலையுங் கண்டோர் அழகின் இருப்பிடமென்று வியந்தனர். அவர் கையிலே இருந்த தண்டிலே திருநீற்றுப் பையும் இரு கோவணங்களுங் கட்டப்பெற்றிருந்தன.

அவரைக் கண்டனர் அமர்நீதியார். அவர் உளத்தினும் முகம் மிக மலர்ந்தது. விரைந்து வந்து வணங்கினார். "இம்மடத்தில் இதுவரையிற் காணாத தன்மையுடன் வந்தீர்கள். தாங்கள் வர நான் செய்த தவம் என்னவோ!" என முகமன் கூறினார். வந்தவர் சிந்தை மகிழ்ந்து, "நீர் அடியார்க் குணவூட்டி உடையுங் கந்தையுங் கீளும் கோவணமும அளிப்பதைக் கேள்வியுற்றோம். உம்மைக் காணும் ஆவலால் வந்தோம்," என்றனர்.

"இங்கே அந்தணர்களுக்கும் உணவு படைக்கும் வசதி செய்திருக்கிறேன். தாங்களும் திருவமுது செய்தருளவேண்டும்."

"நன்று. நாம் காவிரியிலே நீராடி வரச் செல்கிறோம். ஒருகால் மழை வந்தால் இக்கோவண மிரண்டும் நனைந்து விடும். ஒன்றை உம்மிடம் அளிக்கிறோம். நாம் திரும்பி வரும்போது கொடுக்கவேண்டும். இதன் பெருமையை எடுத்துக் கூற வேண்டிய தில்லை"

இவ்வாறு கூறித் தண்டிலிருந்த கோவணங்களில் ஒன்றை அவிழ்த்துக் கொடுத்துவிட் டகன்றார். அமர் நீதியார் அக் கோவணத்தைத் தனியிடத்திலே சேமித்தார்.

சென்ற அந்தணர் தாம் வணிகரிடம் அளித்த கோவணத்தை மறைத்தருளினார். காவிரியி லாடினாரோ, கங்கையிலேதான் குளித்தாரோ அறியோம்! மழையிலே நனைந்து வந்தார்! பாவம், இங்கே வணிகரின் அன்பிலே வேறு நனையவேண்டும்! அமர்நீதியார் அறுசுவை யுண்டியையும் சமைப்பித்துக் கைகுவித்து அந்தணரை வரவேற்றார்.

அந்தணர் புன்முறுவலுடன், 'மழையில் நனைந்து விட்டோம். ஈரத்தை மாற்றவேண்டும். தண்டிலுள்ளதும் ஈரம் ஆகையால், விரைவில் அக் கோவணத்தை எடுத்து வாரும்,' என்றார். அந்தணரின் சூதறியாத வணிகர் தாம் வைத்த இடத்திலேயும் மற்ற இடங்களிலும் கோவணத்தைத் தேடினார்; கிடைக்கவில்லை. மனைவியாரும் மற்றோரும் இதனை யறிந்து கலங்கினர். அமர்நீதியார் அந்தணரின் வலையிலே எப்படியோ அகப்பட்டுக்கொண்டார். என் செய்வார்? வருந்தினார். எனினும், அங்கேயே நிற்க முடியுமா? வேறோர் அழகிய புதிய கோவணத்தை எடுத்துக்கொண்டு வந்தார்.

"அடிகளே! தாங்கள் அளித்த கோவணம் வைத்த இடத்திலிருந்து எப்படியோ மறைந்தது. வேறொருவரும் எடுப்பவரில்லை. இதைப் போன்ற வியப்பை யிதுவரை

கண்டிலேன். வேறு நல்ல கோவணம் கொண்டுவந்திருக்கிறேன். இது கிழித்ததன்று; தனியே நெய்தது. அருள்கூர்ந்து இதனை உடுத்திக்கொண்டு என் பிழையைப் பொறுக்கவேண்டும்,'' என்று வணங்கினார் வணிகர். வேதியர் நெருப்புத் துண்டுபோல வெகுண்டார். "அமர்நீதியார் நிலைமை நன்று! இன்றுதான் கொடுத்துச் சென்றோம்! நாளாகவுமில்லை! வேறு கோவணங் கொடுக்க வந்தீர். நல்ல கோவணங் கொடுப்பதாகப் புகழ் பரப்பியது எம் கோவணத்தைக் கொள்ளத்தான் போலும்! இது நல்ல வாணிகம் ஐயா!''

இம் மொழிகள் அமர்நீதியாரைப் பேயறைந்தது போலத் தாக்கின. அவருள்ளம் கசங்கியது "இப் பிழை என் அறிவுக் கெட்டி நிகழ்ந்த தன்று. பொறுத்தருள்க! தாங்கள் கூறியவாறு நடந்துகொள்வேன். இக் கோவண மட்டுமன்று, அழகிய பட்டாடைகளும் பொற் பணிகளும் எவ்வளவு வேண்டுமாயினும் ஈடாகத் தருகிறேன்,'' என்று பன்முறை வணங்கிப் பகர்ந்தார். அவர் மெய் நடுங்கியது!

கோவணக் கள்வர் சினந் தணிந்தவர்போல், 'எமக்கேன் பொன்னும் பட்டும்? எம் கோவணத்துக் கீடான கோவணமே போதும்,' என்றருளினார் வணிகர் உள்ளம் மலர்ந்தது; மகிழ்வுடன் பெருமூச்சுவிட்டார். "அந்தணரே! நான் தங்கள் கோவணத்திற்குச் சமமான கோவணத்தை எப்படிக் கொடுப்பது?'' என்று வினவினார். "இதோ, இத் தண்டிலுள்ள கோவணம் நீர் போக்கடித்த கோவணத்தோடு இணைந்தது. இதன் எடையாக நீர் கோவணங் கொடுப்பதே ஏற்றது,'' என்றனர் இறைவர்.

'மிக நன்று,' என்று மகிழ்வுடன் ஓர் தராசைக் கொண்டுவந்து வணிகர் நிறுத்தினார். ஒரு தட்டிலே மறையவர் தம் கோவணத்தை வைத்தார். வணிகர் தம் கையிலே வைத்திருந்த கோவணத்தை மற்றொரு தட்டிலிட்டார்; நிறை நில்லாததைக் கண்டு வியந்தார். நாயன்மார்களுக் களிக்கவென வைத்திருந்த கோவணங்களில்

ஒவ்வொன்றாக இட்டார். சமமாக வில்லை! "உலகிலில்லாத மாயை! இக் கோவணத்திற்குப் பல கோவணங்கள்—அளவில்லாத கோவணங்கள்—ஒப்பாக வில்லையே," என்று நினைத்துப் பல ஆடைகளையும் பட்டுடைகளையும் ஒவ்வொன்றாக இட்டார் இட இட உயர்ந்ததே ஒழியத் தாழவில்லை! பிறகு, பொதிப் பொதியாக உள்ள ஆடைகளை யெல்லாம் இட்டார். தாழவில்லை! வணிகர் தம் அன்பு உயரவும் சிவனா ரருள் தாழவும் இருப்பதைத் அப்போது எடை போட்டுக் காட்டுவதைப்போ லிருந்தது அக் காட்சி!

அடியவர் அஞ்சினார். அந்தணரை வணங்கி, 'இன்னும் எதனை யிடுவது? என்னிடமுள்ள பொன்னை யிடலாமா?' என்று பணிவுடன் வினவினார். அந்தணர் இசைந்து, 'எப்படியாவது எம் கோவணத்திற் கீடு செய்க,' என்றருளினர். பிறகு பொன்னும் வெள்ளியும் நவமணித் திரளும் பலவகை உலோகங்களும் எல்லை யில்லாமற் கொண்டுவந்து கொண்டுவந்து ஏவலாளர் இட்டனர். நிறை நேர்படவில்லை. கண்டவர் வியந்தனர். வணிகர் நடுங்கினர், "இனி என் மனைவியும் சிறுவனும் நானுமே யிருக்கிறோம். நாங்களும் இத் தட்டி லேற அருள் செய்ய வேண்டும்," என்று வேண்டினர். அவர் நிலையைத் தராசின் மூலம உலகிற் குணர்த்தவும், அதன் மூலமே இவ்வுலகத துன்பத்திலிருந்து விடுவிக்கவும் எண்ணிய இறையவர் அதற் கிசைந்தார்.

"இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோமெனிற் பெருந்துலை நேர்நிற்க!" என்று
மழைத்த டம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினார் ஏறினார் தட்டில்.

(திருத்-அமர். ௪௩)

வணிகர் தம் மனைவியுடனும் மகனுடனும் நல்லூரிறைவரையும் வந்த அந்தணரையும் வணங்கினார். "நாங்கள் திருவெண்ணீற் றன்பு பிழைத்திலோ மென்றால் இத்தட்டு

நேர் நிற்கவேண்டும்,'' என உரைத்து, ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டே தட்டினி லேறினர் மூவரும்! என்னென்பது! தட்டு இப்போதுதான் சமமாக நின்றது! உலகினர் தொண்டரின் உறுதிக்கு வியந்து தொழுதனர். வானவர் மலர் மாரி பெய்தனர். இறைவனார் தம் உண்மை வடிவுடன் உமையொரு பாகராய் விடையின் மீது எழுந்தருளினார்.

வணிகரும் மனைவியாரும் மகனும் தட்டிலிருந்தே வாழ்த்தி வணங்கினர். இறைவர் அவர்களைத் தம் முன்னேயே எப்போது மிருந்து தொழும் பேற்றை யடையச் செய்தார். அத் தட்டே விமானமாக வணிகர் குடும்பம் கைலை யடைந்தது.

"அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்."

சுந்தரர் திருவடி வாழ்க !

திருச்சிற்றம்பலம்

## ரு. இலைமலிந்த சருக்கம்

### கூ. எறிபத்த நாயனார்

#### 1. பண்பு

அரனா ரடியா ரிடுக்கண் போக்கும் அதனையே தொண்டாகக் கொண்ட எறிபத்தர் பெருமையை என்னென்பது? அநபாயருடைய முன்னோர்களான சோழர்களுக்குத் தலைநகர்களில் ஒன்று கருவூர். அந்த நகரின் மதில்களிலே மேகங்கள் தவழும். வாயில்களிலே ஆராய்ச்சி மணி தவழும். மலர்ப் பொழில்களிலே மணம் தவழும். பெண்களின் கூந்தலிலே மலர் தவழும். யானைகள் நீர்த் துறைகளில் ஆடும். களிப்புற்ற மயில்கள் பொழில்களிலே ஆடும். ஒலிக்கும் மணிகள் அரங்குகளில் ஆடும். வண்டுகள் அரிவையர் கூந்தலில் ஆடும். தெருக்களில் பரவலாக ஒளி ஆடும். வானமளாவிய கொடிகளிலே புனி ஆடும். அந்நகரின் அழகு இது! அமராவதியும் இந்நகருக் கிணையாகாது.

அந்த நகரின் நடுவே பொன்மயமான மதிலுடன், அன்பருடைய அகத்தை விட்டு நீங்காத அழகுடன் ஆநிலை என்னுந் திருக்கோயில் விளங்கியது. அங்கு எழுந்தருளி யிருக்கும் அரனாரை வழிபடும் அன்பர்களின் இடர்களைத் தடுக்குந் திருத்தொண்டிலே யீடுபட்டவரே எறிபத்த ரென்னும் பெரியார். அடியர் துயரை எறிவதற்காகக் கோடரி என்னும் படையை ஏந்தி யிருப்பார்.

#### 2. சிவகாமியாண்டார்

ஆநிலை யரனாரிடம் உறுதியான அன்புடையவர் **சிவகாமியாண்டார்** என்னும் முதிய அந்தணர்; முக்கண்ணருக்கு மலர்மாலை சாத்தும் திருத்தொண்டர்; அவர் ஒரு நாள் வைகறையி லெழுந்து வழக்கம் போல நீராடித் தூயவராய் வாய் கட்டிக்கொண்டு மலர்ப்பொழிலை யடைந்தார்.

மலரும் நிலையிலுள்ள—வண்டுகள் தொடாத—போதுகளைக் கைகளாலேயே தொட்டறிந்து எடுத்தார். அழகிய பூங்கூடையிலே நிறைத்துக்கொண்டார்! உள்ளத்திலே ஆராத காதல்கொண்டார்! ஒரு கையிலே தண்டுகொண்டார்! அங்கணராகிய தலைவருக்குச் சாத்துவதற்குக் காலையிலேயே கொடுப்பதற்காக விரைந்து வந்தார்.

அன்று மகா நவமிக்கு முதல் நாள். அந்நகரையாளும் புகழ்ச்சோழருடைய பட்டத்து யானையைப் பாகர்கள் நீராட்டிக்கொண்டு வந்தனர். அது திடீரென்று மதங் கொண்டது. மேலிருக்கும் பாகர்களுக் கடங்காமல் அருகில் வந்த குத்துக்கோற்காரர்களை விரட்டிவிட்டு ஓடி வந்தது. ஒரு தெருவிலே சிவகாமியாண்டார் தம கைத் தண்டிலே பூங்கூடையை மாட்டி எடுத்துக்கொண்டு வந்தார். மத களிறு அப் பூங்கூடையைப் பற்றிச் சிந்தியது. மேலிருக்கும் பாகர் அதனைத் தடுக்காமல் விரையச செலுத்திச் சென்றனர். முதிய அந்தணரான சிவகாமியாண்டார் தம் உயிரையே அது பறித்துச் சிந்தியது போல நடுங்கினார்! வெகுண்டார்! கைத் தண்டால் அதனை அடிக்கப் பின் தொடர்ந் தோடினார். யானை விரைநது சென்றுவிட்டது. முதுமையால் ஓட முடியாமல் தவறி விழுந்தார். துக்கத்தால் தரையை மோதி எழுந்தார். துயரம் கடல் போலப் பெருகியது!

"யானைத் தோல் போர்த்தருளிய வீரரே! தங்களுக் கென்று கொண்டுவந்த மலரை யானை சிந்துவதா? ஆறும் பிறையும் அணியுஞ் சடைமே லணியும் மலரை யானை சிந்துவதா? சிவதா! சிவதா!" என்று இறைவரைத் தஞ்சமாக வேண்டி அலறினார் 'சிவதா! சிவதா!!' என அலறுவது எறிபத்தர் காதில் விழுந்தது. அவர் எதிரே வந்து கொண்டிருந்தார். நெருப்புப் போலச் சீறிப் பொங்கினார். 'மன்றுளா ரடியவர்க்கு வழிவழியாகப் பகை களிறே! அதனைக் கொன்று வீழ்த்துவேன்,' என்று மழு ஏந்திய கையராய்ச் சிவகாமியாண்டாரை வணங்கி, 'அந்தக் களிறு எங்கே உற்றது?' என்றார். அவர், "என் கையிலிருந்து

சிவனா ரடிக்குச் சாத்தும் பூவைப் பறித்துச் சிந்திவிட்டு இத் தெருவே செல்கிறது,'' என்று கலங்கினார்.

கேட்டார் எறிபத்தர். 'இனி அது பிழையாது,' என்று சீறினார். மழு நெருப்பாகத் தாம் காற்றாக விரைந்து ஓடினார். களிற்றைத் தொடருஞ் சிங்கம்போலச் சென்று கண்டுபிடித்தார் "இது முன்பு நம் அண்ணலா ருரித்த களிறு போன்றதே! அமரர் வந்து தடுக்கினுங் கொல்வேன்,'' என்று அதன்மேற் பாய்ந்தார்.

## 3. பட்டத்து யானையைக் கொல்வது

அந்த யானையும் இவர்மேல் இடிபோலப் பிளிறித் திருமபியது. எல்லோரும அஞ்சும்படி மேல் வருவதைக் கண்ட எறிபத்தர் சிறிதும் அஞ்சவில்லை. அன்னையின் அன்பின்முன் அச்சமா உண்டாகும்? சிவனாரடியா ரடியாரிடம் வைதத அன்பா யானைக் கஞ்சும? எதிர்த்துப் போரிட்டு மழுவினால் அதன் துதிக்கையைத் துணித்தார். கடகளிறு கடலோசை போலக் கதறி வீழ்ந்தது. அருகிலே குத்துக்கோற்காரரும் பாகருமாக ஐவர் வந்தனர். அவர்களையும விண்ணுக் கனுப்பினார். மற்றவர்கள் ஓடி, அரசருக்குக் கூறும்படி வாயில்காவலரிடம் முறையிட்டனர்.

## 4. புகழ்ச்சோழர்

வாயில்காவலர் மன்னரைக் கண்டு வணங்கிப், 'பகைவரில்லாத தங்கள் பட்டத்து யானையைச் சிலர் வெட்டிக் கொன்றனராம்! வாழ்க!' என்று நடுக்கத்துடன் கூறினர். புகழ்ச்சோழர் அதனைக் கேட்டவுடன் கொன்றவர் யாரென்றுங் கேளாமல், வெகுண்டு இளஞ் சிங்கம்போல் வெளிப்பட்டார். படைத்தலைவரும் அரசர் நிலைகண்டு படைகளைத் திரட்டிக்கொண்டு தொடர்ந்தனர் நால்வகைப் படையினரும் வில், வேல், வாள், தண்டு, பிண்டி, பாலம் முசலம், நேமி, மழு, கழுக்கடை முதலான படைகளைக் கையிலேந்திப் புற்றீசல் போலத் தெருக்களெங்கும்

நிறைந்து சென்றனர். சங்கு, தாரை, காளம், பேரிகை, பபலை, கண்டை, துடி, திமிலை முதலான சின்னங்கள் கடலென வொலித்தன. அரசர் பரிமேலேறிப் படை பின் தொடர முன்னே விரைந்து சென்ருர்.

யானையும் பாகர்களும் வீழ்ந்து கிடக்கும் இடத்தைத் தனியே சென்று கண்டார்; பகைவரைக் காணுர்; இருகை யானை போல் மழுவேந்தி நிற்கும் அடியாரைக் கண்டார். அவரைக் கொலையாளி யென்று நினைக்கவில்லை "இப்படிப் பாகரையும் யானையையும வீழ்த்தியவர்கள் யார்?" என்று வெடிபோல் முழங்கினுர். அருகிலிருந்த—இறவாத—பாகர்கள், தங்களுக்குப் பகைவரான மன்னர் எவரு மில்லையே! இவரே கொன்றவர் என்று பணிவுடன் மழுவேந்தி நிற்பவரைக் காட்டினர்.

அவரைக் கண்ட அரசர், "ஏதோ பிழை நேர்ந்திருக்க வேண்டும். மங்கை யொருபங்க ரடியார் தவறின்றிக் கொல்லமாட்டார்," என்று எண்ணிப் படைகளைத் திருப்பி விட்டுப் பரியிலிருந் திறங்கினுர். அவர் உள்ளம் நடுங்கியது. 'இப் பெரியார் யானையின் முன் சென்றபோது இவருக்கு எவ்வித கெடுதியு மின்றித் தப்பியது நாம் செய்த தவம்! பிழை யென்ன நேர்ந்ததோ?' என்ற கவலையுடன் சென்று எறிபத்தரை வணங்கினுர்.

"அடியேன் இந்த நிகழ்ச்சியை அறியேன். கேட்டது வேமுென்று. அது இருக்கட்டும். இந்த யானையின் குற்றம் பாகரோடு இதனை வீழ்த்தியதே அளவாகக் கொண்டதா? அருள் செய்க!"

"பிறை முடியார்க்குச் சாத்தச் சிவகாமியாண்டார் கொண்டுவந்த மலரை இக் களிறு பிடித்திழுத்துச் சிந்தியது. ஆகையால், இதனைக் கொன்றேன். பாகருங் குத்துக்கோற்காரரும் விலக்காததால் அவர்களைக் கொன்றேன். இதுதான் நிகழ்ந்தது."

அரசர் இம்மொழி கேட்டுக் கலங்கினுர். அச்சத்துடன் அடியாரை வணங்கினுர். "களிறு என்னுடையது.

அது தவறு செய்யாமற் காக்கவேண்டியவன் அடியேன், அது செய்த குற்றத்திற்கு அடியேனே பொறுப்பாளி, ஆகையால், என்னையுங் கொல்ல வேண்டும் தூய மழுவி ஞலே இப் பாவியைக் கொல்வது தகாது. ஆகையால், இவ் வாளாற் கொல்லுங்கள்,'' என்று வாளை அடியாரிடம் நீட்டினார்.

அரசருடைய பேரன்பைக் கண்ட பெரியார் அச்ச முற்று, 'அந்தோ! கெட்டேன்! அளவில்லாத அன்பை யுடைய இவர் செயலுக்கென்செய்வது?' என்று தடுமாறி ஞர். வாளை வாங்காதிருந்தால் தற்கொலை செய்துகொண் டால் என் செய்வது என்று எண்ணி வாளை வாங்கிக் கொண்டார். அரசர் அவரைத் தொழுது, 'தங்களால் என் பிழை தீரும் புண்ணியம் பெற்றேன்' என்று களிப் புடன் நின்றார்.

## 5. எறிபத்தர் வியப்பு

எறிபத்தர் மேலும் வியப்பும் அச்சமுங் கொண்டார். 'இந்த அரசருடைய பட்டத்துக் களிற்றையும் பாகரையுங் கொன்றேன். அதற்காக இவர் சினங் கொள்ளவுமில்லை. தம்மையுங்கொல்லவேண்டு மென்று மகிழ்வுடன் நிற்கிறார். இத்தகைய அன்பருக்குத் தீங்கு செய்ய நினைத்தேன்,' என்று கலங்கினார். முடிவில், தா மிறப்பதே முடிவு எனக் கொண்டார்! வாளைத் தம் கழுத்திற் சேர்த்தார்! அரசர் நடுங்கி, 'ஆன்றோர் செயல் இப்படியோ?' என்று கடிதிற் புகுந்து கையையும் வாளையும் பற்றித் தடுத்தார். இவர் களுடைய பேரன்பின் நிலைகண்ட இறைவர் அருளால் வானொலியில், 'எறிபத்தர் அன்பினைக் காட்டவே இந்த நிகழ்சசியை அரனார் அருளினார். யானை மலரைச் சிந்தி யது அவரருளே,' என்ற மொழி எழுந்தது. உடனே யானையும் எழுந்தது! பாகரும் எழுந்தனர்! மலர்களும் பூங்கூடையில் நிறைந்தன! கண்டோ ருள்ளம் வியப் பினால் நிறைந்தது.

## 6. நட்பு

எறிபத்தர் வாளை யெறிந்து சோழரடியில் விழுந்தார். சோழரும் அவரடியில் விழுந்தார். இருவரின் மேலினும் வானவர் மலர்மாரி விழுந்தது. இருவரும் எழுந்து வாளெனி யை வணங்கினர். சிவகாமியாண்டாரும் இறைவரை வணங்கினர். எறிபத்தர் அரசரை நோக்கித், 'தாங்கள் பட்டத்துக் களிற்றின்மேல் ஏறிச் செல்லவேண்டும். அப் போதுதான் என் உள்ளம் மகிழும்,' என்று வணங்கினார். அரசரும் அதனை மறுக்கமாட்டாமல் அவரை வணங்கி, யானைமீ தமர்ந்தார். எறிபத்தர், 'அடியார் அன்புக் களவில்லை,' என்று சோழர் பெருமையை நினைத்துக்கொண்டே சென்றார். சிவகாமியாண்டாரும் வியப்புடன் ஆநிலைக்குச் சென்றார். எறிபத்தர் அடியார் துன்பத்தை எறியுந் திருப் பணியிலேயே தலைநின்று முடிவில் இறைவருடைய சிவ கணத் தலைவராகிப் பேரின்பத்துற்றார். அடியார் அன்பு பல வகையாலும் பெருமையுற்றது! ஆண்டவன் அளக்கின் அளக்கலாம். ஏனையார்க்கு அளத்தற்கு அரியது.

ஆளுடைத் தொண்டர் செய்த ஆண்மையுந் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கும் நம்பர்தாம் அளக்கில் அன்றி
நீளுமித் தொண்டின் நீர்மை நினைக்கில்ஆர் அளக்க வல்லார்?

(திருத்-எறி. ருசு.)

"இலைமலிந்த வேல் நம்பி எறிபத்தர்க்கு அடியேன்."

திருச்சிற்றம்பலம்.

---

# ௧௦. ஏனாதிநாத நாயனார்

## 1. பண்பு

பொன் மலையிலே புலியை எழுதிப் புவியைக் காக்கும் வளவருடைய சோழ நாட்டில் எயினனூர் என்பது வளஞ் சிறந்த வூர். அவ்வூரில் ஈழக் குடியிலே ஏனாதி நாதர் என்பவ ரிருந்தார். அவர் அரச குமரர் முதலானோர்க்கு வாட் பயிற்சி செய்விக்குந் தொழிலுடையவர். வாட் படை கற்பிப்பதனாற் கிடைக்கும் வளத்தை மதி முடித்த பெருமானார் அடியார்க்கே பயன்படுத்துவார்.

வாளாசிரியரான இவருக்குத் தொழிலுரிமையிலே பங்காளி ஒருவன் இருந்தான். அவன் அதிசூர னென்னும் பெயருடையவன்; தற்பெருமையிலே தலைசிறந்த வீரன்! இருவருக்கு முண்டான தொழில்முறையிலே ஏனாதி நாதர்க்கே செல்வாக்குக் கிடைத்திருந்தது. இதனைப் பொறாத அதிசூரன் அவரிடம் பகைமை பூண்டான். தனக் கேற்றவர்களைத் துணை சேர்த்துக்கொண்டான். ஏனாதி நாதருடைய வீட்டிற்குச் சென்று போருக் கழைத்தான். புலி தங்கியிருக்கும் குகைக்குட் சென்று சிறு நரி போருக் கழைக்கிறது!

## 2. போர்

ஏனாதி நாதர் போருக் கழைப்பதைக் கேட்டார். போர்க் கோலம் பூண்டு வெளியே வந்தார். அப்போது இருதிறத்திலும் வீரர்கள் வந்து கூடினர். அதிசூரன் ஏனாதி நாதரைப் பார்த்து, "நமது உரிமைக்காகப் போரிடுவோம். வெற்றிகொண்டவர் படை யாசிரிய ராகலாம்," என்றனன். ஏனாதி நாதர் புன்முறுவலுடன் ஒப்புக் கொண்டார். நகரின் வெளிப்புறத்திலே இருவரும் தத்தம் படையை அணி வகுத்து நின்றனர். போர் செய்தனர். இரத்தக் காடாகியது.

அப் போரிலே மடிந்த வீரர்கள் போக, மடியாதவர் களைச் சேர்த்துக்கொண்டு இருவரும் பொரத் தொடங்

கினர். வாட்கள் நெருப்பைக் கக்கின. வீரக் கழல்கள் ஒலித்தன. வென்றி வீரரான ஏனாதிநாதரின் வாளால் மடிந்த வீரர்கள் போக மடியாதவர்கள், உண்மை யறிவு நேர்பட்டால் மறையும் ஆசை முதலான குற்றங்களைப் போலப் புறங்கொடுத்துப் போயினர்.

தலைப்பட்டா ரெல்லாருந் தனிவீரர் வாளில்
கொலைப்பட்டார்; முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போ லாயினார்.

(திருத் - ஏனாதி. உஎ.)

அதிசூரன் ஓடும் படை வீரரைத் திரட்டிக்கொண்டு எதிர்த்தும் வெற்றி பெறாமல் ஓடிவிட்டான்! ஏனாதி நாதர் மகிழ்வுடன் வீடு திரும்பினார்.

## 3. வஞ்சகம்

அதிசூரன் மனையிலே மனம் புழுங்கினான். இரவெல்லாந் தூக்க மின்றிக் குமுறினான். இறுதியிலே இழிமுறையிலேனும் வெல்லத் துணிந்தான். ஏனாதி நாதர் செய்த வடுக்கள் உள்ளத்திலும் பதிந்து இரத்தங் கொப்பளித்தன.

பொழுது புலர்ந்தது. மனம் புலராத பகைவன், "வீணாகப் போர்வீரர்களை மடிப்பானேன்? நாமிருவருந் தனியே நின்று போர் செய்வோம்," என்று ஏனாதிநாதர்க்குக் கூறிவிட்டான். அதற்கும் ஒப்புக்கொண்டார். உள்ளும் புறமும் ஒத்த வீரர் ஒருவரு மறியாமல் இருவரும் போர்க்களத்திற்குப் புறபபட்டனா.

ஏனாதிநாதர் முதலிலேயே சென்றுவிட்டார். உணவாகும் விலங்கை யெதிர்பார்க்கும் புலிபோலப் பகைவனை எதிர்நோக்கினார். முன்னெலப்போதும திருநீ றணியாத தீயவன் நெற்றியிலே திருநீறு விளக்கம் பெற்றது. எனினும், அவன் உள்ளம் கறுத்திருண்டது. பலகையும் வாளு மேந்திப் புறபபட்டான். அவன் பலகை நெற்றியை மறைத்திருந்தது; அவரெதிர் சென்றான்.

## 4. திருநீற்றுக் காட்சி

இருவரும் போர் தொடங்கினர். அதிசூரன் இடக்கை நெற்றியை மறைத்திருந்தது. தன் வலிமை குறையும் வரையில்—ஏனாதி நாதரின் வாள் வீச்சுத் தன்னைத் தாக்க வரும் வரையில்—நெற்றியை மறைத்திருந்தது. வாள் நெருங்கும்போது நெற்றியைக் காட்டினான். ஏனாதிநாதர் கண்டு திடுக்கிட்டார். வாளை யிழுத்துக்கொண்டார். 'இவர் நெற்றியிலே இதுவரை திருநீற்றைக் காண்கிலேன். இப்போது கண்டேன். கெட்டேன்! சிவனு ரடியாரோடு போர் செய்யவோ வந்தேன்,' என நடுங்கினார். 'இவர் நோக்கத்திற் கிடையூறு செய்வேன். படை யில்லாத வரைக் கொன்ற இழுக்கும் இவருக்கு நேரா வண்ணம் வாளுடன் எதிர் நிற்பேன்,' என முடிவு செய்தார். அவ் வாறே நின்றார்! என் னென்பது! 'முன்னின்ற பாதக னும் தன் கருத்தே முற்றுவித்தான்.'

## 5. பேரின்ப வாழ்வு

இறைவர் ஏனாதிநாதர்க் கெதிரே எழுந்தருளினார். பகைவன் வாளால் உலகத் தொடர்பை அறுத்துக் கொண்ட அவருக்குத் தம்மைப் பிரியாப் பேரின்ப வாழ்வை அளித்தருளினார். ஏனாதி நாதரின் திருநீற் றன்பை என்னவென் றியம்புவது?

"ஏனாதி நாதன்தன் அடியார்க்கும் அடியேன்."

திருச்சிற்றம்பலம்.

# கக. கண்ணப்ப நாயனார்

## 1. பிறப்பும் வளர்ப்பும்

திருக்காளத்திக் கண்ணப்பர் திருநாடு வளம் பெருகிய பொத்தப்பி நாடு. அந் நாட்டில் அவருடைய திருநகர் மலைகளாற் சூழப்பெற்றதும் யானைத் தந்தங்களை வேலியாக வுடையதுமான உடுப்பூர். அந் நகரில் வாழ்வோர் வேடர்கள். அந் நகர்ப்புறங்களில் வேடச் சிறுவர்கள் புலிக் குட்டியுடனும் யானைக் கன்றுகளுடனும் விளையாடுவார்கள். சிறுமியர் மான் பிணைகளுடன் விளையாடுவார்கள். வேடர்கள் கூட்டத்திலே வெட்டு, எறி குத்து என்ற ஒலி எழும்; துடி, கொம்பு, ஆகுளி என்னுங் கருவிகளின் ஒலி எழும். இவற்றோடு மலைகளிலிருந்து விழும் அருவியின் ஒலி மாறுபடும். எங்கு நோக்கினும் வேடர்களால் அயற் பக்கங்களிலிருந்து கொள்ளைகொண்டு வரப்பெற்ற ஆநிரைகள்! இடியொலியுடன் மாறுபட்டுப் பிளிறும் களிறுகளின் நிரைகள்!

அங்குள்ள வேடர்கள் அச்சமும் அருளும் அறியாதவர்கள்! வலிய தோலை உடுத்தவர்கள்! களும் வெந்த ஊனும் உண்பவர்கள்! இவர்களுக்குத் தலைவன் நாகன் என்பவன். அவன் குற்றத்தையே குணமெனக் கொண்டவன்; கொடுமையிலேயே தலைமை பெற்றவன்; வில் வீரன்; சிங்கம் போன்றவன். அவன் மனைவி தத்தை என்பவள். அவள் பழமையான மறக்குடி மங்கை; புலிப் பல் தாலியை இடையிடையே சங்கு மணிகளைக் கோத்துத் தன் கழுத்தி லணிந்தவள். மயிற்பீலியுந் தழையும் கலந்த மாலையைத் தலையி லணிந்தவள். அச்சந் தரும் பெண் சிங்க மென்னுந் தோற்ற முடையவள்.

இவர்களுக்கு நீண்ட காலமாகக் குழந்தை யில்லை. அக் குறைதீர முருகனை வேண்டி வழிப்பட்டனர். சேவல்களையும் மயில்களையும் அப் பெருமான் திருக்கோயிலிலே வளரவிட்டனர். வேடர்களைக் கூட்டிக் குரவைக் கூத்தாடினர். திருவிழா எடுத்தனர். இவர்கள் வழிபாட்டுக்

கிரங்கிக் குன்றுதோறுடுங் குமரவேள் அருளினர். பாற் கடல் திங்களை யீன்றதைப் போலத் தத்தை ஓர் ஆண் மகவைப் பெற்றாள். உடனே வேடர் கூட்டம் குருடன் கண் பெற்றது போலக் கரை கடந்த மகிழ்ச்சி யடைந்து, துடி முதலான பறைகளைக் கொட்டிப் பெருவிழாக் கொண்டாடியது. நாகன் கரிய மலை யொன்று கார்முகிலை யேந்தியதைப் போலக் குழந்தையைத் தழுவி யெடுத்துக் கொண்டான். அவனடைந்த களிப்புக்குக் கரை யுண்டோ?

கரிய ஒளியை வீசும் அக் குழந்தை புலிக் குட்டி போல இருந்தது. வேடர்களுக்கே யன்றி உலக முழுவதற்குமே அளத்தற்கரிய பெருமையைக் காட்டுங் குறிகள் அக் குழந்தையிடம் காணப்பெற்றன. அக் குறிகளைக் கண்ட நாகன் பூரித்தான் குழந்தை ஏந்த முடியாத திண்மையா யிருந்ததைக் கண்ட அவன் திண்ணனென்று அக் குழந்தைக்குப் பெயரிட்டான். வேடர்கள் அப் பெயரிட்டழைத்து ஆரவாரித்தார்கள். புண்ணிய வடிவமான அக் குழந்தை பெருமானைப் பலவகை அணிகளாலும் அணிந்தார்கள். மறக்குடி முறைமைக் கேற்றவாறு மலையுறை கடவுட் காப்புச் செய்தனர். அழகுடைய தளிர்களைச் சூட்டினார்கள் கயிற்றிலே அழகுற இழைத்துத் தொளையிட்ட வேப்பங் குச்சுகளையும், பலகறைகளையும் கோத்து இடையிலே கட்டினார்கள். இவ்வாறு அழகுற வளர்த்தார்கள் பிள்ளைப் பருவந்தோறும் பெருவிழாச் செய்தான் நாகன்.

## 2. திருவிளையாடல்

தளர்நடைப் பருவம் நீங்கியது. பிள்ளைப் பெருமான் சிறு முடியிலே புலிநகச் சுட்டி யணிந்தனர். பன்றி முள்ளை அரிந்து கலந்த புலிப்பல் தாலி மார்பிலே தவழச் செய்தனர். பல மணிச் சதங்கை யொலிக்கும் அரைநாண் அணிந்தனர். யானை மருப்பால் ஆன தண்டையைக் காலிலே ஒலிக்கப் பூட்டினர். இவ்வாறு அழகிய கோலத்

துடன் திண்ணப்பப் பிள்ளையார் விளையாடுவார். தந்தையுந் தாயுங் களிக்கும்படி கங்கையினும் தூயதான திருவாய் நீரிலே ஊறி யூறிவரும் மழலைச்சொற்களைப் பயின்று வருவார். பார்வைப்புலியின் குகை போன்ற வாயிலே கையை விடுவார். அது கண்ட நாகன் துடுக்கடக்கச் சிறு தழையாலே விரட்டுவான். பிள்ளையார் தம் இரு கண்களி னும் நீரை முத்துப்போல நிறுத்திக்கொண்டே அன்னை யிடம் ஓடுவார். அன்னை தன் வாய்முத்தினால் கண்முத்தை மாற்றுவாள். துடிப்பறைக் குரிய கட்டையை உருட்டிக் கொண் டோடுவார். நாயைக் கட்டியிருக்கும் கயிற்றைப் பிடித் தறுப்பார். வேட்டுவச் சிறுமிகளின் விளையாட்டு வீட்டைக் கலைப்பார். இவ்வாறு தம் தளிரடியால் ஓடியாடி விளையாடியவராய் ஐந்தாண்டு நிரம்பினர்.

அப்போது வேட்டுவச் சிறுவர்களுடன் மலர்க் காவிலே விளையாடுவார். உடுப்பூரைச் சார்ந்த காட்டிலே விளையாடுவார். புலிக்குட்டிகளையும், முயற்குட்டிகளையும், காட்டுப் பன்றிக்குட்டிகளையும், செந்நாய்க்குட்டிகளையும் பற்றி மரங்களிலே கட்டி வளர்ப்பார். மாலையிலே, வளர்க் கும் செவிலித் தாய்கள் ஐயவிப் புகையாலே கண்ணேச் சிலைப் போக்கி உணவை யூட்டித் துயிலச் செய்வார்கள். இவ்வாறு குழவிப் பருவம் நீங்கியது. வில் முதலான படைக்கலை பயிலும் பருவம் வந்தது.

## 3. வில் விழா

நாகன் முதிய வேடர்களை யழைத்து விற்றொழில் பயிற்ற நாள் குறிப்பிட்டான். எல்லா வேடர்களுக்குஞ் சொல்லிவிட்டான். பல மலைகளினு மிருக்கும் வேடர் தலைவர்களும் வந்தனர். வருவோரெல்லோரும் மணி, பொன், முத்து, புலித்தோல், யானைத் தந்தம், மயிற் பீலிகள், தேன், பலவகைக் கள், ஊன், பழம், கிழங்கு முதலானவற்றைக் கொண்டுவந்து நிறைத்தார்கள். சிற் றார் இடமின்றி நெருங்கினர் வேடர்கள்.

நாகன் மலையுறை தெய்வங்களுக்கு வழிபாடு செய்த பின் வில் விழாவைத் தொடங்கக் கட்டளையிட்டான். அன்பு மலையாகிய திண்ணனார்க்குப் புலி நரம்பினாலே காப்புக் கட்டி வாழ்த்தினார்கள். பிறகு, ஐவனம், தினை, புல்லரிசி ஆகிய இவற்றால் சமைத்த சோற்றை ஊனையுங் கிழங்கு வகைகளையுங் கலந்து உண்டனர். சிலர் தேனையுந் தினைமாவையும் கலந்துண்டனர். சிலர் வெந்த ஊனைத் தேனிலே தோய்த்துத் தின்றனர். சிலர் விளாம்பழங் கலந்த உணவை யுண்டனர். இவ்வாறு ஞாயிறு உச்சிக்கு வரும் வரையிலே உண்பதுங் குடிப்பதுமாக இருந்தனர். உண்டபின், எல்லோரும் பசுமையான இலை மாலைகளும் பூ மாலைகளும் அணிந்தனர். பலகறை யணிகள் பூண்டனர். வெட்சிமாலை தரித்தனர். வில்லை வைத்திருக்கும் ஆசிரியனைச் சூழ்ந்தனர்.

பிறகு யாவரும் வில்லுடன் குறிச்சியை வலம் வந்தனர். அப்போது பலவகைக் குறிஞ்சிப் பறைகளும் வானம் பிளக்க அதிர்ந்தன. இவ்வாறு ஆறு நாட்கள் வேடப் பெண்களின் துணங்கைக் கூத்துடன் விழா நடந்தது. ஏழாம் நாள் இரு மடங்குக் கொண்டாட்டம்! அன்று கதிரவன் உச்சிக்கு வந்தபோது பறைகளொலிக்க, வில்லாசிரியனைக் கொண்டு திண்ணனாரை வில் பிடிக்கச் செய்தார்கள். இம் முறையே தொடங்கப்பெற்ற விற் பயிற்சியிலும் பிற படைக்கலப் பயிற்சியிலும் திண்ணனார் கலை வளர் திங்கள்போல் முன்னேற்றம் அடைந்தனர். அவருக்குப் பதினாறாண்டுகள் நிரம்பின. புண்ணியத்தின் வளர்ச்சி போல் வளர்ந்து வந்தார்.

## 4. முதல் வேட்டை

நாகன் ஒவ்வொரு திங்களிலும் வேட்டைக்குச் செல்வது வழக்கம். திண்ணனாருக்குப் பதினாறு ஆண்டு நிரம்பின அளவிலே, தன் முதுமையின் காரணமாக வேட்டைக்குத் தலைமை தாங்கும் வேலையை அவருக்களிக்க எண்ணினான். வேடர்களைக் கூப்பிட்டு வினவினான். அவர்கள்

தங்கள் தலைவன் விருப்பப்படியே நடக்க ஒப்புக்கொண்டனர். நாகன் மகிழ்ந்து தேவராட்டியை வரவழைத்தான். முதிர்ந்த மெய்யுடன் தடுமாறிக்கொண்டு அவள் வந்தாள். திண்ணனார் முதல் வேட்டைக்குச் செல்வதால் கானுறை தெய்வங்கட்கு வழிபாடு செய்யுமாறு அவளுக்குக் கட்டளையிட்டான். அவள், 'நான் வரும்போது உண்டான நிமித்தங்களால் உன் மகன் உன்னைவிட அதிக நன்மையடைவானென்று தெரிகிறது,' என்று கூறி வழிபாட்டுக்குரிய பொருள்களைப் பெற்றுச் சென்றாள்.

நாகன் தேவராட்டி கூறிய நிமித்தத்திற்கு மிக மகிழ்ந்து, திண்ணனாரை வரவழைத்தான். அவர் வந்து தந்தையை வணங்கினார். அவன் அவரைத் தழுவித் தன் எதிரிலே இருக்கச் செய்து தன் கருத்தைக் கூறினான். 'இன்று முதல் நீதான் நம் கூட்டத்திற்குத் தலைவன். என்னைவிட நீ நம் மரபின் மேன்மையைக் காப்பாற்ற வேண்டும்' என்று ஆசி கூறி, உடையாக அணியுந் தோலையும் உடைவாளையுங் கொடுத்தான். அவை தலைமைச் சின்னங்கள்.

திண்ணனார் எழுந்து தந்தையை வணங்கி முதற்சுரிகையையும் உடை தோலையும் பெற்றுக்கொண்டார். விடை பெற்று வேடரோடு தம் இருக்கைக்கு வந்து வேட்டைக் கோலங்கொண்டார். தலையிலே சுருண்டு கிடக்கும் குடுமியை ஒழுங்கு செய்தார். தளிர் மாலையின் இடையிலே மயிற்பீலியை அமைத்து முடியில் கட்டினார். முல்லை மாலையிடையே குறிஞ்சி வெட்சி மலர்களைத் தொடுத்தணிந்தார். முன் நெற்றியிலே முருந்தையும் (மயிலிறகின் அடி) குன்றிமணியையும் கலந்து மயிர்க் கயிற்றிலே கோத்தணிந்தார். காதுகளில் சங்கினாலாகிய குண்டலங்களை அணிந்தார். கழுத்திலே பலகறை மாலையை ஒட்டினாற்போற் கட்டினார். அதன் பின் சங்கு மணியையும் வேறு மணிகளையும் வேங்கைத்தோலிலே கோத்து இடையிடையே பன்றிக்கொம்புகள் பிறைத்திங்கள் போல விளங்கச் சேர்த்த சன்னவீர மாலை யணிந்தார்.

அதன்பின் சிறு தந்தமாலை யணிந்தார். தோள் வலயங்கள் பூண்டார். முன் கையிற் கங்கணம் அணிந்து அம்பெறியுங் கையுறையும் தரித்தார். தோல் உடையின்மேல் பலகறைகளைக் கட்டினார் சுரிகையை விசித்துக் கட்டினார். வீரக்கழ லணிந்தார்; செருப்பணிந்தார்.

இவ்வாறு வேட்டைக் கோலங்கொண்டு வில்லை வலம் வந்து வணங்கி, இருதாள் மடித்துத் தொழுது கையில் எடுத்தார். நாணை இறுக்கிக் கையால் தடவி ஓசை செய்தார். பிறகு அம்புகளைத் தேர்ந்தெடுத்தார். இதற்குள் வேடர்கள் வந்து கடல்போலச் சூழ்ந்தனர். அப்போது வனத் தெய்வங்களுக்கு வழிபாடு செய்யச் சென்ற தேவராட்டி திண்ணனாரிடம் வந்து தன் கையால் நெற்றியில் சேடையிட்டு, 'உன் பாட்டனுக்கும் இவ்வளவு நல்ல நிலையிலே வழிபாடு அமையவில்லை. நிமித்தமும் நன்றாகவுள்ளது; உனக்குக் கிடைக்கும் நன்மை எங்களால் அறிய முடியாது' என்று வாழ்த்தினாள். அவளுக்குப் பல சிறப்புங் கொடுத்து அனுப்பினார் நம் திண்ணனார். வில்லேந்திய மேகம்போல, வேடர் சூழ வேட்டைக்குப் புறப்பட்டார்.

கணக்கற்ற நாய்கள் காட்டிற் பாய்ந்து சென்றன. பார்வை மிருகங்களுடனும் வலைகளுடனும் வேடர்கள் காட்டை வளைத்தனர். கோடுகளை ஊதினர். ஆகுளியையும் பம்பையையுந் தட்டினர். வாயால் சீழ்க்கை யடித்தனர். இவ்வாறு கடலிற் புகும் கரிய ஆறுபோல நுழைந்து மிருகங்களை வதைக்கத் தொடங்கினர்.

அப்போது, யானைகளும் அஞ்சும்படி காட்டுப் பன்றி யொன்று மேகம் போன்ற தோற்றமும் இடி போன்ற உறுமலும் கனல் பிதிரும் கண்களுங்கொண்டு வலைகளை யறுத்துக்கொண்டு ஓடியது. வேடர்கள் அதைப் பின்பற்ற முடியாமல் திகைத்தனர். அதுகண்ட திண்ணனார் அம்பேந்திய வில்லுடன் பின்தொடர்ந்தார். அவரைப் பிரியாத நாணன் காடன் என்னும் வேடர்களும் பின்னோடினர். இவர்கள் விடும் அம்புகளையும் நாய்களை

யும் ஏமாற்றிவிட்டு அப்பன்றி காற்றெனக் கடிது ஓடியது. அதனுடைய செயலுக்கு வியந்த அவர்கள் அங்குள்ள ஒரு குன்றினடிவாரத்திலே அப்பன்றி சோர்ந்து நிற்பதைக் கண்டார்கள். முன் சென்ற திண்ணனார் அப் பன்றியினருகிற் சென்று சுரிகையை உருவிக் குத்திக் கொன்றார். பின் வந்த வேடரிருவரும் அவரைப் பாராட்டி வணங்கினர்.

## 5. காளத்தி மலை—குடுமித் தேவர்—பாரம் கழிகிறதே!

நாணனும் காடனும் அவரைப் பார்த்து, 'நீண்ட தூரம் ஓடி வந்ததனாற் களைத்தோம் பசியும் வந்தது. இந்தப் பன்றியை நெருப்பிற் காய்ச்சித் தின்று தண்ணீர் குடித்துச் செல்வோம்,' என்று கேட்டுக்கொண்டனர். அவரும் அதற் கிணங்கினர்.

"தண்ணீர் எங்கே?"

"இதோ, இந்தப் பெரிய தேக்கமரத்தைக் கடந்து சென்றால், அந்தக் குன்றுக்கருகிலே பொன்முகலி யென்னும் ஆறு ஓடுகிறது. நல்ல குளிர்ந்த நீர்!"

இது நாணன் விடை.

திண்ணர் மகிழ்ந்தார். "நல்லது! இதை எடுத்துக் கொண்டு வாருங்கள். அங்கே செல்வோம்" என்றார்.

மூவரும் சென்றனர். சிறிது தொலைவிலே பரமசிவன் எழுந்தருளியிருக்கும் சோலைகள் நிறைந்த திருக்காளத்தி மலையைக் கண்டனர். திண்ணனார், 'நாணா! அக்குன்றுக்குச் செல்வோமா?' என்றார்.

"பார்ப்போம், வா நல்ல காட்சி! இந்த மலையிலே குடுமித்தேவர் இருப்பார்; கும்பிடலாம்!"

"என்ன வருமோ? இம் மலையைப் பார்த்துக் கொண்டு செல்லச் செல்ல என்மேலுள்ள பாரங் கழிகிறதே! ஆசை மேலும் மேலும் பொங்குகிறது! உள்ளத்திலும்

வேறோ ராசை யெழுக்கின்றது! குடுமித் தேவர் அங்கே எங்கே யிருக்கிறார்? உம். போ! போ!!"

திண்ணனார் விரைந்து சென்றார். அவர்களும் பின்னே ஓடினர். பொன்முகலியை அடைந்தனர் அந்த ஆற்றின் அலைகளால் முத்தும் அகிற் கட்டையும் சந்தனக் கட்டையும் மலையிலிருந்து கிடைக்கும் மணியும் பொன் னும் வயிரமும் ஒதுக்கப்பெற்றிருக்கும் ஒரு பொழிலிலே பன்றியை வைத்து நின்றார்கள்.

"காடா! நீ தீயை உண்டாக்கி இதனைக் காய்ச்சு! இம்மலையை நாங்க ளிருவரும் சென்று பார்த்துவிட்டு வரு கிறோம்," என்று திண்ணனார் நாணனுடன் சென்றார்; நதியைக் கடந்து கரைகடந்த மகிழ்ச்சியுடன் மலைச்சாரலை யடைந்தனர்.

## 6. தத்துவப் படிகளைக் கடத்தல்—அன்புருவம்

கதிரவன் வானத்தில் உச்சியை அடைந்தான். காளத்தி மலையின் உச்சியிலே ஐவகை அமர துந்துபி யொலி யெழுந்தது. அவ் வொலியைக் கேட்ட திண்ண னார், "இஃது என்ன ஒலி?" என்று வினவ, நாணன், "பெருந் தேனடையைச் சூழ்ந்து தேனீக்கள் மொய்க்கும் ஒலியாக இருக்கலாம்," என்றான். முற்பிறப்பிலே செய்த தவம். அன்பை யுண்டாக்க அளவில்லாத காதல் பெருக, மலையைப் பார்த்து என்புருக, நாணனும் அன்பும் முன் செல்லத் தாம் பின்சென்றார். மலையின்மீது படிகளைக் கடந்து செல்லுந்தோறும் உலக தத்துவங்க ளென்னும் படிகளையுங் கடந்தார்.

நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை யேறி நேர்படச செல்லும் போதில்.

(திருத்-கண். க0௬)

திங்க ளணிந்த சடையாரைக் காணுமுன்னே அவரது திருவருள் நோக்கம் பெற்றார் பிறப்பின் பழவினைத் தொடர்பை அகன்றார். பேரொளியின் நிழலிலே அன்புருவம் பெற்றார்! திருக்காளத்தி மலையின் கொழுந்தாயுள்ள தனி முதல்வரைக் கண்டார்! பேருவகையாலும் அன்பினாலும் இழுக்கப் பெற்று விரைந்து ஆசை பொங்க ஓடினார்! தழுவினார்! முத்தமிட்டார். நீண்ட நேரம் பெருமூச்சுவிட்டு நின்றார். உடம்பெலாம் சிலிர்க்க, மலர் போன்ற கண்களில் அன்புநீர் அருவியென வழிய, 'அடியேற்கு இவர் கிடைத்தாரே! அச்சோ!' என்று பரிவே வடிவமானார்!

"ஐயோ! நான் கெட்டேன்! கரடியும் வேங்கையும் சிங்கமுந் திரியு மிக்காட்டிலே, வேடர் போலத் துணையில்லாமல், நீர் தனியே இருப்பது நன்றோ?" என்று வருந்தினார். கையிலிருந்த வில் விழுந்ததையும் அறியாமல் 'இந்தப் பச்சிலையும் பூவும் இட்டு நீரும் வார்த்து இப்படிச் செய்தவர் யாரோ?' என்று வியந்தார்.

நாணன் சொன்னான்: "நான் அறிவேன். உன் தந்தையோடு ஒருநாள் வேட்டை யாடும்போது வந்திருக்கிறேன். ஒரு பார்ப்பான் இவ்வாறு செய்வதைப் பார்த்தேன்."

அன்பு நிறைந்த உள்ளத்திலிருந் தெழுகிறதென்றாலும், 'அன்புடன் இதைச் செய்வதே இறைவர்க் கினிய விருப்பம்போலும்,' என் றெண்ணினார் திண்ணனார். எனினும் அண்ணலைப் பிரிய முடியாமல் கலங்கினார்.

"இவர் தனியரா யிருக்கிறாரே! இறைச்சியும் இவருக்குக் கொடுப்பவரில்லை! இவரைப் பிரியவும் முடியாது! இறைச்சியும் கொண்டுவர வேண்டும்! என் செய்வேன்?"

இறைவரை விட்டுச் செல்வார்! திரும்புவார்! தழுவுவார்! திரும்பிச் சிறிது செல்வார்! அன்புடன் நோக்கி நிற்பார்! கன்றை விட்டுச் செல்ல முடியாமல் வருந்துகிற

பசுவைப் போல்வார்! "இறைவரே! நானே சென்று நல்ல இறைச்சியாகக் கொண்டு வருவேன்" என்பார். "தங்களுக்குத் துணை யில்லையே யென்றுதான் செல்லாம லிருக்கிறேன். எனினும், தாங்கள் பசியுடன் இருப்பதைப் பொறுக்கவும் முடியவில்லை! என் செய்வேன்?" என்று கண்ணீர் வழியக் கலங்குவார். எப்படியும் சென்று இறைச்சி கொண்டுவர வேண்டுமே என்று ஒருவாறு துணிந்து வில்லை யெடுத்துக்கொண்டு தொழுதுவிட்டுப் புறப்பட்டார்.

மிகவும் அரிதாக அங்கிருந்து நீங்கி மலையைவிட்டிறங்கி நாணன் பின் வரச் சென்றார். அவருக்குப் பிற துறைகளின் வாயில் அடைத்துவிட்டது. இறைவ ரன்பு மட்டும் அவரைத் தன்வசப்படுத்திக்கொண்டது. பொன்முகலியைக் கடந்து பன்றியை விட்டுவந்த மரநிழலையடைந்தார். காடன் எதிரே வந்தான். தொழுதான்.

"தீக் கடைந்து வைத்தேன். பன்றியை உங்கள் அடையாளத்தின்படி பார்த்துக் கொள்ளலாம். நாம் திரும்பிச் செல்ல வேண்டாமா? நீண்ட நேர மாகிவிட்டதே! இவ்வளவு காலம் என்ன செய்தீர்கள்?"

திண்ணனார் ஒன்றும் பேசவில்லை. நாணன் கூறுகின்றான்:

"என்ன செய்வதென்று தெரியவில்லை! காடா! அங்கே இவன் குடுமித்தேவரை அணைத்துக்கொண்டு, வங்கைப் பற்றிக்கொண்டு விடாத வலிய உடும்பைப்போல நின்றான்! இங்கு வந்ததுகூட இறைச்சியை அந்தக் குடுமித்தேவருக்குக் கொண்டுபோகத்தான். இனி நம் குலத் தலைமையை விட்டுவிட்டானென்றுதான் சொல்ல வேண்டும். தெய்வ மயக்கம் தலைக் கேறிவிட்டது!"

"திண்ணா! என்ன செய்துவிட்டாய்? என்ன மருள் கொண்டாயோ? நீ எங்கள் தலைவ னல்லையோ?"

திண்ணனார் அவர்கள் முகத்தைத் திரும்பியும் பார்க்கவில்லை! பன்றியை நெருப்பில் வதக்கினார். அம்பினாற் கிழித்து இறைச்சியைத் துண்டு துண்டாக்கினார். அவற்றை அம்பிலே கோத்துக் காய்ச்சிப் பக்குவம் பண்ணினார். வாயில் இட்டுச் சுவைத்துப் பார்த்தார். நல்லவற்றை யெல்லாம் ஒரு தேக்கிலைத் தொன்னையிலே உமிழ்ந்தார். மற்றவற்றை வெளியே துப்பினார்.

இரு வேடர்களும் பார்த்தார்கள். "ஐயோ! அதிக மருள் கொண்டுவிட்டானே! நல்ல இறைச்சிகளை அதுக்கி அதுக்கித் தனியே உமிழ்கின்றானே! பெரும் பசியுடையவனானாலும் பேச்சுமில்லையே! நமக்குப் பங்குங் கொடுக்கவில்லையே! இவன் தெய்வ மருள் கொண்டது உண்மை! இதைப் போக்க வேறு வழியில்லை! தேவராட்டியையும் நாகனையும் அழைத்துவந்து தீர்க்கவேண்டும். நாம் போய் வேட்டையாடும் வேடர்களையும் அழைத்துக்கொண்டு போவோம்," என்று முடிவுசெய்தவர்களாய்ச் சென்று விட்டனர்.

அவர்கள் சென்றதையும் திண்ணர் தெரிந்துகொள்ளவில்லை. தொன்னையிலே ஊனை நிரப்பிக்கொண்டார். நீராட்ட வேண்டி வாயிலே பொன்முகலி நீரை முகந்து கொண்டார் இடுவதற்கு மலர்க்காவிலே சென்று நல்ல மலர்களை யெடுத்துத் தலையில் ஏந்திக்கொண்டார். ஒரு கையில் வில், மற்றொரு கையில் தொன்னை ஆக எடுத்துக் கொண்டு, 'எம் இறைவர் மிகப் பசித்திருப்பார்,' என்ற பரிவுடனும் ஏக்கத்துடனும் ஓடிக் காளத்தியப்பர் திருமுன்னை யடைந்தார்.

## 7. நீராட்டல்—மலரிடல்—திருவமுதுண்பித்தல்—காவல்

அரனார் முடிமே லிருக்கும் மலரைச் செருப்பணிந்த காலால் மாற்றினார். வாயிலிருந்த நீரை—அன்பை—உமிழ்ந்தார். தம் திருமுடிமேல் வைத்திருந்த மலரை இறைவர் முடிமேல் வைத்தார். கையில் வைத்திருந்த தொன்னையை எதிரே வைத்தார்.

"கொழுத்த இறைச்சிகளை அம்பினிற் கோத்துக் காய்ச்சிப் பல்லால் அதுக்கிச் சுவைபார்த்துக்கொண்டு வந்தேன். இவை நல்ல இறைச்சிகள். திருவமுது செய்தருள்க," என்று உண்பித்தார். பிறகு, இன்னும் இறைச்சி வேண்டுமென்று எண்ணினார் கதிரவன் இவர் காதலைக் கண்டு வியந்து கணக்கற்ற கரங்களைக் கூப்பி வணங்கி மேற்றிசையில் மறைந்தான்.

மாலையும் போயிற்று. இரவு வந்தது. இரவிலே விலங்குகள் வருமென் றஞ்சிய திண்ணனார், 'செவ்விய அன்பு தாங்கித் திருக்கையில் வில்லுந் தாங்கிக்' கரிய மலையெனக் காளத்தியப்பர் அருகிலே விலகாமல் நின்றார். கானில் உறைந்தும் காய் கனி தின்றுந் தவம் புரிந்து முனிவரும் அமரரும் அணுக முடியாதவரை, ஆர்வம் வளர, ஆராத காதலாற் கண்டுகொண்ட திண்ணனார் நேர்பெறப் பார்த்தவாறே நீளிருள் நீங்கும் வரையில் நின்றார்.

சிவந்த நெருப்பைப்போல ஒளி வீசுந் தீப மரங்களாலும் மந்திகள் மரப்பொந்துகளில் வைத்த மணிகளாலும் திண்ணனாருடைய மெய்யின் ஒளியாலும் காளத்தியப்பருடைய திருமுன்னே இருளேயில்லை. மூங்கிலுமிழ்ந்த முத்துக் குவியல்களும் பாம்புகளுமிழ்ந்த மாணிக்கங்களும் திங்களும் ஞாயிறும் இறைவரை வழிபட வந்ததுபோல் ஒளி வீசின.

இருள் புலர்ந்தது பறவைகளின் ஒலி கேட்டது. உறங்காமலே காத்து நின்ற வீரர், 'அரனார்க் கமுதாக்க இறைச்சியைக் கொண்டுவருவேன்,' என முடிவுசெய்து வேட்டையாடப் புறப்பட்டார். இதுவரையில் வேடர் வழிபாட்டைக் கண்டோம். இனி அந்தணர் வழிபாட்டைக் காண்போம்.

## 8. அந்தணர் வழிபாடு

திண்ணனார் விலங்குகளை வளைப்பதற்காக இட்டிருந்த கரிய வலையைக் கதிரவன் நீக்கிக் கைகளாலே விலங்கு

களைக் காட்டிக்கொண்டு வெளிப்போந்தான். அப்போது மலைமருந்தை வழிபடும் சிவகோசரியார், சைவாகம முறைப்படி வழிபட மலரும் நீரும் நறுமணப் புகைப் பொருளும் கொண்டுவந்தார். அரனார் திருமுன்னே ஊனை யும் எலும்பையுங் கண்டு அகல வோடி நின்றார்!

இந்த இழிசெயலைச் செய்தார் யாவரோ? ஐயோ! கெட்டேன்! நம் நெறிக்குப் புறம்பானவர்களோ, வேடர் களோ இது செய்திருக்கவேண்டும். தேவ தேவரே! தங்கள் திருமுன்பு இதைச் செய்து போம்படி திருவுளங் கொண்டீர்களோ!''

பதறினார்; விழுந்து அலறினார். பிறகு, ஒருவாறு தெளிந்து, வழிபாட்டிற்குக் காலங் கடத்தலாகாது என்று எண்ணித் திருவலகாலே அங்கிருந்தவற்றை மாற்றினார். பொன்முகலிக்கு ஓடி நீராடித் திரும்பிவந்தார். நீராட்டி மலரிட்டு வணங்கினார். தனிமுதற் பரனைத் தமிழ் மறை மொழியாலே—ஆகமத்தால் வாழ்த்தினார். விடைகொண்டு தவம் புரியுஞ் சூழலை யடைந்தார் மறைகளிலே கூறிய முறைப்படி வழிபாடு இப்போது நடந்ததைக் கண்டோம். இனி அன்பு வழிபாட்டைக் காண்போம்.

## 9. வேடர் வழிபாடு

மலையைவிட்டு இறங்கிய திண்ணனார் காட்டுப் பன்றி களைக் கொன்றார். கலை, மரை, கடமை முதலிய மான் கூட்டங்கள் வரும் வழியிற் பதிவிருந்தும் மானினம் போல் ஒலிசெய்தும் எதிர்ப்படச் செய்து அடித்தார். கதி ரவன் வெப்பம் தாக்கும் வரையில் வேட்டையாடினார். பிறகு, இவற்றை ஓரிடத்திற் கொண்டுசேர்த்து, நெருப் புண்டாக்கி, வதக்கினார். வாளாற் பிளந்து, அம்பிற் கோத்து வாட்டிப் பக்குவமாக்கிச் சுவை பார்த்துத தேக் கிலைத் தொன்னையிலே சேமித்தார். தேன் அடைகளைத் தேடிப் பிழிந்து ஊனைக் கலந்தார். முன் போலவே மலரும் நீரும் எடுத்துக்கொண்டு குடுமித்தேவரைக் குறு

கினார். அந்தணர் வழிபாட்டை முன்போலவே இந்த வெங்குல வேடர் நீக்கினார். கங்கையினுந் தூயதான அன்பு நீரை வாயிலிருந்து வார்த்து நீராட்டினார். திருமுடிப் பூங்கூடையிலிருந்த மலர்களை யெடுத்துச் சூட்டினார். ஊனமுதைத் தொன்னையுடன் வைத்தார்.

"இது முன்னைய ஊனினும் நல்லது; இனியது! பன்றி, கலை, மரை, கடமை முதலானவற்றின் உறுப்புக்களைக் கொய்து பக்குவம் செய்தேன். அடியேனுஞ் சுவை பார்த்தேன்! தேனையுங் கலந்திருக்கிறேன். இனிமையாயிருக்கும்."

இவ்வாறு கூறி ஊட்டினார். தேனினும் இனிய அன்பு கலந்த ஊனை உடையவர் உட்கொள்ளாமல் விடுவாரா? மறைகளை யோதி வளர்த்தும் வேள்வித் தீயிலே மறையவர்கள் இட்டிடும் அவியினும் மேலானதாக அன்புத் தீயிலே பதம் பார்த்திடும் ஊனன்றோ இது? திண்ணனார் இரவிலே உறங்காமற் காத்துநிற்பார்; பகலிலே வேட்டையாடி ஊன் கொணர்ந்துண்பிப்பார். அன்புணவே யன்றி—அரனாரை வழிபடும் உணவே யன்றி—வேறுணவை வேண்டிலர் வேடர். இம்முறையே இவர் அன்பு வழிபாடும் மறைமுறைப்படி நடைபெறும் அந்தணர் வழிபாடும் நடந்துவந்தன!

நாணனுங் காடனும் போய்க் கூறிய அளவிலே நாகனுந் தத்தையும் தேவராட்டியை அழைத்துக்கொண்டு வந்து, திண்ணனாரைப் பிடித்திருக்கும் தெய்வ மருளைப் போக்கப் பலவகையானும் முயன்று முடியாமற் கைவிட்டுச் சென்றனர். காளத்தியப்பர் திருவருணோக்கத்தினால் இரும்பு பொன்னாவதைப்போல உடம்பின் பற்றும் நல்வினை தீவினைகளும் மும்மலங்களும் நீங்கி அன்புருவான திண்ணனார், அவர்கள் விருப்பத்திற்குக் கட்டுப்படுவாரா?

முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கின்
இன்புறவே தகத்திரும்பு பொன்னாற் போல்யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டும் சாருமல மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ?
(திருத்-கண். கருச.)

## 10. அந்தணர் கனவு

இவ்வாறு ஐந்து நாட்கள் கழிந்தன. ஆறாவது நாள் வைகறையில் வழிபட வந்த மறையவர், கண்ணீர் வாரக் கைகுவித்து நின்று, "இறைவரே! இவ்வாறு ஊனையும் என்னையுஞ் சிந்தித் திருமுன்னை யிழிவுபடுத்துவோரை அறியேன். பேரருள் செய்து இதைத் தடுக்கவேண்டும்," என வேண்டினார். அன்றிரவு அவர் கனவிலே, 'தூய விடையின்மேல் பார்வதி பங்குடன் செழுஞ்சுடர் வண்ணர் எழுந்தருளினார்!' தொழற்கரிய அப்பேரொளியாரைக் கண்டு திகைத்த சிவகோசரியார் பேரன்புடன் விழுந்து வணங்கி எழுந்து வாழ்த்தினார்; கண்ணீர் வார நடுங்கி நின்றார்.

செஞ்சுடர் வண்ணர் திருவாய்மலர்ந்தருளுகிறார்:

"நீ வழிபட்டுச் சென்றபின் வந்துவழிபடும் வேடனை வேடனென்று இழிவாய் எண்ணாதே. அவனுடைய உருவம் நம்மிடம் வைத்த அன்பின் உருவம்! அவன் அறிவு நம்மை அறியும் அறிவு! அவனுடைய செயல் நமக்கினிய செயல்! வியப்படையாதே; அறிவாயாக" என்றனர்.

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீ!" என் றருள் செய்தார்.
(திருத் - கண். கருஎ.)

நீ அன்புடன் இட்ட மலரை அன்பெனும் வெள்ளக் கால் பெருகி வந்து படுவதுபோலச் செருப்பணிந்த தன்

காலால் நீக்குகிறான். அஃது என் குழவிச் செவ்வேளின் மலரடியினுஞ் சிறப்புடையதாக ஆகிறது! அன்பு நிறைந்த கொள்கலமான அவன் வாயினின்றும் உமிழும் நீர், கங்கை காவிரி முதலான தூய நதிகளின் நீரைவிடத் தூயதாகும்! அவன் முடியிலிருந்து மலர்ந்து என் முடியில் விழும் மலர்கள் அவன் அன்பு மலர்ந்து நம்மேல் நழுவி விழுவதைப் போல் விழுகின்றன! அவை முதன்மைத் தேவர்கள் இடும் மலர்களைவிடத் தூயவை. பக்குவமாக வெந்துள்ளதோ என்று கனிந்த மனத்துடன் வாயின் இனிமையிலே—அன்பிலே—ஊறும்படி நன்றாக மென்று அவன் நமக்குத் திருவமுது செய்விக்கும் ஊன், வேள்வியிலே மறை விதிப் படி நமக்கிடும் அவியினைவிடச் சிறந்தவை! மறை மொழிகளினும் முனிவர் மகிழ்ந்து கூறுந் தோத்திரங்களினும் முகமலர அகம் நெகிழ்ந்து அன்பிலே நினைந்து என்னையன்றி வேறெதனையுங் குறிக்காமற் கூறும் அவன் மொழிகள் நல்லவை. அவன் செயலை நாளைக்கு உனக்குக் காட்டுவோம். ஒளிந்திருந்து காண்பாயாக! மனக் கவலையை விடு!"

கனவு நீங்கியது. விழித்தெழுந்தார். வியப்பும் அச்சமுங் கொண்டார். நல்ல கனவைக் கண்டதனால் வைகறை வரையிலுந் துயிலாமல் அரனாருளை வாழ்த்தி யிருந்தார். கதிரவன் அன்று நடக்கும் அன்பு வழிப்பாட்டைக் காணக் கிழக்குத் திசையிலே யெழுந்தான். வேடர் வேட்டைக்கு மேவினார். அந்தணர் தம் வழிபாட்டை முடித்துப் பின் பக்கத்திலே ஒரு மரத்தின் பின் மறைந்திருந்தார்.

## 11. அன்பின் காட்சி—கண்ணப்பர்

திண்ணனார் வழக்கம்போல வேட்டையாடி ஊனைப் பக்குவம் பண்ணித் தேனிற் கலந்தார். மலரும் நீரும் முகந்துகொண்டார். மலையை நோக்கி விரைந்தார். அவரினும் அவருள்ளங் காலந் தாழ்த்ததே எனக் கடிது சென்றது. அப்போது தீய புட்களாலே தீய சகுனங்களுண்

டாயின. இச் சகுனங்கள் இரத்தத்தைக் காட்டுகின்றன! இறைவருக்கென்ன நேருமோ? ஐயோ!' என்று ஓடி வந்தார்.

தொலைவில் ஓடிவரும்போதே காளத்தியப்பரைக் கூர்ந்து நோக்கினார். வேடரன்பை வேதியர்க்குக் காட்ட விரும்பிய விரிசடையார், தம் திருவிழிகளிலொன்றிலே—வலக் கண்ணிலே—செந்நீர் சாட்டினார் 'அந்தோ! கெட்டேன்!' என்றோடிவந்தார். உண்மையாகவே உதிரம் வழிந்தது! கண்டவுடன் மயங்கினார்! வாயிலிருந்த நன்னீர் சிந்தியது! கையிலிருந்த தேக்கிலையுடன் ஊன் சிதறியது! மயிர்முடி குலைந்து மலர்கள் சோர்ந்தன! திண்ணனாருஞ் செயல்மறந்து வீழ்ந்தார்! சிறிது போதிலே தெளிந்தெழுந்தார்! சென்று துடைத்தார்! உதிரம் ஓயவில்லை! திரும்பவும் விழுந்தார்! தெளிந்தார்! இவ்வாறு செய்தவர் யாரோ என்று வில்லும் அம்பும் எடுத்தார்! நான்கு திசையும் ஓடியோடிப் பார்த்தார்! விலங்குகளுமில்லை! வேறு வேடருமில்லை! வேடரல்லாத மக்களுமில்லை! திரும்ப ஓடிவந்து குடுமியப்பரைக் கட்டிக்கொண்டு கோவென்றலறினார்.

"தீவினையேன் காணத் தேவர் கண்ணிலே செந்நீர் வடிவதற்குக் காரணம் என்ன? உயிரினும் இனிய என் தலைவருக்கு ஏன் இது நேர்ந்தது? என் உள்ளத்தினின்றும் பிரியாத அப்பருக்கு ஏன் இது நேர்ந்தது? என் செய்வேன்? என் செய்தால் இந்த நோய் தீரும்? இதைச் செய்தவரையுங் காணேனே! அம்புப் புண்களை ஆற்றும் பச்சிலைகளால் நிற்குமோ?"

பச்சிலைகளைத் தேடியோடினார். பலவகையாகப் பறித்துக்கொண்டார். இனத்திலிருந்து பிரிந்த பசுங்கன்றென அஞ்சி ஓடிவந்தார். ஒவ்வொன்றாகப் பிழிந்தார். குருதி வழிந்தவாறேயிருந்தது! கொஞ்சமுங் குணமில்லை! 'இனியென்செய்வேன்' என்று நடுங்கினார். அப்போது நினைவிலே, 'ஊனுக்கு ஊனிடல் வேண்டும்,' என்னும் பழமொழி தோன்றியது. 'என் கண்களிலொன்றை யெடுத்

தப்புவேன். 'நின்றாலும் நிற்கும்' என்றெண்ணி விரைந்து மகிழ்வுடன் தம் கண்களிலொன்றை அம்பிலெடுத் தப்பினார்! ஈதன்றோ அன்பின் வழிபாடு! குருதி நின்றது! கண்டார் வேடர்! கொண்டார் உவகை! குதித்தார்! கூத்தாடினார்! கொட்டினார் தோள்களை! 'நான் செய்த செயல் நன்'றென்று நகைத்தார். களிப்பினால் உன்மத்தர்போல நின்றார். அன்புருவம் இன்புருவமாயிற் றென்று மட்டும் இயம்பலாம். வேறெவ்விதம் அவர் நிலையை எடுத்துக் காட்டுவது?

வேடரன்பை மேலுங் காட்ட விமலர் துணிந்தார்! இடக்கண்ணிலும் இரத்தம் வரச் செய்தார். வேடர் குலத் தவத்தினாலே பிறந்த—விண்ணவரினும் மேலான—திண்ணனார் அதனைக் கண்டார். "கெட்டேன்! இக்கண்ணினும் ஏன் செந்நீர் வருகிறது? எப்படியாயினும் என்? மருந்து கண்ட நான் மயங்குவேனோ?" என்று துணிந்தார். இடக் கண்ணையும் எடுத்துவிட்டால் இறைவர் கண் இருக்குமிடந் தெரியாதென்று நினைத்துத் தம் இடக்காலை இறைவர் கண்ணுக்கருகி லிருத்தினார். அம்பை யெடுத்தார். அன்பின் வலிமையாலே தம் இடக்கண்ணிலூன்றினார். அன்பை அளப்பதற்கும் அளவு உண்டன்றோ? அருள் வள்ளலார்—செங்கண் வெள்ளேற்றினார்—திண்ண ரன்புவலையி லகப்பட்ட திருவாளர்—தம் திருக்கை நீட்டி அம்பு தொட்ட கையைத் தடுத்துப் பற்றியருளினார். அப்பெருமானார் திருவாய் மலர்ந்து, 'நிற்க! கண்ணப்ப! நிற்க! அன்புருவே! நிற்க!' என்றார்.

வேடர் தமது கண்ணை யெடுத் தப்பும்போதும், அவர் ஊனமுதை விரும்பிய இறைவர், தம் கையாலே தடுக்கும் போதும் அறிவுப் பிழம்பாகிய அந்தணர் கண்டார்! நான்முகனும் மாலும் மற்றைய வானவரும் கண்டனர்! மலர் மாரி பெய்தனர். இறைவர், இடக்கண்ணின் இரத்தமும் நின்றது! கண்ணப்பரின் வலக்கண்ணும் ஒளி பெற்றது! கண்ணப்பர் கையைப்பற்றிய காளத்தியப்பர், 'என் வலப்

பக்கத்திலே எப்போதும் நிற்க! என்றருளினார். இதனைவிடப் பேறு வேறு என்ன உள்ளது?

"ஆயுளெல்லாம் அரனாரை வழிபட்டேன்! அருள் பெற்றேனில்லை! ஆறுநாளிரவு அகன்றகாலே பேறு பெற்றார் வேடர்! அன்பே சிவமானார்! அனபிலா வழிபாட்டா லாவதொன்றில்லை! இனியேனும் அன்புடன் வேடரையும்—கண்ணப்பரையும்—காளத்தியப்பருடன் சேர்த்து வழிபடுவேன்" என்று இருவரையும் வணங்கினார் அந்தணர்!

"கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற்(கு) அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## கஉ. குங்குலியக்கலய நாயனார்

### 1. பண்பு

காவிரி நாட்டிற், காலனைக் காய்ந்த கடவுள் வீற்றிருக்குந் திருக்கடவூரில், அந்தணரொருவர் இருந்தார். அவர் கங்கைச் சடையரின் கழலிலே கட்டுற்ற உள்ளத்தினர்; ஒழுக்கத்திலே ஊறிய நடையினர்; மார்க்கண்டருக்காக மறலியை உதைத்தருளிய வள்ளலின் வீரட்டானத் திருக்கோயிலிலே குங்குலியத் தூபம் கமழச் செய்யுந் திருத்தொண்டே அவர் செய்தது. அதனாலே குங்குலியக் கலயர் என அவரைக் குறிப்பிடுவார்கள்.

### 2. தேர்வு

குங்குலியத் தொண்டிலே குறைவின்றி யிருக்கும் நாளிலே வறுமை வந்தது; நீடித்தும இருந்தது. எனினும் திருத் தொண்டிலே இடையறியும் சோர்வில்லாமல் இயற்றி வந்தார் நிலத்தை யெல்லாம் விற்றார்! அடிமைகளை விற்றார்! எல்லாப் பொருள்களையும் விற்றார்! இறுதியிலே இரண்டு நாட்கள் உணவு இன்றி வாடினர் சிறுவரும்

உறவினரும். வாழ்க்கைத் துணைவியார் மனங் கலங்கினர். கணவனாரை வணங்கித் தம் கழுத்தில் மங்கல நாணிலிருந்த தாலியைக் கொடுத்து நெல் வாங்கி வருமாறு வேண்டினர்!

வறுமையின் கொடுமையை நினைந்து வாடிய கலயனார், கண்ணீர் வடிய நெல் வாங்கச் சென்றார். எதிரிலே குங்குலியப் பொதியுடன் குறுகினன் ஒரு வணிகன்.

"இஃது என்ன பொதி?"

"குங்குலியப் பொதி!"

"வீரட்டானத்திறைவர் வழிபாட்டிற்குதவும் குங்குலியமா? என்னே என் பேறு! இஃது எவரும் அடையாத பேறு! இதனைக் கொள்ளாமல் நெல்லையா கொள்வது?"

கலயர் உள்ளங் களித்தது! மனைவி மக்களின் பசியையும்—இரண்டு நாளாக உணவில்லாத சோர்வையும்—சிறிதும் சிந்திக்கவில்லை! இறைவரன்பே எவற்றினும் முன்னின்றது!

"பொன்னுக்குக் கொடுப்பீரா?"

"என்ன பொன்?"

"இதோ இந்தத் தாலியைப் பாரும்!"

அவன் அதை வாங்கிக்கொண்டு குங்குலியப் பொதியைக் கொடுத்தான். வளமிகு செல்வம் பெற்ற வறியன் போல, அங்கே நிற்காமல் விரைந்து கொண்டு சென்றார். வீரட்டானத்தார் பண்டாரத்திலே அப்பொதியைச் சேர்த்தார். இறைவர் மலர்த்தாளைப் போற்றியவாறு அங்கேயே தங்கிவிட்டார். வீட்டிலென்ன வேலை? இரவும் வந்தது! இனிய களிப்புடன் அங்கேயே துயின்றார் கலயர்.

### 3. பரிசு

மனையிலே மனைவியார் கணவரை யெதிர்நோக்கிக் கண் பூத்தார். இரவிலே பசியுடன் அரவணிந்த பெருமானாரை

நினைத்துத் தொழுது மக்களுடன் துயின்றார். அந்த இரவில் அளகைக்கிறைவன் சிவனாருளை யேற்றுச் செல்வத்தைக் கொண்டுவந்து அந்த மனையிலே குவித்தான். எங்கும் நெற் குவை! எங்கும் நவமணி! அங்கே இல்லாத பொருள் எங்குமில்லை!

கலயர் மனைவியார் கனவிலே கண்ணுதலார் எழுந்தருளினார். 'எழுந்து உணவு சமைப்பாயாக!' என்றனர். விழித்த மனைவியார் செழித்த செல்வத்தைக் கண்டார். திங்களணிந்த செல்வரின் பேரருளைக் கைகுவித்து வாழ்த்தினார். விரைந்து சமைத்தார். கலயனார் கனவிலும் விலகிலாப் பேரருளார் வெளிவந்தார். 'மிகவும் பசித்தாய்; மனைக்குப்போய் மகிழ்ச்சியுடன் உண்பாயாக!' என்றருளினார். அந்தணர் எழுந்து சிந்தை நிரம்பிய அன்புடன் தலைவரை வணங்கினார். அரனார் அருளை மறுக்க அஞ்சி மனைக்குச் சென்றார். வரம்பிலா வளத்தைக் கண்டார். மனைவியாரை வினவினார். 'இறைவாருளே இது!' என்றனர் அவர். 'எனக்கும் எம்பெருமானாரிரங்கி யருளினாரே!' என்று கைகுவிந்து தலைமேல் ஏற வணங்கி வாழ்த்தினார். பிறகு, அடியார்களுடன் அறுசுவையுண்டியை ஆர அமர உண்டார். மனைவியாரும் மக்களும் உறவினரும் உண்டு களையாறினர்! பின்னர், நம் கலயனாரின் குங்குலியத் திருப்பணியுடன் குறைவின்றி அடியார்க் கமுது செய்விக்கும் அன்புப் பணியும் அழகாய் நடந்தது.

## 4. அன்பின் ஆற்றல்

இந் நிலையிலே திருப்பனந்தாளில் ஒரு திருப்பணி நடந்துகொண்டிருந்தது. சோழ அரசன் அங்குள்ள சிவாலயத்திலிருக்குஞ் சிவலிங்கத்தைச் சாய்வு நீக்கித் திருக்கோயிலைப் புதுப்பித்து வழிபட நினைத்தான் சிவலிங்கத்தை நிமிர்த்த அவனால் இயலவில்லை கயிற்றினாற் கட்டி ஆட்களும் பரியுங் களிறுமாக இழுக்கும்படி செய்தும் நிமிராமல் வருந்தினான். குங்குலியக் கலயர் இதனைக் கேள்வியுற்றார். அரசனும் படையும் அத்திருத்தொண்டிலே

இளைப்பதைப்போலத் தாமும் முயன்று இளைப்படையும் இனிய பேற்றை விரும்பினார். திருப்பனந்தாளை அடைந்து சிவலிங்கத்தைச் சேவித்தார். குங்குலியப் புகையினாலே இறைவரைத் தம் பக்கம் நிமிர்த்திய அடியார் பூங்கச்சினாலும் அவ்வாறு செய்து பார்க்க முயன்றார். அம் முயற்சியிலே வெற்றியும் பெற்றார் களிறுகளின் ஆற்றலாலும் அசையாத சிவலிங்கம் கலய ரன்பினாலே நிமிர்ந்தது! என்னே அன்பின் ஆற்றல்!

அரசனும் மற்ற அடியாரும் கலயனார் அன்பின் பெருமையைக் கண்டு வியந்தனர். அரசன் அவரடியிலே முடியை வைதது வணங்கினான். "சிவனார் திருவடியை வணங்கும் பேற்றினை அருளினீர்கள். அன்பின் வழியதே அரனார் திருவடித் தொண்டெனும் உண்மையை உலகறியச் செய்தீர்கள். எளியேன் எபபடிப் புகழ்வேன்?" என்று வாழ்ததினான். பிறகு பிற திருடபணிகளைச் செய்து வணங்கிச் சென்றான். கலயனார் சிலநாள் அங்கு வழிபாடு செய்துகொண்டிருந்து கடவூரை அடைந்தனர்.

ஒருமுறை சீர்காழிப் பெருமானும் திருநாவுக்கரசரும் கடவூருககெழுநதருளினர். கலயனார் அவர்களை எதிர்கொண்டு வணங்கி அழைத்துவந்து திருவமுது செய்வித்தார். இவ்வாறே நற்பணிகள் பற்பல புரிந்து வாழ்ந்து இறைவர் திருவடிநீழலை எய்தினார்.

**"கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்"**

*திருச்சிற்றம்பலம்*

## கஅ. மானக்கஞ்சாற நாயனார்

### 1. பண்பு

கொம்புத்தேனின் சாறும் கொழுங்கனியின் சாறும் கரும்பின் சாறும் நிறைந்த கஞ்சாறு என்றொரு திருநகர் உள்ளது. அங்கு, அரசனுக்குப் படைத்தலைமை பூண்டிருக்கும் பண்புடைய வேளாளர் மரபிலே சிவனடியாரொருவர் இருந்தார். அவர் பெருமையை நினைத்து அடியார்கள் அவரை மானக்கஞ்சாறர் என்று வாழ்த்தினர். அவர் மெய், அடியவர்க்குத் தொண்டு செய்யும். மனம், அரனடி மலரையே சிந்திக்கும். வாய், மங்கைபங்கரையே வாழ்த்தும். செல்வமெலாம் அவரடியார்க்கே செல்லும். அடியார் வருமுன்னே குறிப்பறிந்து விரும்பியவற்றைக் கொடுத்துவந்தார்.

• இத்தகைய பெரியார் நீண்ட நாளாக மகப்பேறு பெறாமல் வருந்தினர். பிறகு, பிறைமுடியா ரருளாலே பெண் மகவு ஒன்று பெற்றார். அப் பெண்கொடி அரனாருளேபோன்று வளர்ந்து மணப்பருவம் அடைந்தாள். ஏயர்கோன் கலிக்காமநாயனார் இப்பெண்ணை மணம்புரிய விரும்பி முதியவர்களைப் பெண்பேச அனுப்பினார். கஞ்சாறர் களிப்புடன் ஒப்புக்கொண்டார். திருமணத்திற்கு நாள் குறித்தனர்.

### 2. தேர்வு

கஞ்சாறர் திருமணத்துக்குரிய வினைகளைச் செவ்வனே முடித்தார். திருமண முதல்நாளிலே கலிக்காமரும் கஞ்சாறூர் நெருங்கினார். அவர் வருமுன்னே அரனார் ஒரு மாவிரத அந்தணராய்க் கஞ்சாறர் திருமண மனையை அடைந்தார். அவர் தம் திருச் சிகையிலே உருத்திராக்க மாலையும், காதிலே குண்டலமும், மார்பிலே திருத்தாழ் வடமும், தோளிலே பட்டிகையும், கருநிறம் பொருந்திய மயிர்வடப் பூணூலும், திருநீற்றுப் பையும், முன் கையிலே ஒற்றை யுருத்திராக்கங்கோத்த ஒளிவிடுந் திருநாணும், பொடி மூடிய தழலைப்போலத் திருநீறுதவழுந் திருமேனியும் உடையவராய் எழுந்தருளினார்.

திருத்தொண்டர் அவரைக் கண்டு எதிர்வந்து வணங்கித் 'தாங்கள் எழுந்தருளுந் தவமும் பெற்றேன்' என்று உருகிய அன்புடன் முகமன் மொழிந்தார். வந்த பெரியார் 'இங்கே நிகழும் நன்மை யென்ன?' என்று வினவினர். 'அடியேன் மகளின் மணம்' என்றார் அடியவர். மகளையும் அழைத்துவந்து பணியச்செய்தார். 'நலம் பெருகுக!' என வாழ்த்திய மாவிரதர் அப் பொற்கொடியின் கூந்தலை நோக்கி வியந்து, 'இது நமக்குப் பஞ்சவடிக்காகும்போலிருக்கிறதே!' என்றனர். பஞ்சவடி யென்பது மார்பிலணியும் விரிந்த மயிர் வடம். (பஞ்சம்-விரிவு, வடி-வடம்.)

அடியார் விரும்பியவற்றையெல்லாம் அளிக்கும் கஞ்சாற நாயனர், உடனே கத்தியையெடுத்துத் தம் அருமைத் திருமகளின்—திருமணத்திற் கலங்கரித்திருக்கும் செல்வியின்—கூந்தலை அடியோடு அரிந்து மாவிரதரின் மலர்க் கரத்திலே நீட்டினர் மாவிரதரைக் காணோம்! ஆவுயர்த்த கொடியரான அரனரைப்—பரவத் திருவடியருளிய பரமரை —உள்ளத்துள் ஒளிரும் பேரொளியை—விடையின்மேல் உமையம்மையாருடன் கண்டார்!

## 3. பரிசு

அடியார் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கியெழுந்தார். மெய்ம்மறந்து வாழ்த்தினர். "நம் அருகிலேயிருக்கும் பேறு தந்தோம்" என்று திருவாய்மலர்ந்து நம்பர் மறைந்தருளினர். எவர் பெறுவார் அப்பேறு?

கலிக்காமர் திருமணக்கோலத்துடன் வந்தார். நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கேட்டு மெய்சிலிர்த்துப் பரம்பொருளின் திருவருளை வாழ்த்தி வணங்கினர். இறைவரருளால் திருமணப்பெண்ணின் கூந்தல் முன்போல வளர்ந்தது. அம்மலர்க்கொடியை மணம்புரிந்துகொண்டு கலிக்காமர் தம் நகர் சென்றார்.

**"மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ்சாறற் கடியேன்."**

திருச்சிற்றம்பலம்

---

## கசு. அரிவாள்தாய நாயனார்

### 1. பண்பு

சோழ வளநாட்டிலே, கணமங்கலம் என்னும் ஊரிலே, வேளாளர் மரபிலே, தாயனார் என்னுந் திருத்தொண்டர் இருந்தார். அவர் திருத்தொண்டு அரனார்க்குச் செந்நெல்லுஞ் செங்கீரையும் மாவடுவும் திருவமுதுக்குத் திருக்கோயிலுக்குக் கொண்டுபோய்ப் படைப்பது. ஒருநாளும் இப்பணியிலே தவறாது செய்துவரும்போது வறுமையும் வந்தது. அப்போதுங் கூலிக்கு நெல்லறுத்துத் திருப்பணி செய்தார். கிடைக்கும் நெல்லிலே செந்நெல்லைச் சிவனார்க் காக்குவார்; கார்நெல்லைத் தம் உணவிற்காக்குவார். அந் நிலையிலே, கழனி யெங்குஞ் செந்நெல்லாகவே மாறியது. அதுகண்ட தாயனார் சங்கரர்க்குத் திருவமுதுக்குத் தக்க நெல் கிடைத்தது தமியேன் புண்ணியமென்று மகிழ்ந்தார்.

### 2. தேர்வு

நெல்லில்லாமையால் அவர் மனைவியார் மனைத் தோட்டத்திலிருந்து கீரை பறித்துவந்து சமைத்து வைப்பார். தாயனார் அதையே உண்டு திருப்பணி செய்தார். கீரையும் அற்றது. நீரைப்பருகித் திருப்பணியை விடாது செய்தார். ஒருநாள் செந்நெல்லும் செங்கீரையும் மாவடுவும் தம் அன்புபோற் கிடைத்தவற்றைக் கூடையிலே சுமந்து, துன்புபோன மனத்துடன் முன்பு போனார். அவர் மனைவியார் ஆனைந்தும் ஏந்திப் பின்பு போனார்.

அப்போது உணவில்லாமற் பலநாட்களாகத் தளர்ந்ததனாலே, தள்ளாடி விழுந்தார். விழுமுன் மனைவியார் அவரை அணைத்துப் பிடித்தும், கையிலே பஞ்ச கவ்வியம் ஏந்தியிருந்ததனால், நன்றாகத் தடுக்கமுடியாது போயிற்று. தாயனார் விழுந்ததாலே கூடையிலிருந்த பொருள்களுஞ் சிதறின! என் செய்வார்!

'இனிமேற் கோயிலுக்குப்போய்ப் பயனென்ன? அருமையான செங்கீரையும், செந்நெல்லரிசியும், மாவடுவும்

அரனார்க் கமுதாகும் பேற்றை யிழந்தன! இந்நிலையிலே தீவினையேன் உயிர்வாழ்வ தெதற்கோ!'

## 3. பரிசு

அரிவாளை யெடுத்துக் குரல்வளையை யறுத்துக்கொள்ளக் கழுத்திலே வைத்தார்! அரியவுந் தொடங்கினார். அக்காட்சி சிவனாருளாலே பிறப்பை யரிவதுபோலிருந்தது. இச்செயலை இறைவர் பொறுப்பாரோ? தரையிலிருந்து ஒரு கை தோன்றித் தாயனார் கையைப்பற்றியது. கை வெளிவரும்போதே அடியவர் கொண்டுவந்த மாவடுவை யேற்றுக்கொண்டதற் கறிகுறியாக அம் மாவடுவைக் கடிக்கும் ஓசையும் விடேல் விடேல் என்று கேட்டது.

தாயனார் திடுக்கிட் டஞ்சினாலும் இறைவரே அது செய்தாரென் றறிந்தவுடன் மகிழ்ந்தார் அரிநததாலுண்டான வடுவும் உடனே மறைந்தது! உடலிலே வலிமையும் உற்றது.

'அடியேனுடைய அறிவிலாமையை அறிந்திருந்தும், என் அடிமையை விரும்பிக் கமரிலிருந்து திருவமுது செய்த நின் திருவருள் போற்றி! உமையம்மையார் பாதியுருவம் போற்றி! திருவெண்ணீறணிந்த திருப்பவளமேனி போற்றி! விரிசடைப் பரம்பொருளே போற்றி!' என்று கைகுவித்து மெய்சிலிர்த்துக் கண்ணீர்வாரக் கண்ணுதலை வாழ்த்தினார். இறைவர் மரகதவல்லியாருடன் விடைமீது எழுந்தருளி, 'நீ புரிந்த செயல் நன்று! மனைவியுடன் வந்து எம் உலகில் வாழ்க!' என்று அவர்களை யழைத்துச் சென்றருளினார். அரிவாளாற் கழுத்தையரியமுற்பட்டதால் **அரிவாள்தாய நாயனார்** என்னும் பெயர் பெற்றார்.

**"எஞ்சாத வாள்தாயன் அடியார்க்கும் அடியேன்"**

திருச்சிற்றம்பலம்

---

# ௬௫. ஆனாய நாயனார்

## 1. பண்பு

நீர்வளஞ் சிறந்த மழநாட்டிலே திருமங்கலம் என்னுந் திருநகரிலே ஆயர் குலத்திலே ஆனாயர் என்னுந் திருத்தொண்டர் தோன்றினார். ஆனாயரென்பது ஆன் ஆயர் எனப் பிரிவுற்று ஆநிரைகளைக் காக்கும் ஆயர் (இடையர்) எனப் பொருள்படுதலைக் காண்க. ஒளிவீசுந் திருவெண்ணீறணிந்த மெய்யராய்க் கையிலே வேய்ங்குழலை வைத்துக் கொண்டு ஆவின் கூட்டங்களைப் புல நிறைந்த வெளிகளிலே ஓட்டிச்செல்வார். நோய் நொடிகளின்றிக் காத்துப் புல்லுள்ள இடங்களிலே மேய்த்து நீருள்ள இடங்களிலே நீரூட்டிக் குழந்தையைக் காக்கும் அன்னைபோற் போற்றி வருவார். ஆநிரைகள் மேயும்பொழுது வேய்ங்குழலை யெடுத்து ஐந்தெழுத்தை அமைத்து வாசிப்பார். அப்போது தம்மை மறந்து அவ்விசையிலே—ஐந்தெழுத்திலே—ஈடுபட்டிருப்பார். அவர்மட்டுமல்லர், கேட்கும் உயிர்க்கூட்டங்களெல்லாம் கிளர்ச்சியுற்று நிற்கும்.

கார்காலத்திலே ஒருநாள் தம் ஆநிரைகளைப் பல தொழுவங்களிலுமிருந்து ஓட்டிக்கொண்டு இடையர்கள் செல்லத் தாமும் பல புல்லாங்குழல்களை யெடுத்துக் கொண்டு சென்றார். அங்கே கட்டிவைத்த மாலைபோல நீண்ட மலர்க்கொத்துகளுடன் சிவனாரைப்போல ஒரு கொன்றைமரம் நின்றதைக் கண்டார். அவர் உள்ளம் அதன் தோற்றத்திலே ஈடுபட்டுருகியது.

அதன் அடியிலே போய் நின்றார். தம்மிடமிருந்த குழல்களில் சிறந்த ஒன்றை எடுத்தார். வண்டுகள் மலரிலே வாய்வைத்தூதுவதுபோலத் தம் திருவிதழை அக்குழலிலே பொருத்தியூதி இனிய ஓசையை எழுப்பினார். பிறகு, சுத்த சுரத்திலே திருவைந்தெழுத்தையும் அமைத்துப் பாடினார்.

அவருடைய அழகிய செங்கனிவாயும் குழலின் துளைவாயும் ஒன்றுபட்டு உண்டாக்கும் ஐந்தெழுத்தொலியின்

வெள்ளம் எங்கும் நிறைந்து, கற்பகத்தருவில் விளையுந் தேனையும் அமுதத்தையுங் கலந்து செவியிலே வார்ப்ப தைப்போலத் தேக்கியது

வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க.

(திருத்—ஆனாயர், உக)

ஆநிரைகள், மேய்ந்த அறுகு வாயிலே அப்படியே இருக்க அருகேவந்து நின்றன! ஆவின் கன்றுகள் தாய் மடியிற் சுவைத்துண்ணும் பாலைவிட்டுப் பால்நுரை வாயுடன் பக்கத்தேவந்து கூடின! காளைகளும் மான் கூட்டங்களும் மயிர்சிலிர்த்துக் கனிந்து நின்றன! கலவமயில்கள் ஆடுவதைத் தவிர்த்துக் கேட்டன! மற்றுள்ள பறவைகளும் உணர்விழந்து பக்கத்திலே படிந்தன! பலவகைத் தொழிலிலும் இருந்த ஆயர்களும் செயல்மறந்து திகைத்து நின்றனர்! வானவரும் விஞ்சையரும் வானவீதியிலே நிறைந்தனர். வருத்துவோரும் அவர்களால் வருந்துவோரும் தம் நிலைமறந்து ஒன்றுபட்டனர். ஆடும் மயில் மேல் அரவம் விழும்! அரியுங் கரியும் ஒன்றுபட்டு நிற்கும். புல்வாயையுடைய புல்வாய்கள் (மான்கள்) புலிவாயின் பக்கத்திலேபோய் நிற்கும்! காற்று விசையாயடிக்கவில்லை! மரங்களிற் கிளைகள் அசையவில்லை! மலையிலிருந்துவிழும் அருவிகளும் காட்டாறுகளும் ஒலியின்றியோடின! முகிலின் கூட்டங்கள் இடியும் மழையும் இன்றி அசைந்து சென்றன! கடல்கள் அலைவீசுதலையடக்கின!

## 2. பரிசு

இவ்வாறு அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும் இசைவடிவமாய்ப் புலன்களுங் கரணங்களும் ஒன்றுபட்டு நின்றபோது, அவ்விசையானது சிறிது சிறிதாக வானமெங்கும் பரவிப் பொதுவிலே நடிக்கும்

புண்ணியப்பொருளான — இசை வடிவமான — இறைவர் செவியிலும் வார்ந்தது. அரனார் அந்த இசையிலே ஈடு பட்டவராய்ப் பச்சைமயில் பாதியுடன் விடைமீதேறி வெளிவந்து ஆனாயர் குழலிசையைப் பருகியவாறு எதி ரிலே நின்றருளினார்.

"இவ்வாறே—குழல் வாசித்துக்கொண்டே—நம்பால் வந்தணைக!" என்று கூறியருளி மறைந்தார். ஆனாய நாய னாரும் அவ்வாறே சிவபெருமானார் திருமுன்னே வேய்ங் குழல் வாசிக்கும் திருவருள் பெற்றார்!

**"அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்"**

**சுந்தரர் திருவடி வாழ்க!**

திருச்சிற்றம்பலம்

---

# ௪. மும்மையா லுலகாண்ட சருக்கம்

## கசு. மூர்த்தி நாயனுர்

### 1. பண்பு

பாண்டிநாடு மிகவும் பழமையானது. முத்து விளையுங் கொற்கைத்துறையை யுடையது. பாண்டிநாடு தாமரை மலராகத் திருமகள் வசிக்கும் பொகுட்டாகவுள்ளது மதுரை யம்பதி. முத்தமிழ் விளையும் மூதூர் அது. தமிழ் பயின்ற புலவர் பலரிருந்த சங்கங்கள் அப்பாண்டிநாட்டின் தலைநகரிலேதான் வளர்ந்தன. தமிழன்னையைப் பல கலன்களாலும் அணிசெய்து அரியணையிலே அமர்த்தி வழிபட்ட பாண்டியரின் தலைநகர் அந்த மதுரம் மிகுந்த மதுரை. இறைவரே சங்கப்புலவர்களில் ஒருவராயிருந்து தமிழாராய்ந்த இடம் அது. அங்கே அங்கயற்கண்ணம்மையாருடன் சோமசுந்தரர் வீற்றிருக்குந் திருவாலவாய் என்னுந் திருக்கோயில் உள்ளது! இறைவரும் அங்கயற்கண்ணம்மையாரும் முருகனுமிருந்து ஆண்ட சிவராசதானி அம் மதுரையெனில் வேறென்ன வேண்டும்? உவமையற்ற அந்த மதுரையம்பதியிலே வணிகர்குலத் தோன்ற லொருவர் இருந்தார். அவர் சிவபெருமான் திருவடிப்பற்றன்றி வேறு பற்றிலாத மெய்யன்பர். உறவும் நண்பும் மற்றைய செல்வமும் சோமசுந்தரர் திருவடியே யென்றிருக்குந் திருவாளர். அன்பு மூர்த்தியாகிய அவரை மூர்த்தியாரென்றே மொழிவார்கள். அவர் தம் திருத்தொண்டு இறைவர் சந்தனக் காப்பிற்குச் சந்தனம் அரைத்து அளிப்பது.

### 2. தேர்வு

இத் திருப்பணிக்கும் முட்டு நேர்ந்தது. வடுகக் கர்நாடக அரசனொருவன் படையுடன் வந்து தென்னவனை முறியடித்து முடிசூட்டிக்கொண்டான். அவன் சமணர் வழிநிற்பவன். சிவனடியாரைக் கண்டாற் சீறுவோன்.

அவன் மூர்த்தியார்க்குப் பல இடையூறுகள் செய்தான். எனினும், அவர் திருத்தொண்டு விடாமல் நடைபெற்றது. 'இரும்புத்தூணைச் செல்லரிப்ப துண்டோ?' இறுதியில் அவன் இவருக்கு எங்கும் சந்தனக்கட்டைகள் கொடாத வாறு தடுத்தான். ஒருநாள் பகலெல்லாம் சந்தனக்கட்டை தேடினார்; கிடைக்கவில்லை. மனங்கலங்கியவராய்த் திரு வாலவாயிலைச் சார்ந்து, 'சந்தனக்கட்டைக்கு முட்டு வர லாம்! என் முழங்கைக்கு முட்டு வராது!' என்று உறுதி பூண்டு, சந்தனக் கல்லிலே முழங்கையைத் தேய்த்தார்! என்னென்பது!

தோல் தேய்ந்து நரம்பும் நைந்து என்புங் காணப் பட்டது! இரத்தப்பெருக்குக்கும் கை நோய்க்கும் சிறிதும் இடையாமல் மேலுந் தேய்க்கத்தொடங்கினார். இனியுந் தேர்வு வேண்டாமென இறைவர் நினைத்தார்.

### 3. பரிசு

'அன்பின் துணிவினால் இது செய்யாதே! உனக் கிடையூறு செய்யும் கர்நாடகன் கொண்ட நிலத்தை நீயே பெற்று, இதுவரை நேர்ந்த இடையூறுகளை நீக்கிக் காப்பா யாக! நம் பணியை விடாது செய்ய இந்த நிலை தந்தோம்!'

இவ்வாறெழுந்த திருவருளுரையைக் கேட்டஞ்சித் தேய்ப்பதை நிறுத்தினார். தேய்ந்த கை முன்போல் ஆயது. மெய்யும் மெய்யான அழகைப்பெற்றது. அன் றிரவே சமண அரசன் நிலையாமை அடைந்தான். அவன் உறவும் ஒழிந்தது! இரவும் ஒழிந்தது! கதிரவன் செந் நிறக் கதிர்களைச் செவ்வையாகப் பரப்பிக் கீழ்த்திசையி லெழுந்தான்.

அமைச்சர்கள் அரசன் இறந்ததை யறிந்து ஈமக்கடன் செய்தனர்! பிறகு, அரச மரபினர் யாருமில்லாமையாற் பட்டத்து யானையின் கண்ணைக்கட்டி வெளியே விட்டனர். அது பல இடங்களிலுந் திரிந்து, திருவாலவாய்த் திருக் கோயிலை அடைந்தது. அங்கே நின்ற மூர்த்தியாரின்

எதிரிலே சென்று வணங்கித் தன் துதிக்கையால் அவரை எடுத்துப் பிடர்மீது ஏற்றிக்கொண்டது. அதுகண்ட நகர மக்களும் அமைச்சரும் பெருங்களிப்புடன் ஆரவாரித்தனர். சங்குகள் முழங்கின! தாரைகள் ஒலித்தன! பேரிகைகள் அதிர்ந்தன! வாழ்த்தொலிகள் வானளாவின!

யானையின் கண்ணைக்கட்டிய துகிலை அவிழ்த்து விட்டனர். பலவகை வாத்தியங்கள் ஒலிக்க, அரண்மனைக்கு அந்த யானையின்மீதே அழைத்துச்சென்றனர். முடிசூட்டு விழாவுக்குரிய முயற்சிகளைச் செய்தனர். முடிபுனை மங்கல முயற்சியி லீடுபட்ட அவர்களை நோக்கி, 'முதலாகச் சமண நெறியை மாற்றிச் சைவ நெறியை ஏற்றுக்கொள்ள வேண்டும் இந்நாடு. அவ்வாறு திரும்பினால் மட்டும் நான் அரசை ஏற்பேன்,' என்றார்.

அமைச்சர்கள் அவரை வணங்கி, 'எவ்வாறு தங்கள் திருவருள் உண்டாகிறதோ, அதற்கெதிராக எவருமிரார்,' என்று பணிவுடன் பகர்ந்தனர். மூர்த்தியார் மறுபடியும் மொழிவார்: 'இந்தப் பொன் முடியும் மணிமாலைகளும் கலவைப்பூச்சும் வேண்டேன். திருவெண்ணீறே எனக்கு மணமிக்க கலவைச்சந்தனமும் அபிடேகப் பொடியும் ஆகட்டும். உருத்திராக்கமே மணிக்கலன்களாகட்டும். சடைமுடியே நவமணி முடியாகட்டும்.'

“வையம் முறைசெய் குவனாகில் வயங்கு நீறே
செய்யும் அபிடே கமுமாகச் செழுங்க லன்கள்
ஐயன் அடையா ளமுமாக அணிந்து தாங்கும்
மொய்புன் சடைமா முடியேமுடியாவ” தென்றார்.

(திருத்—மூர்த்தி, சக)

கல்வி யறிஞர்களும் மந்திரிகளும் சான்றோரும் பெருங்குடி மக்களும் இம்மொழி கேட்டு வியந்து பாராட்டுடன் ஒப்புக்கொண்டு அவ்வாறே திருமுடி புனைந்தனர். மூர்த்தி நாயனார், நேரே திருவாலவாய் சென்று சொக்கலிங்கரையும் அங்கயற்கண்ணியாரையும் வணங்கிக் களிறூர்ந்து நகர்வலம் வந்தார். அரண்மனையின் அருகே சென்றதும், யானைமீ

திருந்திறங்கிச் சபாமண்டபத்திற்குச் சென்று அரியணைமீ தமர்ந்து சாமரைக் காற்றுத்தழுவ வெண்கொற்றக்குடை மேலோங்க உலகைக் காத்தனர். திருநீறு, கண்டிகை, சடைமுடி என்னும் மும்மையா லுலகாண்ட மூர்த்தியார் குறிப்பின்வண்ணம் அமைச்சர் நடந்தனர். சைவசமயம் வளரக் குடிகளுக் கிடரின்றி நீண்டகாலம் ஆட்சிபுரிந்து, முடிவில் இறைவர் திருவடிநீழலை யெய்தினர்.

**"மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்"**

திருச்சிற்றம்பலம்.

---

## கஎ. முருக நாயனார்

ஆறுதரித்த சடையார் விரும்புந் திருப்பதிகளிற் சிறந்தது சோழநாட்டுத் திருப்புகலூர். அவ்வூரிலே திருவெண்ணீற்றொளியே எங்குந் திகழும். பொழில்களிலும், பொய்கைகளிலும் உள்ள மலர்கள் மட்டும் அங்குத் தேனைப் பொழியும் என்று எண்ணவேண்டாம். பொழில்களிலே மரங்களின் கிளைகளிற் பூவையுங் கிளியுங்கூடத் தமிழ்ப்பதிகத் தேன் பொழியும்! தாமரை மலர்கள் வண்டுகள் வந்து பாடினால் மலர்ந்து கள்நீர் அரும்பும்! அடியார்கள் திருப்பதிகம் பாடிக் கண்ணீர் அரும்புவார்கள்.

அந்த நகரிலே மறையவர் மரபிலே அந்திவண்ணர் அடியை நினைந்துருகும் முருகனார் என்பவர் ஒருவரிருந்தார். அவர் திருத்தொண்டு மலர் தொடுப்பது. வைகறையிலே எழுந்து தூய நீரிலே முழுகுவார். மலரும் பக்குவத்திலுள்ள—இறைவர் முடியிலே அணிந்தபின் மலர்ந்து தேனைத் துளிக்கும் நிலையிலுள்ள—மலர்களை, வகை வகையாக வெவ்வேறு கூடைகளில் எடுப்பார். திருவைந்தெழுத்து மலருந் திருவாயுடன் கோட்டு மலரும், பொய்கை மலரும், கொடி மலரும், புதர் மலரும் ஆகியவற்றில் இறைவர்க்காகும் மலர்களை ஆராய்ந்தெடுப்பார். அவற்றை

ஓரிடத்திலே கொண்டுவந்து வைத்துக்கொண்டு கோவை, இண்டை, தாமம், மாலை, கண்ணி, பிணையல், தொங்கல் என்று பலவகையாகத் தொடுத்து வர்த்தமானீச்சுரம் என்னும் அவ்வூர்த் திருக்கோயி லிறைவருக்குச் சாத்தக் கொடுப்பார்.

ஐந்தெழுத்தைச் சிந்தையாரவோதும் அவர் திருஞான சம்பந்தர் அங்கு எழுந்தருளியபோது அவரடி வணங்கி வரவேற்றுத் தமது மடத்திலே இருக்கும் பரிசு செய்து அவருக்கு நண்பரானார். அதுபோலவே திருநாவுக்கரச நாயனாருக்கும் நண்பரானார். பிறகு, பிள்ளையார் திருநலூர்ப் பெருமணத்திலே பேரொளியிற் புகுந்தபோது தாமும் புகும் பேற்றைப்பெற்றுச் சிவனாரடி நீழலைச் சேர்ந்தார்.

"முருகனுக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௧௫. உருத்திரபசுபதி நாயனார்

சோழநாட்டுத் திருத்தலையூரில், அந்தணர் மரபிற் பசுபதியார் என்பவர் ஒருவரிருந்தார். அருமறைப் பயனாகிய உருத்திரம் என்னும் மந்திரத்தை இடையறா அன்புடன் ஓதுவார். வண்டுகள் முரலும் தாமரை மலர்கள் மலர்ந்த பொய்கையிலிறங்கிக் கழுத்தளவு நீரில் நின்று, கைகளைத் தலைமீது குவித்துக் கண்ணீர் ததும்பப் பேரன்புடன் கங்கைநீர்ச் சடையார் திருவடியிலே பதிந்த மனத்துடன் அம் மந்திரத்தை ஓதுவார். இரவும் பகலும் தவறாமல் உருத்திரத்தை யோதிய பெருமையால் இறைவர் திருவடி யருகிலிருக்கும் பேறுபெற்றார். அவர் பெயர் உருத்திர பசுபதியார் என உலகில் வழங்கியது.

"உருத்திர பசுபதிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

# கக. திருநாளைப்போவார் நாயனார்

## 1. புலைப்பாடி

சோழநாட்டிலே ஒரு பகுதியான மேற்காம்நாட்டிலே ஆதனூர் என்றொரு சிற்றூர் உள்ளது. அது கொள்ளிடக் கரையிலுள்ளது; வளத்திற் சிறந்தது; அவ்வூருக்கு வெளியிலே, கழனிகளைச் சேர்ந்தாற்போலப் புலைப்பாடியொன்றிருந்தது. அஃது உழவர் குடிகளால் நெருங்கியது. சுரை படர்ந்த பழங் கூரைகளையுடைய குடிசைகளையுடையது.

கூரிய நகங்களையும் மெல்லடிகளையுமுடைய கோழிக் குஞ்சுகள் முன்றில்களிற் சுற்றிக்கொண்டிருக்கும். அந்த இடத்தில் நாய்க்குட்டிகளும் விளையாடும். அவற்றைச் சிறுவர் எடுத்துக்கொண் டோடும்போது குரைக்கும். அவ்வோசையை அச்சிறுவர் அரையிற் கட்டியிருக்கும் இருப்பு மணியின் ஒலி அடக்கிவிடும். மருதமரநீழலிலே உழத்தியர் குழந்தைகளைச் சிறு தோலின்மேல் உறங்கவைத்திருப்பார்கள். வஞ்சிமரத்தின் அடியிலே கோழிகள் முட்டையிட்டு அடைகாக்கும் பானைகளைப் புதைத்திருப்பார்கள். மாமரத்திலே பறைகளைத் தொங்கவிட்டிருப்பார்கள். குட்டிகளை யீன்ற நாய் படுத்திருக்கும் பள்ளங்கள் தென்னைமரத்தினடியிலே காணப்படும். காலையிலே உழவர்களை யெழுப்புஞ் சேவல்கள் காஞ்சிமரத்தின் கிளைகளிலே தங்கியிருக்கும். அம்மர நிழலிலே புலைப்பெண்கள் நெல்லைக் குற்றும் பாட்டொலி கேட்கும்.

## 2. நந்தனார்

இப்படிப்பட்ட கடையரிருப்பிடத்திலே நந்தனா ரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரவாபரண ரடிமலர்க்கே விளைந்த அறிவோடு தோன்றியவர். அவர் ஊர்த்தோட்டி யென்னும் உரிமையுடையவர் ஊரிற் கிடைக்கும் உரிமைப் பொருளை உணவுக்கு வைத்துக்கொள்வார். சார்புத் தொழிலாகச் சிவனாரடித் தொண்டினைச் செய்வார். வெள்ளந்

தங்கிய விரிசடையார் திருக்கோயில்களுக்குப் பயன்படும் பேரிகை முதலான கருவிகளுக்குப் போர்வைத்தோலும் விசிக்கும் வாரும் அளிப்பர். வீணைக்கும் யாழுக்கும் நரம்புகள் தொடுப்பார். வழிபாட்டுப் பொருளாகக் கோரோசனை கொடுப்பார்

## 3. திருப்புன்கூர்—திருக்குளம்

இவ்வகை தொழில்புரிவதோடு திருக்கோயிலின் வெளியிலே வாயிலுக்கு எதிரே நின்று பேரன்பினால் ஆடிப் பாடி வாழ்த்துவார். ஒருமுறை திருப்புன்கூர்ச் செவ்வண்ணரை வணங்க ஆதனூரினின்றும் புறப்பட்டு வருந்திய காதலோடு அவ்வூரின் அருகில்வந்தார். திருக் கோயிலுக் கெதிரேநின்று நேரே கும்பிட விரும்பினார். அதனையுணர்ந்து திருமுன் இருக்கும்நந்தியைச் சிறிதுவிலக் கினார் சிவலோகநாதர். நந்தனார் அதனையுணர்ந்து பன்முறை விழுந்து வணங்கிப் பாடிப் பரவினார். திரும்பிவரும்போது பள்ளமான ஊற்றுக்கேற்ற இடங்கண்டார். ஒரு திருக் குளத்தைத் தோண்டினார். பிறகு, மற்றொருமுறை திருப் புன்கூர்ச் சிவலோகநாதரை வழிபட்டுத் திரும்பினார்.

## 4. திருநாளைப் போவார்

இவ்வாறு திருப்பதிகள் பலவுக்குஞ் சென்று திரும்பு வதுவழக்கம். ஒருநாள் திருத்தில்லையை வணங்கும் காதல் இடைவிடாமல் தோன்றியது. அன்றிரவு நாளைக்குச் செல்வோமென்று முடிவுசெய்தார், விடிந்தது; தம் பிறப் பின் இழிவு அங்கே செல்லத் தடையென்பதை அப்போது தான் அறிந்தார். கலங்கித் திகைத்தார். கருத்துக்குழம் பியது. பகல்கழிந்து இரவுவந்தது. உறக்கம் வரவில்லை. ‘தில்லைக்குச் செல்லாவிட்டால் இப் பிறப்பெடுத் தென்ன நன்மை? பொன்மன்றைக் கும்பிடாத இழிவைப் போக்கு வது எப்படி? புண்ணியம் வற்றிப் பாவப்பயிர் முளைக் குமே! எம்படியாவது நாளைக்குப் போவேன்!’ என உறுதிசெய்தார். அன்றும் விடிந்தது! தம் குல இழிவு

மலைபோலத் தடையாக இருப்பதை மறுமுறையுங் கண்டார். 'முடவன் கொம்புத்தேனுக் காசைப்படுவதா?' 'உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?' 'ஆவலிருந்தால்மட்டும் போதுமா?'—இவைபோன்ற எண்ணங்கள் அவர் நினைவை ஒடித்தன. ஆகையால், அன்று போசாமல் நின்றுவிட்டார். இப்படி ஒருநாளா? பலநாள் நடந்தது! நாளைப்போவேன் என்பார் இரவில்! விடிந்தவுடனே ஒடிந்துவிடும் நினைவு! இவ்வாறு அவர் திருநாளைப் போவாராயினர்! தீண்டாமை அந்தக் காலத்திலே நுழைந்து வேரூன்றிப் படர்ந்திருந்தது. 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்,' என்ற வள்ளுவர் வாக்கு ஏட்டுச் சுரைக்காயாகத்தான் இருந்திருக்கவேண்டும்!

## 5. தில்லைக் காட்சி

ஒருநாள், துணிவுகொண்டு தில்லையெல்லையை அடைந்தார். உள்ளம் களிப்புக் கூத்தாட எல்லையில் விழுந்து வணங்கினர். கூத்தரை வாழ்த்தினர். அவ்வாழ்த்திலே அன்பு குழைந்திருந்தது. மெய்யோ இன்பச் சுருதியிசைக்கும் யாழாயிற்று! களிப்பிலே மிதந்தார்! நகரை நோக்கினர்! கால்கள் நகர மறுத்தன! வேள்விப்புகை கமழும் அந்தணர் வாழ்வு அது! அப்புகை இவர் களிப்பை வாட்டிவிட்டது. அவ்வேள்வித்தீ இவர் காதலைச் சுடத்தொடங்கியது. 'மூவாயிரம் வேள்விச்சாலையாமே!' அந்தத் தீக்கொழுந்திற்கும் புகைக்கும் நடுங்கினர். மெதுவாக நகர் வெளியே உள்ள மதிலையடைந்தார். அதற்குமேல் உள்ளே செல்ல முடியவில்லை! பிறப்புக்கதவு தாழ்போட்டுவிட்டிருந்தது. 'ஆராத பெருங்காதல்!' நகரின் உள்ளே நோக்கித் தம் உள்ளேயும் நோக்கினர். தம் நிலை—இழிவு—அந்த மதிலைவிட ஓங்கி வானவெளியையுங் கடந்து தடுப்பதைக் கண்டார். 'ஏன் பிறந்தேன்?' ஆவின் கூட்டமொன்று திறந்த மதில் வாயிலின் வழியே சென்றது! கிளிக்கூட்டங்கள், நாரையினங்கள் வானவழியிலே மதிலைக் கடந்து சென்றன! ஆனல், மக்கட்பிறப்பிலே சிவனரை வழிபடும் உணர்வோடு—அன்போடு—பிறந்த நந்த

ஞர் மட்டும் உள்ளே செல்லத் தயங்கினார்! தில்லைமதிலின் வெளியிலே வலமாகத் தலைமேல் கூப்பிய மலர்க்கைகளுடன் வந்தார். விழுந்து பணிந்தார். அன்றிரவு வெளியிலே இயற்கையன்னையின் மடியிலே துயின்றார். உணவு சிவ அன்புதான். அவருக்குத்தான் வேறு பசியில்லையே! இப்படிப் பல நாட்கள்!

## 6. பொன்னைக் காய்ச்சுதல்—இழிபிறப்புக்குத் தீ!

அந்தக் காதல் நோய் சிறிதும் தணியவில்லை! 'என்றோ மன்றில் நடம் கும்பிடுவது?' என்று கண்ணீர் விடுவார். துயிலும், அந்த நினைவுத் துயில்தான்! துயிலிலே, அம்பலத்தாடுவார் எழுந்தருளி, 'இப் பிறவி நீங்கிட எரியிலே மூழ்கி முப்புரிநூல் மார்பருடன் முன் வருக,' என்றுரைத்துப் போயினார்! அந்தணர் கனவிலும் எரியமைக்கக் கூறியருளினார்! அந்தணர்கள் பேரம்பலத்தின்முன் கூடினர். அரவணிந்த அண்ணல் திருவாய் மலர்ந்ததைச் சிந்தித்தனர். முடிவில் அவர் விருப்பின்படியே செய்வதென முடிவு செய்தனர். மதிலின் புறத்திலே வந்து சேர்ந்தனர். நந்தனாரைக் கண்டனர்.

'ஐயரே! அம்பலவர் அருளால் இப்பொழுது வந்தோம். நெருப்பமைத்துத் தருகின்றோம்'

நந்தனார் உய்ந்தேன் எனத் தொழுதார்.

அந்தணர் செந்தீ வளர்த்தனர். தென் மதிற்புறத்திலே நந்தனார் இறைவர்தாளை மனத்திலே அன்புடன் பிடித்தமைத்தார். எரியை வலம் வந்தார் உள்ளத்திலும் செந்தீ வண்ணர் ஒளிவிட்டார்; புறத்திலேயும் நெருப்புக் கொழுந்து நிமிர்ந்தது.

கைதொழுது நடமாடுங் கழலுன்னி அழல்புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
பொய்தகையும் உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்கவேணிமுடி கொண்டெழுந்தார்.
(திருத்—திருநாளைப். ௩௨)

உட்புகுந்தார். தூய முனிவராகச்—சுடப் பெற்ற பொன்னாக—மார்பிலே வெண்ணூல்! தலையிலே சடைமுடியுடன் வெளிவந்தார். மலரிலே தோன்றிய நான்முகவனார்! உள்ளும் புறமுந் தூயவரானார். வானவர் வழக்கம் போல் மலர்மாரி பெய்தனர். வான துந்துபிகள் முழங்கின! நந்தனாரைக் கண்டு அந்தணாளர் வணங்கினர்.

## 7. பேரின்பம்

அந்தணர் பின் சென்றனர்; இவர் முன் சென்றனர்; நந்தனார் பெருமானாரைக் கண்டு குவித்த கைகளுடன் திருமுன் சென்றனர். அவ்வளவே! அந்தணர்கள் திகைத்தனர். உள்ளே சென்றவர் உமையொருபாகரைக் கலந்தார். திருவடி தொழும் பேறுபெற்றார்

**" செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன் "**

*திருச்சிற்றம்பலம்.*

---

# உ௦. திருக்குறிப்புத்தொண்ட நாயனார்

## 1. பண்பு

பல வளங்களும் நிறைந்து, சான்றோர் வாழும் பேறும் பெற்றது **தொண்டைநாடு**. அந்த நாட்டிலே, உமையம்மையார் முப்பத்திரண்டறங்களும் புரிந்தருளி இறைவரை வழிபட்ட சீர்மை மிக்கது **காஞ்சியம்பதி**. அந்தப் பதியிலே ஏகாலியர் மரபிலே ஒரு சைவத் தொண்டர் தோன்றினார். அவர் அடியார் குறிப்பறிந்து பணிபுரியுஞ் சிறப்பினாலே **திருக்குறிப்புத்தொண்ட** ரெனுஞ் சிறப்புப் பெயர் பெற்றார்; சிவபெருமானார் பேரொலிக்க உருகும் அடியார்களுக்குப் பெருவிருப்புடன் ஆடையொலிக்கும் அருமைப் பண்புடையார். **அடியார்தம் ஆடையின் மாசு கழிப்பதாலே தம்முடைய பிறப்பின் மாசு கழியுமெனும் நினைவுடையவர்.**

## 2. தேர்வு

ஒரு நாள், கங்கைவேணியர் வறிய கோலத்துடன் தவ முனிவராய்த் திருமாலுங் காணாத சேவடிகள் புவியின் மேற் பொருந்தவைத்துக் குறுகிய நடையுடன் திருக் குறிப்புத் தொண்டர் மனைக்கெழுந்தருளினார். அவர் மெய்யிலே வெண்ணீறு விளங்கியது. அதன்மேல் அழுக் கடைந்த கந்தையுடன் மிக மெலிந்திருந்தார். அவரைக் கண்ட அடியார் எதிர்கொண்டு வணங்கினார். இனிய மொழிகள் இயம்பினார்.

'தங்கள் திருமேனி இளைத்திருக்கிறதே! கந்தையைத் தந்தருளுங்கள்; அழுக்கைப் போக்கிக் கொண்டு வரு கிறேன்.'

'இது மிக அழுக்கேறியதுதான். தூக்கவும் முடியாத வாறு அழுக்கு நிறைந்ததுதான்! எனினும் இது குளிர் காலம். உடம்பிலிருந்து எடுப்ப தெப்படி? பொழுது மறைவதற்குள் கொண்டு வருவீரானால் கொடுக்கிறேன்.'

'நன்றாகத் துவைத்து, அந்தி நீங்குவதற்குள் கொண்டு வந்து தருவேன். கொடுத்தருளுங்கள்.'

'விரைவிலே கொடுக்காவிட்டால் இந்த வுடலுக்குத் துன்பஞ் செய்தவராவீர்!'

ஆடையைக் கொடுத்துவிட் டரனார் போய்விட்டார். ஏகாலியர் பெருமான் அந்த ஆடையை நீர்த் துறைக்குக் கொண்டுபோனார். அழுக்ககலத் துவைத்தார். வெள் ளாவியிலே வைத்தார். திரும்பவும் துவைக்கத் தொடங் கும்போது பிற்பகலாயிற்று. மழை வந்து விட்டது! திசை தெரியாமல் மேகங்கள் சூழ்ந்தன. கண்பார்வையும் நுழைய முடியாதபடி தாரைகள் நெருங்கிப் பெய்தன. திருக்குறிப்புத்தொண்டர் திகைத்தார். மழைவிடுமென்று சிறிது நின்றார். மழைவிடவில்லை. இரவுவரை பெய்தது!

"என் செய்வேன்? என் குற்றேவல் அழிவுற்றதே! பகைவர்போல் இரவும் வந்துவிட்டதே!' மழைவந்தவுடன்

வீட்டிற் கொண்டுபோய்க் காற்றிலே ஆடவிட்டிருந்தாலும் இந்நேரம் உலர்ந்திருக்கும். இனி யென்செய்வது? இரவு வந்ததனால் அவர் குளிரால் நடுங்குவாரே! அவர் திரு மேனிக்குத் தீங்குசெய்துவிட்டேனே! இனிச் செய்ய வேண்டுவது இஃது ஒன்றே!''

## 3. பரிசு

துணியைத் தாக்குங் கற்பாறையிலே தம் தலையைத் தாக்கத் துணிந்து சென்று தாக்கினார். ஆனால், அவர் தலை கல்லிற்படுமுன் இறைவர் கை கல்லுக்குள்ளிருந்து வந்து தடுத்தது. மலர்போலிருக்கும்படி தாங்கியது. கல்லினும் இறைவர் உளரெனுங் கருத்தை யுலகுக்குக் காட்டியது, அக் கைம்மலர். நீர்மழை நீங்கி மலர் மழை பெய்தது! மலர் மழையின் இடையிலே வானத்திலே வள்ளலார் தம் விடைமீது பாதி பெண் வடிவாய்க் காட்சி கொடுத்தருளினார். திருக்குறிப்புத்தொண்டர் சிவனார் திருக்குறிப்பையறியாமல் மெய்மயிர் சிலிர்க்க விழுந் தெழுந்து கைகுவித்துப் பணிந்து வாழ்த்தி நின்றார்.

'மூவுலகுக்கும் நின் உண்மை யன்பை வெளிப்படுத்தி னோம். நீ இனி நம் உலகிலே பிரியாமல் இருப்பாயாக!' என்றருளி இறைவர் ஏகாம்பரம் அடைந்தார். அடியார் அவர் அடிமலரடைந்தார்.

"திருக்குறிப்புத்தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

# உக. சண்டேசுர நாயனர்

## 1. திருச்சேய்நல்லூர்—அந்தணர்

பொன்கொழிக்குஞ் சோழநாட்டிலே, மண்ணியாற்றின் தென்கரையிலே செவ்வேளெழுந்தருளிய சிறப்புடையது திருச்சேய்ஞலூர். அந்நகர் சோழர்களுக்குத் தலைநகராகவும் விளங்கியது. அந்நகரில் திருவெண்ணீற்றைன்றையே வழிபடும் இருபிறப்பாளர்கள் நிறைந்திருந்தனர். முத்தீவளர்க்கும் நான்மறையாளராகிய அவர்கள் ஐம்புலன்களையும் அடக்கியவர்கள். அங்குள்ள மடங்களில் திங்களையுந் தாரகைகளையும்போல் ஆசானும் மாணவருமிருந்து கலைபயிலுங் காட்சி காணத்தக்கது. அந்நகரின் சிறப்பை எழுத எழுத்துக்கள் இல்லையெனலாம். பண்ணின் பயன் இசை, பாலின் பயன் சுவை, கண்ணின் பயன் ஒளி, கருத்தின் பயன் ஐந்தெழுத்து, வானத்தின் பயன் மழை, மறையின் பயன் சைவம்—இவ்வாறே புவியின் பயன் சேய்நல்லூர் என்பது புகழாகாது.

## 2. விசாரசருமர்—பண்பு

அங்கு வாழும் அந்தணர்களிற் செல்வம் மிக்கவன் **எச்சதத்தன்.** அவன் மனைவி பவித்திரை என்னும பெயருடையாள்; நல்ல மரபிற் பிறந்தவள்; சுற்றத்தை யாதரிப்பவள்; நல்ல ஒழுக்கத்திற் சிறந்தவள். அவள் வயிற்றில் மறையவர்குலம் வாழச் சைவந் தழைக்க விசாரசருமர் பிறந்தார். அவர் ஐந்தாண்டு நிரம்பிக் கலைபயிலத் தொடங்கியவுடன் பழம் பிறப்புத் தொடர்ச்சியினால் அரும்பிலடங்கிய மணம், அது மலரும்போது விரிவதுபோற் கலையுணர்வு சிறப்படைந்தது.

ஐந்து வருடம் அவர்க்கணைய அங்கம் ஆறும் உடன்நிறைந்த
சந்த மறைகள் உட்படமுன் தலைவர் மொழிந்த ஆகமங்கள்
முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின வாசம்போற்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால்.

(திருத்—சண்டேசர், கஙு.)

அவருடைய நுண்ணுணர்வுங் கலையும் அரனார் மலரடிப் பற்றிலேயே சூழ்ந்தன. அவர் சிந்தைக்கு விருந்தாகச் சேமித்தது சிவனார் பேரருளே. முக்கண்ணர் திருவடியன்பிலே முழுகித் திளைத்துக் கனிந்துநின்றார் அந்தக் கலைவாணர்

## 3. ஆனிரை காதல்—காத்தல்

ஒருநாள் அவர் தெருவழியே செல்லும்போது ஒரு காட்சியைக் கண்டார் கன்றையீன்ற பசுவொன்று மேய்ப்போனைக் கொம்பால் முட்டியது. அவன் அதனைத் தடிகொண்டு தாக்கினான். இதனைக் கண்ட அவர் உள்ளந் திடுக்கிட்டது சினத்துடன் அவனைத் தடுத்தார். அறிவும் புகட்டினார்.

"பசுக்கள் எல்லா உயிர்களையும்விட மேம்பட்டவை. அவற்றின் பால் இறைவர் திருமுடியிலே ஆட்டப் பயன் பெறும்! அதனிடமிருந்தே திருநீற்றுக்குரிய சாணங் கிடைக்கிறது! அரனார் ஊர்வது ஆனேறுதான்....மற்றும் இது மக்களுக்குத் தன் பாலையூட்டும் பண்பை மறந்தார் உளரோ? இனி நீ இதனை மேய்க்கவேண்டா. யானே மேய்ப்பேன்" என்றார்.

இடையன் இவர் மொழிக்கு மாற்றங்கூற அஞ்சி நீங்கி விட்டான். அன்றுமுதல் இவரே குழந்தையைக் காக்கும் அன்னைபோலக் கோகுலங்களைக் காக்கத் தொடங்கினார். கோலுங் கயிறுங் கொண்டார். உச்சியிலே குடுமி யலையவும் மார்பிலே மான்தோலும் நூலும் புரளவும் இடையிலே கோவணங் கட்டிக்கொண்டு மாட்டின் பின்னே செல்வார். அவைகளைப் புல்லுள்ள புலங்களில் மேய்ப்பார். நல்ல நீரைப் பருகுவிப்பார். அவை மேயமுடியாத இடங்களி லுள்ள புல்லைப்பறித்தூட்டுவார். அவைகள் அச்சமென் பதே இல்லாமல் அவருடன் பழகின. நிழலிலே வெயில் நேரத்திற் படுத்திருக்கவிடுவார். பால்சுரக்கும் நேரத்தில் அவைகளின் வீட்டிலே கொண்டுவிடுவார். மண்ணியாற்றங் கரையிலும் அதனைச் சூழ்ந்த இடங்களிலும் மேய்த்து

இருட்டுமுன் சமிதையும் விறகும் தலைமேற் சுமந்து கொண்டு அவைகளை ஓட்டிவருவார். இவ்வாறு பல நாட்கள் சென்றன. பசுநிரைகள் பாலை மிகவும் அதிக மாகக் கொடுத்தன ; வளமும் அடைந்தன ; எல்லோரும் மகிழ்ந்தனர்.

## 4. மண்ணியாற்றங்கரை மணலில் இலிங்க வழிபாடு

எல்லா வகையிலும் ஆனிரைகள் மகிழ்ச்சியடைந்தன. இரவும் பகலும் அடிக்கடி பால்சுரந்து பொழியும் நிலையைக் கொண்டன. அவை தம் கன்றை மறந்தாலும் இந்த மறைக் குலக்கன்றை மறவாமல் அவரருகிற் சென்று பால் பொழியத் தொடங்கின. இவற்றின் அன்பினலுருகிய அந்தணச் சிறுவர் அப்பாலை வீணாக்காமல் அரனர் வழிபாட்டுக்குப் பயன்படுத்த நினைத்தார்.

மண்ணியாற்றின் ஒரு மணல் மேட்டிலே, ஆத்திமரத் தின் நிழலிலே, மணலால் இலிங்கமொன் றமைத்தார். பிறகு மணலிலேயே மதிலுங் கோபுரமும் சுற்றுக் கோயி லும் அமைத்தார். ஆத்திமலர், நல்ல தளிர்கள் முதலான, அங்கே கிடைக்கக்கூடிய வழிபடற்குரிய மலர்களை இலைக் கூடையிலே எடுத்துவந்து மணங்கமழ அக்கோயிலின் அருகே வைத்தார்.

புதிய குடங்களை யெடுத்துவந்து, பசுக்களினருகிலே சென்று, பசுவொன்றுக்கு ஒருகாம்பாகத் தொட்டுக் குடத்துள் நிறைத்தார். பசுக்கள இவர் தொடுமுன் பால் சுரந்து மகிழ்வுடன் அளித்தன. அப் பாற்குடங்களைக் கொண்டுவந்து வைத்தார். திருமஞ்சனத்திற்கு வேண்டிய பிற பொருள்களை அன்பினலே நிறைத்துக்கொண்டு, பழம் பிறப்புணர்ச்சி தூண்ட, உடல் புளகமெழப் பாற் குடங்களை யெடுத்து, அன்பினைக் கலந்து இறைவரை ஆட்டினர். வெள்ளை விடையூரும் பெருமானர் சேய் நல்லூர்ப் பிள்ளையாருடைய குடப்பாலோடு அன்பின் பாலிலும் அளவின்றி மூழ்கி மெய்ம்மறந்து அவர் குறிப் பிட்ட திருக்கோயிலிலேயே எழுந்தருளியிருந்தார்.

இவ்வாறு பலநாட்கள் நடைபெற்றன. ஆனிரைகள் இங்கு நண்பகலிலே இறைவர் வழிபாட்டுக்குப் பாலளித்தாலும் சிறிதுங் குறைவின்றி முன்போலவே வீட்டிற்கும் பாலளித்து வந்தன.

## 5. தந்தை தாளோடு பிறவித்தாளையும் எறிதல்

இந்த வழிபாட்டின் நிலையை அறியாத அறிவிலி யொருவன் அவ்வூரந்தணர்களுக்கு அறிவித்தான். அந்தணாளர்கள் எச்சதத்தனை வரவழைத்தனர். அவனும் வந்தான்.

'எச்சதத்தரே! இடையன் அறிவில்லாதவனென்று கூறி, உங்கள மகன்-சிறுபையன்-தான் பசுக்கூட்டத்தை மேய்க்கத் தொடங்கினான். பசுக்களும் நன்றாக மேய்ந்து பால் கொடுத்து வருகின்றன. இஃது உண்மையே எனினும், அவன் செய்யும் திருவிளையாடலை என்னென்பது?

'என்ன செய்துவிட்டான். கூறுங்கள். கண்டிக்கிறேன். உங்களுக்குச் செய்யும் பிழை எனக்குந்தானே?'

'பசுக்களின் பால் ஆகுதிக்குப் பயன்படுமென்றறிவீர்கள். அப் பாலையெலாம் மணலிலே கறந்தூற்றுகிறான்!'

'என்ன? என்ன?'—எச்சதத்தன் நடுங்கினான்.

'மண்ணியாற்றங்கரையிலே மணலில் இலிங்கம் பிடித்துவைத்துக் கறந்தூற்றுகிறான்!'

அந்தணர்கள் உள்ளம் அக்கினிபோலே கொதித்தது. எச்சதத்தன் வணங்கி, 'இதுவரையில் எனக்கிது தெரியாது. ஆகையாற், பெருமனஞ்செய்து பொறுக்க வேண்டும். இனிமேல் நிகழ்ந்தால் என் பிழையாகும்.' என்று வேண்டிக்கொண்டான். மாலையில் ஆனிரையுடன் பிள்ளையார் வந்தார். அவரிடம் ஏதும் பேசாமல் இருந்தான். மறுநாட்காலையிலே, மைந்தர் சென்ற பிறகு பின் தொடர்ந்தான்.

நடுப்பகல் வந்தது ஆனிரைகள் மண்ணியாற்றங் கரையிலே அடைந்தன. எச்சதத்தன் பிள்ளையாருக்குத் தெரியாமல் ஒரு குராமரத்திலேறி மறைந்துகொண்டான். பிள்ளையார் ஆற்றிலே முழுகினார். மணற்கோயிலாக்கி மணலில் இலிங்கஞ்செய்துவைத்தார். மலர் கொய்து வந்தார். குடங்களிலே பால் கறந்தார். மற்றும் வேண்டியவற்றையும் கொண்டுவந்து வைத்துக்கொண்டு வழி படத் தொடங்கினார்.

ஐம்புலன்களும் ஒன்றி அன்பின்வழியிலே உள்ளம் ததும்பிநின்றது. அன்பு மேன்மேலும் பெருகியது. குடத்திலிருந்து பால் வழிகிறதோ, உள்ளத்திலிருந்து அன்பு வழிகிறதோ என எவரும் அறியமுடியாது. சுற்றிலுமிருந்த பொருள்கள் அவர் கண்களுக்கு மறைந்தன. இறைவர் வழிபாட்டிலேயே நிலைத்துநின்றது, அவர் பார்வை! உலகப்பொருள்கள் மறைந்தன! உண்மைப் பொருள்மட்டுந் தெரிந்தது! தம்மையே அறியார் எனலாம்.

எச்சதத்தன் இவ்வழிபாட்டைக் கண்டான்! அவனுந் தன்னை மறந்தான். அவன் அகக்கண் மூடியிருந்தது! சினம் ஒன்றே உள்ளத்தை யிடங்கொண்டெழுந்தது! குராவிலிருந்து குதித்தான். பிள்ளையாரிடம் ஓடினான். கையிலிருந்த பிரம்பினாலே மைந்தரின் முதுகிலே அடித்தான்! வைதான்! ஆனால், அவருடைய உள்ளத்தைச் சிறிதும் தொடவில்லை அடியும் வசைமொழியும்! எனவே, என்ன நடக்கிறதென்பதையே அறியாதவரானார். பெற்ற தந்தையும் பிள்ளையார் செயலின் பெருமையை அப்போதும் அறியானானான்! அவன் சினம் மேலும் வளர்ந்தது. அந்தோ! இழிசெயலாலே கடமையுணர்விலே நின்ற அவன் காலாலே திருமஞ்சனக் குடப்பாலை யிடறினான். தாம் அமைத்துக்கொண்டிருக்கும் வழிபாட்டுப் பொருள்களிலேயே கருத்தூன்றியிருந்த அவருக்குப் பாற்குடத்திற் கேதோ இடையூறு நேர்வதுபோலப் புலப்பட்டது! பக்கத்திற் கையை வைத்தார்! கோல் மழுவாகக் கிடைத்தது! அதை யெடுத்தெறிந்தார்! சிவதண்டஞ் செய்தவன் இரு

தாள்களையும் வெட்டி வீழ்த்தியது! எச்சதத்தன் வீழ்ந் தான்! அந்த நிலையையும் அறியாத விசாரசருமர் இடை யூறு நீங்கியதென்ற அவ்வளவே கருத்திற் புலப்பட, மேலும் வழிபாட்டிலே ஈடுபட்டார்.

## 6. சண்டீசர்

அப்போது வானவெளியிலே பேரொளியொன்று தோன்றியது. அதன் நடுவே, விடைமேல் இடப்பாகத் தெம்பிராட்டியுடன் எம் இறைவர் எழுந்தருளினார். கண் டார் அந்தணச்சிறுவர் கைகுவித்து விழுந்து வணங் கினார். இறைவர் அவரைக் கைகொடுத் தெடுத்தணைத்து உச்சிமோந்து மகிழ்ந்தார்.

"உன் தந்தையை எமக்காக வீழ்த்திவிட்டாய்! இன்று முதல் நாமே உனக்குத் தந்தை!"

இறைவர் அருளிலே முழுகி, அணைப்பிலே பயின்ற பிள்ளையார் திருமெய் சிவமயமாய்ப் பேரின்ப ஒளியாய் விளங்கியது. அவரை அமரர் முதலாமெவரும் அன்பி னோடு வணங்கி வாழ்த்தினர். அமரர் மலர்மாரியிலே சேய் நல்லூர்ப் பிள்ளையார் முழுகினார். அவரன்பிலும் பாலிலும் முழுகிய அரனருளியது:

"நம் தொண்டர் தலைவன் நீ. நாம் சூடுவனவும் உடுப்பனவும் உண்ட கலமும் உனக்கினி உரியவையாகும் படி சண்டீசப்பதம் அளித்தோம்."

தம் திருமுடியிலிருந்த கொன்றை மாலையை எடுத்துப் பிள்ளையார்க்குத் தம் திருக்கையாலே சூட்டினார் இறைவர்! உலகெங்கும் ஒரே ஆரவாரம்! ஒரே மலர் மழை! ஒரே களியாட்டம்! 'சண்டீசர் வாழ்க! சண்டீசர் வாழ்க!!' என்று எங்கும் பரவிய இனிமையான ஒலி!

எச்சதத்தன் தான் செய்த தவறுக்கு தன் மைந்த ராலே தண்டனைபெற்றுத் திருந்திச் சிவலோகமடைந்தான்.

தந்தையின் தாளை வெட்டிய சிறுவர் அந்த உடம்புடன் சிவனார் மகனாராயினர். அடியார் செய்யுந் தவறுந் தவமாம்.

வந்து மிகைசெய் தாதைதாள் மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த வுடம்பு தன்னுடனே அரனார் மகனார் ஆயினார்
இந்த நிலைமை அறிந்தாரார்? ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமாம் அன்றோ சாற்றுங்கால்?
(திருத்—சண்டேசர், ருக)

" மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வேதண்ட டெழுந்த தாதையை மழுவினாலெறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன் "

சுந்தரர் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்

---

# ரு. திருநின்ற சருக்கம்

## உஉ. திருநாவுக்கரசு நாயனர்

### 1. மருள்நீக்கியார்

**திருமுனைப்பாடி நாடு** மண்ணின் துகளன்றி ஒழுக்கத்தின் துகளறியாத குடிவளம் நிறைந்தது. அந்த நாட்டிலே வாய்க்காலெல்லாம் வரால் மீன்கள! கரும்புகளிலெல்லாம் கணுக்களிலொழுகுந் தேன்! வயலெல்லாம் கதிர்நெல்! நிலப்பரப்பெல்லாம் குலைக்கமுகு! பொய்கையெல்லாம் செங்கழுநீர்! மாடிகளினமேலெல்லாம் அகிற்புகை! மனைகளிலெல்லாம் திருந்திய விருந்து! சுந்தரரும் அப்பரும் அவதரித்த திருப்பதிகளையுடைய அந்த நாட்டின் பெருமையை அளந்தறிவார் யார்?

அந்தத் தவம் நிறைந்த நாட்டில், உலகமெங்குஞ் சைவத்தைப் பரப்பிய மேன்மையினுலே திருவளரும ஊர் **திருவாமூர்**. அந்தத் திருநகரிலே வருந்துவன பெண்களின் இடைகளே! ஏங்குவன அவர்கள் காலிலணிந்த நூபுரங்களே! இரங்குவன அவர்களிடையிலுள்ள காஞ்சியே! ஓங்குவன மாடி வீடுகளே! ஒழுகுவன குற்றமற்ற அறங்களே! நீங்குவன தீ நெறிகளே! நெருங்குவன பெருங்குடிகளே! அத்தகைய நகரிலே, ஒழுக்கத்திற் சிறந்த **வேளாண்மரபிலே குறுக்கையர்குடி** சிறப்புடையது. அக்குடியிலே பெருந்தன்மையினுலும், விருந்தளிப்பதினுலும், உறவினராலும் புகழ்பெற்றவர் **புகழனர்**. அவர் வாழ்க்கைத் துணைவியார் மாதருக்குரிய இனிய பண்புகளாலே நிறைந்த **மாதினியார்**.

இவ்விருவருஞ் செய்த தவத்தினுலுஞ் சைவ வுலகத் தவத்தினுலும் ஒரு பெண்ணும் பிள்ளையும் பிறந்தனர். பெண்மகளார் நற்பண்புகளுக்குத் திலகமபோன்ற **திலகவதியார்**. பிள்ளையார் நம் மருளையெல்லாம் போக்கும் அருள் வடிவான **மருள் நீக்கியார்**. மருணீக்கியார் குழவிப்

பருவங்கடந்து கலைமாது காதல்கொள்ளும் பருவமடைந்தார். நன்னாளிலே புகழனார் தம் புண்ணிய மைந்தர்க்குக் கலைமகளின் கையைப் பிடித்துக்கொடுத்தார். இருவர் காதலும் இன்பத்தேன் பொழிந்து வளர்ந்தது.

## 2. திலகவதியார் திருத்தவம்

திலகவதியார் மங்கைப்பருவம் அடைந்தார். அவரை ஒருவருக்குத் திருமணம்புரிந்து கொடுக்கப் புகழனார் விரும்பினார். அந்த மணப்பிள்ளையார் இவருக்குச் சமமான வேளாளர் தலைவர்; செஞ்சடை யண்ணலார் திருவடிப் பற்றுடையார்; அரசன்பா லன்புடையார்; போர்த் தொழிலிற் சிங்கம்போன்றார்; படைத்தலைவர்; காணத் தகும் பேரழகர்; கலியை மாற்றும் கலிப்பகையார் என்னும் பெயரினர்.

திருமணத்திற்கு முடிவுசெய்தனர். இந்தத் திருமணம் நிகழுமுன் வேறொரு திருமணம் நேர்ந்தது. போர்மகளை மணக்கவேண்டிய அரசாணை பிறந்தது. வடநாட்டின் மேற் போர் தொடுக்கக் கலிப்பகையார் சென்றார். நீண்ட நாள் போர் செய்யவேண்டியதாயிற்று. இந்த நிலையிலே புகழனார் தம் புகழுடம்பைமட்டும் நிறுத்திப் புலாலுடம்பை விட்டுப் பொங்கரவணிந்த புண்ணியனாரடி யடைந்தார்.

அந்தோ! புகழனாருடன் மனைவியாருங் கண்ணுதலார் திருவடிநீழலைக் கண்டுகொண்டார்! உலகறியாச் சிறுவரிவரும் ஒன்றுந்தோன்றாது திகைத்தனர்! கலங்கினர்! இந்த இடிக்குமேல் வேறொரு பேரிடியும் வந்து தாக்கியது! போருக்குச்சென்ற கலிப்பகையாரும் வீரருலகத்தை மேவினார். இவ்வாறு கலிப்பகையார் அரசனுக்காக உயிர் கொடுத்துப் புகழ்கொண்டதைத் திலகவதியாரும் கேட்டார்.

"எந்தையும் எம் அன்னையும் அவருக்கே எனைக் கொடுக்க இசைந்த ... ஆதலால், அவருக்கே நான் உரி

யேன். எனவே, இவ்வுயிரை அவருயிரோடு கலக்கச்செய் வேன்.''

இவ்வாறு தமக்கையார் துணிந்ததைத் தம்பியார் கேள்வியுற்றார். ஓடிவந்து அவர் திருவடியில் விழுந்தார்; வாய்விட்டுக் கதறி யழுதார்.

"அன்னையும் அத்தனும் அகன்றபின் எனக்குத் தாங்களே அவர்கள். தங்களாலேயே உயிர் சுமந்துள் ளேன். என்னைக் கைவிட்டால் தாங்கள் உயிர்விடும் முன் னமே யான் உயிர் விடுவேன்.''

தம்பியார் வாழவேண்டும் என்னும் அருள் உண்டா யிற்று. ஆகவே, உயிரைத் தாங்கினார். அனைத்துயிர்க்கும் அருள் தாங்கினார். அணிகலன்களை நீக்கினார். மனைத்தவம் புரியும் மனவுறுதிகொண்டார் திலகவதியார்.

மருணீக்கியார் மனக்கவலை நீங்கினார். உலக நிலையாமை யுணர்ந்து, அறங்களிலே ஆவல்கொண்டார். தண்ணீர்ப் பந்தல்களும் அறவிடுதிகளும் அமைத்தார்; நீர்நிலைகளெடுத் தார்; விருந்தினரை உண்பித்தார்; புலவரைப் போற்றினார்; வறியவரைச் செல்வராக்கினார். இவ்வாறு வாழ்ந்துவரும் நாளில் சைவசமய உண்மையைச் சரியாக உணரும் அருள் கிடையாமற் சமண நெறியிலே கால் வைத்தார்.

## 3. தருமசேனர்—சூலை நோய்

மருணீக்கியார் பாடலிபுத்திரம் என்னும் நகரை யடைந்து சமண் பள்ளியைச் சார்ந்தார். அவர்களோடு சமண நூல்களை யாராய்ந்து வீட்டையும் நெறி சமண நெறியே யென்று நினைத்துக்கொண்டார்; கடைப்பிடித் தார். மேலும் சமணக்கலைகளைக் கற்றுத்தேர்ந்தார். சிறந்த புலமைபெற்ற அவரைச் சமணர் பாராட்டினர். தருமசேன ரெனும் பட்டப்பெயரும் பண்புடன் அளித்தனர். அவரும் புத்தரைவென்று சிறப்புப்பெற்றார்.

திலகவதியார் சுற்றப்பற்றை விட்டுத் தூயநெறியாகிய சைவப்பற்றிலே சிந்தையைச் செலுத்தினார். பின்னுகனார்

பொன்மலர்த்தாளிலே அன்புமிக வைத்தார். திருக்கெடிலத்தின் வடகரையிலுள்ள திருவதிகைப்பதியிலே திருவீரட்டானம் என்னும் கோயிலை அடைந்தார். செம்பவள வண்ணரைப் பணிந்தார். சைவ அடையாளங்களைத் தாங்கினார். திருக்கோயிலுக்குத் தொண்டுசெய்யத் தொடங்கினார்.

விடிவதன்முன் திருவலகிடுவார்; மெழுகுவார்; கோலமிடுவார்; மலர் கொண்டுவந்து மாலைதொடுப்பார். இவை போன்ற பிற திருப்பணிகளும் புரிவார். இவ்வாறு பரமனார் திருவடிப்பற்றன்றி வேறு பற்றில்லாத தூய அன்புடன் திருப்பணி புரிந்தாலும் மனக்கவலை யொன்றுவந்து வந்து துன்புறுத்தியது. யாருக்காகத் தம்முடலைத் தாங்கினாரோ அவர்—உடன் பிறந்த தம்பியார்—சைவசமயத்துக்குப் புறம்பான சமணசமயத்திலே படிந்துவிட்டதை யெண்ணி யெண்ணி யேங்கினார். ஒவ்வொரு நாளும் உமையொரு பாகரிடம் முறையிடுவார்.

இறைவர் அவர் கனவிலே யெழுந்தருளினார்.

"கவலையை விடு. உன் தம்பி முற்பிறப்பிலே முனிவனாகி எம்மையடையத் தவம் புரிந்தவன், அவனைச் சூலை நோயாலே தடுத்தாட் கொள்வோம்."

திலகவதியார் மேற்கூறியவாறு வீரட்டானர் அருளியதற்குப பெருமகிழ்வுகொண்டு கைகுவித்துக் கண்ணுதலை வாழ்த்தினார். தருமசேனரைச் சூலைநோய் பற்றியது. வடவைத்தீயுங் கொடிய நஞ்சும் வச்சிரப் படையும்போல்—இவை ஒன்று சேர்ந்தாறபோல்—குடலைப்பற்றி வருத்தியது அந்த நோய். தருமசேனர் நடுங்கி, வருந்திச் சோர்ந்து வீழ்ந்தார். பிறகு, தாம் கற்ற சமண நூல்களிலுள்ள மந்திரங்களாற் றடுத்தார். தடுக்கத் தடுக்கப் பாம்பின் நஞ்சு தலைக்கேறுவதுபோல அதிகரித்தது. சமணர் அறிந்து ஓடிவந்து கவலையுடன் சூழ்ந்தனர். குண்டிகை நீரை மந்திரித்துக் கொடுத்தனர்; மயிற்பீலிகொண்டு தலைமுதற் காலளவுந் தடவினர். என் செய்தும் நோய் மிகுந்

தது. எனவே, என் செய்வதென் றறியாமற் கலங்கிக் கைவிட்டனர்!

4. திருவதிகையடைதல்—திருநாவுக்கரசராதல்

திருநாவுக்கரசர் வேறு வழியின்மையுணர்ந்து, சமையற்காரனைத் தமக்கையாரிடம் சென்று கூறச் செலுத்தினர். அவனைத் திருக்கோயிலுக்கு வெளியே கண்ட திலகவதியார் என்னென்று வினவினர்.

'சூலைநோய் கொல்லாமல் வருத்துகிறது. சமணர்கள் கைவிட்டனர். தங்களைக் கண்டு உய்யும் நெறியறிந்து விடியுமுன் வரும்படி என்னை அனுப்பினர் தங்கள் தம்பியார்.'

தமக்கையார் அதுகேட்டுக் கலங்கினர். எனினும், அங்கே எப்படிச் செல்வதென்று திகைத்தார். முடிவில், சமணர் வசிக்கும் அங்கே 'உன்னுடன் என்னால் வரமுடியாது!' என்று கூறிவிட்டார். அவனும் அவ்வாறே சென்று கூறினன். தருமசேனர் தயங்கினர். எனினும், ஒருவாறு துணிந்து, வெள்ளாடையணிந்து இரவிலே ஒருவரைத் துணையாகக்கொண்டு, அவர் தோளைப்பற்றி, மறைவழியே மெதுவாகச் சென்று, திருவதிகையைச் சேர்ந்தார். திலகவதியா ரடிமலரில் வணங்கினர்.

"நம் குலக்கொழுந்தே! தாங்கள் எனக்குற்ற இந்தக் கொடிய சூலை விலக வழிகூறவேண்டும்."

தம்பியார் நிலை கண்டு தமக்கையார் நிலைதளர்ந்தார். பிறகு, 'எழுந்திருப்பீர்! சமணநெறி சார்ந்ததால் வந்த தீங்கு இது! கண்ணுதலையே வணங்கி வேண்டிக்கொண்டால் நலமுண்டாகும்,' என்று கூறினர். தருமசேனர் அதற்கிணங்கினர். திலகவதியார் திருவாளன் திருநீற்றை அஞ்செழுத்தோதிக் கொடுத்தருளினர். உலகுய்யவந்த மருணீக்கியார் சைவசமயந் தழைக்க அதனை யேற்றணிந்தார். பிறகு, தமக்கையாருடன் திருவீரட்டானத்தையடைந்தார்.

அப்போது திருநீறணிந்த தருமசேனர் மனத்திருளும் இரவின் இருளும நீங்கின. திருப்பள்ளி யெழுச்சிக்குரிய நேரமென்றறிந்த திலகவதியார் திருவலகும், சாணமும், கயிறுந் தோண்டியும் எடுத்துச் சென்று, நீராடிக கோயிலைத் தூய்மை செய்தார். தம்பியாரோ கோயிலை வலம் வந்து வணங்கித் திருமுன் நின்றார் அப்போது திருவருளால் பைந்தமிழ்ப் பாமாலைகள் சாத்தும் உணர்வு உண்டாகியது திருவெண்ணீறணிந்த மெய்யும் அன்பு வழியும் உள்ளமும் உடையவராய்க், '**கூற்றாயினவாறு விலக்ககிலீர்**' என்னுந் திருப்பதிகத்தைத் தம சூலை நோயும் உலகுக்குள்ள அறியாமை நோயும் விலகும்படி பாடி யருளினார். பதிகம் முடிந்தவுடன் சூலைநோயும முடிந்தது! மருள்நீக்கியார் மகிழ்ந்தார். 'அடியேன் உயிரையும் அருளையும் பெற்றேன்!' என்று இறைவர் அருட்கடலில் மூழ்கினார்.

மெய்ம்முழுதும் புளகமடைந்தார். கண்கள் இன்ப அருவி பொழிந்தன. புவியில் விழுந்து வணங்கினார்; எழுந்தார். 'அடியேன் செய் பிழையால் உண்டான அருந்துன்பக் காட்டைக் கடககத் தங்கள் பேரருளை உதவினீர்கள். அறியாமையாலே புறச்சமயக் காட்டிலே புகுந் தலைந்தேன். அதிலிருந்து வெளியேறத் துணைபுரிந்த சூலை நோய்க்குக் கைம்மா றென்ன காண்பேன்?' என்று கைகுவித்துப் பலமுறையும் வணங்கினார்.

* மேவுற்றஇவ் வேலையில் நீடியசீர் வீரட்டம்
அமர்ந்த பிரானருளால்
'பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளப் பதிகத்தொடை
பாடிய பான்மையினால்
நாவுக்கர சென்றுல கேழினும்நின் நன்னாமம்
நயப்புற மன்னுக' என்(று)
யாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா
னிடையேயொரு வாய்மையெழுந்ததுவே.

(திருத்—திருநாவுக்கரசர், எசு)

அப்போது வீரட்டனாரருளாலே, வானிடையே, 'இன்சொல் வளம் பொருந்திய தமிழ்த்தொடை பாடிய தன்மை

யாலே 'திருநாவுக்கரசு' என்னும் பெயர் எங்கும் வழங்குக!' என்றொரு திருமொழி யெழுந்தது.

அதுகேட்ட ஆளுடைய அரசர், 'இதுவரையிலே தீவினையிற் சென்ற எளியேன் பெருந்திருவோ இது? இறைவரருளை யென்னென்பேன். இராவணன் கயிலையை யெடுக்க முனைந்தபோது, அவன் ஆணவத்தையடக்கி இசைப்பாடல்கொண்டு அருள்செய்த திறம்போன்றது அடியேனை யாட்கொண்ட திறம். ஆகையால், என் பாக்களிலே அவனுக் கருள்செய்த திறத்தை யமைத்துப் பாடுவேன்' என்று துணிந்தார். திலகவதியாரடைந்த மகிழ்வைச் செப்புவ தெப்படி?

அரசு இவ்வாறு அருள்பெற்றதனை அறிந்த அடியார் கூட்டம் 'உலகுய்ந்தது,' என்று ஆரவாரித்துக் கூடிவந்து வணங்கியது. பலவகை முரசுகள ஒலித்தன. அன்று முதல் நாவுக்கரசர் சைவத்திருவேடத்துடன் அரனுரடி மறவாத உள்ளமும், அன்பு ததும்பியெழுந் திருவாசகமும், திருத்தொண்டுசெய்யக் கையைவிட்டகலாத உழவாரப் படையும் உடையவராய்த் திகழ்ந்தார்.

## 5 சமணச் சூழல்

திருநாவுக்கரசரடைந்த சிறப்பினைப் பாடலிபுரத்திலுள்ள சமணர்கள் செவியேற்றனர்; தலையும் பீலியுந் தாழவந்து ஓரிடத்திற் கூடினர். 'தமக்கையார் சைவத்திலிருப்பதனாலே தம்பியாருஞ் சைவத்திற் புகுந்தார். இது நம் சமயத்திற் கிழிவாகும். இப்படியே இருந்துவிட்டாலரசனுஞ் சைவனாகுவான். அப்புறம் நம் சமயமேது? இதை எப்படியாவது தடுக்க வேண்டும்,' என்று சிந்தித்தனர். முடிவிலே, தருமசேனர் தமக்குச் சூலைநோ யென்று சாக்குக் காட்டித் தமக்கையாருடன் சேர்ந்து கொள்ளச் சைவரானார். இது சமயத்துரோகமும் தெய்வ நிந்தனையும் ஆகும்!' என்று அரசனிடம் அறைவதென்று முடிவு செய்தனர்.

அப்போதே எல்லோரும் அரசனிடஞ் சென்றனர். அவன் இவர்களை வரவேற்று வணங்கினன். அவர்கள் முகம் வாடியிருந்ததைக் கண்டு கவலைகொண்டான்.

'என்ன நடந்தது?'

'தருமசேனர் பிணியென்று போக்குக் காட்டிச் சைவ ராகிவிட்டார். இதனால், நம் சமய அழிவு செய்தாரானர்.'

அரசன் உள்ளம் அனல் கொண்டது. அங்கந்துடித்தது. சொற்கள் சுட்டன.

'தவப்பெரியோர்களே! நம் நெறியைவிட்டு விலகுவதும் பிழை அப்படி விலகினாலும் விலகியொழியட்டும். நம் சமயத்திற்குக் குறைகாட்டிச்—சூலைநோய் நீங்கவில்லையெனுஞ்சொல் காட்டிச்—செல்வதா? இது பெரும்பிழை. என்ன செய்யவேண்டும் என்பதைச் சொல்லுங்கள்.'

'தலைமை பெற்ற நம் சமண சமயத்தை யழித்து, அரசியல் வரம்பையும் அழித்த அவரைப் பலவகையிலும் அலைத்தல் வேண்டும்.'

அரசன் ஒப்புக்கொண்டான். அமைச்சரை நோக்கினன். 'தருமசேனனை ஆட்களைவிட்டுப் பிடித்துக்கொண்டு வருக. பொருள்பெற்று விட்டுவிடப் போகிறீர்கள்?' என்று ஆணையிட்டான். அமைச்சர்களும் அவ்வாறே படைவீரர் சூழத் திருவதிகை சேர்ந்தனர். அரசை யடைந்து அரசனாணையைக் கூறினர்.

சிவனார் திருவடி நீழலிலே, திருவருள் வெள்ளத்திலே முழுகித் தம்மை மறந்திருக்கும் ஆளுடைய அரசு இதனைக் கேட்டு நகைத்தார் இறைவர் திருவடியை நினைந்துருகி, '**நாமார்க்குங் குடியல்லோம்,**' என்று தொடங்குந் திருத்தாண்டகம் பாடிச் சிந்தை கனிந்து நின்றார். அமைச்சர் அவர் பேரன்பு நிலைகண்டு பெரிதும் அஞ்சினர். எனினும், அரசனாணையை நிறைவேற்றுங் கடமையுணர்வால் அவரை வணங்கி அழைத்தனர். அவரும், 'அரனடித் துணையிருக்க அச்சம் இலை,' என்று துணிந்து சென்றனர்; பாடலி

புத்திரம் அடைந்தனர்; அரசனிடம் அமைச்சர் அறிவித்தனர்.

அரசன் அருகிருந்த அமணர் குழுவை நோக்கினான். அவர்கள், 'சிறிதும இரக்கமின்றி நீற்றறையி லிடுங்கள!' என்றனர்! என்னென்பது? அமைச்சர்களை நோக்கி, 'அவ்வாறே செய்க!' என்றான் அரசன். அவர்களும் அனல் வீசும் நீற்றறையினுள் விட்டுத் தாழிட்டனர! காவலும வைத்தனர்! எனினும், பிறையணிந்த பேரருளாளர் அருளுக்குக் காவலிட அவர்களால ஆகவில்லை அரசு, 'ஈசனாரடியார்க் கேது துயர்?' என நினைந்து, ஆனந்தக் கூத்தரடி மலர் நீழலையே அன்புடன் துணையெனக் கொண்டிருந்தார். அந்த வெப்ப நீற்றறை இளவேனிற் பருவத்திலே தென்றல் தவழுந் தண்ணீர்க்குளம் போலாகியிருந்தது! ஒளி மிகுந்த நிலவாகியது! யாழொலி யாகியது!! அரனாரடி நீழலே யாகிக் குளிர்ந்தது!!!

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண் தென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதாய்
ஐயர்திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே.

(திருத்—திருநாவுக்கரசர், கூஅ)

திருநாவுக்கரசர் சிறிதுங் கவலையின்றிப் பிறையும் புனலும் பெருகிய சடையாரைப்—பேச இனியாரை—உடைகாளும் பிஞ்ஞகரை—எம் இறைவரை—எவ்வுயிரையுங் காப்பாரை—ஆராவமுதரை—யெண்ணியின் புற்றிருந்தார்.

ஏழுநாள் கழிந்தபின், அரசன் அமணரை யழைத்து நீற்றறையைத் திறந்து பாருங்களென்றான் அவர்களுந் திறந்து, ஆனந்த வெள்ளத்திலே முழுகி, இறைவர் அருளமுதைப் பருகி, நலமுடனிருக்கும் அண்ணலைக் கண்டார்கள்; திடுக்கிட்டனர்! 'இஃது என்ன வியப்பு?' என மருண்டு கத்துடன் மொழிந்தனர். பிறகு, ஒன்று கூடிச் சிந்தித்து அரசனிடம் சென்று, 'நம் சமய மந்திரத்தாற் பிழைத்திருக்கிறான். இனி நஞ்சையே கொடுக்கவேண்டும்,' என்று

நடுக்கமின்றிக் கூறினர். அவனும் ஒப்புக்கொண்டான். உடனே நஞ்சு கலந்த பாற்சோற்றைப் பரமனடியார்க்குப் படைத்தனர். 'எங்கள் நாதரடியார்க்கு நஞ்சும் அமுதாம்,' என மொழிந்து அவ்வுணவை யுண்டு கெடுதியின்றி யிருந்தனர்! வெண்ணீறணிந்த விமலர்க்குப் பாற்கடலிற் பொங்கி யெழுந்த நஞ்சு அமுதாகும்போது, அவரடியார்க்குமட்டும் ஆகாதோ?

கண்ட சமணர் கலங்கினர் காவலனிடஞ் சென்று, 'முன்னைய நம் சமயமந்திரத்தா லிப்போதும் பிழைத்தான். அவனிறவாவிட்டால், எம் உயிரும்போம், உம அரசும் போம்! இது துணிவு,' என்று குழறினர். அரசன் அஞ்சி, 'என்செய வேண்டும்?' என்றான். 'மதயானைமுன் விட்டு மாளச்செய்வதே வகையாகும்,' என்று சமணத் துறவிகள் சாற்றினர். அரசனும, 'அவ்வாறே ஆகுக,' என்றான்

கொலைக்களிறு குன்றுபோற் புறப்பட்டது தன்னைக் கட்டியிருந்த சங்கிலிகளைத் தகர்த்தது! மண்டபங்களை யிடித்தது! குத்துக்கோற்காரர் குலைந்தோட விரட்டியது! அசையும் உலக்கைபோன்ற துதிக்கையை வீசிக்கொண்டு பிளிறியது! அதன் இடிபோன்ற ஒலியால் திசைகள் எதிரொலித்தன! அடிவைக்கும்போது புவியதிர்ந்தது! காற்றின் வேகமும் அழலின் சினமும்கொண்டு கடல் பொங்குவதைப்போல அது வந்தது. கண்டோர் நடுங்கி யோடினர். பாகர் அதனை நாவுக்கரச ரெதிரே நடத்தினர். அதனைக் கண்ட அரசு சிறிதும் அஞ்சாமல், 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்,' என்று தொடங்கிக், 'கெடில வீரட்டர் தம் அடியோம நாம் அஞ்சுவதில்லை,' என்று பாடி யிருந்தார். அவர் நிலையைக் கண்ட களிறு அஞ்சியது. அவரைச் சுற்றி வலமாக வந்து, அவரெதிரே நிலத்தில் தாழ்ந்து வணங்கியது. பிறகு, விலகி அப்புறஞ் சென்றது. பாகர் அதுகண்டு வியந்தாரேனும் அரசனைக்கஞ்சித் திரும்பவும் அவர்மேல் அதைத் திருப்பினர். உடனே யானை சினங்கொண்டு துதிக்கையாற் பாகர்களை யெடுத்தடித்துக் கொன்று, சமணர்களையுங் குலைந்தோடச்

செய்து, கொன்று குவித்தது. சமணக்கடலைக் கலக்கும் மந்தரகிரிபோலக் காணப்பட்டது அவ் வேழம்.

## 6. கரையேற்றம்

தப்பிய சமணர்கள் ஒன்றுகூடித் தங்களரசன் அடியிலே விழுந்து அலறினார்கள். அரசனும் வழக்கம்போல, 'மேலே செய்யக்கூடியது என்ன?' என்றான். 'கல்லுடன் கட்டிக் கடலிற் பாய்ச்சுவோம்,' என்று கலங்கிக் கூறினார்கள் சமணர்கள். 'அவ்வாறே செய்தால் அழலுடன் புகையகல்வதைப்போல, அரசுடன் துயருமபோம்,' என்றனர். மேலும் அரசனும் நன்றென்று கூறிக் கொலையாளிகளைக் கூப்பிட்டான். தருமசேனரைக் கல்லிற் கட்டிக் கடலில் வீழ்த்துங்கள்!' என்று ஆணையிட்டான். அவர்களும் அவ்வாறே செய்து முடித்தனர் ஆளுடைய அரசரோ 'எப்படியாயினும இறைவரைத் துதிப்பேன்,' என்று அஞ்செழுத்தையும் புணையாக வேண்டிப் பாடினார். 'சொற்றுணை' எனத் தொடங்கி, 'நற்றுணையாவது நமச்சிவாயவே,' என்று பாடினார்! 'என்னே இறைவரருள்! கடலின் நடுவிலே கல்மிதந்தது! அரசைக் கட்டியிருந்த கயிறுகள் விலகின. கல்லே தெப்பமாகியது. கல்லின்மேற் கண்ணுதலாரடியார் வீற்றிருந்தார்.

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?

(திருத்—திருநாவுக்கரசர், கஉக.)

நல்வினை தீவினைகளாகிய இருவகைக் கயிறுகளாலும் மும்மலக் கல்லுடன் சேர்த்துக் கட்டப்பெற்றுப் பிறவிக் கடலிலே வீழும் மக்களைக் கரையேற்றும் அஞ்செழுத்து நம் அரசை இந்தக் கருங்கடலிலிருந்து—ஒரு கலலின் கட்டிலிருந்து நீக்குதலைச் சொல்ல வேண்டுமோ? இவ்வாறு சோர்வை நீக்கிக் காக்கும் அஞ்செழுத்தின் துணையினாலே,

கடலிற் கல்லாகிய சிவிகையின்மேற் செல்லும் அடியாரை வருணன் தன் திரைக்கரங்களாலே தாங்க, முன் என்ன தவம் புரிந்தனனோ? அவன் அவரை எவ்விதக் குறையு மின்றிச் சுமந்து சென்று திருப்பாதிரிப்புலியூர்க் கருகிலே சேர்த்தனன். கரையின்மேலேறினார் நாவுக்கரசர்; கை குவித்துக் கண்ணுதலாரை வணங்கினார். சமணச் சூழலி லிருந்து விடுவித்த பேரருளை நினைந்து நினைந்து கனிந்து போற்றினார். அங்குள்ள அடியார்களெல்லோரும் வந்து, வியப்புடன் அவரை வணங்கி, 'அர' 'அர!' என ஆரவாரித் தனர். கடலின் ஆரவாரமும் அவர்களாரவாரத்துடன் போட்டியிட்டது.

அப்போது ஆளுடைய வரசர், அடியாருடன் சென்று திருப்பாதிரிப்புலியூர்த் திங்கள் முடியார்த் திருமுன்பு பணிந் தெழுந்து, தோன்றாத் துணையாயிருந்தருளிய தூய அருளை நினைந்து நினைந்து நெகிழ்ந்து 'ஈன்றாளுமாய்,' எனத் தொடங்கித் 'தோன்றாத் துணையாயிருந்தனன் தன் அடியோங் களுக்கே' எனப் பாடிப் பரவினார் திருவதிகை செல்ல வேண்டுமென்னும் பேரன்பினால், வழியிலுள்ள திருமாணி குழி, திருத்தினைநகர், என்னுந் திருப்பதிகளை வணங்கினார். திருக்கெடிலத்தைக் கடந்து திருவதிகையை நெருங்கினார்.

திருவதிகைமக்கள் வாக்கரசர் வருவதையறிந்து மகிழ்ந்தனர். சமணச்சூழலிலிருந்து தப்பிவரும் அவரை யெதிர்கொள்ள நகரணி செய்தனர்; நீண்ட தோரணங் களும் வாழையுங் கமுகும் வீடுதோறுங் கட்டி, எழுநிலைக் கோபுரங்களிலும் மேடைகளிலும் ஒளிவீசும் மணிமாலை களைத் தொங்கவிட்டு நிறைகுடங்களை அமைத்தனர். தெருக்களிலே நறுமணப் பொடிகளையும் மலர்களையும் பொரிகளையுந் தூவினர்; மங்கல இயங்கள் ஒலிக்க எதிர் கொண்டனர்; தூய வெண்ணீறிலங்குந் திருமேனியும், தாழ்வடமும், இறைவர் திருவடிகளைத் தழுவிய உள்ளமும், உருகிப் பெருகும் அன்புநீர் வழியுந் திருக்கண்களும், திருப்பதிகச் செஞ்சொல் மலருந் திருவாயுமாக வரும் ஆளுடைய அரசைக் கண்டனர்.

அடியார்களின் கைகள் தலைமேற் குவிந்தன. 'இந்த அருள்வடிவத்தைக் கண்டும் தீமைசெய்யு மெண்ணம் சமணர்க் கெப்படி யுண்டாகியது?' என்று கலங்கியவர்களாய், அரசின் அடிமலர்களிலே விழுந்து வணங்கினர்; அரசுக் கருள்செய்த அண்ணலைத் தொழுது வாழ்த்தினர். வாக்கரசர் வெண்ணீற் றொளிபரவிய திருத்தொண்டருடன் பவளச்செவ்வண்ணர் வீற்றிருக்குந் திருக்கோயிலை யடைந்தார். திருமுன் சென்று விழுந்து வணங்கி யெழுந்தார். 'வெறிவிரவு கூவிளம்,' என்னுந் திருத்தாண்டகத்தை யெடுத்து, 'எம்பெருமான்றனை யேழைபோன் நான்பண்டிகழ்ந்த வாறே,' என்று பாடி வணங்கினார். அங்கேயே உழவாரப் பணிசெய்துகொண்டு சிலநாள் எழுந்தருளியிருந்தார்.

## 7. சமணப் பல்லவன் சைவனாதல்

இவற்றையெல்லாம் பல்லவ அரசன் கேள்வியுற்றான். அவனுடைய நல்லூழ் கூடியதால், திருவதிகை வந்து, ஆளுடைய அரசை வணங்கித் திருவெண்ணீறு பெற்றணிந்து சைவனானான். திருவதிகையிலே தன் பேராலே குணதரவீச்சுரம் என்னுந் திருக்கோயிலெடுத்துக் கண்ணுதலை வணங்கினான்.

## 8. விடைப்பொறியும் சூலப்பொறியும்

வாக்கின்மன்னர் மழவிடையூர்தியார் எழுந்தருளியிருக்கும் வரம்பிலாத் திருப்பதிகளையும் வணங்க எண்ணினார். அருகிலுள்ள திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலான திருவூர்களை வணங்கிக் கொண்டு திருப்பெண்ணாகடத்தைச் சேர்ந்தார் அங்குத் திருத்தூங்கானைமாடத் தெழுந்தருளியிருக்கும் இறைவரை வணங்கிச் 'சமணர் குழுவிலே—சமண நெறியிலே—தோய்ந்த இம்மெய்யுடன் வாழ விரும்புகிலேன். தங்களுடைய அடையாளம் என் மெய்யிலே இட்டால் வாழ்வேன்,' என்று 'பொன்னார் திருவடிக்கு,' என்னுந் திருவிருத்

தம் பாடிப் பரவினர். அப்போது, ஒருவரும் அறியாவண்ணம் ஒரு பூதம வந்து வாகீசர் திருத்தோளிலே, 'பூவிலைச் சூலப்பொறியும் விடைப்பொறியும்,' இட்டது. அவற்றைக் கண்டு பெருமகிழ்வுடன் விழுந்து பணிந்து 'உய்ந்தேன்,' என எழுந்தார். அங்குச் சிலநாள்வரையிலே திருத்தொண்டு செய்து வந்தார்.

## 9. தில்லை வணக்கம்

அங்கிருந்து திருவரத்துறை, திருமுதுகுன்றம் முதலான திருவூர்களை வணங்கிக்கொண்டு திருததில்லையை நெருங்கினா. அப்போது அவருள்ளம இன்பக்கூத்தாடும் இறைவர் திருவடியிலே பதிந்துநின்றது. கழனிகளையும் நந்தவனங்களையுங் கடந்து சென்றார். பொழில்களிலே குயில்கள், 'இருவினைப் பாசமும் நீங்கும்; வாருங்கள்,' என்பனபோலக் கூவுவதைக்கேட்டு மகிழ்ந்தார் கிளிகளும் பூவைகளும், 'தமிழிறைவர் வருகின்றார்; இவர் திருவடிவு காணக்காண வியப்பைத் தருகின்றது,' என்றும, 'அர! அர!!' என்றும், 'சிவ! சிவ!!' என்றும் எதிர்கொண்டு வாழ்த்துவதைக்கண்டு வியந்தார். அங்குள்ள காட்சிகளெல்லாம பேரின்பக்கூத்தர் திருக்கூத்தாகவே காணக் கைகுவித்துச் சென்று மேலைமதில் வாயிலை அடைந்தார்.

அங்குள்ள அடியார்கள்—'தில்லைவாழந்தணர்கள்—நாவுக்கரசரை யெதிர்கொண்டு வணங்கி, அழைத்துச்சென்றனர். அவர்களோடு 'சிவமே நிலவிய,' தில்லைத் தெருக்களிலே சென்றார்; மறையொலியும் முனிவர்வாழ்த்தொலியும் நிறைந்து மெய்சிலிர்க்கும் இன்பத்தை யுண்டாக்கும் ஏழ்நிலைக் கோபுரவாயிலையடைந்தார்; படிமிசை விழுந்து பணிந்தார்; அடியாருடன் திருக்கோயிலினுள் நுழைந்து, பொன்மன்றை வலம்வந்தார்; பொற்பேரவையைக் கண்டார்; இதுவரையிலே அடையாத பெருங்காதலுண்டாயிற்று; கைகள் தலைமிசைக் குவிந்தன. கண்கள் அன்புநீரை யிடைவிடாது பொழிந்தன; கரணங்கள் ஒன்றி

யுருகின ; மெய் தரைமேல் விழுவதும் எழுவதுமாயிருந்தது ; அவர் பெற்ற ஆர்வத்தை அளவிடல் இயலாது?

"கையுந் தலைமிசை புனையஞ் சலியன ;
  கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன ; கரணங் களுமுடன்
  உருகும் பரிவின ; பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன்
  பெழுதரும் மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடுமவர்
  ஆர்வம் பெருகுதல் அளவின்றால்."

(திருத்—திருநாவுக்கரசர், ககுஎ)

தில்லைக்கூத்தர் திருநோக்கம் 'என்றுவந்தாய்?' என்பதுபோல அவருள்ளத்திலே உவகையை யூட்டியதாகையால் அதனைத் தாம் பாடிய 'கருநட்டகண்டனை,' என்னுந் திருவிருத்தத்திலமைத்துப் பாடினார். ஆர்வம் அடங்காமையால் மேலும், 'பத்தனாய்ப் பாடமாட்டேன்,' என்னுந் திருநேரிசையையும் பாடினார். சிலநாள்வரை அங்கே தங்கித் தம் உழவாரப் பணியைச் செய்துகொண்டிருந்தார். அப்போது 'அன்னம்பாலிக்குந் தில்லைச்சிற்றம்பலம்,' என்னுந் திருக்குறுந்தொகை பாடினார். அங்கிருந்து திருவேட்களம், திருக்கழிப்பாலை என்னுந் திருப்பதிகளை வணங்கிக்கொண்டு திரும்பவும் திருத்தில்லையை நோக்கித் திரும்பினார். வரும்போதே, 'பனைக்கை மும்மத வேழ முரித்தவன்,' என்னுந் திருக்குறுந்தொகை பாடிக்கொண்டு பொன்னம்பலத்திற் புகுந்தார். புகும்போதே மேலும் மேலும் வளர்கின்ற பெருங்காதலாலே, 'அரியானை,' யென்னுந் திருத்தாண்டகத்தைப் பாடிக்கொண்டு சென்றார்; மேலும் 'செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்கும்,' என்னுந் திருநேரிசையையும் பாடி வணங்கினார். வியப்புத்தரும் பேரின்பத் தமிழ்மாலைகள் பாடுவதும் அன்புருவான நெஞ்சுருகக் கண்ணீர் பெருகுவதுமாகி வாய்நிறைந்த தமிழ்ப்பாடலுடன் உழவாரப் பணிசெய்துகொண்டு, மேலுஞ் சிலநாள் அங்கே தங்கியிருந்தனர்.

## 10. காழியில் காழிப்பிள்ளையார் கலப்பு

அங்ஙன மெழுந்தருளியிருக்கும் நாளிற், சீர்காழியிலே திருஞானசம்பந்தப் பிள்ளையார் அம்பிகை தன் திருமுலைப்பாலோடு சிவஞானத்தையுங் குழைத்தூட்ட உண்டு, செந்தமிழ்ப் பாமாலையாலே திருத்தோணியப்பரைச் சுட்டிக் காட்டிய சிறப்பைக் கேள்வியுற்றார். உடனே, அப்பிள்ளையாரைக் காணுங் காதல் மிகுந்ததனால், அம்பலத்தாடு மரசரைப் பணிந்து, திருவீதியிற் புரண்டு வலம்வந்து எழுந்து, திருவெல்லையை வணங்கிச் சீர்காழியை நோக்கிச்சென்றார். அடியார் கூட்டம் பின்தொடரத் **திருநாரையூர்** சிவனார் திருமலர்த்தா ளிறைஞ்சிக் காழியெல்லையைக் கண்டார்.

கண்டவர்கள் கரைந்துருகும்படி திருவருள் நோக்கத்துடன், சூலையாலே இறைவரால் தடுத்தாட்கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசர் எழுந்தருள்வதைக் காழிப்பிள்ளையார் கேள்வியுற்றார். அடியார் புடைசூழ எதிர்கொண்டு வந்தார். ஆளுடையவரசர் முந்திச் சென்று பிள்ளையாரை வணங்க, அவரும் வணங்கி 'அப்பரே,' என்றார். அரசும், 'அடியேன்,' என்றார். இருவருள்ளமும் மகிழ்ச்சியினால் நிறைந்தன! ஒருவருள்ளத்தே ஒருவர் புகுந்து குடிகொண்டனர். இருவரையும் ஒருங்கே வணங்கப் பெற்ற அடியாரின் களிப்பு எல்லையை மீறியது. சிவம் பெருகும் ஒலி வானமளாவியது!

சிலர், 'அருட்கடலும் அன்புக்கடலும் கூடின,' என்றனர். சிலர், 'சைவநெறி பெற்ற இரண்டு புண்ணியக் கண்கள்,' என்றனர். சிலர், 'சிவனாருருளும் உமையம்மையார் அருளு,'மென்றனர். இவ்வாறு கலைஞானக் கன்றும் அரசுஞ் சென்று திருத்தோணியப்பர் திருமுன் அடைந்தனர்.

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறிகடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனமுய்ய

இருட்கடுவுண் டவரருளு மகில மெல்லா
　　மீன்றாள்தன் திருவருளும் எனவுங் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசுஞ் சென்று
　　செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே.
(திருத்—திருநாவுக்கரசர், கஅரு)

திருக்கோபுரத்தைப் பணிந்து, உட்புகுந்து, விண்ணிலே வளர்ந்திருக்கும் விமானத்தை வலங்கொண்டு, திருமுன் சென்று வணங்கி யெழுந்தனர். அப்போது பிள்ளையார் அரசை நோக்கி, 'அப்பரே! உங்கள் தம்பிரானாரைப் பாடுங்கள்,' என்றனர்.

அப்பர் பணிவுடன், கண்ணிலிருந்து புனல் பொழியக் கலையினும் மொழிபொழியக் கசிந்து, 'பார்கொண்டு மூடி,' எனும் பதிகத்தாலே, பெரிய பெருமாட்டியாருடன் தோணிமீது வீற்றிருக்கும் பேரருளாளரைப் பாடிப் பணிந்து வெளிவந்தனர். பிறகு, பிள்ளையாருடன் அவருடைய திருமடத்தி லெழுந்தருளியிருந்தார். அவர்கள் நட்பு ஒருநாள்போலப் பலநாளும் வளர்ந்தோங்கியது. இங்ஙனம அங்கிருந்த நாட்கள் இனிதே கழிந்தன ஒருநாள் அரசு பிள்ளையாரிடம் சோழநாட்டுத் திருப்பதிகளை வணங்கவேண்டு மென்னும் தம் விருப்பத்தைத் தெரிவித்தார். அவரும் நன்றென்று திருக்கோலக்கா வரையில் உடன்சென்று வணங்கி விடைகொடுத்துத் திரும்பினார்.

அப்பர் அவரைப் பிரிந்து திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலான சிவத்திருவூர்களை வணங்கினார். பிறகு, காவிரியின் இருகரையினுமுள்ள திருச்செம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருவெதிர்கொள்பாடி, திருக்கோடிகா என்னும் திருப்பதிகளை வணங்கினார். திருவாவடுதுறையை அடைந்து திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருச்சந்த விருத்தம் என்னும் பன்மலர் மாலைகளைத் தொடுத்தணிந்து பரமனை வணங்கினார். அங்கே சிலநாட்கள் உழவாரப் பணி

செய் தெழுந்தருளியிருந்தார். பிறகு, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், திருப்பழையாறை முதலான பதிகளை வணங்கித் திருச்சத்திமுற்றத்தினை யடைந்தார்.

## 11. திருநல்லூர்—திருவடி பொறித்தல்

திருச்சத்திமுற்றத் திருக்கோயிலை யடைந்து, வலம் வந்து வணங்கித் திருப்பணி செய்து தொழுதார். ஒருநாள் பேரன்புடன் விழுந்து வணங்கிக், 'கோவாய் முடுகி' என்று தொடங்கிக் 'கூற்றம்வந்து குமைப்பதன்முன் பூவாரடிகள் என் தலைமேற் பொறித்து வைப்பாய்' என்று திருத்தாண்டகம பாடித் தொழுதார். இறைவர், 'திருநல்லூரக்கு வா!' என்று திருவாய்மலர்ந்தார். அப்பர் அம்மொழி கேட்டவுடன், மெய் புளகமெழ வணங்கி எழுந்து, திருநல்லூர் சென்று வணங்கினார் வணங்கி யெழும்போது, 'உன் நினைவை முடிக்கின்றோ'மென்று தம் திருவடிகளை அப்பர் திருத்தலைமீது ஆலமுண்டோர் சூட்டி யருளினார். அப் பேறுபெற்ற ஆளுடையவரசு, அன்பு வடிவமாய் நின்று உருகி, 'நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்' என்ற திருத்தாண்டகத்தைப் பாடி வணங்கினார். அவருள்ளம் புதையல் பெற்ற வறியன்போல் இன்பத்திலே யிருந்தது.

திருநாவுக்கரசருள்ளம் திருநல்லூரிலே பல நாட்கள் தங்க விழைந்தது. ஆகவே, அங்கேயே திருப்பணிகள் செய்துகொண்டிருந்து, பக்கத்திலுள்ள திருக்கருகாவூர், திருவாவூர், திருப்பாலைத்துறை முதலான திருவூர்களைச் சென்று வணங்கி வந்தனர். சிலநாட்கள் கழித்துத் திருப்பழனஞ்சென்று வணங்கினார்.

## 12. திங்களூர்—அப்பூதியடிகள்—நஞ்சு தீர்த்தல

அங்கிருந்து அருகிலுள்ள திருப்பதிகளை வணங்கிக் கொண்டு திங்களூரடைந்தார். திங்களூரிலே அப்பூதியடிகளெனும் அந்தணர் அப்பர் திருவடிமலரிலே சிந்தை

தோய்ந்தவராயிருந்தார். அவருடைய புதல்வர்களுக்கும் வீட்டிலுள்ள கால்நடைகளுக்கும் திருநாவுக்கரசின் பெயரை இட்டார். தாம் வைத்த தண்ணீர்ப்பந்தல்கள், எடுத்த குளங்கள், கட்டிய அறச்சாலைகள் முதலானவைகளையும் திருநாவுக்கரசு பெயராலேயே அமைத்தார் இச்சிறந்த தொண்டையறிந்த ஆளுடைய அரசு அவரைப் பார்க்க விழைந்து அவர் மனைக்குச் சென்றார் அப்பூதியடிகள் தாம் காணாமலே கருத்தைப் பிணித்திருந்த அப்பரைக் கண்டவுடன வியப்பினராய், இன்பக்கண்ணீர்வார வணங்கி மனைக்குள் அழைத்துச்சென்று இருக்கையிலே யிருத்தித் தம மனைவி மக்களுடன் அவருடைய திருவடிகளைக் கழுவி மலரிட்டு விழுந்து வணங்கினார்.

அந்தணர் நம் அரசை அமுதுசெய வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அவாகளன்பிலே பிணிப்புண்ட அடிகளார் ஒப்புக்கொண்டனர். கரைகடந்த மகிழ்ச்சி பொங்க, பலவகைக் கறிகளுடன் இனிய உணவு சமைத்தனர். பிறகு, அப்பூதியடிகளின் பிள்ளைகளில் மூத்த திருநாவுக்கரசை வாழைக்குருத் தரிந்துவர ஏவினர். அவர் வாழைமரததில் பெரிய குருத்தை யரியுபபோது, கொடிய அரவினாலே தீண்டப்பெற்றார். நஞ்சின் வேகம் தலைக்கொள்ள ஓடி வந்து, வாழைக்குருத்தை அன்னையாா பககல்வைதது விழுந்தார். நஞ்சு தன் வேலையை முடித்தது. இதனையறிந்த பெற்றோர், அரசு அமுது செய்வதற கிடையூறுண்டாயிற்றே என்று கலங்கி, அவரை மறைத்துவைத்து, அப்பரை யமுதுசெய்ய வேண்டினர். அவர் ஏதோ நடந்திருக்கிற தென்பதைத் திருவருளாலே அறிந்து வற்புறுத்திக் கேட்க, அவர்கள் நடுக்கத்துடன் உற்றதை உரைத்தனர்.

அப்பர் நடுங்கி, இப்படியுஞ் செயலாமோ என்று கடிந்து, அருள்வழியும் உள்ளத்துடன் பிணத்தைத் திருக்கோயிலின்முன் கொண்டுவரச் செய்து, 'ஒன்றுகொலாம்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். உடனே சிறுவர் உயிர்பெற்றெழுந்தார். பிள்ளை உயிர்பெற்றதற்கு மகிழா

மல், அடிகள் உணவுண்ணக் காலந் தாழ்த்ததே யென்ற துயருடன் அடிகளை யழைத்துச்சென்று அமுது செய்வித்தனர்.

தம் அருமைப் புதல்வரினும் அடியார் திருப்பணியே மேலென்று கொண்டிருந்த அப்பூதியடிகளின் அன்பைக் கண்ட ஆளுடைய அரசு, அவர்களுடன் திருப்பழனப்பெருமானை வணங்கி, 'சொன்மாலை பயில்கின்ற,' என்று தொடங்குந் திருப்பதிகம் பாடினார். அப் பதிகத்திலே, 'அழலோம்பும் அப்பூதி குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய்,' என்று அப்பூதியடிகளைச் சிறப்பித்தருளினார் பிறகு, அப்பூதியடிகளுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் திருச்சோற்றுத்துறை முதலான திருப்பதிகளை வணங்கிக்கொண்டு திருப்பழனத்திலேயே திருத்தொண்டு செய்திருந்தார்.

பலநாட்கள் அங்கேயே தங்கி, உழவாரப்பணி செய்து கொண்டிருக்கும்போது, திருநல்லூர் நினைவு வந்தது. அங்கே எழுந்தருளித் திருத்தொண்டு செய்து வணங்கியிருந்தார். சிலநாட்கள் கழித்துத் திருவாரூர் சென்று வணங்கவேண்டுமென்னுங் காதலுண்டாயிற்று. ஆகவே, திருப்பழையாறை, திருவலஞ்சுழி, திருக்குடமூக்கு, திருநாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருவாஞ்சியம், பெருவேளூர், திருவிளமர் என்னுந் திருப்பதிகளை வணங்கிக்கொண்டு திருவாரூரைச் சேர்ந்தார்.

திருவாரூரடியார்கள், சமணர் சூழ்ச்சியிலிருந்து திருவருளாலே தப்பிய அப்பர் எழுந்தருள்கிறாரென்ற களிப்பினாலே நகரை அணிசெய்து மங்கலங்களுடன் எதிர்கொண்டு விருப்புடன் வணங்கி வரவேற்றனர். அப்பர் அடியார்களை வணங்கிப், 'புற்றிடங்கொண்ட பிரானுக்குத் தொண்டனும் புண்ணியம் அமணர் சூழ்ச்சியிலகப்பட்டு வருந்திய அடியேனுக்குக் கிடைக்குமோ?' என்ற நினைவுடன் அவர்களோடு சென்று தேவாசிரியனை வணங்கினார். பிறகு, திருக்கோயிலின்முன் விழுந்திறைஞ்சி உட்புகுந்து, வலம்வந்து, புற்றிடங்கொண்ட புண்ணியர் திருமுன் சென்றார். கீழே

விழுந்து பணிந்தெழுந்து, மெய்சிலிர்க்கக் கண்ணீர்வடிய, உரைகுழறக், 'காண்டலே கருத்தாய்' என்னுந் திருத்தாண்டகம் பாடி வணங்கினார்.

பிறகு, திருக்கோயிலை வலம்வந்து தேவாசிரிய மண்டபத்தை யடைந்து, "மெய்ம்மையாம் மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரரைக்—கையினாற் றொழா தொழிந்து கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேன்" என்று கையறவுத் திருப்பதிகம் பாடிக்கொண்டு அங்கே எழுந்தருளியிருந்தார். அங்கிருக்கும்போது, மார்பு வழியக் கண்ணீர் வடியுந் திருவடியும, மதுரம்பொருந்திய செந்தமிழ்ப்பாக்கள் பொழியும் திருவாயும், சிவபெருமானார் செம்பொன் மலரடியே சேர்ந்த திருவுள்ளமும் உழவாரப்படையுந் தாமுமாகித் திருக்கோயிலின் திருவீதியிலே பணிசெய்து, பரமனைப் 'பாடிளம் பூதத்தினானும்' என்னும் பதிகம்போன்றவைகளைப் பாடித் தொழுது கொண்டிருந்தார்.

மார்பாரப் பொழிகண்ணீர்மழைவாருந் திருவடிவும் மதுரவாக்கிற்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ்செம்பொற்றாளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப்பணிசெய்துபணிந்தேத்திப்பரவிச்செல்வார்.
(திருத்—திருநாவுக்கரசர், உஉரு)

ஒரு திருப்பதிகத்திலே நமிநந்தி யடிகளின் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடினார்.

## 13. திருப்புகலூரில்—பிள்ளையார் இரண்டாமுறை சந்திப்பு அடியார் உறவு

அங்கிருக்கும் நாட்களிலே திருவலிவலம், திருக்கீழ்வேளூர், திருக்கன்றாப்பூர் முதலான திருப்பதிகளை வணங்கி வந்தார். திருவாரூரிலே நடக்குந் திருவாதிரைத் திருவிழாவிலே வீதிவிடங்கப் பெருமானார் திருவுலாவைக் கண்டு போற்றி மகிழ்ந்தார். பிறகு, திருப்புகலூர் செல்ல விரும்பி இடையே உள்ள பதிகளை வணங்கிக்கொண்டு திருப்புகலூரை நெருங்கினார். அப்போது காழிப்பிள்ளையார்

திருப்புகலூரிலே முருகநாயனார் திருமடத்திலே எழுந்தருளியிருந்தார். அப்பிள்ளையார் இவர் எழுந்தருள்வதைக்கேட்டு, மகிழ்வுடன் அடியார் சூழ எதிர்கொண்டார். அப்பரும் இவரைக் கண்டு மகிழ்ந்தார். இருவரும் ஒருவரை யொருவர் வணங்கிக்கொண்டனர். அப்பரை நோக்கி ஆளுடைய பிள்ளையார், 'அப்பரே! திருவாரூரின் சிறப்பைக் கூறியருள்க,' என்றார். அப்பர், 'அடியேன் என் சொல்கேன்?' என்று, 'முத்துவிதானம்' என்னுந் திருப்பதிகத்தாலே ஆதிரைநாளின் சிறப்பை அழகுற எடுத்துக் கூறினார். அதைக்கேட்ட பிள்ளையார், 'திருவாரூர் வணங்கியே வருவேன். அது வரையில் இங்கேயே எழுந்தருள்க' என்று கூறித், திருவாரூருக்கு அடியாருடன் சென்றார். அப்பர் காதலுடன் திருப்புகலூர் சென்று, திருக்கோயிலைக் கண்டு வணங்கி வலம் வந்து, இறைவர் திருமுன் சென்று, விழுந்தெழுந்து தமிழ்மாலை சாத்திக் களிப்புடன் வணங்கினார். அரனாரடி வணங்கியபின், முருகனார் திருமடத்திலே தங்கியிருந்து, செங்காட்டங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்னுந் திருப்பதிகளை வணங்கி வந்தார். இந்நிலையிலே ஆளுடைய பிள்ளையார் திருவாரூரை வணங்கித் திரும்பிவந்தார்.

ஆளுடைய அரசு மகிழ்வுடன் அடியாரோடு சென்று, அவரை யழைத்து வந்தனர் இருவரும் முருகனார் திருமடத்திலே எழுந்தருளி யிருக்கும்போது திருநீலநக்கர், சிறுத்தொண்டர் என்னும் சிறந்த தொண்டர்களின் உறவு இவர்கட்குக் கிடைத்தது. மடத்துக்குரியவரும் முருகனார் ஆக இவர்களுடன் கலந்த சேண்மை மிகப் பேரின்ப நிலையமாக இருந்தது. மனமொத்த பெரியார்களின் நட்பும் இனிய உரையாடலும் தரும் நன்மையைவிட வேறு நன்மையேது? சைவநெறி தழைக்க இவர்கள் ஏழிசையோடு கலந்து இறைவர் பெருமையை உள்ளன்புடன் மக்களின் உள்ளத்திலே பதியவைத்த சிறப்பை எப்படிப் புகழ்வது? அவர்களாற் சைவநெறி இசையமுதாகக்—குழல்வழியாக—யாழ் நரம்பின் வழியாகப்—பரவிச் செவி வழியாகச்

சென்று, ஊனையும் உணர்வையும் உருக்கி, உயிர்க்குப் பெருநலம் விளைத்ததென்று சுருங்கக்கூறலாம்.

சில நாட்கள் அவர்களோடு தங்கிய ஆளுடைய அரசர், பிள்ளையாருடன் மற்றுமுள்ள திருப்பதிகளைத் தொழு தற்கு எழுந்தருளினார். உடனுறைந்த முருகர், நீலநக்கர், சிறுத்தொண்டர் ஆகியோர் உளத்தை மட்டும் அவர்கள் திருவடித் தொண்டிலே நிலைக்க விட்டு விடைபெற்றுச் சென்றனர். பின்னர், இருவரும் திருவம்பர் வணங்கித் திருக் கடவூர் அடைந்தனர். அங்குச் சில நாட்கள் குங்குலியக் கலயர் திருமடத்திலே எழுந்தருளி, அருகிலிருந்த திருக்கடவூர் மயானத்தை வணங்கினர். அங்கிருந்து புறப்பட்டுத் திரு வாக்கூரிலே தான்தோன்றிமாட மென்னுந் திருக்கோயிலை வணங்கினர்.

## 14. திருவீழிமிழலை—வற்கடம்—பொற்காசு!

திருவாக்கூரிலிருந்து திருவீழிமிழலையை யடைந்தனர். அங்கிருந்த அடியார்கள நகரை யணிபுரிந்து, நிறைகுடம் மங்கல வாத்தியங்களுடன் எதிர்கொண்டு வணங்கி யழைத்து வந்தனர். இருவரும் அடியாரன்புக்கு வியந்து, அவர்களுடன் திருக்கோயிலை யடைந்து விண்ணிழி விமா னத்தை வலம்வந்து விழுந்து வணங்கித் தமிழ்மாலை சாத்தி வாழ்த்தினர். அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்தனர்.

அக் காலத்திலே மழைவளமின்றிப் பயிர் பச்சைகள் விளைவு குன்றியதால் மக்கள் உணவின்றி வாடினர். 'விண் ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்—துண்ணின் றுடற்றும் பசி" என்னுந் திருக்குறளின் கருத்தை நினை யுங்கள். கடல் பல மடங்கு நீருடையதானலும் மழை யின்றிப் பொய்த்தால் நிலவுலகம் பசியினல் வாடி வதங்கிச் சுருண்டுபட்டுப் போய்விடுமன்றோ?

அடியார்களும் மற்றோரும் உணவின்றிச் சோர்வதைக் கண்ணுற்ற கண்ணுதலார், இருவர் கனவிலுந் தோன்றி வற்கடந் தீரும்வரையில் விண்ணிழி விமானத்தின்

மேற்கிலும் கிழக்கிலும் உள்ள பீடங்களிலே பொற்காசு வைக்கிறோம். காலநிலைமையை நீங்கள் வென்றாலும் உங்களை வழிபடுவோர்க்குப் பசித்துன்பம் பொறுத்தற் கரியதாயிருக்கும். ஆகையால், பொற்காசைக் கொண்டு உணவளியுங்கள்' என்று மொழிந்தருளினர். அவ்வாறே மறுநாளிலிருந்து கிடைக்கும் பொற்காசைக்கொண்டு அடியாரின் பசிப்பிணியைப் போக்கினர். அப்பர் கைத்தொண்டு செய்யும் இயல்பினால் வாசியிலலாத காசு பெற்றார். சிவனார் திருமகனாராகுஞ் சிறப்பினாலே ஆளுடைய பிள்ளையார் வாசியுடன் பெற்றார். சில நாட்களில் வற்கடந் தீர்ந்தது! மனமகிழ்ந்தனர் மக்கள்! உணவு பெருகியது! உலகு தழைத்தது!

## 15. திருமறைக்காடு—கதவு திறத்தல்!

திருநாவுக்கரசர் பிள்ளையாருடன் அங்கிருந்து புறப்பட்டுப் பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்று திருமறைக்காட்டை அடைந்தனர். அங்குள்ள திருக்கோயிலை வலங்கொண்டு திருவாயிலின்முன் சென்றனர். அங்குத் திருவாயில் திறக்கப் பெறாமல் இருந்தது கண்டு ஆங்குள்ளோரை வினவினர். அவர்கள் வணங்கி, 'முன்னாளில் மறைகள் வழிபாடு செய்து போயின பின்னர் இவ்வாயில் திறக்க முடியாமலே இருக்கின்றது. வேறொரு வாயிலின் வழியாகவே அடியார் வணங்கச் செல்கின்றனர்' என்று பணிவுடன் பகர்ந்தனர். ஆளுடைய பிள்ளையார், 'அப்பரே! நாம் இவ்வாயிலின் வழியாகவே செல்லுதல் வேண்டும். தாங்கள் கதவு திறக்கப் பாடியருள்வீராக!' எனக் கூறினர்.

அப்பரும், '**பண்ணினேர் மொழியாள்**' எனத் தொடங்கிப் பாடி வரும்போது கதவு திறக்கப் பெறவில்லை. திருக்கடைக் காப்புச் செய்யுளிலே, '**எண்ணீர் இரக்கமில்லீர்**' என்று பாடியவுடன் திருக்கதவங்கள் திறந்தன. அப்போது சிவம பெருக்குந் திருவொலி கடலோசையினும் மிக்கொலிக்க அடியார்கள் ஆரவாரஞ் செய்து இருவரையும்

வணங்கினர். இருவரும் அடியாருடன் பேரின்ப வெள்ளத்திலே முழுகி வணங்கி உள்ளே சென்று, திருமுன் நின்று என்புருகப் பணிந்து வலங்கொண்டு பரவித் திரும்பினர். திருவாயிலின்முன் வந்தவுடன் ஆளுடைய அரசர் பிள்ளையாரை வணங்கித் 'தாங்கள் கதவுகள் மூடப் பாடுதல் வேண்டும்' என்றனர். பிள்ளையார் மகிழ்வுடன் பாடியருளினார். அப்போது முதற் பாட்டிலேயே கதவுகள் திருக்காப்புச் செய்யப்பெற்றன. இருவரும் வியப்புடன் திருவாயிலை வணங்கி அடியார் சூழ அங்கிருந்த மடத்திலே தங்கினர்.

## 16. திருவாய்மூர்க்கு வா!

அன்றிரவு அப்பர், தாம் பாட அரிதிலே திறந்ததையும், பிள்ளையார் பாட எளிதிலே அடைந்ததையும் எண்ணித் திங்கள் முடியார் திருவுள்ளமறியேன் என்று திகைத்தார். அவருள்ளம் இந்த நினைவினாலே குழம்பியது. உறக்கமென்பதே வரவில்லை. அம் மடத்தின் ஒரு பக்கத்திலே அருந்நித்திரை செய்துகொண்டிருந்தார். கனவிலே கண்ணுதலார் வெண்ணீறு படிந்த மெய்யராய்த் தோன்றி, 'வாய்மூரிலிருப்போம்; தொடர்ந்து வா!' என்றார் விழித்தெழுந்து, 'எங்கே யென்னை' என்று தொடங்கி, 'மா வென்று போனாரதென்கொல்?' எனப் பாடி 'இது எம்பெருமானருளாகிற் செல்வேன்' என்று முடிவு செய்து மறைக்காட்டைவிட்டுப் புறப்பட்டார். கனவில் தோன்றிய உருவத்துடன் கண்ணுதலார் வழிகாட்டி முன்சென்றார். அப்பர் பின்தொடர்ந்து சென்றார். செல்லச் செல்ல அவர் சேய்மையிலேயே காணப்பட்டாரே யொழிய, நெருங்க முடியவில்லை. கைக்கெட்டிய வுணவு வாய்க்கெட்டாததைப் போலச் செல்வதைக் கண்டு திகைத்தார்! வழிகாட்டிய வள்ளல் அங்கிருந்த ஒரு கோயிலிலே மறைந்தார்! பின் சென்ற வாகீசர் காணப்பெறாமற் பெரிதும் கவலையுற்றார்! அரசு திருவாய்மூர் செல்கிறாரென அறிந்த ஆளுடைய பிள்ளையாரும் பின்பற்றி அங்கே வந்தார்.

ஆளுடைய அரசு கவலையுடன், 'திருவருளை யறியாமலே திருக்கதவு திறக்கப் பாடிய எளியேனுக்கு மறைக்கலாம்! ஒரு பாட்டிலே அடைக்கப்பாடிய பிள்ளையாருக்கும் தங்கள் கோலத்தை மறைக்கலாமோ?' என்று கூறினார். அப்போது பிளளையார்க்குமட்டும் பெருமானார் திருக்கோலம் வெளிப்பட்டது. பிள்ளையார் கண்டு பணிந்து, அப்பருக்குங் காட்டினார். அப்பரும் கண்டு வணங்கிப், 'பாடிடியார் பரவகண்டேன்' என்று தொடங்கிப் பாடிப்பரவினார். இறைவர் அப்பாடலை யேற்று எழுந்தருள, நாயன்மாரிருவரும் திருவாய்மூர் சென்று சிவனார் மலரடியைச் சேவித்தனர் பின்னர், இருவருஞ் சிலநாட்கள் அங்கேயிருந்து திரும்பிவந்து திருமறைக்காட்டிலே தங்கினார்கள்.

அக்காலத்திலே, மதுரையிலிருந்து பாண்டிநாட்டரசியாரும் குலச்சிறையாரும் வரவிட்ட சிலர் வந்து பிள்ளையாரை வணங்கினர் அவர்களைக் காழிப்பிள்ளையார் கருணையுடன் நோக்கி நலம் வினவினர்: அவர்கள் வணக்கத்துடன், 'தாங்கள் சைவநெறி தழைக்க எழுந்தருளிய பின்னர்த் தீங்குமுண்டோ? பாண்டிமாதேவியார் தங்கள் திருவடியை வணங்க விரும்புகிறார்கள். அமணராட்சியை மாற்றியருள எழுந்தருளவேண்டும்' என வேண்டினர். அருகிலிருந்த அரசு, தாம் சமணரிடம் பட்ட அல்லலை எடுத்துரைத்துச் செல்லவேண்டாமென்றார்.

ஆளுடைய சம்பந்தர், 'வெண்ணீறு போற்றும் மெய்யன்பர் இருவரையுங் காணவேண்டும் மேலும் அங்குச் சமண்நெறியை நீக்கிச் சைவத்தைப் பரப்புவது என் கடமை' என்றார். 'அங்ஙனமேல், நானே சென்று அமணர் தீமையை அகற்றுவேன்' என அப்பர் மொழிந்தார். என்ன கூறியும் பிள்ளையார் உறுதியுடன் மதுரை செல்லப் புறப்பட்டார்.

## 17. பழையாறை "சமணர் மறைக்க வொண்ணுமோ?"

ஆளுடைய பிள்ளையாரை விடைகொடுத்துச் செல்ல விட்ட பிறகு, திருநாகைக்காரோணம், திருவீழிமிழலை முதலிய திருப்பதிகளைக் கும்பிட்டுத் திருவாவடுதுறையை அடைந்தார் அங்கே, திருஞானசமபந்தர்க்கு ஆயிரம்பொன்னளித்த திருவருளை, 'மாயிருஞாலம்' என்னுந் திருப்பதிகத்திலே அமைத்துப் பாடி வணங்கினர். பிறகு, பழையாறையை அடைந்தார். அங்கே வடதளியென்னும் திருக்கோயிலிலே எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைச் சமணர் மறைத்திருப்பதை அறிந்து, கவலையுடன், 'தங்களைச் சேவித்தன்றி யுணவு முண்ணேன்' என்று அங்கேயே இருந்தார்.

அன்றிரவு அரசன் கனவிலே அந்திவண்ணனார் எழுந்தருளிச் சமணரால் மறைக்கப்பெற்றுத் தாம் இருக்கும் இடத்தைக் குறிப்பிட்டு, எடுததுவந்து வடதளியிலே அமைக்கக் கட்டளையிட்டார். அரசன் விழித்தெழுந்து, அமைச்சருடன் அங்குச் சென்று சிவலிங்கததை யெடுத்து வந்து, வடதளியிலே அமைத்து, வழிபாட்டுக்கு வேண்டிய பொருள்களையும் செல்வத்தையும் அமைத்தான். அப்பர் சென்று வணங்கி மகிழ்ந்து, 'சமணர் மறைத்தாலும் மறைக்க ஒண்ணுமோ?' என்று 'தலையெலாம்' என்று தொடங்கும் திருப்பதிகத்திலே பாடி வாழ்த்தினர். அங்கே, சில நாட்கள் உழவாரப் பணிசெய்துகொண்டிருந்தார்.

## 18. திருப்பைஞ்ஞீலி வழி—போதிசோறு

சிலநாட்கள் கழிந்தபிறகு, பிற திருப்பதிகளையுங் கைதொழ விரும்பித் திருவானைக்கா, திருவெறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, திருப்பராய்த்துறை என்னுமிடங்களை வணங்கிக்கொண்டு திருப்பைஞ்ஞீலியை நோக்கி நடந்தார். வழியிலே, பசியும் நீர்வேட்கையும் பற்றின. எனினும் மனந்தளராமற் கண்ணுதலை வணங்குங் காதலிலே கருத்தூன்றிச் சென்றுகொண்டிருந்தார். இவர் களைப்

போக்க இறைவரெண்ணினார். காவுங் குளமும் அமைத்தார்! கட்டுச்சோறு வைத்துக்கொண்டு முதிய அந்தணராக அக்காவிலே காவலிருந்தார் களைத்து வந்த திருநாவுக்கரசரைக் கையமர்த்தி இருத்தினார்! 'களைத்துப் போனீர்! என்னிடமுள்ள இப் பொதிசோற்றையுண்டு குளத்திலே நீர்பருகச்செல்லுக!' எனப் பரிவுடன் வற்புறுத்தினார்.

பசியின் கொடுமையாற் பரமனாரளித்த பொதிசோற்றை ஒன்றுமுரையாமல் உண்டு களையாறினார். பிறகு, மாய அந்தணர், "எங்குச் செல்கிறீர்?" என்று வினவித் தாமும் திருப்பைஞ்ஞீலிக்கு வருவதாக உரைத்தருளினார். இருவரும இனிது பேசிக்கொண்டே சென்றனர். நகரை நெருங்கியவுடன் நம்பர் மறைந்தார்! அப்போதுதான் ஆண்டவனே அந்தணராக வந்தாரென்று வாக்கின் மன்னர் மனங்கொண்டார். மனம் நெகிழவும் வாய்குழறவும் மெய்சிலிர்க்கவும் படிமிசைவிழுந்து வணங்கிப் பாடி வாழ்த்தினார். திருப்பைஞ்ஞீலி சென்று திருக்கோயிலையடைந்து முறைப்படி வணங்கித் தமிழ்மாலைகள் சாத்தித் திருத்தொண்டு புரிந்துகொண்டு சிலநாட்கள் எழுந்தருளியிருந்தார் அங்கிருந்து வடதிசை நோக்கிச்சென்று, திருவண்ணாமலையைச் சேர்ந்தார். மலையைத் தொழுது வலம்வந்தார். திருக்கோயிலையடைந்து அண்ணாமலையாரை வணங்கிப் பாடினார்.

## 19. தொண்டைநாடு சூழ்தல்

பின்னர்த், தொண்டைநாட்டை வணங்கப் புறப்பட்டார். காடும் மலையுங்கடந்து, கவின்பெறு திருப்பதிகள் பலவற்றையும் வணங்கியவாறு திருவோத்தூரை அடைந்தார். அங்குள்ள கங்கைவேணியர் கமலத்தாளை வணங்கிக் கனிந்து கனிந்து திருத்தாண்டகம் முதலான பதிகங்கள் பாடினார். பிறகு, காஞ்சியை அடைந்தார். காஞ்சிநகர மக்கள் சமணர் சூழ்ச்சியை வென்ற சொல்லரசர் எழுந்தருள்கின்றாரென்னுங் களிப்பினாலே நகரை யணிசெய்தனர்.

வாயில்களெல்லாந் தோரணங்களும் வாழையுங் கமுகும் நிறைகுடமும் மலர்மாலைகளும் விடைக்கொடியும! தெருக்களெல்லாம் பந்தர்கள்! பழமணல் மாற்றிப் புது மணல்கள்! நறுமணப்பொடிகள்! மலர்கள்!—இவ்வகைச் சிறப்புடன் எதிர்கொண்டு வணங்கி அழைத்துவந்தனர். வாக்கின் மன்னர் ஏகாம்பரர் திருக்கோயிலுக்குச் சென்று வீட்டையடைவதைவிடப் பிறப்பதே மேலென்று கண்டோர் கசியும்படி கசிந்து கசிந்து கண்ணீர் பொழிந்து பாடினார். அங்குப் பாடியது 'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை' என்று தொடங்குந் திருப்பதிகமாகும்.

திருவேகம்பரைக் கண்டு, கண்பெற்ற பயனெய்திய அப்பர் திருக்கச்சிமயானம், திருமேற்றளி முதலான திருக் கோயில்களையும் வணங்கிப் பல திருத்தாண்டகங்களும் நேரிசைகளும் பாடிப்பாடிப் பரவினார். அந்நகரிலேயே தங்கித் திருத்தொண்டு செய்ததுடன் அருகிலுள்ள திருப் பதிகளையுஞ் சென்று சேவித்தார் ஏகாம்பரநாதரை 'ஏகம்பன் என் கண்ணுளான்' என்று பாடி யுவந்தார். அங் கிருந்து, திருக்கழுக்குன்றத்திற்குப் போய்த் தமிழ்த்தொடை சாத்தி வணங்கினார். திருவான்மியூர் சென்று வணங்கி, மயிலாப்பூரை அடைந்து வாழ்த்தித் திருவொற்றியூரைச் சென்று சேவித்தார். கருவச்சம்போக்குங் கண்ணுதலை—எழுத்தறியும் பேரருளாளரைத் தமிழால் 'வண்டோங்கு செங்கமலம்' என எடுத்துப் பாடினார். அன்பு மிகுதி யாலே, கண்ணீர்வடிய விம்மினார். அங்குப் பல நாட்கள் எழுந்தருளியிருந்து உழவாரப் பணிசெய்தார். அருகி லுள்ள திருப்பதிகளைச் சென்று வணங்கினார்.

வாக்கின் மன்னர், பிறகு, திருப்பாசூருக்குச் சென்றார். இறைவரை வணங்கினார். 'முந்தி மூவெயி லெய்த' எனத் தொடங்கிப் பாடிப் பரவினார். மேலும், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம், திருநேரிசை முதலான தமிழ் மாலைகளையும் தொடுத்தணிந்து வணங்கினார். அங்கிருந்து நீங்கி ஆலங்காடு அடைந்து, 'திருவாலங்காடுறையுஞ் செல்வர்' எனச் சிறப்பித்துத் திருத்தாண்டகம் பாடினார். பிற பகுதி

களையும் வணங்கித் திருக்காரி கரையைப் போற்றித் திருக்காளத்திமலையைச் சேர்ந்தார்.

பொன்முகலியிலே முழுகிக் காளத்திமலையின் அடிவாரத்திலே சென்று பணிந்து எழுந்து மலைமீதேறிக் காளத்தியப்பர் திருக்கோயிலை வலங்கொண்டு திருமுன் சென்று விழுந்து வணங்கி யெழுந்தார் கண்ணப்பர்க்கருளிய கண்ணுதலைக் கையாரக்குமபிட்டு வாயார வாழ்த்தி 'நாதனையொன் கண்ணுளானை' என்றமைந்த திருத்தாண்டகத்தைப் பாடினர் பிறகு, அப்பெருமானர் அருகிலே அன்புவழிய நிற்கும் கண்ணப்ப அண்ணலைக் கண்டு, கனிந்து விழுந்து வணங்கினர். கண்ணீரருவிபோற் பாய வலங்கொண்டு புறத்திலே வந்தார்.

## 20. திருக்கயிலைச் செலவு!—அன்பின் உறுதி!—அரனருள்!

காதல் மிகக் காளத்தியப்பரை வணங்கிய சொல்லரசர்க்குக் கயிலையப்பரையும் வணங்கவேண்டுமென்னுங் காதல் கைமிகுந்ததனல் வடதிசை நோக்கி மகிழ்வுடன் நடந்தார். திருப்பருப்பதத்தை வணங்கினர். தெலுங்கு நாட்டின் வழியே கன்னடத்தையுங் கடந்து மாளவம், இலாடம் முதலானவற்றை நீங்கிக் காசியைக் கண்டு வணங்கினர். கங்கையிலே நீராடினர். மேலும் செல்லத் தொடங்கினர்.

வானளாவிய காடு! மக்களேயன்றி வானவரும் நுழையமுடியாத வழி! இத்தகைய அரிய நெறியிலே காதலொன்றே துணையாகக், காய்கனி கிழங்கு சருகுகளையும கொள்ளாமல் அரனருளே உணவாகக்கொண்டு சென்றார். இரவு பகலென இல்லை! இருள் வெளிச்சமென இல்லை! தீய விலங்குகளும் திகைத்து நீங்கின! நஞ்சுமிழும அரவுகள் மணிவிளக்கெடுத்தன! நண்பகலிலே கதிரவன் கதிர்கள் அக் காட்டிற் காணப்படும் சில வெடிப்புக்களையும் வெப்பமாக்கிக் கொடுங்கானலை அனல்போல

வீசியது! நிழலென்று நிற்குமிடங்கள் அழலெனவே அனல் வீசின! எனில், எங்கே தங்குவது? எனினும், அரனருளைத் துணையாக—நிழலாகக்—குளிர்ந்த பொய்கையாகக் கொண்டு—சமணர் நீற்றறையிலே ஏழுநாளிருந்த எம் தலைவர், இக் கொடிய பாலைக்கோ அஞ்சுவார்?

அன்பு வயிரம் பாய்ந்திருக்கலாம்! ஊனுலமைந்த உடல் மென்மையானதுதானே? திண்ணிய அண்ணலார் திருவடிகள், உள்ள உறுதியாலே நடந்தாலும் தேய்ந்து புண்ணாயின! கால்களை யூன்றுதலைவிட்டுக் கைம்மலர்களாலே தவழ்ந்து—தாவிச்சென்றார்! அவைகளும் ஊனுலமைந்தவை யாகையாலே, மணிக்கட்டுகள் அசைந்து சிதைவுற்றன! எனினும், கைலைக்காதல் மேலும் மேலும் பொங்கி யெழுந்தது! என் செய்வார்? அனல் தவழும் அந்த வழியிலே—பருக்கைக் கற்களினிடையே புகை யெழும் அந்த வழியிலே—மார்பினால் தவழ்ந்து சென்றார்! அந்தோ! மார்புந் தோல் சிதைந்து என்புகளும் முறிந்தன! குருதியும் அன்புங் கொப்புளிக்கப் புரண்டு புரண்டு சென்றார்! இறைவரன்பிலே ஊறிய—புரண்டு பழகிய—எம் தமிழ் மன்னரை இந்த ஊனுடல் என் செய்யும்? புரண்டு புரண்டு அங்கமெலாம் நைந்தது! அதன் முயற்சி சோர்ந்தது! எனினுங் காதல் சிறிதும் சோரவில்லை. 'இந்த உடல் வீழ்ந்தாலுங் காதல் வீழாமற் கயிலையப்பர் திருவடியைக் கண்டு கசிந்து தமிழ்மாலை சாத்திப் பரவுவேன்' என்னுந் துணிவுடன் அசைவற்றுக்கிடந்தார் நம் அப்பர்.

"அந்தோ! நீர் யார்? உடல் நலியச் சிந்தை நலிய எங்கே செல்கிறீர் இக் கொடிய காட்டிலே?"

தமிழாளிக்குச் சிறிதுணர்வு வந்தது! பேசும் வலிமையும் உண்டாயிற்று. கண்விழித்துப் பார்த்தார்! தூய மரவுரியாடை! மார்பிலே முந்நூல்! ஒளிபொருந்திய சடைமுடி!—இக் கோலத்துடன் ஒரு முனிவர் எதிரிலே நின்றார்! அன்புகனிய அருகிலே நோக்கிக்கொண்டிருந்தார்.

"முனிவரே! மலர்தவழுங் கூந்தலையுடைய மலைமகளாருடன் இறைவர் கயிலையிலே வீற்றிருக்கும் அந்தக் காட்சியை—இனிய—என்புருக்குங் காட்சியைக்—கண்டு கும்பிடுங் காதலாலே அடைந்தேன்!"

வாக்கின் மன்னர் வாக்கிலே காதலும் சோர்வும் இருந்தன! முனிவர் மேலும் அவரை அறிய விரும்பினார்.

"கயிலைமால் வரைக்கா நீர் செல்லவேண்டும்? ஐயோ! என்ன உறுதி உமக்கு! காதலுக்குக் கருத்தே இராதோ? அமரர்களும் அணுகமுடியாத கயிலையை மண்ணுலக மக்கள் அடைவதெப்படி? ஐயா! உம் முயற்சி பயனற்ற—வருந்தத்தக்க—முயற்சி! என்ன செய்துவிட்டீர்! செய்து கொண்டிருக்கிறீர்! இனிமேல் வந்தவழியே திரும்புவது தான் உம்மால் செய்யக்கூடியது!"

"மொழிகள் தடுமாறுகின்றன! முனிவரே! இவ்வுடல் அழியுமென்பது உண்மைதானே? அழியும் இவ்வுடல் அரவணிந்த அண்ணலை—ஆறு தரித்த சடையரைக்—காணச்செய்யும் முயற்சியிலே தானே அழியட்டுமே! இந்தப் பொய்யான மெய்யை இறைவரைக் கயிலையிலே காணுமலே திரும்பிச் சுமந்துச் செல்லேன்! இஃது உறுதி! நீர் என் உறுதியைச் சிறிதும் அழிக்கமுடியாது!"

'மீளும் அத்தனை உமக்கினிக் கடன்' என விளங்கும்
தோளும் ஆகமும் துவளுமுந் நூல்முனி சொல்ல,
'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்' என மறுத்தார்.

(திருத்—திருநாவுக்கரசர், ௩௬௬.)

முனிவர் வியந்தார்! தம் உருவை மறைத்தார்! வானொலியாலே 'ஓங்கும் நாவினுக்கரசனே! எழுந்திரு! என்றார். உடனே அப்பர் தம் வருந்திய யாக்கை—வலிமை பொருந்திய—தீங்கிலாத—யாக்கையாகப் பெற்றெழுந்து நின்றார்! வியந்தார்! இஃது இறைவர் மொழியேயென அறிந்தார்.

"அண்ணலே! எளியேனை ஆட்கொண்ட அமுதே! வானத்தில் மறைந்திருக்கும் வள்ளலே! தங்கள் திருக் கோலத்தைக் கயிலேயிலே காண அருள்புரிவீராக!" என்று வேண்டி, நிலமிசைப் பணிந்தெழுந்தார்.

"அன்பனே! நீ இன்னும் தமிழ்மறை பாடி மக்களை நல்வழிப்படுத்தல் வேண்டும். ஆகையால், நின் காதலைச் சிறிது கட்டுப்படுத்தி, இதோ இப் பொய்கையிலே முழுகு! திருவையாற்றிலே வெளிவருவாய்! அங்கே நம் கயிலைக் கோலத்தைக் காட்டுகிறோம்."

ஆளுடைய அரசர் அண்ணலா ராணைக்கஞ்சிப் பணிந் தார். இறைவரருளாலே உண்டாகியிருந்த பொய்கையிலே முழுகினர்! எழுந்தபோது திருவையாற்றுக் குளத்திலே நிற்பதைக் கண்டு, திருவருளை வியந்து திகைத்தார்! இறைவரருள் வாவியிலே—நினைத்துருகும கண்ணீர் வாவி யிலே—திரும்பவுங் குளித்தார்!

## 21. திருவையாறு—கைலைக் காட்சி!

திருவையாற்றுக் குளத்திலிருந்து வெளிவந்தார்! நீண்ட விடைக்கொடிகள் வருக வருகவென அழைப் பதுபோ லாடிக்கொண்டிருக்கும் அந் நகரின் திருவீதியே நடந்து சென்றார்! என்ன வியப்பு! அவர் கண்ட எப் பொருளிலும் இறைவர் திருக்கோலத்தைக் கண்டார்! அசையும் பொருளிலும் அசையாப்பொருளிலும் இறைவர் உமையம்மையாருடன் காணப்பெறுந் திருக்காட்சியை இறைவரருளாலே கண்டார்! வெள்ளிமலையிலே எவ்வாறு சத்தியும் சிவமுமாக இறைவர் அருள்பெற்ற அடியார் காணப்பெறுவாரோ, அவ்வாறே திருவையாற் றுயிர்களுங் காணப்பெற்றன! கண்டு பணிந்தார் கண்ணுதலருள்பெற்ற சொல்லரசர்! அந்த உண்மையைக் 'கண்ணுதலே காட்டாக்காற் காண்பாரார்?'

திருநாவுக்கரசர் திருவையாற்றுக் கோயிலின்முன் வந்தார்! அக்கோயில் கயிலைமலையாக மாறியது! திருமாலும்

நான்முகனும் இந்திரனும் மற்றுமுள்ள அமரர் தலைவர்களும் போற்றிசைக்கும் ஒலி பொங்கியது! அழிவில்லாத மறைகள் முழங்கின! அமரர் கூட்டங்களும் முனிவருஞ் சித்தரும் கந்தருவரும் இயக்கரும் எங்குங் குழூக்குழூவாய்க் குழுமியிருந்தனர். அரம்பையரின் இசைப்பாட்டும் முழவோசையும் இனிமையாக இயங்கின! கங்கை முதலிய தெய்வ ஆறுகள் பொய்கையாக அங்கே வணங்க வந்திருந்தன! சிவகணங்களும் பூதவேதாளங்களும் இறைவரை வாழ்த்தின! இரண்டு வெள்ளிமலையோ என்று ஐயுறும்படி வெள்ளிமலைக்கெதிரில் திருமாலாகிய விடை நின்றது! முன்செய்த நல்வினையாலே—தவத்தாலே—நந்திதேவர் முதன்மைபெற்ற சிவகணத் தலைவராய் இறைவர்க்கு முன்னாலே நின்றுகொண்டிருந்தார்!

வெள்ளிமலையின்மேல் மரகதக்கொடி தவழ்ந்திருக்கும் பவளவெற்பைப்போல, இடப்பாகத்திலே உமையம்மையாருடன் வீற்றிருக்கும் விரிசடை முதல்வரை வாக்கின் மன்னவர் கண்டார்!

வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார்.

(திருத்—திருநாவுக்கரசர், கூஎக)

கண்ட பேரின்பக்கடலைப் பன்முறையுங் கண்களால் முகந்து முகந்து உண்டார்! கைகுவித்தார்! திருமுன்னே விழுந்தார்! எழுந்தார்! மெய்சிலிர்த்துத் தம்மை மறந்து ஆடினார்! பாடினார்! என்ன செய்தாரென்று யாரால் கூறமுடியும்? இறைவரருளாகிய ஆராவமுதைப் பருகு முன்பே பேறுபெற்ற செஞ்சொல்மன்னர் அளவிலாக் காதல்பொங்கத் திருத்தாண்டகங்கள் பாடினார்! மகிழ்ந்து வாழ்த்தினார்!

**இவ்வாறு நம் அப்பர் மகிழும்வண்ணம் கயிலைக் கோலங்காட்டிய கண்ணுதலார் தோன்றியவாறே மறைந்**

தனர். திருவையாற்றுக் கோயிலைமட்டுங் கண்டார் நாவி னுக்கரசர்! திகைத்தார்! கண்டது கனவோ எனக் கலங்கி னார்! சிறிது பொறுத்துத் திருக்கயிலை ஈசனாருளென்று தெளிந்தார்! "மாதர்ப்பிறைக் கண்ணியானை" என்னுந் திருப்பதிகம் பாடித் தொழுதார்! மற்றும் பல பதிகங் களும் பாடித் தம் உழவாரப்பணியைப் புரிந்துகொண்டு அங்கேயே எழுந்தருளியிருந்தார்.

சிலநாட்கள் கழித்துத் திருநெய்த்தானம், திருமழபாடி முதலான திருப்பதிகளை வணங்கித் திருப்பூந்துருத்தியை அடைந்தார்.

## 22 திருப்பூந்துருத்தி—திருமடம்—மூன்று முறை பிள்ளையார் சந்திப்பு

திருப்பூந்துருத்தி இறைவரைக் கனிந்து பொங்கும் அன்பிலே முழுகி வணங்கிப் பல்வகைத் தாண்டகங்களும், தனித்தாண்டகமும், திருக்குறுந்தொகையும், திருவங்க மாலையும் பாடிக்கொண்டு திருத்தொண்டு செய்து சிலநாட் கள் எழுந்தருளியிருந்தார். அப்போது திருமடம் ஒன்றுங் கட்டிவைத்தார். நிற்க.

பாண்டிநாட்டிற்குச் சென்று, சமணரை வென்று, சைவநெறியைப் பரபபிவரும் திருஞானசம்பந்தர் அப்பர் திருப்பூந்துருத்தியிலிருப்பதைக் கேள்வியுற்று அங்கே எழுந்தருளினார். அவர் வருவதை நம் அப்பர் கேள்வி யுற்று எதிர்கொள்ளச் சென்றார். அடியார்கூட்டம் அதிக மாக இருந்ததாலே, ஒருவருமறியாமற் பிள்ளையார் சிவிகை யைத் தாங்குவோரில் ஒருவராகச்சென்று தாங்கிச் சுமந்து வந்தார். எதிர்கொள்ளவந்த அப்பரைக் காணாத பிள் ளையார், 'அப்பர் எங்குற்றார்?' என்ன, அப்பர், 'அடியேன் இங்குத் தங்கள் பல்லக்கைத் தாங்கும் பேறுபெற்று இங் குற்றேன்' என்றார். பிள்ளையார் திடுக்குற்றுச் சிவிகையி னின்றும் இறங்கிப் பரபரப்புடன் அப்பரை வணங்க, அவரும் வணங்கினார். அடியார்கள் எல்லோரும் இரு பெரியார்களையும் வணங்கி ஆரவாரஞ் செய்தனர்.

## 23. தென்னாடு வணக்கம்

பிறகு, இருவரும் தங்கள் நலங்களை வினவி யறிந்து கொண்டு, பிள்ளையார் தொண்டைநாடு வணங்கச் செல்ல, அப்பர் பாண்டிநாடு நோக்கிச் சென்றார். இடையிலே **திருப்பத்தூர்** முதலிய தலங்களை வணங்கித் **திருவாலவாய்** சேர்ந்தார். சொக்கலிங்கர் திருமுன் சென்று '**முளைத்தானை**' என்று தொடங்கிப் பாடிப் பரவி மகிழ்ந்தார். அப்பர் எழுந்தருளியதை யறிந்த பாண்டியரும், மங்கையர்க்கரசி யாரும், குலச்சிறையாரும் எதிர்கொண்டு வணங்கி, ஆராத பேரன்புடன் வழிபட்டனர் அவர்கள் அன்பிலே சிலநாள் முழுகியவராய்த் தாண்டகமும் நேரிசையும் பாடிக்கொண்டு தமது திருத்தொண்டைச் செய்து வழிபட்டிருந்தார்.

அங்கிருந்து, அவர்களிடம் விடைபெற்றுத் **திருப்பூவணம்** அடைந்தார். திருப்பூவணத் திருக்கோயிலிலே சிவனார் தமது திருக்கோலத்தைக் காட்டியருளினார். கண்ட அப்பர் கண்ணீர் வாரக் கைகுவித்திறைஞ்சி, '**வடிவேறு திரிசூலம்**' என்னுந் திருத்தாண்டகத்தாற் போற்றினார். பிறகு, **இராமேச்சுரத்து**க்கெழுந்தருளி இராமநாதப் பெருமானாரை நேரிசை முதலிய பதிகங்களைப் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்து வழிபட்டிருந்தார். பின்னர் **திருநெல்வேலி**, **திருக்கானப்பேர்** முதலான தலங்களைக் கசிந்தவுள்ளமும் நீர்பொழியுங் கண்களும் எப்போதுஞ் சிவனாரடியையே தழுவிய தமிழ்த்தொடையுமாய்ப் பணிந்து பாண்டிநாட்டை நீங்கிச் சோழநாடு வந்தார்.

## 24. சோழநாடு வணக்கம்—திருப்புகலூர்—பாசநீக்கம்

சோழநாட்டிலே பல பதிகளையும் வணங்கிக்கொண்டு, திருப்புகலூர் வந்து சேர்ந்தார். பூம்புகலூரில் இறைவரை வணங்குவதும், ஒவ்வொருநாளும் திருமுன்றிலிலே உழவாரப் பணிசெய்வதுமாக எழுந்தருளியிருந்தார். அப்போது, நின்ற திருத்தாண்டகம், தனித்தாண்டகம், திருப்பதித் திருத்தாண்டகம், குறைந்த திருநேரிசை, தனி

நேரிசை, திருவிருத்தம், தசபுராணத் தடைவு, பாவநாசப் பதிகம், மற்றும் சில திருப்பதிகங்களும் பாடி வணங்கினார்.

இப்படியிருக்கும் நாட்களிலே, இறைவர் அப்பருடைய பற்றற்ற உள்ளத்தைப் பலருக்குங் காட்ட விரும்பினார். உழவாரப்படையாலே புல் செதுக்குமிடங்களிலெல்லாம் பொன்னும் நவமணியுமாகப் பெயர்ந்து ஒளிவீசின! அப்பர் அவற்றை உழவாரப்படையாலேயே கற்களைப் போலவே நினைத்து எடுத்தெறிந்தார்! புல்லுங் கல்லும் பொன்னும் மணியும் ஒன்றேயென ஒதுக்கிவரும் அப்பருக்கு முன்னாலே, அரமபையர்கள வானிலிருந்து மின்னற் கொடிகள் வருவதுபோல வந்தனர். அவர்கள் தங்கள் அழகினாலும், கனிவாயிலே வழியும் பல்வகை இசைகளினாலும், கண்வீச்சுகளினாலும், கற்பகத் தளிர்போன்ற மெல்லடிகள் சிலம்பு மிழற்றச் செய்யுங் கூத்தினாலும், அப்பருடைய உள்ளத்தைக் கலக்க முயன்றனர். மலர்களையும், நறுமணப் பொடிகளையும் தூவி, நெருங்கி நின்று, காதற்குறிப்புடன் நோக்கினர்.

நடையறாத பெருந்துறவியரான நாவின்மன்னர், சிவனாரடியிலே தோய்ந்த தம் கருத்தைச் சிறிதும் வழுவவிடாமல் உழவாரப் பணிசெய்துகொண்டிருந்தார். மேலும், அரம்பையரை நோக்கிப், '**பொய்மாயப் பெருங்கடலுள்**' என்னுந் திருத்தாண்டகத்திலே '**அம்மானுக் காளானேன் அலையன்மின்**' என்று பாடி இறைவரை வணங்கினார். அவர்கள் அஞ்சி அகன்றனர். உலகினர் இதையறிந்து வியந்து வணங்கினர்.

இவ்வாறு எழுந்தருளியிருக்கும் நாளிலே ஒரு சித்திரைத் திங்கள் சதயநாளிலே தம் திருமெய் ஒடுங்குமென அறிந்து, '**எண்ணுகேன் என்சொல்லி**' என்று தொடங்குந் திருத்தாண்டகத்திலே, '**புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே**' என்று பாடி அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டவரசெய்தினார்.

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனப் புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டவர செய்திஞர்.
(திருத்—திருநாவுக்கரசர், ௪௨௭)

**" திருநின்ற செம்மையே செம்மையாக்கோண்ட**
**திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன் "**

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௫. குலச்சிறை நாயனுர்

சைவம் பரவியிருந்த தண்டமிழ்ப் பாண்டிநாட்டிலே சமணங் கால் வைத்தது. கொஞ்சங் கொஞ்சமாக வேரூன்றியது. ஒண்டவந்தபிடாரி ஊர்ப்பிடாரியாயிற்று. அரசைப் பிடித்து அரசாட்சியையும் பிடித்தது. அரசன் சமணுஞல், அரசனெவ்வழி அவ்வழிதானே குடிகளும்! சைவத்தைப்பற்றிப்பேச முட்டு, கேட்க முட்டு என்றுன் அரசன். முட்டு என்றுல் தடைதான் பாண்டியநாட்டிலே சைவத்திற்கு முட்டு! இந்நிலையிலே இருவர் சைவர்களாக இருந்தார்கள்—கொண்ட கொள்கை வழுவாக் குடியாளராக இருந்தார்கள்—என்றுல் வியப்புத்தானே!

மேலும், அவர்கள் அரசனிடம் நெருங்கிப் பழகும் அரசியும் மந்திரியும் என்றுல் வியப்பு மிகுவது இயல்பே. மற்றும் அரசனறியாமலே சைவம் பரவ முயன்று வெற்றியும் பெற்றுர்களென்றுல் என்னென்று அவர்களைப் புகழ்வது! அவர்களில் அமைச்சராயிருந்தவரோ **குலச்சிறையார்!** சமணராக இருந்தபோது கூன்பாண்டியராக இருந்து, சைவராக மாறியபோது நெடுமாறஞராக மாறிய பாண்டியரின் நலனிலே, கண்ணுங் கருத்துமாக இருந்தவர் அவரே! திருஞானசம்பந்தரை வரவழைத்துச் சமணரை வாதில் வென்று சைவவொளியைப் பரப்பிய அப்

பெருந்தகையார் பாண்டிநாட்டிலே மண்மேற்குடியிலே தோன்றினார்.

அவர் அரசியலிலே புரட்சி கண்டதைப்போலவே, சமூகப் புரட்சியுங் கண்டவர். சாதிப்புயல் வீசிய அக்காலத்திலேயே எந்தச் சாதியினராயினும் சைவரா யிருந்தாற் போதும்! கண்டவுடன் விழுந்து வணங்கி அஞ்சலி செய்து, இன்மொழி புகன்று, அரண்மனைக் கழைத்துச் செல்வார். அவர்கள் நல்லோராயினும் அல்லோராயினும் ஆறணிந்த அண்ணலாரடியவரெனில் அழைத்துச்சென்று, உண்டியும் உறுபொருளும உவந்தளித்துப் பணிந்து விடைகொடுப்பார். அமைச்சரா யிருக்கிறேமெனும் அகந்தை சிறிதும் அவர் கொள்ளவில்லை அஞ்செழுத்தோதும் அன்பரை—வெண்ணீறு பூசிய தண்ணளியாளரை அன்புடன் போற்றிய அவர் சிவனாரடிநிழலிலே வாழ்வுற்றார்.

"பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௨௫. பெருமிழலைக் குறும்ப நாயனார்

மாவுந் தென்னையும் வளமிகுந்த கமுகும் சூழ்ந்ததும் வெண்ணீற்றொளி விளங்கியதுமான பெருமிழலை என்ற நகரம் மிழலைநாட்டைச் சார்ந்தது. அந் நகரக் குடிகள் வளமிகுந்தவர்கள்! நெறி வழுவாதவர்கள்! அந்நகரின் தலைவர் பெருமிழலைக்குறும்பர் என்னும் பெயரினார்! அவர் அரனாரடியார் குறிப்பறிந்து வேண்டுவன கொடுக்குந் தன்மையர்! அவர்கட்குப் பசிதீர உணவூட்டும் புண்ணியர்! மங்கைபங்கர் மலரடியை மறவாத மனத்தினர்!

இவர் காலத்திலேதான் ஆளுடைய நம்பிகள் திருத்தொண்டத்தொகை பாடினார். 'அடியார்க் கடியேன்' என அப்பெரியார் பாடிய அன்பினையும் பதிகத்தின்

அடியையும் நினைந்து நினைந்து சுந்தரரின் அடிமலர்க் கடியரானார் குறும்பனார். அவரடியே பிறவிக்கடலைக் கடக்கும் புணையென எண்ணிப் பெருமகிழ்வுடன் பற்றினார். அம்முறையிலே தலைநின்று அணிமா முதலிய சித்திகளி லும் வல்லவரானார். மேலும் அரனார் எழுத்தஞ்சையும் அன்புமிக்க கேளும் பொருளும் உணர்வுமாகக்கொண்டார்.

இவ்வாறு வாழ்ந்துவரும் நாளிலே சுந்தரர் கொடுங் கோளூருக்குச் சென்றபோது வெள்ளானைமீதூர்ந்து கைலை செல்வதைத் தம் சித்தியாலே உணர்ந்தார். 'நம்பி திருக்கைலை அடைந்தால் நான்மட்டுந் தனித்திரேன்! கண்ணிலுள்ள கருவிழிபோன்ற வன்றொண்டரைப் பிரிந்து மண்ணிலிரேன்!' என முடிவுசெய்து, தம் யோக முயற்சியினாலே, நம்பிகள் கயிலை செல்வதற்கு முதல்நாள் உடலைவிட்டுக் கயிலைசென்று சிவனாரடிமலர் நீழலில் வைகினார்.

"பெருமிழலைக் குறும்பர்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## உ௫. காரைக்கால் அம்மையார்

### 1. இளமைப்பருவம்—திருமணம்

சோழநாட்டிலே காரைக்காலென்னுந் திருநகர் வணிகர் குடி வாழ்வாயிருந்தது. அங்குள்ள வணிகர், கொள்வதை மிகுதியாகவும் கொடுப்பதைக் குறையாகவுங் கொள்ளாத பண்புடையார். எல்லோர்க்கும ஒரே விலைதான் இயம்பு வார். ஒருவரையும் ஏமாற்றும் பண்பு இல்லாதவர். அவ் வணிகரின் தலைவர் தனதத்தர். அவருக்குக் குலவிளக் காகத்—திருமகள்போலப்—புனிதவதியார் பிறந்தருளினார்.

தளிர்போன்ற மெல்லடிகள் தளர்வுற நடக்கும் தளர் நடைப் பருவத்திலேயே அந்த அம்மையார் அரவணிந்த

அண்ணலாரடிக் கடிமை பழகிவரும் பண்புடையராய்க், காதல் ததும்பவரும் மொழிகளைப் பயின்றார். அருமைத் தந்தையார் பருவத்திற்கேற்ற சிறப்பைப் பண்புடன் செய்துவர, அழகின் கொழுந்து அரனுரன்புடன் வளர்வ தென வளர்ந்தார். விளையாடுமிடங்களிலெல்லாம் செம் பவளவண்ணர் திருமொழியையே செப்புவார். இந் நிலை யிலே மங்கைப்பருவமடைந்தார்.

பெண்மைக்குரிய அழகும் பண்பும் பிழையற அமைந்த அம்மையாரை மணம்பேச நாகைப்பட்டினத்தி லிருந்து நிதிபதி யென்பவன் குலமுறையறிந்த பெரியோரை அனுப்பினான். வந்த பெரியோர்கள் தனதத்தரைக் கண்டு, 'நீர் பெற்ற பைந்தொடியை நிதிபதி மைந்தன் பரமதத்த னுக்கு மணம்புரிந்து தரவேண்டும்' என்றனர். தனதத்தர் மகிழ்வுடன் ஒப்புக்கொண்டார். பெரியோர்கள் இதனைப் பரமதத்தனிடஞ் சென்று அறிவித்தனர். அவன் மகிழ்ந்து திருமணத்தொழிலைச் சிறப்புறத் தொடங்கினான். பெண் வீட்டார்க்குத் திருமணநாள் குறித்துத் திருமுகம் எழுதி யனுப்பினான். தனதத்தர் ஏற்று மகிழ்ந்து, திருமணப் பந்தல் சிறப்புறப் புனைந்து, முளைப்பாலிகைகள் முதலியன அமைத்தார். நிதிபதி மணமகனைக் காப்பணிந்து, திருமணக் கோலம் புனைந்து அழைத்துவந்தான். தனதத்தர் மணப் பிள்ளையைத் தக்கவாறு வரவேற்றுத் தம் அருமைத் திருமகளை மணம்புரிவித்தார்.

## 2. இல்வாழ்க்கை—மாம்பழம்!—கணவன் அச்சம்!

திருமணம் முடிந்தபிறகு, புனிதவதியார் ஒரே மகளா ராகையால், தனதத்தர் மணமக்களை நாகைக்குப் போக விடாமல், தம்மிடத்திலேயே இருக்கக் கேட்டுக்கொண் டார். அவர்களுக்கெனத் தனி மணிமாடம் அருகிலே எடுத்தார் குடிவாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களைக் குறைவற அமைத்துக்கொடுத்தார். வணிகத்திற்கேற்ற முதல் வைத்து, இல்வாழ்க்கையை இயல்புற இனிதாக்கினார்.

பரமதத்தன் தன் வாழ்க்கைத் துணைவியாரிடம் வளரும் காதலுடன் மனைவளம் பெருக்கி வணிகத் துறையிலே வளர்ச்சியுற்றான். புனிதவதியார் புண்ணிய விடையூர்தியாரின் அடிமலரிலே ஓங்கிய அன்புடையவராய் இல்லறத்தை இனிது நடத்தினார். சைவ மெய்யன்பர்கள் வந்தால் நல்ல திருவமுதூட்டுவார். செம்பொன்னையும் நவமணிகளையுந் திரட்டிக்கொடுப்பார்.

இங்ஙனம் இவர்கள் இல்லறம் நடத்தும் நாளிலே, பரமதத்தனுக்கு இரண்டு மாங்கனிகளை வந்தவரொருவர் கொடுத்தார். அவற்றைத் தன் மனைவியாரிடம் அளிக்கும்படி ஆட்களிடங் கொடுத்தான். அவற்றை அவர் வாங்கி வைத்தபிறகு, சிவனடியாரொருவர் பசியுடன் தேடி வந்தார். அவருக்குக் கால் கைகழுவ நீரளித்துப் பீடத்தி லமர்த்தி உணவு படைத்தார். கறியமுது சமைத்தாகாத காரணத்தாலே, தம்மிடங் கணவனளித்த மாங்கனிகளி லொன்றை அரிந்து படைத்தார். வந்த திருத்தொண்டர் வருந்திய பசியாலும் முதுமையின் தளர்வாலும் இனிய உணவை மாங்கனியின் சுவைகலந்து மகிழ்ந்துண்டு வாழ்த்திச் சென்றார்.

பரமதத்தன் வணிகத்துறையிலிருந்து பகலுணவுக்கு மனைக்குவந்தான். நீராடி யுணவுக்கமர்ந்தான். மனைவியார் தம் கடமை வழுவாமல் அருகிருந்து உண்பித்தார். அப்போது முன்வந்த மாங்கனிகளில் மிகுந்திருந்ததை யரிந்து படைத்தார். அதன் சுவையிலே ஈடுபட்ட வணிகன் மற்றொரு கனியையும் படைக்கும்படி கூறினான். அவர் கொண்டு வருபவர்போல் அறைக்குட்புகுந்தார். புகுந்து என் செய்வார்! மெய்ம்மறந்து நின்றார்! கணவன் கட்டளை யின்றிக் கனியைப் பிறர்க்குப் படைத்தல் கடும் பிழை யென்று கலங்கினார்! விடையவர் மென்மலர்த்தாளை உள்ளத்திலெண்ணி அயர்ந்தார். அடியவர் தளர்வு நீங்க அரனாருளாலே அரிய நறுங்கனியொன்று அங்கையிலே வந்திருந்தது! மகிழ்வுடன் அரனாருளை வாழ்த்தியவாறே அதனைக் கணவனுக்குப் படைத்தார்! பரமதத்தன் அக்

கனியின் சுவைகண்டான்! முன்னளித்த கனியை விடச் சுவை மிகுதலை யறிந்தான்!

"இக்கனி அமுதினு மினியது! முன்னிருந்த கனியே யன்று! மூவுலகினும் பெறுதற்கரியது! இஃது ஏது?" என்றான்.

பரமதத்தன் கூறிய மொழிகேட்டுப் பைங்கொடியார் பதைத்தார்! 'சிவனாருளென்று செப்புதல் திறமாகாது; விடை கொடாமையும்—உண்மை உரையாமையும்—கணவனுரை தப்புதலாகும்; என் செய்வேன்!' என்று திகைத்தார்; நடுங்கினார்! இவ்வாறு கலங்கி, இறுதியிலே உண்மையுரைத்தலே உற்ற கடனென, இறைவர் திருமலரடியை எண்ணியவாறே நடந்ததை உரைத்தார்.

கணவன் நம்பாமல், 'இஃது இறைவனருளானால் இன்னும் ஓர் இனிய கனியை பெற்றுக்கொடு!' என்றான். அச்சத்துடன் மனைவியார் அறைக்குட்புகுந்தார். 'இறைவரே! இப்போது ஒரு கனி யளியீரேல் என் உரை பொய்யாகும்' என்று வேண்டினார். மங்கைபங்கர் மகிழ்ந்து மற்றொரு மாங்கனி யளித்தார்! மங்கை நல்லார் கொண்டு வந்து மணவாளன் கையில் வைத்தார்! அவன் வியப்புடன் வாங்கினான்! வாங்கிய கனி மாயமாக மறைந்தது!

பரமதத்தன் அஞ்சி நடுங்கினான். 'பரமனாருள் பெற்ற பாவையார் மக்கட்பிறப்பல்லர்; தெய்வமாவார்!' என்று எண்ணித் தடுமாறினான். இனி இவருடன் வசித்தல்—உறவு கொள்ளுதல்—வாழ்க்கை நடத்துதல்—எவ்விதத்தும் ஏலாது எனத் துணிந்தான்! தன் கருத்தை வெளியிடாமல், அவருடன் தொடர்பின்றி விலகியே வாழ்க்கை நடத்தினான்.

## 3. பரமதத்தன் பிரிவு

'எத்துணைக் காலம் உள்ளும் புறமும் ஒவ்வாமற் காலங்கழிக்க இயலும்? நெருப்பென நெஞ்சிலே கொண்ட

பின்னர் நெருப்புடன் உறைவதெப்படி? அவரிடம் பணி பெறல் ஆகாது என்ற முடிவுக்கு வந்த பின்னர், அணுகிப் பணி செய்யப்—பணிக்குட்பட—ஒருவர் வேண்டுமே! அவர் இவராவதெப்படி? தெய்வத்தைப் பணிகொள்வது தீதன்றோ?''—இவ்வாறு எண்ணியெண்ணித் தனியே வாழ விரும்பினான். மரக்கலமொன்று சமைத்தான். 'கடல்மீது கலங்கொண்டு சென்று வளமிகு செல்வங்கொண்டு வருவேன்' என எவர்களும் அறிய இசைத்தான். பண்டங்களைக் கலத்திலே நிறைய ஏற்றினான். கப்பலில் வேலையாட்களுடனுங் கப்பலோட்டியுடனும் தானும் ஏறினான். கடிதே சென்றது கப்பல்! கப்பலினும் அவன் உள்ளம் கடுகி விலகியது!

தான் விரும்பிய நாடு சென்று, வணிகம் புரிந்து, மட்டற்ற செல்வத்துடன் பாண்டிய நாட்டிலோர் நகரிலே குடியேறினான். அங்குப் பழகியபின், அழகுமிக்க அரிவை யொருத்தியை மணந்து, இல்லறத்தை இனிதே நடத்தி வந்தான். ஒரு பெண்ணும் பிறந்தாள். அப் பெண்ணுக்குப் புனிதவதி யெனத் தன் முதல் மனைவியாரின் திருப் பெயரைத்—தெய்வமென்று கொண்டு விலகிய அம்மையார் பெயரை—அன்புடன் இட்டுப் போற்றினான்.

## 4. பேய் வடிவு கொள்ளல்

இவ்வாறிருக்க, இங்கே—காரைக்காலிலே—புனிதவதியார் தம் கணவன் வரவை நோக்கி இல்லறம் நடத்தி வந்தார். சில நாட்களிற் பரமதத்தன் செயலைக் கிளையினர் கேள்வியுற்றார்கள். ஒருங்கே கூடிச் சிந்தித்துப் புனிதவதியாரை அவனிடங் கொண்டுபோய் விடுவதென முடிவு செய்தனர். ஒரு பொற்பல்லக்கிலே புனிதவதியாரை ஏற்றித் திரையிட்டு அழைத்துக்கொண்டு பல நாட்கள் நடந்து பரமதத்தன் தங்கிய ஊருக்கு வெளியே தங்கினர். ஆட்கள் மூலம் தாங்கள் வந்திருப்பதை அவனுக்கு அறிவித்தனர்.

பரமதத்தன் அச்சங்கொண்டான். ஒருவாறு துணிந்து மனைவியுடனும் மகளுடனும் புனிதவதியார் தங்கியிருந்த இடத்திற்கு வந்தான். 'நான் தங்கள் அருளால் வாழ்கிறேன். இவள் என் மனைவி. இவள் என் மகள். இவளுக்குத் தங்கள் திருப் பெயரையே இட்டேன்' என்று கூறியவண்ணம் மனைவியும் மகளுந் தானுமாக மனைவியார் மலரடியில் விழுந்து வணங்கினான்!

கண்ட காரிகையார் அச்சத்துடன் உறவினர் பக்கல் ஒதுங்கிநின்றார்! உறவினர் நாணமுற்றனர்! 'உன் மனைவியின் காலில் விழுவது தகுமா? ஏன் இப்படிச் செய்தாய்?' என்றனர். பரமதத்தன்:

"இவர் மக்கட்பிறவியல்லர். நற்பெருந் தெய்வமென்பதை நான் நன்றாக உணர்ந்தேன். உணர்ந்தபின் பிரிந்து தனியே வந்துவிட்டேன். எனக்கேற்ற பெண்ணொருத்தியை மணந்தேன். பெற்ற பெண்ணுக்கும் நம் குலதெய்வமான இவர் திருப்பெயரையே இட்டேன். நீங்களும் வணங்குதல் வேண்டும்," என்றான்.

வணிகர் கேட்டு மயங்கி நின்றனர். புனிதவதியார்—காரைக்காலம்மையார்—கண்ணுதலை வணங்கிக் கசிந்து நின்றார்.

"என் கணவருக்காக வனப்பு மிக்க தசைப்பொதியைச் சுமந்து நின்றேன்! இவரெண்ணம் இதுவானால் இனி வேண்டேன்! உன் மலர்த்தாள் போற்றும் '**பேய்வடிவு**' அடியேனுக்கருளல் வேண்டும்," என்று வேண்டினார்.

என்ன வியப்பு! அடியார் வேண்டுவன வேண்டியவாறளிக்கும் அண்ணலா ரருளாலே, ஊனுடம்பை உதறி 'என்புடம்பு' கொண்டு, வானமும் மண்ணும் வணங்கும் பேய்வடிவு பெற்றார்.

வான துந்துபி முழங்கியது! மலர்மழை பெய்தது! அமரரும் முனிவரும் அளவில்லாத சிவகணங்களும் ஆர

வாரித்துக் கூத்தாடினர்! சுற்றத்தாரும் வியந்து, அஞ்சித் தொழுதுவிட்டு வறிதே திரும்பிச் சென்றனர்.

## 5. கைலைச் செலவு—அம்மையே! அப்பா!

பேய் வடிவு பெற்ற பெருமாட்டியார் இறைவரருளால் அப்போதுண்டான வியத்தகு பேரறிவாலே **அற்புதத் திரு அந்தாதியும், திரு இரட்டைமணி மாலையும்** பாடிப் பரமனார் தாள் பரவினார். கைலை மால்வரைக்குச் செல்ல வேண்டுமென்ற காதலாலே பேரருள் தூண்டிய வழியே விரைந்து சென்றார். கண்டவர்கள் வியப்புற்றஞ்சி யோடினர்! 'பேய்! பேய்!!' என்றலறினர். காரைக்கா லம்மையார், 'கண்ணுதலார் என்னை அறிவார்; உண்மை யறியா இந்த மக்கள் உரைப்பதால் என்னகுறை?' என்று சிந்தித்தவராய், மனத்தினும் விரைந்து, வடநாடு கடந்து சூலப்படையார் வாழுங் கைலை மலையைக் கண்டார்! கைகுவித்தவாறே மலைப்பக்கத்தை அடைந்தார்! அங்குக் காலால் நடத்தல் பிழையென்று தலையாலே நடந்து சென்றார்!

அவர் வருவதைக் கண்ட அம்பிகையார் வியந்து, இறைவரை வணங்கித், 'தலையினால் நடந்து வருகின்ற இந்த என்புடம்பின் அன்பு எத்தகையதோ?' என்று வினவினார். இறைவர் புன்முறுவலுடன், 'இவள் நம்மை வழிபடும் அம்மை! இப பெருமை மிக்க வடிவும் நம்மை வேண்டிப் பெற்றாள்,' என்றருளினர். பிறகு, காரைக்காலம்மையார் அருகில் வந்தவுடன், '**அம்மையே!**' என்று அன்புடன் அழைத்தார். அம்மையார், 'அப்பா!' என்று அழைத்தவராய்ச் சென்று திருவடிகளில் வணங்கினார்.

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
'பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை
யென்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்துபாடி
அறவா! நீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க!' என்றார்.
(திருத்—காரைக், சு0.)

"இறைவரே! தங்களிடம் நீங்காத இன்ப அன்பு வேண்டும்! பிறவாமை வேண்டும்! ஒருகால், பிறப்புண்டானல் இறவாமை வேண்டும்! மேலும் தாங்கள் ஆடும் போது தங்கள் திருவடிக்கீழிருந்து கண்டு மகிழ்ந்து பாடியிருக்கவேண்டும்," என்று வேண்டினார்.

இறைவர் அவ்வாறே அருள் செய்து, 'தென் திசையிலே திருவாலங்காட்டில் நாம் நடனம் ஆடும்போது நீ கண்டுமகிழ்ந்து பாடுக!' என்றார் அம்மையார் அப்பரை வணங்கி விடைகொண்டு வந்து திருவாலங்காட்டை நெருங்கியதும் மீண்டும் தலையாலே நடந்து சென்றார்.

திருவாலங்காட்டிலே அண்டமுற நிமிர்ந்தாடும் அழகிய கோலங்கண்டு, 'கொங்கைதிரங்கி' எனத் தொடங்கி, மூத்ததிருப்பதிகம் பாடி வணங்கியிருந்தார். திருக்கூத்தை வணங்கும் காதல் மேலும் மேலும் வளர்ந்தது. ஆகையால், மேலும், 'எட்டியிலவம்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடி மகிழ்ந்தார்.

இறைவரால் 'அம்மையே!' என அழைக்கப்பெற்றவரை—திருக்கூத்தினிலே இறைவர் சேவடிக்கீழ் எப்போதும் பாடிப் பரவியிருப்பவரை—எப்படிப் புகழ்வது?

"பேயார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## உகூ. அப்பூதி அடிகள் நாயனார்

### 1. பண்பு—யாவுந் திருநாவுக்கரசே!

சோழவள நாட்டிலே திங்களூரிலே, அந்தணர் மரபிலே அப்பூதியடிகள் என்பவர் திருக்கூத்தரின் சேவடிக்கன்பர்! மிக்க புகழுடையவர்! அளவற்ற தவத்தினர்! களவு பொய் முதலிய குற்றங்களைக் கடிந்தவர்! இல்லற வாழ்வினர்! அவர் ஆளுடைய அரசை

நேரிற் பாராமலே—அவர் அறியாமலே—விரும்பி அவர் திருவடியைப் புகலெனக் கொண்டார். தாம் உண்டாக்கிய தண்ணீர்ப்பந்தல்கள், சாலைகள் குளங்கள் முதலான வற்றிற்கெல்லாம் திருநாவுக்கரசின் திருப்பெயரையே இட்டார். அஃதாவது அப்பர் பெயராலேயே அவற்றை அமைத்தார். தம் மக்களை மூத்த திருநாவுக்கரசு இளைய திருநாவுக்கரசு என்றே அழைத்தார். அவருக்கு யாவும் திருநாவுக்கரசே ஆயின!

"புணர்ச்சி பழகுதல் வேண்டா ; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். (குறள் - எஅரு)

என்னும் வள்ளுவர் வாக்குக்கு இலக்கியம் அப்பூதி யடிகளே !

## 2. அப்பர் கண்டார்—நீர் எங்குளீர்?

இவ்வாறு வாழும் நாட்களில், திருப்பழனத்தை வணங்கிய திருநாவுக்கரசர் பிற திருப்பதிகளையும் வணங்கத் திங்களூர் வழியே எழுந்தருளினார். அங்கே ஒரு தண்ணீர்ப் பந்தலைக் கண்டார். கோடையின் வெம்மையைத் தணிக்க அங்கே தங்கினார். அளவில்லாத மக்கள் செல்லும் வழியிலே, அருளுடையார் உள்ளம் போன்ற தன்மை யுடையதாய், வேனில வெப்பத்தை நீக்கி, நீர் நிறைந்த பொய்கைபோலக் குளிர்ச்சி தங்கிய இடமுடையதாய், நல்ல நிழலைத்தரும் அந்தத் தண்ணீர்ப்பந்தலின் இனி மையை நோக்கி வியந்தார்! அந்த வியப்புக்கெல்லாம் வியப்பாக எங்கு நோக்கினும் திருநாவுக்கரசு என எழுதி யிருப்பதைக் கண்டார்! "இப்பந்தலுக்கு இப்பெயரை யிட்டவர்கள் யார்?" என்றார். அறிந்தவரொருவர், 'இப் பெயராலே அப்பூதியடிகளார் அமைத்தனர். இது மட்டுமா? எங்குமுள்ள சாலைகளும் குளங்களும் பொழில் களும் அவர் பெயராலேயே அமைக்கப்பெற்றுள்ளன!"
அப்பர் திகைப்பும் அளவு மீறியது!

"அவர் எங்குள்ளார்?"

"அவர் இப்போது தான் மனைக்குச் சென்றார். அதுவும் இதோ அருகிலேயே உள்ளது."

ஆளுடைய அரசு அடியவர் திருமனையை அடைந்தார். அரனாரடியாரொருவர் வந்துளாரெனக் கேட்டு அப்பூதியடிகள் வெளியே வந்தார். வந்துநிற்கும் அரசை வணங்கினார். அவர் வணங்குமுன் அரசும் வணங்கினார்.

"அளவிலாத் தவம்புரிந்தேனோ? அருள்வடிவான தாங்கள் என் மனைக்கு எழுந்தருளியது என்ன வேண்டியோ?" என்று கசிந்து வினவினார் அடிகள்.

"திங்கள் முடியாரைத் திருப்பழனத்திலே வணங்கி வருகிறேன். வழிக்கரையிலே தங்கள் தண்ணீர்ப்பந்தரைக் கண்டேன்! பிற அறங்களையுங் கேள்வியுற்றேன். மிகவும் மகிழ்ந்தேன்! பிறை முடியாரடியவர்க்காகத் தாங்கள் வைத்த கணக்கற்ற தண்ணீர்ப்பந்தல்களிலே தங்கள் பெயரை எழுதாமல் வேறொரு பேரெழுத வேண்டிய காரணமென்ன?" என்று கேட்டார் அரசர்.

மறையவர் மனங் கலங்கியது!

"தாங்கள் அறைந்தருளியது நன்றன்று! சமணரும் அவருடன் கூடிய வேந்தனும் செய்த சூழ்ச்சியைத் தம் திருத்தொண்டின் வலிமையாலே வென்றவர் திருப்பெயரோ வேறொரு பெயர்?"

"நம் இறைவர் திருவடியின்கீழ்த் தங்கிச் செய்யுந் திருத்தொண்டாலே இம்மையிலும் வாழலாம் என்பதை என்போன்றவர்களும் அறியச் செவ்விய நெறிகாட்டிய திருநாவுக்கரசர் திருப்பெயரைத்தான் அடியேன் எழுதினேன். தாங்கள் அதனையுணராமற் சுடுசொல்லுரைத்தீர்கள். கடலிலே கல்லைத் தெப்பமாகக்கொண்டு கரையேறிய அவர் பெருமையை இவ்வுலகிலறியாதார் எவர்? அருமையான சைவத் திருக்கோலத்துடன் நின்று இவ்வாறு கூறினீர்களே! நீர் எங்கு உள்ளீர்? நீர் யார்?" என்று சினத்துடன் அப்பூதி அடிகள் கேட்டார்.

அப்பர் அப்பூதியடிகளின் பெருமையை அறிந்தார்! அவருள்ளம் நடுங்கியது!

"வேறு துறையிலிருந்து வெளியேற அறிவில்லாம லுழன்று, அந்திவண்ணர் சூலையினு லாட்கொள்ளச் சைவ மடைந்து வாழ்வுபெற்ற சிறுமையேன் யானே!" என்றார் அப்பர்!

அப்பூதியடிகளின் கைம்மலர்கள் முடிமீதேறின! கண்களிலிருந்து அருவி பெருகியது! மெய்சிலிர்த்தது! உரை குழறியது! அடியற்ற மரம்போல ஆளுடைய அரசின் மலரடியிலே விழுந்து பற்றிக்கொண்டார்! வாக்கின் மன்னர் உளம் நெகிழ்ந்து கைகளாலே தழுவி யெடுத்தார்!

வறியவர் புதையல் பெற்றதுபோல மகிழ்ந்த அந்த ணர் களிப்பு மிகுந்து, முன்பின் செய்வதறியாமல், இன்பக் கூத்தாடும் உளளத்துடன் உள்ளே ஓடி, மனைவி மக்களுக் குக் கூறிச் சுற்றத்துடன் வெளிவந்தார். மனைவிமக்களை யும் உறவினரையும் எல்லோரையும் விழுந்து வணங்கச் செய்து, உள்ளுக்கழைத்துச் சென்றார். நல்லதொரு பீடத்திலே எழுந்தருளச்செய்து, திருவடிகளை நறுநீராற் கழுவி மலரிட்டு வணங்கினார். அந்த நீரைத் தங்கள் மேலே தெளித்துக்கொண்டு, உள்ளுக்குங் கொண்டார். அப்பரளித்த திருநீற்றை வாங்கியணிந்து மகிழ்ந்தார். பிறகு, திருவமுது செய்யவேண்டுமென வேண்டிக்கொண் டார். அப்பரும் ஒப்பினார்.

அந்தணரும் அவர் மனைவியாரும், 'நம் பேறு சிறந்தது! சொல்லரசர் உணவுகொள்ள இசைந்தது இறைவரருளே!' என மகிழ்ந்து அறுசுவையுடன் அமுது சமைத்தனர். மூத்த திருநாவுக்கரசை அழைத்து வாழைக் குருத்து அரிந்துவரக் கட்டளையிட்டார்.

### 3. அரவு தோட்டது!—அமுது செய்தருள்க!— நன்று நீர் புரிந்தது!

'எனக்கிப்பணி இட்டனரே! என் பெற்றோர் நல்லோர்! இதுசெயும் பேறு பெற்றேன்!' என்று களித்த மைந்தர் தோட்டத்திற்கோடினார். நல்ல பெரிய வாழையின் குருத்தைக் கத்தியால் அரிந்தார். அங்கேயிருந்த அரவு, அந்தோ! அவர் கையை வளைந்து சுற்றித் தீண்டியது! தீக்கண்களுடன் காணப்பெற்ற அரவை உதறிவிட்டு வாழைக் குருத்தை யேந்தி ஓடிவந்தார். 'நஞ்சு தலைக்கேறுமுன் இதனைக் கொடுப்பேன்' என்று நஞ்சு வேகம் பின்னுற முன்னோடிவந்தார். பாம்பு தீண்டியதை எவர்க்கும் பகரே னென்று முடிவுசெய்து, கொண்டுவந்து, அன்னையார் பக்கத்திலே வைத்தார். இதற்குள் நஞ்சு தன் வேலையை முடித்தது பற்களுங் கண்களும் மெய்யுங் கருகி, மயங்கி வீழ்ந்தார்.

இலையை வைத்து விழுந்த மைந்தரைப் பெற்றோர் நோக்கினர்! திடுக்கிட்டனர்! உற்று நோக்கினர்! அரவினால் மடிந்தமை யறிந்தனர். அந்தோ! இதனையறிந்தால் அடியவர் அமுது செய்யார். இது சிறிதும் வெளிவரலாகாது! என முடிவுசெய்தனர் அடியவர் திருத்தொண்டு அருமை மகனார் உயிரினுஞ் சிறந்ததாயிற்று! என்னே அவர்தம் பெருமை! மூத்த திருநாவுக்கரசைப் பாயில் வைத்துச் சுருட்டிப் புறக்கடைப்பக்கமுள்ள அறையொன்றில் வைத்தனர். ஒன்றும் நடவாததுபோல், உவகைப் போர்வையால் உள்ளத்தை மூடி, அப்பரிடம் வந்து வணங்கி, 'அமுதுசெய்து எம் குடிமுழுதும் உய்யக்கொள்க,' என விழுந்து வணங்கி வேண்டினர். திருநாவுக்கரசர் எழுந்தருளினார். அவர் திருவடிகளைக் கழுவி, மற்றோரிருக்கையில் எழுந்தருளச்செய்தனர்.

இருக்கையிலமர்ந்த அப்பர் யாவருக்கும் திருநீறளித்தார். இளைய திருநாவுக்கரசுக்கு அளிக்கும்போது, "இவருக்கு மூத்தவர் எங்கே? அவருக்கன்றோ முதலில் அளிக்க வேண்டும்?" என்று வினவினர்.

அப்பூதியடிகள் திடுக்கிட்டார்! எனினும், அச்சத்தை வெளிக்குக்காட்டாமல், 'அவன் இங்கே இப்போது உதவான்,' என்றார். அம்மொழி அப்பருக்கு ஏதோ தடுமாறுதலை இறைவரருளால் உண்டாக்கியது. 'தாங்கள் கூறுவதை என் உள்ளம் ஏற்கவில்லை. அவர் என் செய்தார்? ஏதோ நடந்திருக்கிறது; உண்மையை உரையுங்கள்,' என்றனர்.

அந்தணர் நடுங்கினார்! 'பெரியார் அமுது செய்யத் தடையாக இஃது ஏன் வந்தது?' எனக் கலங்கினார். உண்மையை உரைத்தற்கு அஞ்சினார் எனினும், அடியவர் கேட்கும்போது பொய் கூறலாகாது என முடிவுசெய்து, நிகழ்ந்ததைக் கூறிவிட்டார்.

அப்பர் திகைப்படைந்தார்! 'நீர் புரிந்தவண்ணம் நன்று! எவர்தாம் இப்படிச் செய்வார்?' என்று கூறிக்கொண்டே எழுந்து சென்று, பிணத்தை நோக்கினார்! கலங்கினார்! இறைவரருளைச் சிந்திந்தவராய்த் திருக்கோயிலின்முன் கொண்டுவரச்செய்து, 'ஒன்றுகொலாம்' என்னுந் திருப்பதிகம் பாடினார். இறைவனருளால், அப்பிள்ளையார் துயின்றெழுந்தவர்போல் எழுந்து, அப்பர் திருவடிகளில் வணங்கினார். அவரை யழைத்துக்கொண்டு மனையகம்புகுந்து திருநீறளித்தார். பிறகு, இளைய திருநாவுக்கரசையும் திருநீறு அளித்து வாழ்த்தினார்.

இந்நிகழ்ச்சியை அறிந்த யாவரும் திருநாவுக்கரசரின் திருத்தொண்டைப் புகழ்ந்தனர். அந்தணரும் அவர் மனைவியாரும், 'இவன் இத்தகைய பெரியாரமுது செய்யக் காலங்கடக்கும்படி செய்தானே!' என்று வருந்தினர். அவர் வாட்டத்தை யறிந்த அப்பர் அமுதுசெய்ய அமர்ந்தார். அந்தணரை நோக்கித், 'தாங்களும் சிறுவர்களும் உடனிருந்தமுது செய்வீர்களாக!' என்று கூறினர். அவ்வாறே அவர்களும் அமர்ந்தனர். மறையவர் மனைவியார் வாக்கின்மன்னர்க்கும் மறையவர்க்கும் உணவு படைத்தனர். அன்பும் இனிமையுங் கலந்த அந்த அருஞ்சுவை

யமுதையுண்டு சொல்லரசர் மகிழ்ந்தார். சொல்லரசர் அமுதுசெய்யும் பேறு பெற்றோமென்று, மறையவர் மகிழ்ந்தார்; அப்பரைச் சிலநாள் எழுந்தருளியிருக்கும்படி வேண்டினார். அவரும் சிலநாள் அங்கிருந்தார். பிறகு திருப்பழனஞ் சென்று இறைவரைப் பாடும்போது அப்பூதியடிகளின் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடினார்.

அப்பர் விடைபெற்றுப் பிரிந்து சென்றபின், அவருடைய திருவடிப் பெருமையைச் செப்பும் பேற்றைப் பெற்றார், திங்களூர் அந்தணர். இந்நிலையிலே அவர் திருத்தொண்டு செய்திருந்து, இறைவர் மலர்த்தாள்நிழலெய்தினார்.

"ஒரு நம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## உஎ. திருநீலநக்க நாயனார்

### 1. பண்பு

காவிரிநாட்டிலே சாத்தமங்கை என்னும் திருநகரொன்றுள்ளது. அங்கு வாழ்வோர் மறையவர். அவர்களிற் சிறந்தவர் திருநீலநக்கர் என்பவர். மறையின் உள்ளுறைப் பொருளாவது மங்கைபங்கரடியவர் திருவடிகளில் மலரிடுதலும் வணங்குதலுமே யென்னும் கொள்கையுடையவர் அவர். சிவவழிபாட்டிலே சிறந்தவர். அடியார்களுக் கமுதூட்டுவதில் ஆர்வமுள்ளவர். அவர்களுக்கு வேண்டும் எவற்றையும் இனிதுற முடித்துத் தருவார். இவ்விரண்டுமே செய்யும் எண்ணமுடையவர்.

வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் நல்லடி யாரையும் நயந்து
பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே
காத லாலவை இரண்டுமே செய்கருத் துடையார்.

(திருத—திருநீல. ௫)

## 2 அயவந்தி யிறைவர் வழிபாடு—சிலம்பிக் கொப்புளம்

ஒரு திருவாதிரையின்போது, மனையகத்திலே வழிபாடு முடித்து, அயவந்தி யென்னுந் திருக்கோயிலை யடைந்தார். அவர் வாழ்க்கைத் துணைவியார் வழிபாட்டுப் பொருள்களுடனே தொடர்ந்துவந்தார் இருவருமாக இறைவரை மலரிட்டு வணங்கி வாழ்த்தினர். வழிபாடு நிறைந்தும் உள்ளக்காதல் நிறையாமையாலே சிவலிங்கத்திற்கெதிரே அமர்ந்து அஞ்செழுத்தையும் அன்புடன் பயின்றார் சிவனார் திருக்கோலத்தைக் கண்டுகண்டு காதலாற் கனிந்தார். அவர் மனைவியாரும் அரனார் திருவடியன்பிலே திளைத்து நின்றிருந்தார்.

இந்நிலையிலே ஒரு சிலம்பியானது சிவலிங்கத்தின் மேலே விழுந்தது. கண்ட காரிகையார் பதைத்து விரைந்து ஊதினார். அப்போது வாய்நீரும் இறைவர் மேற்பட்டது. குழந்தையின்மேற் சிலம்பி விழுந்தால் அன்னை பதைப்புடன் செய்யும் அச்செயலையே அம்மையார் செய்தார். அதைக்கண்ட அந்தணர் கண்புதைத்துக் கொண்டு நடுங்கினார்.

“அறிவில்லாதவளே ! என் செய்தாய் ?”

“சிலம்பி விழுந்ததால் ஊதி உமிழ்ந்தேன் !”

‘வேறு வகையில் அதனைப் போக்காமல் உன் வாய் நீரையோ இறைவர்மேல் உமிழ்ந்தாய்? இத்தகைய தவறு செய்த உன்னைத் துறந்தேன்,’ என்றார்.

காதலியாரின் அன்பினைக் கருத்திற் கொள்ளவில்லை. அவர் ! இது தவறு என்றே முடிவுசெய்தனர். மாலைபோய் இரவும் வந்தது மனைவியார் திருக்கோயிலிலேயே நிற்கத் தாம்மட்டும் திருமனையை அடைந்தார். அன்றிரவு கனவிலே இறைவர் எழுந்தருளி, அன்ப! உன் மனைவியின் வாய்நீர்படாத இந்த இடங்களிலே கொப்புளங்களைப் பார் !’ என்று கூறிக் காட்டி மறைந்தருளினார்.

கேட்ட அந்தணர் விழித்தெழுந்து, இறைவர் திருவருளை வியந்து, போற்றினார். பொழுது புலரத் திருக்கோயிலுக்குச் சென்று, முக்கண்ணரை வணங்கி, மனைவியாரை அழைத்துக்கொண்டு, மனையை அடைந்து மகிழ்ந்தார்.

## 3. ஆளுடைய பிள்ளையார்க்கு விருந்து—பாணர்க்கு வேள்வித்திண்ணை அருகில் இடம்

திருநீலநக்கர் திருப்பணி—அடியார் விருந்து—மேன் மேலும் சிறப்பாக நடைபெற்றுவந்தது. அக்காலத்தில் ஆளுடைய பிள்ளையார் அடியார்களுடன் சாத்தமங்கை நாடி எழுந்தருள்வதைக் கேள்வியுற்றார் நகரை யணி செய்து, எதிர்கொண்டு வணங்கி, அன்பு ததும்பு முள்ளத்துடன் அழைத்துச் சென்றார். அவருக்கும் திருநீலகண்டப் பெரும்பாணர் முதலிய அடியார்களுக்கும் உயர்தர விருந்து செய்வித்தார். அன்றிரவும் பிள்ளையாரையும் அடியார்களையும் தம் இல்லத்திலேயே உணவு உண்டு துயில்கொள்வதற் கேற்றன செய்வித்தார்.

திருஞானசம்பந்தர், 'பாணர்க்கும் அவர் வாழ்க்கைத் துணைவியார்க்கும் இரவு துயில்வதற்கொரு நல்லிடமமைத்துத்தரவேண்டும்' என நீலநக்கரிடம் கூறியருளினார். அதற்கிசைந்து அவர்களுக்குத் தம் வீட்டின் நடுவிலுள்ள வேள்வித் திண்ணையின் அருகிலே படுக்கை யமைத்துக் கொடுத்தார். பாணர் அக்காலத்திலே தாழ்ந்த குலத்தவராக மதிக்கப்பட்டனர். எனினும், அக் குலத்தாராகிய திருநீலகண்டப் பெரும்பாணர்க்கும் அவர் மனைவியார்க்கும் இடம் அமைத்துக்கொடுத்த நாயனாரின் உளப்பண்பை எப்படிப் புகழ்வது? மேலும், அவருக்கு அங்கே இடங்கொடுத்ததனால், அந்தணரான திருநீலநக்கரின் வேள்விக் குழியிலுள்ள மாறாத செந்தீயும் முன்னினும் வலஞ்சுழித்து ஓங்கியது.

மறுநாள் வைகறையிலே அயவந்தி இறைவனை வணங்கிய பிள்ளையார் திருநீலநக்கரின் திருத்தொண்டைச் சிறப்

பித்துப் பாடினார். பின்னர், அவரிடம் பிரியாவிடை பெற்றுப் பிறபதிகளை வணங்கச் சென்றனர். திருநீலநக்கர் அடிக்கடி பிள்ளையார் வணங்கும் பதிகளுக்குச் சென்று தாமும் வணங்கி அவருடன் இருந்துவருவார்.

### 4. திருநல்லூர்ப் பெருமணப் பேரொளி

நீண்ட நாட்கள் அவரோடு இவ்வாறு பயின்று வந்து, தம் திருத்தொண்டையும் செய்துவந்த அந்தணர், பிள்ளையார்க்குத் திருநல்லூரிலே திருமணம் நடந்தபோது கூட விருந்து சேவித்தார். அங்கே தோன்றிய பேரொளியிலே தாமும் கலந்து சிவனாரடிநீழலைச் சேர்ந்தார்.

**'ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்'**

*திருச்சிற்றம்பலம்*

---

## உ௮. நமிநந்தியடிகள் நாயனார்

### 1. பண்பு

வளமிகுந்த சோழநாட்டிலே எப்போதும் இன்பமே பெற்றவூர் என்னும் பொருளுடைய **ஏமப்பேறூர்** என்றொரு நகரிருந்தது. அந்நகர் அழகுபயிலுந் தெருக்களும், அன்புபயிலும் மனைகளும், குளிர்ச்சிபயிலும் பொழில்களும, செங்கழுநீர் மலர்களுந் தாமரைமலர்களும் பயிலும் நன்செய்களும், மறைபயிலும் வைகறைகளுமுடையது. கழனியிலே வளைந்து படிந்து கிடக்குஞ் செந்நெற் பரப்பின்மீது இடையிடையே செந்தாமரை மலர்கள் மலர்ந்திருப்பது மணல் பரப்பிய வேள்விச்சாலையிலே இடையிடையே செந்தீவளர்வதுபோ லிருக்கும்.

அந்த வளமிகுந்த நகரத்திலே, சைவ அந்தணர் மரபிலே **நமிநந்தியடிகள்** என்பவரொருவ ரிருந்தார். அவர் ஒழுக்கத்திலே செந்தீ போன்றவர். திருவெண்ணீற்றுச்

செல்வமே உண்மைச் செல்வமென்றுணர்ந்தவர். இரவும் பகலும் அரவணிந்த அண்ணலாரடியே நினைந்து நெகிழ்ந்து இன்பமடைந்து வந்தார். ஒவ்வொரு நாளும் அருகிலுள்ள திருவாரூர் சென்று, புற்றிடங்கொண்ட மாணிக்கப் பேரொளியை வழிபடுவதே எல்லாவகையினும் ஊதிய மெனக்கொண்டு, அவ்வாறே செய்து வந்தார்.

## 2. நீரால் விளக்கேரித்தல்

திருவாரூர் இறைவர் பூங்கோயிலுக்கருகிலே அரன் நெறி என்னுந் திருக்கோயிலொன்றுண்டு. நமிநந்தியார் ஒருநாள் அக்கோயிலில் உள்ள அண்ணலாரை வணங்கிய பின்னர்த் திருப்பணிகள் பல செய்தார். மாலை மயங்கி, விளக்கேற்றும் நேரம் வந்தது கண்டு, விளக்கேற்றி வணங்க வேண்டுமென்று காதல் கொண்டார். வீட்டிற்குச் சென்று வர நேரமாய்விடுமென்றறிந்து, அருகிலுள்ள மனையொன்றிலே சென்று விளக்குக்கு நெய்தரும்படி வேண்டினார் அந்த மனையிலுள்ளோர் சமணர்கள அவாகள் நகைத்து, 'கையிலே கனலுடையவர்க்கு விளக்கு வேண்டியதில்லையே! இங்கே நெய் கிடையாது வேண்டுமானால் நீரை முகந்து விளக்கேற்றுங்கள்,' என்றனர்.

அடிகள் மனங்கலங்கித் திருக்கோயிலின்முன் வந்து வணங்கி நின்றார். அப்போது வானத்திலே, 'கலங்காதே! அருகிலுள்ள குளத்துநீரை முகந்து வந்து விளக்கேற்றுக!' என ஓரொலி எழுந்தது. கேட்ட அந்தணர் திகைத்து, நீரணிந்த சடையினாருளியவண்ணம் ஐந்தெழுத்தையுஞ் சிந்தையார ஓதிக்கொண்டே பொய்கைநீரை முகந்து வந்து, அகலிலே முறுக்கியிடப்பட்ட திரியின்மேல் வார்த்து ஏற்றினார். கண்டவர் வியக்கும்படி அது நன்றாக—நெய் விளக்கேபோல—எரிந்தது அடியார் வியந்து, திருவருளைத் தொழுதவண்ணம் அக்கோயிலிலுள்ள விளக்குகளையெல்லாம் நீர்வார்த்தே யேற்றினார். இம்முறையே ஒவ்வொரு நாளும் நடந்துவந்தது. சமணரும் வியந்தனர்.

## 3. திருக்கோயில் மேற்பார்வையாளர்

இவ்வாறு நிகழும் நாளிலே, சமணநெறி மாறிச் சைவ நெறி பரவியது. சோழன் சைவனானான். அவன் நமிநந்தியாரின் திருத்தொண்டுக்கு மகிழ்ந்து, அவரையே தலைவராகச் செய்து, திருக்கோயில்களின் வழிபாட்டுக்குரிய நிபந்தங்களை யெல்லாங் குறைவின்றி அமைத்துக்கொடுத்தான்.

அடிகள் சைவாகம முறைப்படி வழிபாடுகளை நடப்பித்தார் வீதிவிடங்கப் பெருமானார் திருவிளையாட்டுத் திருவிழாக்களும் பங்குனியுத்தர விழாவும் ஒழுங்காகச் சிறப்புடன் நடக்கவேண்டியவற்றைச் செய்து நடத்தினார்.

## 4. திருவாரூரிலே உயர்வு தாழ்வில்லை

ஒருமுறை வீதிவிடங்கப் பெருமானார் திருமணலி என்னுமிடத்திற்கு எழுந்தருளுந் திருவிழா நடந்தது. அவ்விழாவிலே எல்லாக் குலத்தினரும் உயர்வு தாழ்வு பாராமற் கூடிச் சேவித்தனர். அந்தத் திருவோலக்கத்தை நமிநந்தியடிகளும் சேவித்துக் களிப்புற்றார். இரவு திருவோலக்கம் பணிந்தபின் மனைக்குவந்து, வெளித்திண்ணையிலேயே படுத்துக்கொண்டார். அவர் மனைவியார், வந்து 'சிவவழிபாடும் அன்றாட வேள்வித்தொழிலும் முடித்து உணவு உண்ணாமல் இங்கே ஏன் படுத்துக்கொண்டீர்கள்?' என வினவினார்.

'அந்தணர், திருமணலி யெழுச்சி சேவிக்கச் சென்றேன். அங்கே எல்லாக் குலத்தினரும் ஈண்டியிருந்தனர். ஆகையால், நீராடாமற் சிவவழிபாடு செய்யமுடியாது. குளிப்பதற்கு நீரெடுத்துவா' என்றார். மனைவியார் நன்றெனச் சென்றார்.

இந்நிலையிலே, சிறிது உறக்கம்வர, அந்தணர் கண்ணயர்ந்தார். திருவாரூர்ச்சிவனார், அடியார்போலக் கனவிலே எழுந்தருளி, 'அந்தணரே! ஆரூரிற் பிறந்தாரெல்லாஞ் சிவகணங்கள். நாளைக்கு நீர் அக்காட்சியைக் காணலாம்,' என்றார்.

மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாள்தாம்
மான அன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி
'ஞான மறையோய்! ஆரூரில் பிறந்தாரெல்லாம் நம்கணங்கள்
ஆன பரிசு காண்பாய்!' என் றருளிச் செய்தங் கெதிரகன்றார்.
(திருத்—நமிநந்தி, உஎ)

அந்தணர் விழித்துக்கொண்டு நடுங்கிப், 'பிழைபுரிந்தேன்' என்றயர்ந்து, நீராடாமலே சிவவழிபாடு முதலியன முடித்து உணவுகொண்டார்.

மறுநாட் காலையிலே, திருவாரூருக்குச் சென்றபோது, திருவாரூர்ப் பிறந்தாரெல்லோரும் சிவவடிவாகக் காட்சியளித்தனர். அந்தணர் தலைமேற் கைகுவித்தவண்ணம் அவர்களை விழுந்து வணங்கியெழுந்தார். உடனே, அத்தோற்றம் மாறி எல்லோரும் தங்கள் உண்மை நிலையோடு காணப்பெற்றனர். கலங்கிய மறையவர், 'அடியேன் பிழையைப் பொறுக்கவேண்டும்,' என அரனரடியை இறைஞ்சினர். பிறகு, திருவாரூர்க்கே குடிபுகுந்தார். அங்கிருந்து, முன்போலவே திருத்தொண்டுசெய்து வாழ்ந்து, இறைவர் திருவடியை யெய்தினர்.

இவர் திருப்பணியை ஆளுடையவரசு தம் திருப்பதிகத்திலே சிறப்பித்துள்ளார்.

"அருநம்பி நமிநந்தி யடியார்க்கும் அடியேன்"

சுந்தரர் திருவடி வாழ்க!

முதற்காண்டம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

---

# இரண்டாம் காண்டம்

## சா. வம்பறுவரிவண்டுச் சருக்கம்

## உக. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### 1. குழவிப் பருவம்

சோழநாட்டிலே வளஞ்சிறந்த திருநகர மொன்றுளது. அது பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம, சண்பை, சீர்காழி, கொச்சைவயம, திருக்கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்களை யுடையது அந்த நகரம் எப்போதும் வேள்விப் புகையாலே இரவும், திருநீற்றொளியாலே பகலும் ஆகிக் காணப்பெறுவதாலே இயற்கையாகிய பகலு மிரவும் வேண்டாமென்று நினைக்கும்வண்ணம் இருந்தது. அங்குள்ள மாமரத்திலுள்ள கனிகள் வெடித்து ஒழுகும் இனிய சாறு அம்மரத்தினிலைகளின்வழியே, அம் மரக்கிளைகள் பரவிய பொய்கையிலே தாமரை மலர்களில் ஒழுகுவது அந்தணர் வேள்வியிலே நெய் சொரிவதைக் காட்டும். அங்குள்ள சிறுவர்களின் விளையாட்டுக்கள் வேள்வி விளையாட்டுக்களே! மகளிர் செய்யும் மனைவேலை வேள்வி வேலைகளே!

இத்தகைய நகரிலே, அந்தணர் குலத்திலே, கவுணிய மரபிலே, சிவனார் மலரடியே சிந்திக்கும் சிவபாத இருதயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு நற்குணங்களெல்லாம் நிரம்பிய பகவதியார் என்னும் பெருமாட்டியார் வாழ்க்கைத் துணைவியானார். இருவருஞ் செய்த தவத்தினாலே, திருத்தோணியப்பா திருவருளாலே, கோள்களெல்லாம் நன்னிலையிலே நிற்க, நல்ல ஓரையிலே, திருவாதிரை நாளிலே, திருநீற்றொளி தழைக்கவும், சைவம் ஓங்கவும், ஏழுலகும் களிக்கவும், திசைகளிலெல்லாம் தென்

திசையே சிறப்புறவும், தமிழ் வழக்குப் பிறமொழியின் வழக்கை வெல்லவும், இசைத்தமிழ் நிலைபெறவும், எப்பொருளிலும் சிவம்பெருக்கும் பிள்ளையார் பிறந்தருளினர்.

அப்போது திருக்கழுமலப்பதியிலே பெற்றோர்களுக்கேயன்றி மற்றோர்களுக்கும தம்மையறியாமலே பேரின்பக் களிப்புண்டாகி மெய்சிலிர்த்தது. அவர்கள் என்ன காரணமென் றறியாமலே திகைததனர். எங்கும் மலர்மணமும் தேன துளியுங் கலந்த தென்றல் மெல்லென இன்பமுடன் தவழ்ந்தது! பலவகை மரங்களுங் கொடிகளும் நீர்மல்கிக் குளிர்ந்துநின்றன! மங்கல வோசையே எஙகும் ததும்பி நின்றது!

சிவபாத இருதயரின் மகிழ்ச்சி செப்புதற்கியலாத வகையிலே பெருகியது. மங்கலம் பெருக எல்லோருக்கும் விருந்தளித்து விழாக் கொண்டாடினர். நகரத்தா ரெல்லாருமே தம்தம் வீட்டிலேயே குழந்தை பிறந்ததாக எண்ணிக் கொண்டாடினர்கள் முறைப்படி செய்யவேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்தார்கள். தமிழிசையை—சைவத்தைத்—தொட்டிலிலிட்டுத் தாலாட்டி வளர்க்கப் பிறந்த பிள்ளையாரைத் தொட்டிலில் இட்டுத் திருப்பெயரிட்டுத் தாலாட்டினர்கள். உலகிற்குச் சைவப்பாலை யூட்ட வந்த பிள்ளையார்க்குப் பாலூட்டிக் கண்ணெச்சிற்போக்கிக் கருத்துடன் வளர்ததுவந்தார்கள் சைவத்திற்குந் தமிழுக்குங் காப்பாக வந்த பிள்ளையார்க்குத திருநீற்றுக் காப் பணிந்து மகிழ்ந்தார்கள்.

## 2. வேறு பக்தி

சைவந் தலைநிமிரவந்த கவுணியர்கோன் தம் அழகிய திருமுடியை நிமிர்ததுச் சிவத் தொண்டிசைப்பதன்றி வேறிசையோ மென்பார் போலத திருமுகமசையச் செங்கீரையாடினர். சிவனரிடந் திருத்தாளம் பெறுவதற்குப் பழகுவதுபோலச் சப்பாணி கொட்டினர். சைவததமிழ் தவழவநத காழியாதலைவர் தவழ்ந்தார். ஏழிசையும பல கலையும வருக வருக என் றழைக்கவநத நம் பிள்ளைப்பெரு

மாளே அன்னேயருந் தாதியரும் 'வருக வருக' என்றழைத்து மகிழ்ந்தனர். சைவத்தைப் பழிக்குஞ் சமயங்களெல்லாம் தளாநடையிட் டழியும்வண்ணம் சைவத்திற்குத் தோணியான தோணிபுரத்தரசர் தளர்நடையிட்டனர்! உலகைக் கைப்பிடித்துச் சைவநெறியிலே அழைத்துச் செல்லவந்த வேணுபுரத் தலைவர் தாதியர் கைப்பற்றி நடந்தார்! சைவ சமயமொழியை உலகு பயிலப்பிறந்த கொச்சைவயப் பிள்ளையார் சிவம்பெருகும் மழலைமொழி பயின்றார்! இவ்வாறு சிறுதே ருருட்டியுஞ் சிற்றிலழித்தும் சைவசமய முளையான பிள்ளையார் வளர்ந்து மூன்றாண் டெய்தினார்.

## 3. திருஞானசம்பந்தர்—"பெம்மானிவன் அன்றே!"

அந்த ஆண்டிலே, பிள்ளையார் எதனையோ நினைந் தழுவார் போலவும், குறிப்பு வேறிடம் புகவும், அடிக்கடி அஞ்சியஞ்சி யழுவாராயினர். ஒருநாள் தந்தையார் நீராடு தற்குச் சென்றார். அவருடனே தொடர்ந்தழுதுகொண்டு, பிள்ளையாரும் அடிபெயர்த்து வாயில்வரையில் வந்தார். அவரைத் தடுக்கும்பொருட்டு வெகுண்டார் போலத் தந்தையார் விலக்கினார். பிள்ளையார் தம்மலரடிகளாற்—கிண்கிணியணிந்த திருவடிகளாற்—புவியைத் தாக்கிக் கொண்டு மீளாமற் கொஞ்சி யழுதுநின்றார். சைவவுலகஞ் செய்த தவத்தாலே தந்தையார், 'உன் செய்கை யிதுவானால் வா' என்று அழைத்துக்கொண்டு, தோணியப்பர் திருக் கோயிற் பொய்கைக்குச் சென்றார்.

பிள்ளையாரைக் கரையிலே நிறுத்தித் தோணியப்பரைக் காவலாக நினைந்து கும்பிட்டுவிட்டுக் குளத்திலிறங்கினார். நீராடித் தருப்பணம்புரிந்து, அகமருடணமென்னும் மந்திரத்தை உச்சரித்தவண்ணம் மறுபடியும் முழுகினார். அப்போது, பிள்ளையார் தந்தையாரைக் காணாமல் நொடியும் பிரியா அன்பு மிகச், சிவனார் திருவடியுணர்வுமூள அழத் தொடங்கினார். கண்மலர்களில் நீர் அரும்பியது. கைம்மலர்கள் அவற்றைப் பிசைந்தன சிவந்த கனிவாயின் இதழ்கள் துடித்தன. எல்லாவுயிருங் களிக்கும்படி, இவ்

வாறு அழுதவண்ணம்—தம் பழைய தொடர்பை நினைந்தோ, குழவிச் செய்கையோ அறியோம்!—திருத தோணிச் சிகரம் பார்த்து, 'அம்மே! அப்பா!' என்று பொருமினார்.

இவரழுகை திருத்தோணியப்பர்க்குக் கேளாமலிருக்குமோ? அவர் அமபிகையுடன் விடையின்மே லெழுந் தருளி, அருகில் வந்தார். அநதணர்க்குப் பிள்ளையாரை அளித்த காரணம் நினைந்துபோலும், தம் திருவடித் தொண்டு செய்வதற்காக உமையம்மையாரை நோக்கிச், 'சிவஞானத்தைக் குழைத்தபாலைப் பொன் வளளத்திலேந்தி இவனுக்கூட்டுக!' என்றருளினார் அம்மையாரும் அருகிற் சென்று, அணைத்தெடுத்துப் பாலைககறந்து, சிவஞானத தைக் குழைத்தூட்டினார். சிவனார் அப் பிள்ளையாரின் கண்களிலிருநது பெருகும நீரைத் துடைதது, அழுகையை நிறுத்தி, அக் கிண்ணத்தைக் கையிலே கொடுததருளினார். எல்லோருக்குந் தந்தையுந் தாயுமான இவர்களால் இப்படி ஆட்கொண்டருளப் பெற்றதனாலே, ஆளுடைய பிள்ளையா ராயினர். பாலிற் குழைக்கப்பெற்ற சிவஞானததாற் சம்பந்தஞ் செய்ததனாலே சிவஞான சம்பந்தராயினர் அந் நிலையிலே சிவனடியே சிநதிக்குஞ சிவஞானம—பவமகற் றும் ஞானம்—உவமையில்லாத கலைஞானம்—உணர்தற் கரிய மெய்ஞ்ஞானம் — ஆகிய ஞானம பெற்றனர் பிள்ளையார்.

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்.

(திருத்—திருஞா. எ0.)

எப்பொருளையும் படைப்பவர் சிவனாரே என்பதும், அவரே ஆண்டாரென்பதும், நாமெல்லாம் அவரடிமைக ளாகிய அப்பொருளென்பதும், உணராதவர்களின் துணிவு கெட இவ்வாறு அருள்செய்த இறைவா வானிலே நின்றருளினார்.

நீராடி நியமங்கள் முடித்த தந்தையார் கரையேறிப் பேருணர்வு பெற்று நிற்கும் பிள்ளையாரை நோக்கினார். அவர் கையிலே பாற்கிண்ண மிருந்தது! செங்கனி வாயிலே பாலுண்ட குறிப்பிருந்தது. அந்தணர், கையிலே ஒரு சிறு கோலை யெடுத்துக்கொண்டு, "நீ யார் கொடுத்த எச்சிற் பாலைப் பருகினாய்?" என்று அச்சுறுத்தி வினவினார்.

சிரபுரத்துச் சிறுவர், இன்பக்கண்ணீர் ததும்பத் திருமலர்ச் சிறுகைவிரலைத் தலைக்குமேலே தூக்கி, வானத்திலே விடையின்மேல் எழுந்தருளிய பேரருளாளரைச் சுட்டிக் காட்டி, உள்ளத்திலே ததும்பிய சிவஞானந் தவழுந் திருமொழியாலே, தாம் பாடும் தமிழ்மறையை யேற்பிக்கும் வண்ணங் குழையணிந்த சிவனார் திருச்செவியைச் சிறப்பித்துத், 'தோடுடைய செவியன்' எனத் தொடங்குந் திருப்பதிகம் பாடி, இவ்வாறு எமக்கருளிய 'பெம்மான் இவனன்றே' என்று மழலை மொழிந்தருளினார்.

அத் திருப்பதிகத்திலே, ஒரு பாட்டில், தவறு செய்தாலும் சரண்புகுந்தால் இறைவரருள் கைக்கொள்ளுமென்பதை இராவணன் கயிலைமலையை யெடுத்துத் தோள் நெரிந்து வருந்திச் சரணபுகுந்து சாமவேதம் பாடியதனால் அருள்புரிந்த சிறப்பை அமைத்தார். மற்றொரு பாட்டிலே, பணிந்தவர்க் கருள்வதே யன்றிப் பணியாதார்க்குக் காணவும் இயலாத தன்மையை மாலயன் நிலையாலும், மற்றோர் அஞ்செழுத்தோதி யுய்யுமநிலையாலும் விளக்கினார்.

திருப்பதிகம் முடிந்தவுடன், அமரர் வாழ்த்தி அலர் மழை பொழிந்தனர்! தோணியப்பர் சிவகணங்களும் மற்றுமுள்ள முனிவரும அமரரும் புடைசூழத் தோணிபுரம் அடைந்தருளினார். மறையினங்கள் முழுதும் கண்வழி கருத்துஞ் செல்லத் தாமும திருக்கோயிலை யடைந்தார். தந்தையார் கையிலிருந்த சிறுகோல் தானேவிழக், கைகளைக் குவித்தவண்ணம் இன்பக்கூத்தாடினார். தோணிபுரத் திறைவரை ஞானசம்பந்தர்போற் கண்ணுற் கண்டிலராயினும், திருப்பதிகத்தின் பொருளை யுணர்ந்து, பிள்ளையாரைப் பின்பற்றிச் சென்றார். அங்குக் கோயிலிலிருந்த

மறையவர்கள் இத்தகைய வியத்தகு நிகழ்ச்சி யெங்கும் நடைபெறவில்லையென்று கோயிலின் வாயிலிலே சூழ்ந் தனர்.

ஆளுடைய பிள்ளையார் திருமுன் சென்று, ‘இங் கெமை யாளுடையான் உமையோடும் இருந்தான்’ என்றார். பால்நாறுந் திருவாய்ப் பிள்ளையார் இவ்வாறு கூறி வெளி வந்தபோது மறையவர் முதலான தோணிபுரத்தவர் கூட்டம் அளவிறந்து, அன்பு ததும்பி, திருவாயிலில் நின்றது; கைகுவித்து வணங்கியது.

“காழியார் செய்த தவமே! கலைஞானக் கடலே! அக் கடலிடைத் தோன்றிய அமுதே! மறைவளர் செல்வமே! வைதிக நிலையே! சிவஞான முகிலே! காவிரி பெற்ற மணியே! மறையின் ஒளியே! புண்ணிய முதலே! கண்கவருங் கதிரொளியே! கலைவளருந் திங்களே! இசையின் முதலே! மூன்றாண்டிலே சைவவுலகந் தழைக்க இறைவரருள் பெற்றனே! நீ வாழ்க!”

இவ்வாறு கூறி எல்லோரும் வாழ்த்தினர்! விழுந்து விழுந்து ஒவ்வொருவராக அவருடைய திருவடியில் வணங்கினர்! சிவபாத வுள்ளத்தார் சென்று, தம் திருமக னாரை யெடுத்துத் தோள்மீது சுமந்து, திருவீதியிலே சென்றார்! தோணிபுரக் கூட்டத்தார் சூழ்ந்துகொண்டு தம் மேலாடையை வீசிவீசி யாரவாரித்துச் சென்றனர். அக் காட்சி சிவானந்தப் பேராறு கரைபுரண்டு செல்வ தாலே நுரைக்குமிழிகள் எழுந்து இழிவதுபோலக் காணப் பட்டது. அந்தணர் மாளிகையின் மேன்மாடியிலே பெண்க ளெல்லோருங் கூடிநின்று, நறுமணப்பொடியும் மலர்களுங் கொண்டு வீசி வாழ்த்துவது, மலைகளின்மேல் மின்னற் கொடிகள் நுடங்குவதுபோலிருந்தது. நகரமக்கள் தங்கள் தங்கள் மாளிகையின்முன் பிள்ளையார் எழுந்தருளும் போது, மறையொலியும் மங்கல வாத்தியமும் ஒலிகக, நிறைகுடங்களேந்தி வாழ்த்தினார்கள். இவ்வாறு சண்பை நகரை வலம்வந்து, தம் திருமாளிகையைப் பிள்ளையார்

அடைந்தபோது, அவ்வாறே சங்கொலியும் மங்கலவாத்திய வொலியும் மறையொலியும் பெருக உட்புகுந்தார்.

## 4. திருவோலக்கா—செம்பொற்றாளம்

அன்றிரவெல்லாம் சிவஞானப் பாலறுவாயர் தோணி யப்பரை நினைந்தவண்ணமே துயின்றார். கதிரவன் கீழ்த் திசையிலே எழுந்தவுடன், காதல் மிக வளரக் கண்ணுத லார் திருக்கோயிலை யடைந்து, வலம் வந்து வணங்கிப் பரவினார். பிறகு, திருக்கோலக்காவை நாடித் தந்தையாரும் பிற அடியாருந் தொடர்ந்துவரச் சென்றார். இறைவர் திருக்கோயிலை யடைந்து, வலம்வந்து வணங்கினார். உண்மையான சிறந்தபொருளை—விரிசடையிலே இளம் பிறையையுங் கொன்றையையும் அணிந்தவரைக்—கறை மிடற்றரை — “மடையில்வாளை” எனத் தொடங்கிக் கையினாலே தாளமிட்டவாறு பாடிக்கொண்டிருந்தார். அப்போது, அருளாளராகிய இறைவரருளாலே, ஐந்தெழுத் தெழுதிய செம்பொற்றாளங்கள் ஆளுடைய பிள்ளையார் அங்கை மலரிலே வந்து தங்கின. சம்பந்தர் வியந்து, திருவருளை வாழ்த்தித் தலைமேற்கொண்டு வணங்கிக் கைப் பற்றி, ஏழிசையுந் தழைக்கப் பாடித், திருக்கடைக்காப்புச் செய்தருளினார். காழியர் தலைவன் ஏழிசைப்பாடல் விண்ணிலே நிறைந்து இசைவல்லாரெல்லாருந் தம்மை மறந்து வியக்கும்படி பரவியது பிள்ளையார் சீர்காழிக்குத் திரும்பினார். அவர் நடையைப் பொறாத தந்தையார் தம் தோளின் மீது அமர்த்திச் சுமந்துவந்தார்.

திருத்தோணிபுரத் திருக்கோயிலை யடைந்து, வலம் வந்து வணங்கிப், ‘பூவார் கொன்றை’ என்னுந் திருப் பதிகம்பாடிப் பரவினார் பிறகு, தம் திருமாளிகையை அடைந்தார். சுற்று நகர்களிலிருக்கும் அடியார்களெல் லோரும் இவர் பெருமையைக் கேட்டு வந்துவந்து வணங்கிச் சென்றனர். பிள்ளையாரின் அன்னையார் பிறந்தருளிய திருநனிபள்ளி மறையவரெல்லோரும் மங்கலவிசையுடன் மறையோதிக்கொண்டு வந்து, காழியர்பெருமான் திரு

வடியை வணங்கினார்கள். அவர்களுக்கும், காண வருமப் பிற அடியவருக்கும் சிவபாதவிருதயர் திருவமுது செய்வித்தார்.

சிலநாட்கள் கழித்துத் திருநனிபள்ளியிலுள்ள மறையோர்கள் சிவஞானக்கொண்டலார் திருவடிகளை வணங்கிக், 'திங்களணிந்த சடையாரை யெங்கள் திருப்பதியிலே வணங்கித் தமிழ்மறை பாடியருளவேண்டும்,' என வேண்டினர். சண்பை மன்னர் இசைந்தருளித் தந்தையார் திருத்தோளின்மீது அமர்ந்து, மறையவர்சூழத் திருநனிபள்ளியினைச் சாரச் செல்லும்போது, 'காரைகள் கூகை முல்லை' எனத் தொடங்குந் திருப்பதிகம் பாடிக் கடைக் காப்பிலே, 'திருநனிபள்ளி யுள்குவார்தம் பேரிடர் கெடுதற் காணை நமது' என்று சிறப்பித்தார்.

திருநனிபள்ளியை அடைந்து, திருக்கோயிலை வலம் வந்து, அன்புமிகப் பணிந்து, மறையவர் வணங்கிப் போற்றத் தங்கியருளினார். அங்கிருக்கும்போது தலைச்சங்காடு என்னுந் திருப்பதி மறையவர்கள் வந்தழைக்க, அங்கெழுந் தருளிப் பரமரைப் பாடினார். பின்னர், திருவலம்புரம், பல்லவனீச்சரம், திருச்சாய்க்காடு, திருமுல்லைவாயில் என்னுந் திருப்பதிகளை வணங்கிக்கொண்டு சீர்காழியை அடைந்தார் அங்கிருந்துகொண்டே திருமயேந்திரப்பள்ளி, திருக்குருகாவூர் என்னும் பதிகளை வணங்கிப் பாடினார்.

## ரு. திருநீலகண்ட யாழ்ப்பாணர் நட்பு—யாழுடன் தமிழ்மறை கலந்தது

திருஎருக்கத்தம்புலியூர் வாழுந் திருநீலகண்ட யாழ்ப் பாணர், பிள்ளையார் சிறப்பைக் கேட்டு மகிழ்ந்து, வணங்க வேண்டுமென்னுங் காதல் வசப்பட்டுத் தம மனைவியாருடன் காழியை யடைந்தார். பிள்ளையார் பாணர் வரவை யறிந்து எதிர்கொண்டார். பாணர் பிள்ளையாரை வணங்கினார். 'தங்கள் வரவாலே நன்மைபெற்றேன்' என்று காழியர் கோன் முகமன்கூறிப் புன்முறுவலுடன் தோணியப்பர் திருக்கோயிலுக் கழைத்துச்சென்று வணங்கச்செய்தார்.

பிறகு, யாழிசைத்துப் பாடும்படி வேண்டிக்கொண்டார். பாணர் பாடினியாருடன் யாழைப் பண்படுத்தியிசைத்துக் கொண்டே பரமர் புகழைப் பாடினார். பாணர் கைப்படும் போது யாழ்நரம்பிலிருந்தெழும் இனிய இசையும் பாட்டின் இசையுங்கலந்து, பேரின்ப வொலியை யெழுப்பி, எல்லா உயிர்களையும் இன்பநிலையை யடையச்செய்தன! பறவைகளெல்லாம் வானத்திலே நிறைந்தன! பிள்ளையார் இன்பவடிவமானார்! அந்தணர்கள் வியப்படைந்து திளைத்து நின்றனர்!

பாணரையும் அவர் மனைவியாரையும் காழிப்பிள்ளையார் அழைத்துச் சென்று, நல்ல விடுதியொன்றிலே இருக்கச்செய்து, அமுதவை யுண்டியளித்து மகிழ்வித்தார். பாணர் காழிப்பிள்ளையாரின் தமிழ்மறையைச் செவிமடுத்துப் பேரின்பமடைந்தார். பிள்ளையாரானைப்படி தம் யாழிலே அவ்விசைததமிழ்மறையைச் சேர்த்துப் பாடி மகிழ்ந்தார் பிறகு. அவரை வணங்கித், 'தமியேன் தங்களுடன் இருந்து தேவாரத் திருப்பதிகங்களை யாழிலிட்டுப் பாடும் பேற்றைத் தந்தருளவேண்டும்,' என வேண்டினார். அவரும் அதற்கு மகிழ்வுடன் இசைந்தனர். அன்றுமுதல் திருபபாணர் உடனிருக்கும் பேறுபெற்று யாழிசைத்து வந்தார்.

## 6. தில்லைவணக்கம்

இங்ஙனம இருந்துவரும் நாளிலே, திருஞானசம்பந்தர்க்குத் தில்லையை வணங்கவேண்டுமென்னுங் காதல் பொங்கத் தந்தையாரிடம் உரைத்தருளினார். பின்னர், அவரோடும் பாணரோடும் அடியாருடனும் தோணியப்பரை வணங்கிப் புறம்போந்து, தில்லையை நோக்கிச் சென்றருளினார். கொள்ளிடநதி தன் திரைக்கையாலே மணியும் முத்துஞ் சிந்திப் பிள்ளையார சேவடியை வணங்கியது. அதனைக் கடந்து, திருத்தில்லை யெல்லை சேர்ந்தார். பிள்ளையார் வருவதைக்கண்ட பொய்கைகள் தாமரையரும்பாகிய கைகளைக் கூப்பி, மலராகிய முகம் மலர்ந்து வரவேற்றன. வண்டினங்கள் ரீங்காரமாகிய இசையை யெழுப்பின.

மயில்கள் களிப்புடன் கலவம் விரித்தாடின. பூங்கொம்பு கள் மலர்முகம் பொலிந்தாடி வரவேற்றன. மாமரங்கள் சுண்ணப்பொடி தூவின. நெற்பயிர்கள் கதிர்த்தலைகளால் வணங்கின. குளிர்ந்த பொய்கைகளிலேயும் மலர்ப்பொழில் களிலும் படிந்த மெல்லிய காற்று இனிமையாக வீசிக் களைப்பாற்றியது. கமுகுகள் தங்கள் பழுக்காய்க்குலைக ளாகிய கண்களாற் கண்டு களித்தன. வானம் வெள்ளிப் புகையாலாகிய விதானத்தை யமைத்தது. இக்காட்சி களிலே மயங்கிய பிள்ளையார் திருநந்தனவனத்தைக் கண்ட வுடன் பணிந்தார்; தில்லைத்திருமதிலின் தென்வாயிலை யடைந்தார்.

தில்லைவாழந்தணர்கள் காழிப்பிள்ளையார் எழுந்தருள் வது கண்டு மங்கலப் பொருள்களுடன் எதிர்கொண் டார்கள்! இன்மொழி கூறி யழைத்துவந்தார்கள்! அவர்க ளோடு சென்று தில்லைத் திருவீதியை வணங்கித் திருக் கோயிலின் முன்சென்று, எழுநிலைக் கோபுரத்தை வணங்கி, உள்புக்கார் சிரபுரச் சிறுவர்! பொன்மன்றை வலமவந் தார்! அண்ணலாரளித்த சிவஞானமாகிய அரங்கிலே தம் முடைய உண்மை யறிவாலாகிய இன்பத்தனிக்கூத்தைக் கண்டுகளிக்குங் காழிச்சிறுவர் அம்பலத்திலாடும் கூத் தரைக் கண்டார்! தம் மலரனைய சிறுகைகளைத் தலைமீது குவித்து, இன்பக்கண்ணீர் பெருக, 'உணர்விலே அறியும் பெரிய சிவபோகத்தை யொழிவின்றி ஐம்பொறிவாயிலாக வும் அடைந்து மகிழ வருளினை,' என்று போற்றினார். மெய் சிலிர்க்கத் தம் பவளச் சிறுவாயாலே, 'கற்றாங் கெரியோம்பி' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். இவ்வாறு 'உள்ளும் புறமுங் கசிந்தூற்றெழ நெக்குடைந்து, குதிகொள்ளும் செந்தேறலின் குனிப்பை'க் கண்களாலே முகந்துண்டார். பிறகு, வெளிவந்து, திருவாயிலில் வணங்கிப் புறத்தேவந்து நான்கு வீதிகளையுந் தொழுதார்!

ஆளுடையபிள்ளையார் தில்லையிலே தங்குவதற்கஞ்சித் திருவேட்களஞ் சென்று சிவனைப் பாடிப் பரவி அங் கேயே தங்கினார். அங்கிருந்து, திருக்கழிப்பாலைக்குப்

போய், அரனாரை வணங்கினார். சிலநாட்கள் திருவேட்களத்திலேயே எழுந்தருளியிருந்து, தில்லைக்குச் சென்று, பேரின்பக் கூத்தரை வணங்கி வருவா ராயினர். இவர் பாடுந் திருப்பதிகங்களைப் பாணருந் தமது யாழிலிட்டு வாசித்து வருவார். ஆளுடையபிள்ளையார், தில்லைவாழந்தணர்கள் கூத்தனார் திருவடிக்கு அணுக்கத்தொண்டரான பெரும் பேற்றை எண்ணி வியப்பார். அவர்களுடைய உயர்ந்த ஒழுக்கத்தையும் போற்றுவார். ஒருநாள், திருவேட்களத்திலிருந்து, தில்லைக்குப் பாணரோடு வரும்போது, இறைவரருளாலே தில்லைமூவாயிரவர்களுஞ் சிவகணத் தலைவாகளாகக் காட்சியளித்தனர். சண்பை மன்னர் வியந்து, தாங் கண்ட பரிசைப் பாணர்க்குங் காட்டினார். அன்புமிகத் தில்லையந்தணர்களைப் பிள்ளையார் வணங்கப் புகுமுன் தில்லையந்தணர்களும் இறைஞ்சி அழைத்துச் சென்றனர்.

பிள்ளையார் பேரம்பலத்தை வணங்கித் தில்லைக்கூத்தர் திருமுன் சென்று, விழுந்து வணங்கித் திருக்களிற்றுப் படிக்கீழ் நின்று, 'ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். அப்பதிகத்திலோர் பாட்டிலே, தாம் தில்லைவாழந்தணரைக் கண்ட முறையைக் கூறி, அவர் போற்றுஞ் சிற்றம்பலமென்று சிறப்பித்தார்.

## 7. திருவரத்துறை—முத்துப்பல்லக்கு—வேணுபுரம் மீளல்

பொன்னம்பலத்தை வணங்கிப் புறம் போந்தபோது, பாணர் பிள்ளையாரை வணங்கி, 'அடியேன் சிற்றூரிலெழுந்தருளி, அங்குள்ள இறைவரை வணங்கி, அந்நிலையே சென்று அருகிலுள்ள பதிகளையும் வணங்கத் திருவுளங் கொள்ளல்வேண்டும்' என்றார். பிள்ளையாரும் அதற்கிசைந்து, திருவெருக்கத்தம் புலியூர்க்குத் தம்மைச் சூழ்ந்துளோருடன் எழுந்தருளினார் அப்பதி இறைவரை வணங்கிப் பாணரை நோக்கி, 'அன்பரே! தாங்கள் பிறந்தருள இப்பதி புண்ணியஞ் செய்திருத்தல்வேண்டும்' என்று இன்மொழி யுரைத்தருளினார்.

அங்கிருந்து திருமுதுகுன்றை நோக்கிச் செல்லும் போது அதனை நெருங்குதலும் உண்டான காதலால், 'மத்

தாவரை' எனத் தொடங்கி 'முதுகுன்றடைவோமே!' என்று ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் அமைத்துப் பாடிக் கொண்டே சென்றார். அக்குன்றை யடைந்து வலம்வந்து, திருக்கோயிலினுள்ளே வணங்கிச் சென்று, 'மூரசதிர்ந்தெழு தரும்' என்னும் திருப்பதிகம பாடி வணங்கினார். அன்பு மிகுதலாலே மேலும் பல தொடைகள் புனைந்து வணங்கினார். சிலநாட்கள் அங்கிருந்து திருப்பெண்ணாகடம் என்னுந் திருப்பதி புக்கார். அங்குள்ள திருத்தூங்கானை மாடம் என்னுந் திருக்கோயிலை அடைந்து, சுடர்க் கொழுந்தை வணங்கி, 'ஒடுங்கும் பிணிபிறவி' என்று தொடங்கித் 'தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்' என்று திருப்பதிகம் பாடினார்.

திருப்பெண்ணாகடத்தைப் பணிந்து திருநெல்வாயிலரத் துறை நோக்கிச் செலலையில், தம் தந்தையாரின் தோள் மீது எழுந்தருள்வதை விடுத்து நடந்தே சென்றார். மலரனைய சிற்றடிகள் வருந்தச் செல்வதைக் கண்டு தந்தையாரும் பிறரும் வருந்தினர். திருவரத்துறை நோக்கிய காதலே சிவிகையாகக்கொண்டு, மங்கைபங்கா திருவடிகளை வழுத்தியவாறே மெல்லமெல்ல நடந்து மாறன்பாடியென்னுஞ் சிற்றாரருகே செல்லும்போது, காழிப்பிள்ளையார் நடப்பதைப் பொறாத கதிரவன் தன் கதிர்களைச் சுருக்கி மேற்றிசையிலே மறைந்தான். அன்றிரவு அங்கேயே எல்லோருந் தங்கினர்.

அன்றிரவு திருநெல்வாயிலிலுள்ள அடியார்கள் கனவிலும், திருக்கோயிற் பணியாளர் கனவிலும் அரத்துறையண்ணலார் எழுந்தருளிக், 'காழிச்செல்வன் வருகின்றான்! அவன் தளிரடிகள் நடந்து வருந்தின. ஆதலாலே, நாளைக் காலையிலே நங்கோயிலிலிருந்து ஊர்ந்துவர, முத்துச் சிவிகையும், பிடிக்க முத்துக்குடையும், ஊத முத்துச்சின்னங்களும் எடுத்துச்சென்று, எம் ஆணையென்று கூறி, ஏற்றியழைத்துவருக!' எனக் கூறியருளினார். அவ்வாறே பிள்ளையார் கனவிலும், 'நீ ஊர்ந்து செல்ல முத்துச்சிவிகை முதலாயின நாளைக்கு வரும்; ஏற்றுக்கொண்டு சிவிகை

யிலே ஊர்ந்து வந்து நம்பதிகளை வணங்குக!' என்றருளினர்.

மறுநாட் காலையிலே, கதிரவன் வருமுன்னே நெல்வாயில் அடியார்கள் திருவரத்துறையின்முன் கூடினார்கள். ஒவ்வொருவர் கனவிலும் உமைகொருநர் உரைத்தருளியதை யறிந்து உவகையும் வியப்பு மெய்தினர். திருக்கோயிலில் கடைக்காப்பை நீக்கி நோக்கியபோது முத்துச் சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னங்களாகியவைகள் இருப்பதைக் கண்டு, கைகளைக் கூப்பிக் கண்ணுதலாரை வணங்கிக் கடல்போல ஆரவாரித்தனர். பிறகு, மங்கலமுரசு ஒலிக்க, நிறைகுடங்கள் ஏந்தியவர்களாய், முத்துச்சிவிகை முதலானவற்றை எடுத்துக்கொண்டு மாறன்பாடியை அடைந்தனர் சிலர் பிள்ளையார் வருமுன், திருநெல்வாயிலை அணிசெயத் தொடங்கினர்.

கதிரவன் கீழ்த்திசையி லெழுந்தான். பூந்தராய்ப் பிள்ளையார் இரவு கண்ட கனவைத் தம் தந்தையார்க்கும் பிறர்க்கும் அறிவித்துக்கொண்டிருக்கும்போது, 'அர அர' என்னும் சிவம்பெருக்கும் ஒலியும், மங்கல தூரியங்களும் ஒலிக்கத் திருநெல்வாயிலடியார்கள் வந்து தோணிபுரச் சிறுவரை வணங்கித் தங்களுக்கிறைவரருளியதை விண்ணப்பித்தனர். பிள்ளையார் இறைவர் திருவருளை வியந்து பதிகங்கள் பாடினர். பிறகு மறுக்க முடியாமல் அந்த முத்துச்சிவிகையை வலம்வந்து வணங்கி ஐந்தெழுத்தோதியவாறே அமர்ந்தனர்.

அப்போது தொண்டர்கள் ஆரவாரித்தனர் மறைகள் ஆரவாரித்தன. வானவர் ஆரவாரித்தனர். வானத்திலே மேகங்கள் ஆரவாரிப்பதைப்போல முழவுகள் ஆர்த்தன. வளைகள் ஒலித்தன. ஊதுகொம்புகள் ஒலித்தன. முத்துக்குடை ஒளியுடன் ஒலித்தது. உலகடைந்த மகிழ்ச்சியை உரைப்பதெங்கே?

இந்நிலையிலே முத்துப்பல்லக்கிலேறிய பிள்ளையார் பாற்கடலிலே சந்திரன் காணப்பெற்றதைப்போற் காணப்

பெற்றார். அக்காட்சியைக் கண்ட அடியார்கள் பேரின்பக் கடலிலே முழுகி வாழ்த்தி வணங்கினர். முத்துப்பல்லக்கைச் சிலர் சுமந்தனர். முத்துக் குடையைச் சிலர் மாற்றி மாற்றிப் பிடித்தனர். திருச்சின்னங்களைச் சிலர் ஊதினர். அந்தச் சின்னங்கள், 'ஏழிசைத் தமிழ்பாடி எங்கோன் வந்தான் உலகுய்ய வந்த ஒப்பற்ற சம்பந்தன் வந்தான்! உமை முலைப்பாலுடன் உயர் சிவஞானத்தைக் கலந்துண்ட ஒருவன் வந்தான்! ஓதா துணர்ந்த-கருவிலே திருவுடைய காழியர்கோன் வந்தான்!' என்று ஊதப்பெற்றன. இத்தகைய சிறப்புடன் இணையிலாத் திருஞானசம்பந்தர் திருநெல்வாயிலை யடைந்து, திருவரத்துறை என்னுந் திருக்கோயிலை நண்ணி, இறங்கி வலமவந்து வணங்கினார். தலைமேல் மலர்க்கைகள குவிந்தன. கண்களில் இன்பநீர் பெருகியது திருப்பதிகத்தை நாவிசைத்தது. மறுமுறையும் வலம்வந்து வணங்கிப் புறத்தே வந்து அத் திருப்பதியிலே எழுந்தருளினார் அங்கிருந்து திருநெல்வெண்ணெய் முதலான இடங்களை வணங்கினார்.

பின்னர், ஆளுடைய பிள்ளையா ருள்ளத்திலே தோணியப்பர் நினைவு உண்டாயினதால், அடியாருடன் திரும்பினார். முத்துச்சிவிகையிலே, கைம்மாறு வேண்டாமல் உலகுய்யச் சைவம் பரப்பவந்த பெருமான் வருவதையறிந்த—பிள்ளையார் எழுந்தருளும்—பதிகளிலுள்ளோர் நகரை யணிசெய்து எதிர்கொண்டு வணங்கி அழைத்துச் சென்றனர். இம்முறையிலேயே திருப்பழுவூர், திருவிசயமங்கை, திருவைகாவூர், திருப்புறம்பயம் முதலான பதிகளை வணங்கினார்.

அருகிலிருந்த திருச்சேய்ஞலூரை வணங்கும் ஆவலால் விரைந்து சென்றார். அந்த ஊரிலுள்ள அந்தணர்கள் காழிப்பிள்ளையார் வருவதறிந்து, நகரணிசெய்து, நிறைகுடங்களுடன் மங்கல வாத்தியங்களும் மறையும் ஒலிக்க எதிர்கொண்டு வணங்கினர். சண்டீசராகிய சேய்நல்லூர்ப் பிள்ளையார் தோன்றியருளிய திருப்பதியாகையால், முத்துச் சிவிகையிலே செல்ல அஞ்சிக் கீழிறங்கி நடந்துசென்றார்.

தளிரனைய சிற்றடிகள் தளரச்சென்று திருக்கோயிலை வலம்வந்து கூப்பிய மலர்க்கைகளுடன் திருமுன் சென்று வணங்கினார். 'பிரமைடைந்த பாலநாட்ட' என்று தொடங்கித் தந்தை தாளைத் தடிந்துஞ் சண்டீசப்பதம் பெற்ற பிள்ளையாரின் தவத்தைச் சிறப்பித்துப் பாடினார்.

அங்கிருந்து நீங்கித் திருப்பனந்தாள், திருப்பந்தணைநல்லூர், திருவோமாம்புலியூர், திருவாழ்கொளிபுத்தூர், திருக்கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் முதலான திருப்பதிகளை வணங்கிச் சீர்காழியை நெருங்கினார்.

சீர்காழித் திருமறையவர்கள் தங்கள் தலைவராகிய குழந்தைப்பெருமான் எழுந்தருள்கிறாரென்னும் ஆவலினாலே நகரெங்கும் பந்தலிட்டுத் தோரணங்கள் கட்டி, வீடுதோறும் வாழையுங் கமுகும் நாட்டி, நிறைகுடங்கள் வைத்து, மலர்மாலைகளைத் தூக்கி, மலரும் பொரியும் நறுமணப்பொடியும் தூவி, மங்கலமுரசுக ளொலிக்க, மறையொலி வானளாவ எதிர்கொண்டு வணங்கி யழைத்து வந்தனர். பிள்ளையார் சிவிகையிலிருந் திறங்கி அவர்களுடன் சென்று தோணியப்பர் திருக்கோயிலையடைந்து அம்மையையும் அப்பரையும் வணங்கிப் பாடித் திருவீதி வழியே எல்லோரும் வாழ்த்தச் சென்று, திருநீலகண்டயாழ்ப்பாணருக்குற்ற விடுதியில் அவரைச் செல்லவிட்டுத் தம திருமாளிகையை அடைந்தார். பகவதியம்மையார் தம் அருமைத் திருமகனார் வருவதறிந்து திருமாளிகையை அணிசெய்து திருவிளக்குடனும் நிறைகுடங்களுடனும் எதிர்கொண்டு திருமகனார் நெற்றிக்குத் திருநீறிட்டு அழைத்துச் சென்றார்.

## 8. பூணு நூலணிதல்—'வேதியர்க் கந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே.'

ஆளுடையபிள்ளையார் சீர்காழியில் அமர்ந்திருந்து தோணியப்பரை வழிபட்டு வரும் நாளிலே உபநயனப் பரு

வம் வர, மறையவர்கள் வேண்டிக்கொள்ளக் குலமுறைப் படி மான்தோலுடன் சேர்ந்த பூணுநூலை மறைவிதிப்படி யணிந்துகொண்டார். அந்தணர்கள் பிள்ளையாரைநோக்கி, 'இனித் தாங்கள் நான்கு மறைகளையும் ஓதும் உரிமை பெற்றீர்கள்' என்றனர். பிள்ளையார் புன்முறுவலுடன் தம் மழலைத் திருவாயால் அந்தணர்கள் வியக்கும்வண்ணம் ஆயிரம் மறைகளையும் அவற்றிற் கங்கங்களையும் இனிமை யுடன் பிழையின்றி யோதிக் காண்பித்தார். திகைப்பும் வியப்பும் அச்சமும் அடைந்த அந்தணர்கள், அவர் திருவடி களில் விழுந்து வணங்கி, 'ஓதாதுணர்ந்த உண்மைக் கலைஞரே! அடியேங்கள் ஐயங்களையும் போக்கியருள வேண்டு'மென வேண்டிக்கொண்டு, ஐயங்களைத் தீர்த்துக் கொண்டனர். பூந்தராய்ப்பிள்ளையார் அவர்க்குற்ற ஐயங் களைத் தீர்த்ததோடு நில்லாமல், எல்லா மறைகளின் உட் பொருளும் அவற்றின் முதற்பொருளும் ஐந்தெழுத்துமே என்பதை விளக்கிக் கூறித், '**துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்திலும்**' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடினார். அப் பதிகத்திலே, '**வேதியர்க் கந்தியுண் மந்திரம் அஞ் செழுத்துமே**' என்று பாடியருளினார். அன்றுமுதல அந்த அந்தணர்கள் பிள்ளையார் ஆணைப்படி தங்கள் வழி பாட்டைச் செய்துவரலானார்கள்.

## 9. முதன்முறை ஆளுடைய வரசைக் காணுதல்

இங்ஙனம் நிகழும் நாட்களிலே, ஆளுடைய பிள்ளை யாரின் சிவஞானச் செல்வத்தைக் கேள்வியுற்ற வாக்கின் மன்னர் பிள்ளையாரைக் காணும் பேராவலாலே தூண்டப் பெற்றுப் புகலியை நோக்கி யெழுந்தருளினார். அடியார்க ளுடன் அரசு வருவதைக் கேட்ட பிள்ளையார் அன்பர்க ளுடன் எதிர்கொண்டார்.

அவர் கண்ட காட்சியென்ன? உள்ளத்திலே இடைய றாத அன்பு! வயது முதிர்ந்ததற் கடையாளமான திருமேனி யின் அசைவு! ஆடையும் மிகையெனுந் துறவுக் கருத்து! திருத்தொண்டு செய்யும் உழவாரப்படை! சிவஞான இன்

பத்திஞலே வழிகின்ற கண்ணீர் மழை! திருநீற்றுவடிவு!—ஆகிய சைவத் திருவேடத்தைக் கண்டார். தம் கருத்திலே

சிந்தையிடை யறு அன்பும் திருமேனி தனிலசைவும்
கந்தையிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய.

(திருத்—திருஞா, உ௭0.)

வணங்கிவரும் உண்மைக் காதல் வடிவம்!—சிவவடிவம்!—ஆகிய இக்கோலத்தையுடைய அரசர் எதிர்வந்தனர். கண்ட பிள்ளையார் தொழுதவாறே எதிர்கொண்டு 'அப்பரே!' என்ருர். சொல்லரசரும் 'அடியேன்' என்று வணங்கிஞர். அக் காட்சியை என்னென்பது ?

பிள்ளையார் நாவுக்கரசரை அழைத்துக்கொண்டு போய்த் தோணியப்பரை வணங்கிப் பாடச்செய்து, தம் திருமாளிகைக் கெழுந்தருளவித்து, அவருக்கும் அவருடன் வந்த அடியார்க்குந் திருவமுது செய்வித்தருளிஞர். நாவுக்கரசர் பிள்ளையாரின் நட்பிலே சிலநாட்கள் ஊறிய பின் வேறு பதிகளை வணங்கப் பிரியா விடைபெற்றுச் சென்ருர். பிள்ளையார் அவரைத் திருக்கோலக்காவரையில உடன்சென்று வழிவிட்டுத் திரும்பித் திருமாளிகையைச் அடைந்தார்.

சீர்காழியில் எழுந்தருளியிருக்கும் நாட்களிலே தோணியப்பரை வணங்கி மொழிமாற்று, மாலைமாற்று, மடக்கு, இயமகம், ஏகபாதம், குறள, எழுகூற்றிருக்கை, ஈரடிமேல்வைப்பு, நாலடிமேல்வைப்பு முதலான சொல்லணித் திருப்பதிகங்கள் பாடி மகிழ்ந்தார். பாணருல் பாடினியாரும் அவற்றை யாழிலிட்டுப் பாடி இன்புற்றனர்.

## 10. காவிரி வடகரையில் மேற்றிசைத் திருப்பதிகளை வணங்கல்

ஒருநாள், பிள்ளையார் தம் தந்தையாரிடமும் பிற மறையவரிடமும் தமக்குச் சிவனூர் எழுந்தருளியிருக்கும்

மற்றைத் திருப்பதிகளையும் வணங்கவேண்டுமென் றெழுந்த காதலைத் தெரிவித்தார். தந்தையார் பிரிவாற்றாமலும், வேள்விக்குப் பொருள் வேண்டியும் தாமும் உடன்வருவதாக உரைத்தார். பிள்ளையார் அதற்கிசைந்தார். அவருடன் பாணரும் பாடினியும் புறப்பட்டனர். அந்நகரில், வர விருப்பமாயிருந்த சிலரும் பின்தொடரத் தோணியப்பரை வணங்கி முத்துச்சிவிகையி லெழுந்தருளினார். முத்துக் குடையை அடியார் பிடித்தனர். முத்துச்சின்னங்கள், 'சிரபுரத்துப் பெருமான் வந்தார்! ஆளுடைய பிள்ளையார் வந்தார்!' என்று இயம்பின. மங்கல முரசுகள் அதிர்ந்தன. அடியார்கள் வணங்கி வாழ்த்தினர்.

இத்தகைய சிறப்புடன் திருக்கண்ணார் கோயில் என்னும் பதியை வணங்கிக் காவிரியின் வடபக்கத்திலே மேற்கு நோக்கிச் சென்றார். திருப்புள்ளிருக்குவேளூர், திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர், திருககுறுக்கைப்பதி, திருவன்னியூர், திருப்பந்தணைநல்லூர், திருமணஞ்சேரி, திருவெதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, திருத்துருத்தி, திருக்கோடிகா, திருக்கஞ்சனூர், திருமங்கலக்குடி, திருவியலூர், திருந்துதேவன்குடி, திருவின்னம்பர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம் ஆகிய திருப்பதிகளை வணங்கித் திருவையாறு நெருங்கினார்.

திருவையாற்றுத் தொண்டர்கள் காழிவரும் சிவஞான விளங்களிறு வருகின்றாரென்றறிந்து, நகர் முழுதும் நன்றாக அணிசெய்து எதிர்கொண்டனர். பிள்ளையார் சிவிகையினின் றிறங்கி நகரை வணங்கிப், 'புலனைந்தும் நிலைகலங்கு மிடத்து அஞ்சலென்பார் மன்னுங் கோயில்' எனச் சிறப்பித்துப் பாடினார். திருக்கோயிலை யடைந்து பணிந்து உள்புக்கு வலம்வந்து திருமுன்விழுந்து வணங்கிக், 'கோடல் கோங்கங் குளிர்கூவிளம்' என்னும் பதிகத்திலே, 'ஆடுமாறது வல்லான் ஐயாற்றெம் ஐயனே' என்று பாடிப் பரவினார். கண்ணீர் பெருக, மெய்சிலிர்க்கப் பன்முறையும் வணங்கினார். அங்கிருந்து திருப்பெரும்புலியூர் சென்று வணங்கித் திரும்பவும் வந்து, சிலநாட்கள் அங்கேயே தங்கினார்.

பிறகு, திருநெய்த்தானத்தை வணங்கித் திருமழபாடி நெருங்கினார். செல்லும்போதே மழபாடி மாணிக்கத்தை, 'அங்கையாரழல்' என்னும் பதிகமெடுத்து, 'மங்கை பாகத்தார் திருமழபாடி தலையினால் வணங்குவார்கள் பொங்கு மாதவ முடையார்' எனப் புகழ்ந்து பாடித் திருக் கோயிலை யடைந்தார். வலம்வந்தார். திருமுன் விழுந்து வணங்கி யெழுந்தார்; ஆராத காதலுடன் பாடினார். வெளிப்போந்தார். அங்கே சிலநாட்கள் எழுந்தருளினார். பிறகு, திருக்கானூர், திருஅன்பிலாலந்துறை, திருமாந்துறை முதலான திருப்பதிகளை வணங்கினார். திருப்பாச்சிலாச்சிராமம் நெருங்கினார்.

## 11. திருப்பாச்சிலாச்சிராமம்—கொல்லிமழவன் பாவை நோய்தீர்வு

அந் நகர்த் தலைவனான கொல்லிமழவன் என்பவனுக் குத் திருமகளொருத்தி யிருந்தாள். எல்லா நற்பண்புகளு முடைய அக் கோமளக் கொழுந்தினை முயலகன் என்னும் நோய் பற்றியது. அஃது எதனாலுந் தீராமையால், அவன் தான் வழிபடும் கங்கைச் சடையரே கதியென்று ஆச்சிரா மத் திருக்கோயிலிலே கொண்டுபோய்ப் படுக்கவைத்தான். அவள் உணர்வின்றிக் கட்டைபோற் கிடந்தாள். உறவின ருடன் அவன் வருந்திக்கொண்டிருக்கும்போது, 'வாடிய தருவில் மழை பொழிவதுபோல' ஞானசம்பந்தர் எழுந் தருள்வதைச் சின்னம் இசைக்கக் கேட்டான். உடனே, மகளை அங்கேயே விட்டுவிட்டு நகரை யணிசெயக் கட்டளை யிட்டுப் பிள்ளையாரைத் தான்போய் எதிர்கொண்டு, நிலத் தில் விழுந்து வணங்கினான். அவர் அருளபெற்றெழுந் தான். பல்வகைச் சிறப்புக்களுடன் அவரைத் திருக் கோயிலுக்குத் திருவீதிவழியே அழைத்துச் சென்றான். புகலியிறைவர் சிவிகையிலிருந் திறங்கித் திருக்கோயிலை வணங்கி உள்புக்கார். அங்கே கிடந்த பைந்தொடியைக் கண்டு மனமிரங்கி, 'இஃது என்ன?' என்று வினவ, மழ வன் விளக்கிக் கூறினான். உடனே, 'துணிவளர்திங்கள்'

என்னுந் திருப்பதிகத்தைத் தொடங்கி, 'மணிவளர் கண்டரோ மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே' எனப் பாடினார். அவ்வளவிலே அந்த அணங்கு உணர்வு பெற்றெழுந்து தந்தையின் பக்கலில் நின்றாள் மகள்நிலை கண்ட மழவனடைந்த மகிழ்ச்சிக்கு வரையறையுண்டோ? தானும் மகளுமாய்ச் சண்பையர் தாளில் விழுந்து வணங்கிக் கண்ணீரால் அவர் மலரடியைக் கழுவினான். பிள்ளையார் அவர்களை வாழ்த்தித் திருக்கோயிலை வலம்வந்து வணங்கிப் புறம்போந்தார். பல பதிகளையும் வணங்கித் திருப்பைஞ்ஞீலியை வணங்கிப் பாடினார். திருவீங்கோய்ச் செல்வர் தாளை வழுத்தினார் பிற பதிகளையும் வணங்கிக் கொங்குநாடடைந்தார்.

## 12. கொங்குநாடுவணக்கம்—திருச்செங்குன்றூர்—குளிர்பிணி நீக்கல்

கொங்குநாட்டிலே பல இடங்களையும் பணிந்து நீண்ட மதிலையுடைய செங்குன்றூர் சேர்ந்தார். அந்நகர மக்கள் மகிழ்வுடன் வந்து வணங்கி, அழைத்துச்செல்லச் சென்று, இறைவரை வணங்கிக்கொண்டு, அங்கேயே பலநாட்கள் எழுந்தருளினார். அங்கிருந்தவாறே திருநணா முதலான பதிகளைச் சென்று வணங்கிவந்தார்.

அப்போது குளிர்காலம் வந்தது. உயிர்கள் பனிக்கஞ்சி வெயிலை யெதிர்நோக்கும் நிலை யெய்தியது வண்டுகள் ரீங்கார மொழிந்தன. தாமரைமலர்கள் வாடின. பளிங்கு மணியை மரகதக்கொடியிலே கோத்தாற்போலப் புன்னுனிகளெல்லாம் பனித்துளியைத் தாங்கின. குன்றுகளெல்லாம் வெண்போர்வை யணிந்தன. குளிர்வாடை பகலெல்லாம் உலவியதாலே கதிரவனும் குளிருக்கஞ்சி வெளிவருவதும் முகிலிடை மறைவதுமாயினான். தளிர் நிறைந்த பொழில்களெல்லாம் நடுங்கின மாளிகைகளின் பொந்துகளிலே புறாக்கள் பெடையுடன் ஒடுங்கின. எங்கும் அகிற்புகை. எங்கும் அரிசனமுங் குங்குமமும் அரைக்குந் தொழில்.

இத்தகைய குளிர் அங்குறைவார்க்கியல்பேயாயினும், பிள்ளையாருடன் வந்த அடியவர்க்குப் புதியதாகையால் நடுங்கிக் கலங்கினார்கள். பிள்ளையார் தம்மை அக்குளிர் ஒன்றுஞ் செய்யாவிடினும் அவர்கள் நிலைக்கிரங்கியவராய்த் திருக்கோயிலிற்சென்று, இறைவரை வணங்கி, 'அவ்வினைக் கிவ்வினை' என்று தொடங்கி, அடியாரிடர் போக்குவது திருநீலகண்டமென்று, அதனைச் சிறப்பித்துச் 'செய்வினை தீண்டா திருநீலகண்டம்' என்று பாடினார் அன்றுமுதல் அந்நகர்க்கேயன்றி அந்த நாட்டினுக்கே அப்பிணி சேரா தொழிந்தது.

சிலநாட்கள் கழித்துப் புறம்போந்து திருப்பாண்டிக் கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல் முதலான பதிகளைப் பணிந்து கிழக்கே திரும்பினார். நணாவூர்த் திருவானிலைக் கோயிலைக் கைதொழுதார். மாணிக்கவெற்பை வணங்கினார்.

## 13. சோழநாடு திரும்புதல்

பிறகு, காவிரியின் தென்கரையிலுள்ள சோழநாட்டு நகரங்களை வணங்க எழுந்தருளினார். பல குன்றுகளையும் காடுகளையும் கடந்து, அங்கங்குள்ள திருப்பதிகளை வணங்கியவாறே திருப்பராய்த்துறை, திருவாலந்துறை, திருச்செந்துறை முதலான பதிகளைப்பாடிப் பரவினார். திருக்கற்குடிமேவிய கனகக்கொழுந்தைக் கண்டு வணங்கினார். திருமூக்கீச்சுரம், திருச்சிராப்பள்ளி முதலானவற்றைப் பாடித்தொழுது திருவானைக்காவை அடைந்தார். வெள்ளானையும் கோச்செங்கட்சோழரும் செய்த திருத்தொண்டைப் புகழ்ந்து பாடினார் திருப்பாற்றுறையையும் திருவெறும்பியூரையுஞ் சேவித்தார். திருநெடுங்களமாநகரை நெஞ்சுருகிச் சென்று பாடினார். திருக்காட்டுப்பள்ளியைக் கைதொழுது, 'வாருமன்னும்' என்னும் பதிகம் பாடினார். திருஆலம்பொழில் அரனை அமர்ந்து தொழுதார். திருப்பூந்துருத்திப் பொய்யிலியாரைப் போற்றினார். திருக்கண்டியூர் சென்று, அடியாருடன் கலந்து, காதல்பொங்கக் கைகுவித்து வணங்கி, 'வினவினேன் அறியாமையில்' என்று தொடங்கி, இறைவர் புகழை அடியாரைக் கேட்பதுபோற்

புகழ்ந்து பாடினார். திருச்சோற்றுத்துறை நெருங்கும் போதே பாடிக்கொண்டு சென்று வணங்கினார்.

மற்றும் திருவேதிகுடி, திருவெண்ணிப்பதி, திருச்சக்கரப்பள்ளி, திருப்புள்ளமங்கை(யில் ஆலந்துறைக் கோயில்) திருச்சேலூர், திருப்பாலத்துறை எனவுந் திருப்பதிகளைச் சேவித்துப் பாடித் திருநல்லூரை நெருங்கினார். அங்குள்ள அந்தணர்கள் அன்புமிக முறைப்படி வணங்கி வரவேற்றனர். பிள்ளையார் பல்லக்கிலிருந்திறங்கி வணக்கத்துடன், அவர்களோடு திருக்கோயிலையடைந்து, இன்பக்கடலிலே முழுகி வணங்கினார். சில நாட்கள் அங்கேயே எழுந்தருளியிருந்தார். பிறகு, திருக்கருகாவூர் சேர்ந்து, 'அந்தமில்லவர் வண்ணம் அழல்வண்ணம்' என்று சிறப்பித்துப் பாடினார். அங்கிருந்து நீங்கித் திருஅவளிவணல்லூர், திருப்பரிதிநன்னியமம், திருப்பூவனூர், திருஆவூர் (பசுபதீச்சுரம்) என்னும் அரனார் திருநகர்களை வழிபட்டுப் பாடித் திரும்பவும் திருநல்லூர் வந்தார் அந்நகரை வணங்கித் திருவலஞ்சுழியை நெருங்கினார். அந்த நகரத்தொண்டர்கள் நகரணி செய்து எதிர்கொண்டனர். அவர்களுடன் சென்று, அரனாரைப் பணிந்து செந்தமிழ்த்தொடை சூடினார். சிலநாட்கள் அங்கேயே எழுந்தருளியிருந்தார். அப்போது முதுவேனிற்காலமாகியது.

## 14. முதுவேனில்—முத்துப்பந்தர்

அக்காலத்திலே, குளிர்ந்த தென்றலையும், சந்தனக் குழம்பையும, மலர்பொதிந்த பனிநீரையும, முத்துமாலையையும மக்கள் விரும்பினர மேலும, மாளிகையின் மேலிடத்தையும், குளிர்ந்த பொழிலையும், மலர்ப்பொய்கைக்கரையையும் இருப்பிடமாகக்கொண்டனர். மயிலகள் ஒடுங்கின. வண்டுகள் பாடியாடின. தாமரைகள விரிந்தன. குயில்கள் பொழில்களிலே மாந்தளிரைக் கோதியவாறு மகிழ்ந்து கூவின. காதலாகளுக்குக் காதலையூட்டும் அந்த வேனிலிலே உறங்காத உயிர்களெல்லாம் ஒடுங்கி யுறங்கின. காட்டிலே மானினங்கள் கானலை நீரென்று நினைத்துத்திரியும் அந்

நாளிலே பிள்ளையார் வலஞ்சுழியிலிருந்து திருப்பழையாறை செல்லவிரும்பித் திருஆறைமேற்றளி, திருச்சத்திமுற்றம் முதலான நகர்களைக் கும்பிட்டுத் திருப்பட்டீச்சுரத்திற்குச் செல்லத்தொடங்கினார். வழியிலே வான்பிறையணிந்த வள்ளலார் அருளாலே, பூதங்கள், 'இப்பந்தரை யிறைவர் அருளினார்' என்று கூறியவாறு, வானத்திலிருந்து முத்துப்பந்தரைச் சம்பந்தர் தலைக்குமேலே விட்டன! அடியார்கள் அந்தப் பந்தரின் மாணிக்கக்கால்களைக் கைப்பற்றினர்! பிள்ளையார் சிவிகையிலிருந்து இறங்கி நிலமிசை விழுந்து வணங்கி, அந்திவண்ணர் திருவருளைக் கண்ணீர்மல்கப் பரவினார்! தொண்டர்கூட்டம் ஆரவாரித்தது! மறையொலி வானளாவியது! பிள்ளையார் பல்லக்கிலேறாமல், பிறைமுடியார் திருவருள் நிழல்போன்ற பந்தரின் நிழலிலே நடந்துசென்று, திருப்பட்டீச்சுரம் பேரருளாளரைச் சேவித்தார். அங்கிருந்து திருஆறைவடதளி, திருவிரும்பூளை, திருஅரதைப்பெரும்பாழி, திருச்சேற்றூர், திருநாலூர், திருக்குடவாயில், திருநறையூர், தென் திருப்பத்தூர், திருச்சிவபுரம், திருக்குடமூக்கு, திருக்கீழ்க்கோட்டம் என்னுந் திருப்பதிகளை வணங்கிப் பாடித் திருக்காரோணத்தை அடைந்தார். அங்கே, கங்கை முதலிய புண்ணிய ஆறுகளெலாம் மகத்திற்குவந்து வழிபடுந் திருக்கோயிலை வணங்கிப் பாடினார். திருநாகேச்சுரம் வந்து, நாகம்பரவிய நம்பர் திருவடியைப் பரவிப் பாடினார். திருவிடைமருதூர் நெருங்குதலுந் தலைசிறந்த மகிழ்ச்சியோடும் 'எனையாளுடையபிரான் இடைமருது இதுவோ?' என்று பாடிப்பரவி எதிர்கொண்ட அடியாருடன் சென்று திருக்கோயிலை வணங்கினார். திருக்குரங்காடுதுறை வணங்கித் திருவாவடுதுறையை அடைந்தார். அன்புமிக்கு எதிர் வந்து பணிந்த அடியாருடன் கலந்து நடந்துசென்று, திருவாவடுதுறையமுதைப் பாடிப் பரவி, அங்கேயே சில நாட்கள் எழுந்தருளினார்.

## 15. உலவாக்கிழி

அந்நாட்களி லொருநாள் அருமைத் தந்தையார் பிள்ளையாரையணுகி, 'வேள்வி செய்தற்குரிய காலமிது;

பொருள்வேண்டும்,' என்றார். அதனைச் செவியுற்ற காழிச் சிறுவர், 'நமக்கு அந்தமில்லாத பொருளாவன ஆவடுதுறையார் அடிமலரே' எனத் துணிந்து திருமுன் சென்றார். அன்பு மலரக் கைம்மலர் கூப்பினார். 'எந்தையார் நீள்செல்வம் வேண்டினார்; எளியேன் தங்கள் திருவடிகளே யல்லாமல் வேறொன்றிலேன்,' என்று விண்ணப்பித்து, 'இடரினுந் தளரினும்' எனத் தொடங்கும்—நாலடிமேல் இருசீர் வைப்பாகத் தொடரும்—இன்னிசைத் தமிழ்மறை பாடினார். இறைவரருளாலே பூதமொன்று விரைந்துவந்து, ஆயிரம் பொன்னடங்கிய கிழியொன்றை ஆண்டிருந்த பீடத்தின்மேல் வைத்தது! 'இறைவர் உமக்கு இந்த உலவாக்கிழியை உதவினார்,' என்று கூறி மறைந்தது.

பிள்ளையார் இறைவரருளை நினைந்து, நெகிழ்ந்து, நில மிசை நெடிது வீழ்ந்து பணிந்து, வறியன் புதையல் பெற்றதைப்போல மகிழ்ந்தெடுத்துச் சென்று, தந்தையாரிடமளித்தார். 'இஃது உலவாக்கிழி! தங்கள் சிவவேள்விக்கே யன்றிச் சீர்காழி மறையவர் வேள்விக்கெல்லாமும் வேண்டிய பொருளை யளிக்கும்!' என்றார். தந்தையார் பொற்கிழியைப்பெற்று விடைபெற்றகன்றார்.

தந்தையார் பிரிந்தபின் திருக்கோழம்பம், திருவைகல் மாடக்கோயில், திருநல்லம், திருவழுந்தூர் மேவுஞ்செல்வரை வணங்கித் திருத்துருத்தி சென்றார். 'வரைத்தலைப் பசும்பொன்' எனுந் திருப்பதிகம் பாடிச் சேவித்தார். திருமூவலூர் முக்கண்ணர்தாள் பரவினார். திருமயிலாடுதுறை[1] மங்கைபங்கரை வணங்கினார். திருச்செம்பொன்பள்ளி, திருவிளநகர், திருப்பறியலூர் வீரட்டம், திருவேட்டக்குடி மேவிய சிவக்கொழுந்தைச் சேவித்தார்.

## 16. யாழ் மூரி

தருமபுரத்தைச் சார்ந்தபோது, பாணர் அன்னையார் பிறந்த நகராதலால், அவருடைய உறவினர் வந்து வணங்

1. திருமயிலாடுதுறை, வடமொழியில் மாயூரமாகிப் பின் மாயவரமாகிச் சீர்கெட்டதைத் தமிழர் சிந்தித்துத் தமிழ்ப் பெயரை மீண்டும் வழங்குக.

கினர். பாணர் அவர்களுடன் அளவளாவி 'அடியேன் ஆளுடைய பிள்ளையார் பாடுந் தமிழ்மறையை யாழிலிட்டு வாசிக்கும் பேறுபெற்றுளேன்,' என்றார் அவர்களின் மகிழ்ச்சி அளவை மீறியது.

திருப்பதிகம் தங்கள் யாழிலிட்டு வாசிக்கும் பேறு பெற்றதால் அத்திருப்பதிகவிசை உலகு புகழுமவண்ணம் பரவுகிறது.

உறவினருரைத்த இம்மொழியாற் பொறிகலங்கிய பாணர் விழுந்து நடுங்கினர். புன்முறுவலுடன் வீற்றிருக்கும் புகலிப்பெருமான் கழல்வணங்கிப், "பெருமானே! இவர்கள் அறியாமையாற் கூறும் இதனைப் பொய்யாக்க யாழி லடங்காத இசைத்தமிழைப் பாடியருளவேண்டும். இவர்களேயன்றி உலகமும் 'திருப்பதிகப் பொருள் யாழி லடங்காது,' என அறியவேண்டும்,' என வேண்டினர். பிள்ளையாரும் இறைவரை வணங்கித் திருப்பதிகத்தன்மை உலகினர் கண்டத்தினும் யாழினும் அடங்காமையை உணர்த்த, 'மாதர் மடப்பிடி' என்னுந் திருப்பதிகம் பாடினர். பாணனர் முன்போல் அதைத் தம யாழிலிட்டு வாசிக்கத் தொடங்கினர். அது யாழிலடங்கவில்லை. பாணர் அச்சங்கொண்டு 'திருப்பதிகத்தை யாழிலிசைப் பேன்,' என்றகந்தையோடு கூறியதற்கு இதுவே காரண மென யாழை உடைக்க வோங்கினர். பிள்ளையார் நகைத் துத் தடுத்து அதைக் கையில் வாங்கிக்கொண்டார்.

"ஐயரே! நீர் யாழை முறிக்க முற்பட்டதேன்? உமை பங்கருடைய திருவருளின் பெருமை இக்கருவியிலடங் குமோ? நம் இயல்புக் கேற்றவாறு, உலகத்திற்கு இக் கருவியளவினில் அமைத்துப் பாடுதல் வழக்கமே! இசைப் பெருமை சிந்தைக் கெட்டாதெனில், யாழுக்குமட்டும் எட்டுமோ? முன்போலவே இறைவர் திருப்பதிக இசையை இனிமேல் இதனிலிட்டு வாசிப்பீராக!" என்றார்.

ஆளுடைய பிள்ளையாரருளிய இன்மொழியாலே தெளிவடைந்த பாணர் அவரை வணங்கி யாழைப்பெற்றார்.

பிறகு, பிள்ளையார் அடியாருடன் திருக்கோயிலை வணங்கிப் பாடினார். புறம்போந்து திருநள்ளாற்றை யடைந்தார். அடியார் எதிர்கொண்டு வணங்கக் கண்ணுதலார் திருமுன் சென்று 'போகமார்த்த' என்னுந் திருப்பதிகத்தைப் பாடி வணங்கினார். வெளியே வந்து, பாணரை அதனை யாழி லிட்டு வாசிக்கக் கேட்டுக்கொண்டு, தாளமிட்டுப் பாடினார். பாணர் வாசித்துப் பெருமகிழ்வடைந்தார்.

## 17. திருச்சாத்தமங்கை திருநீலநக்கர் நட்பு

பிறகு, பிற பதிகளை வணங்கிக்கொண்டு திருச்சாத்த மங்கை அடைந்தார். திருநீலநக்க நாயனார் அடியாருடன் நகரணிசெய்து எதிர்கொண்டு வணங்கி அயவந்தி என்னுந் திருக்கோயிலுக் கழைத்துச் சென்றார். உலகுய்யச் சைவந் தரவந்த புகலிப்பிரான் அவருடன் சென்று, அண்ண லாரைப் பாடி வணங்கினார் பிறகு, திருநீலநக்கர் வேண்டு கோளின்படி, அவர் திருமனையிலெழுந்தருளி அடியாருடன் அமுது செய்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் திருவமுதளித்துப் பிள்ளை திருவருளின்படி தங்கியிருக்கத் தம் திருமனையின் நடுவிலே வேள்வி மேடைக்கருகிலே இட மளித்தார். திருநீலநக்கர் அன்றிரவு கழிந்து, வைகறை யிலே அயவந்திப் பெருமானைச் சம்பந்தர் சென்று வணங் கித், 'திருமலர்க் கொன்றைமாலை,' என்று தொடங்கிப் பாடிய பதிகத்திலே திருநீலநக்கர் திருத்தொண்டைச் சிறப்பித் தார். பின்னர், வெளிவந்து திருநீலநக்கரிடம் பிரியா விடைபெற்றுத் திருநாகைக்காரோணம், கீழ்வேளூர் என்னும் இறைவர் திருநகரங்களை யேத்திப் பணிந்து அந்திவண்ணர் உறையும் பிற நகர்களை வணங்கப் புறப்பட்டார்.

## 18. திருச்செங்காட்டங்குடி—சிறுத்தொண்டர் நட்பு

திருச்செங்காட்டங்குடிச் சிறுத்தொண்டர் புகலியர் தலைவர் எழுந்தருளும் பொற்பைக் கேள்வியுற்று, நகரை யணிசெய்து, ஓடிவந்து, தொண்டருடன் எதிர்கொண்டு

வணங்கினார். தம் நகருக்கு அழைத்துச்சென்று கணபதீச்சரம் என்னும் திருக்கோயிலை வணங்கச்செய்தார். பிள்ளையார் இன்பக்கண்ணீர் வழியத் திருமுன்பு பணிந்தெழுந்து சிறுத்தொண்டர் திருத்தொண்டு தோன்றப் பண்ணிசைத் தமிழ்மறைபாடிப் பரவினார். சிறுத்தொண்டர் அடியாருடன் பிள்ளையாரைத் தம் திருமனைக் கெழுந்தருளச் செய்தார். அங்குச் சிலநாட்கள் இருந்தபின்னர், அருகிலிருந்த திருமருகலுக்குச் சென்று, பரமர் திருத்தாள் பணிந்து சிலநாட்கள் எழுந்தருளினார்.

## 19. வணிகனுக்கு நஞ்சு நீங்கியது

அந்த நாட்களில் ஒருநாள் ஒரு வணிகன், ஒரு கன்னிப்பெண்ணுடன் வழிப்போக்கனாக வந்து, திருமருகல் கோயிலுக்கருகிலிருந்த மடமொன்றிலே தங்கியிருந்தான். அன்றிரவு அவனை அரவொன்று தீண்டியது. அப்பெண்ணும் அவனும் பெண்ணின் பெற்றோரறியாமலே வணிகன் நகரில் மணம்புரிந்துகொள்ள முடிவுசெய்துகொள்ளப் புறப்பட்டு வந்தார்கள் ஆகையால், அப்பெண்கொடி கொள்கொம்பிழந்து வாடுங் கொடிபோலத் தத்தளித்தாள். நஞ்சு தலைக்கேறி உணர்விழந்தான் வணிகன்! அரவந் தீண்டியுந் தான் தீண்டமுடியாத நிலையிலிருந்த அப்பொற்கொடி பிள்ளைவரதத்திற்குப் போன இடத்திற் கணவனைப் பறிகொடுத்தவள்போலத் துவண்டாள்! மயங்கினாள்! அவனருகில் வீழ்ந்தாள்! வாய்விட் டரற்றினாள்!

“அன்னையையும் அத்தனையும் பிரிந்து, நின்னை நம்பி வந்தேன். வழியிலேயே என் வாழ்க்கைக்கொடியை ஊழ்வினை யறுத்துவிட்டதே! பாழும் அரவு பழிசெய்ததே! கணவனை நம்பிப் பெற்றோரைப் புறக்கணித்து வந்தேன்! கணவனை வழியிலேயே இந்தப் பெரும்வினைப்பூசம் விழுங்குமென்றறியேன்! நகரிலிருந்தும் பாழ்வனத்திலிருப்பவள் போல் ஆதரவின்றித் தவிக்கின்றேன்! இனியானைப் பிரிந்து, இனி யான் வாழுமாறுண்டோ?

இவ்வாறு புலம்பும் அவள் நல்வினை கூடுதலால் அருகி லிருந்த திருக்கோயிலை நோக்கிக் கைகூப்பித் தொழு தழுதாள்.

'அமரர் வேண்ட அலைகடல் நஞ்சை யமுது செய்தீர்! இரதிவேண்டக் காமனுயிரை யளித்தீர்! மார்க்கண்ட னுயிரைக் காக்க மறலியையே வீழ்த்தினீர்! திருமருக லண்ணலே! பேதையேன் கணவனுயிரைத் தந்தருள வேண்டும்!'

அப்போது வைகறையாகியதால், ஆளுடைய பிள்ளை யார் திருக்கோயிலுக்குச் செல்கின்றவர் அவள் ஓலத்தைக் கேட்டுத் தொண்டருடன் அவ்விடத்திற்கு வந்தார். அவளை அன்புடன் நோக்கி, 'அழாதே! அஞ்சாமல் உனக்குற்ற அல்லலைக் கூறு,' என்று வினவினார். அவள் கைகுவித்த வண்ணம் பிள்ளையாரடியிலே விழுந்து கண்ணீர் வடியத் தன் கதையைக் கூறினாள் :

'வைப்பூரிலே தாமன் என்னும் வணிகருக்கு நாங்கள் எழுவர் பெண்கள் பிறந்தோம். என் அத்தை மகனாராகிய இவருக்குப் பெண் கொடுப்பதாகச் சொல்லி ஏமாற்றிவிட்டுப் பொருள் மிகுந்தவர்களைப் பார்த்துக் கொடுக்கத் தொடங்கினார் என் தந்தையார். எனக்கு முன் பிறந்த அறுவரையும் அவ்வாறே கொடுத்துவிட்டார். நான் மட்டும் இவரிடம் இரக்கங்கொண்டு இவரையே மணக்க உறுதிபூண்டேன். பெற்றோ ரறியாமல் இவருடன் புறப் பட்டு வந்துவிட்டேன். வரும்வழியில் இங்கே இந்த நிலையையடைந்தேன். கடலிற் கலங் கவிழ்த்துவிட்டேன். தங்கள் திருவடிப்புணையே இனி என்னைக் கரையேற்றல் வேண்டும்.'

பிள்ளையார் பெரிதும் இரங்கித் திருமருகற் பெருமா னார் திருவடிகளைத் தொழுது, 'சடையாய்! எனுமால்' எனத் தொடங்கிப் பாடி வேண்டினார். உடனே வணிகன் உயிர்பெற்றெழுந்து, பிள்ளையாரை வணங்கினான். அப் பெண்கொடி எய்திய மகிழ்ச்சிக்கு எல்லையுண்டோ?

அவர்களிருவருக்கும் மணம்புரிந்துவைத்து மகிழ்வுடன் செல்லவிட்டார.

அந்நாளிற் சிறுத்தொண்டர்வந்து, திரும்பவுங் கணபதீச்சுரம் சேவிக்க எழுந்தருளவேண்டுமென்று வேண்டினர். அவருடனே திருமருகற் பெருமானர் திருக்கோயிலையடைந்து பணிந்தெழுந்தார். அப்போது, செஞ்சடை வானவர் தம் திருமேனி யொருபாகம் பசுமையாகச் செங்காட்டங்குடியிலே கணபதீச்சரத்திலே மேவுங் கோலத்துடன காட்சியருளினர். கண்ட பிள்ளையார் கைகுவித்துக் கண்ணீர்வாரப் புளகம போர்ப்ப விழுந்து வணங்கி யெழுந்து, 'அங்கமும் வேதமும்' என்னுந் திருப்பதிகத்தைக் காதல் மிகப் பாடிப் பரவினர்.

பிறகு, சிலநாட்கள் வரையில் அங்கேயே எழுந்தருளியிருந்து, சிறுத்தொண்டருக்கு விடைகொடுத்துச் செல்லவிடுத்துத் திருப்புகலூர் செல்லப் புறப்பட்டார்.

## 20. திருப்புகலூர் — முருகனர் நட்பு — இரண்டாமுறை வாக்கின் மன்னரைக் கண்டது—திருவாரூர்ச் செலவு

வழியிலுள்ள திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு, திருப்புகலூரை நெருங்கினர் அங்குள்ள மடத்தின் தலைவராகிய முருகநாயனர் திருத்தொண்டருடனுங் காதலுடனும் எதிர்கொண்டு போற்றி யழைத்துச்சென்றார் பூந்தராய்வந்த அண்ணியர் அவருடன் புகலூர் வள்ளலின் வர்த்தமானீச்சரரின்-திருமுன் சென்று 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப்' பரவிப் பாடி வணங்கி, வெளியே வந்து, அந்நகரிலுள்ள முருகனர் மடத்திலே எழுந்தருளியிருந்தார்.

இவர் அங்கெழுந்தருளியிருக்கும் நாட்களிலே திருநாவுக்கரசர் திருவாரூரைச் சேவித்துவிட்டு அங்கே எழுந்தருளினர். அவர் வரவைக்கேட்ட ஆளுடைய பிள்ளையார் காணவேண்டுமென்னுங் காதல்மீதூர அடியாருடன் எதிர்கொண்டார். இருவருள் எவர் முந்தி வணங்கினரென்

றறியமுடியாமல் அன்புடன் வணங்கிக்கொண்டனர். இரு பெரியார்களையும் ஒருங்கே கண்ட அடியார்கள் இருவரை யும் நிலமிசை விழுந்து வணங்கினார். ஆளுடைய அரசரும் பிள்ளையாரும் ஒருவர்க்கொருவர் நலன்களை வினவியறிந்த பின்னர்ச் சிரபுரச் செம்மலார், 'அடிகளை இங்கே காணும் பேறு பெற்றேன். ஆரூரைத் தொழுதுவந்த பரிசையறிய விரும்புகிறேன்,' என்றார். மொழிமன்னர் திருப்பதிகத்தாலே திருவாரூர்த் திருவாதிரை விழாவின் சிறப்பைக் கூறியருளினார். கேட்ட பிள்ளையார், 'நாங்கள் திருப்புகலூரிலேயே எழுந்தருளியிருங்கள். நான் ஆரூரமர்ந்த மாணிக்கத்தை—வீதிவிடங்கரைப்—போற்றி வருவேன்,' என்று அப்படியே திருவாரூர்க்குப் புறப்பட்டார்.

நாவுக்கரசர் தம் மனமும் அன்பும் பிள்ளையாருடன் செல்லத் திருப்புகலூரில் முருகனார் மடத்திலே எழுந் தருளி வர்த்தமானீச்சரத்தை வணங்கி வாழ்ந்தார். திரு வாரூர் நோக்கி யெழுந்தருளிய வேணுபுரச் சிறுவர் இடையேயுள்ள திருநக்கற்குடி வீரட்டத்தையும் பிற நகர்களை யும் வணங்கியவாறே, 'அள்ளற் கழனியாரூ ரடைவோம்,' என்று பாடியவாறே ஆரூர்க் கருகிலே சென்றார்.

வானமளாவிய திருக்கொடிகள் காழிவள்ளலை வருக வருக என்றழைப்பதுபோலாடப் பொன்னுலகெனப் பொலியும் அழகைக் கண்டு, 'பருக்கையானை' என்னுந் திருப்பதிகத்தைப் பாடிப் பரவியவாறே அதன் எல்லையை அடைந்தார். காதல்வெள்ளம் பெருகிப் பொலிவதுபோல எங்கும் குளிர்ந்த ஒளிவீசத் திருப்பல்லக்கிலிருந் திறங்கிக் கைநிறைய மலர்கொண்டு தூவித் 'திருவிருக்குக்குறள்' பாடி வணங்கினார்.

பிள்ளைப் பெருமானார் எழுந்தருள்வதையறிந்த ஆரூர் மக்கள் அடைந்த மகிழ்ச்சியையும் நகரணிசெய்து எதிர் கொண்டு போற்றிய சிறப்பையும் எழுத்தாலெழுத வொண்ணுமோ? தெருவெலாந் தோரணமும் மலர்மாலை களும் நிழல்செய்தன! தூவிய சுண்ணப்பொடியும் பொரி

யும் மலர்களும் நிலத்தை மூடின! மறையொலியும் மங்கல வொலியும் காதுக்கினிய விருந்தூட்டின! கண்ணும், காதும், நாசியும் இனிமையடைய வாயினுற் புகலிப்பிள்ளை யாரைப் போற்றியவண்ணம் வணங்கினர்.

அவர்கள் வணங்கும்போது தாமும வணங்கிய பிள்ளை யார், 'அந்தமாயுலகாதி' என்னும் பதிகம் பாடி எந்தை யென்னை யேற்பரோ? என இசைத்துப் பின்சென்ருர்! திருவாரூர்த் தெருவிலே தம் மலரடியால் நடந்துசென்ற சண்பையாளியார் தேவாசிரியனைக் கண்டு, அதன் ஒளியால் அதன் பெருமையை அறிந்து வணங்கினர். பிறகு, பூங்கோயிலின் மதிலையடைந்து, கோபுரத்தின்முன் விழுந்து வணங்கினர். பின்னர், முறைப்படி மாளிகையை வலம் வந்து வீதிவிடங்கர் திருமுன்சென்று தாழ்ந்தார். எழுந்து பரவிப் போற்றித தமிழ்த்தொடை சூட்டிப் புறம்போந்தார். அங்குள்ள மடத்தி லடியவருடன் எழுந்தருளியிருந்தார்! அருகிலுள்ள அரனெறி யென்னுந் திருக்கோயிலையும் புற்றிடங் கொண்டருள் புண்ணியர் பூங்கோயிலையும் வைகலும் வணங்கி வாழ்ந்தார்.

## 21. திரும்பவும் திருப்புகலூர்—அரசுடன் சேலவு—கலயர் நட்பு

சிலநாட்கள் கழிய, மற்றைப் பதிகளை வணங்கவெண்ணித் திருக்கோளிலி, திருவலிவலம் முதலிய திருப்பதிகளைச் சென்று கும்பிட்டார். திரும்பவும் ஆரூர் சேர்ந்தார். மற்றும் பலநாட்கள் கழிந்தன! ஆரூரை விட்டுப் புறத்தே வந்தார். உள்ளந் திருவாரூரையே விழைந்தது. பிரிவு வருத்தியது. உள்ளந்தெளியப், 'பவனமாய்ச் சோடையாய்' என்னும் பதிகம் பாடினுர். அரிதிற் பிரிந்து திருப்பனையூர் பணிந்து வைகினர். திருப்புகலூரைச் சார்ந்தார்.

சொல்லரசர் அடியார்களுடன் வந்து, எதிர்கொண்டழைத்துச் செல்லச் சென்று இறைவரை யேத்தினர். முருகனர் திருமனையிலே அரசுடன் திருவமுது செய்தருளி, முருகனர் மடத்திலே எழுந்தருளி யிருந்தார். அப்போது

சிறுத்தொண்டரும் நீலநக்கரும் வந்து வணங்கி உடனுறைந்தனர். சிவத்தொண்டு செய்தருளுஞ் சிறப்புமிக்க அடியார்கள் ஒன்றுகூடி மகிழ்தலைக் காட்டினுஞ் சிறப்புற்ற இன்பமேது? திருஞானசம்பந்தர் இம மகிழ்ச்சியிலே திளைத்துக் 'குறிகலந்திசை' யெனுந் திருப்பதிகம் பாடி மற்றையோரையும் மகிழ்வித்தார்.

திருப்புகலூர்ச் செஞ்சடை வானவர் அருள்பெற்றுப் பிறநகர்களையும் வணங்க விரும்பினர்; சிறுத்தொண்டருக்கும் நீலநக்கருக்கும் விடைகொடுத்தார். முருகனரை அங்கேயே இருக்கப் பணித்தார். அப்பருடன் புறம்போந்தார். அப்பர் தம்முடன் நடந்துவரும் பிள்ளையாரை நோக்கி, 'இறைவ ரளித்த சிவிகையி லெழுந்தருள்க!' என வேண்டினர்.

'திங்கள் வேணியார் திருவருள் இதுவெனில், முன்னே தாங்கள் எழுந்தருள்க! அடியேன் தங்களைத் தொடர்ந்தே பின் வருவேன்.'

இங்ஙனம் விழைந்த பிள்ளையார் விழைவின் வண்ணம் தம் அடியாருடன் ஆளுடைய அரசு முன்சென்றார். பிள்ளையார் முத்துப் பல்லக்கிலே பின்சென்றார். இதே முறையிலே எங்குஞ்செல்ல முடிவுகட்டினர் முதன்முதல் இருவரும் ஒன்று சேர்ந்து சென்ற திருக்கோயில் திருவம்பரிலுள்ள திருப்பெருந்திருக்கோயில் — ('திருமாகாளம்'?) அங்கே ஆறணிந்த அண்ணலாரை வணங்கிச் சிலநாட்கள் உறைந்தனர். இறைவரைப் 'புல்கு பொன்னிறம்' என்ற தமிழ் மறையாலே சம்பந்தர் வாழ்த்தினர். கோச்செங்கண்ணனர் எடுத்த திருக்கோயிலை வணங்கினர்.

சிலநாட்கள் எழுந்தருளியபின், திருக்கடவூருக்கு அப்பருடன் சென்றார். குங்குலியக்கலயர் நகரணி செய்து அடியவருடன் எதிர்கொண்டு வணங்கி அழைத்துச் சென்றார். கடவூரில் வீரட்ட அண்ணலின் திருக்கோயிலை வலங்கொண்டு திருமுன் தாழ்ந்து, 'சடையுடையாய்!' என்னுந் தமிழ்த் தொடைசூட்டி வணங்கினர். கலயர் திருமனையிலே

விருந்துண்டனர். திருக்கடவூர் மயானமும் பணிந்தார். சிலநாட்கள் கலயர் அன்பிலே கட்டுண்டிருந்து திருவாக்கூர் அடைந்து தான்தோன்றிமாடம் எனுந் திருக்கோயிலைக் கும்பிட்டார். பிற நகர்களையும் வணங்கியவாறே மீயச்சூர் தொழுது பாம்புரநகரினைப் பணிந்தார். திருவீழிமிழலையை நெருங்கினார்.

## 22. திருவீழிமிழலை—தோணியப்பர் சேவை—வற்கடம்—பொற்காசு

முன்சென்ற அப்பரை யெதிர்கொண்ட வீழிமிழலை யந்தணர்கள் புகலிப்பிரான் எழுந்தருள்வதைக் கேட்டுப் புளகமெய்தி யெதிர்கொண்டு வணங்கினர். பிள்ளையாரும் சிவிகையிலிருந் திழிந்து, அவர்களை வணங்கி, உடன் சென்றார். திருமலர்க் கைகள் தலையின்மேற் குவிய விண்ணிழி விமானத் திருக்கோயிலை யடைந்து பணிந்து, இறைவரைக் கண்டு அவர் தோற்றத்தை வியந்து ஈடுபட்டார். 'சடையார் புனலுடையார்' எனத் தொடங்கி நெக்குருகிப் பாடினார்; நீற்றழகர் சேவடியை நெஞ்சுருகி மறுபடியுங் கும்பிட்டார் இருவரும் அந்நகரிலே பலநாட்கள் எழுந்தருளினர்

கோயிலின் மதிற்புறத்துள்ள மடமொன்றில் ஆளுடைய வாக்கின்மன்னர் அடியாருடன் எழுந்தருளினார். பிள்ளையார் திருக்கோயிலின் கோபுரத்து வடக்கிலுள்ள மடத்திலே அடியாருடன் எழுந்தருளினார். இருவரும் காலந்தவறாமற் கண்ணுதலைக் கும்பிட்டிருக்கும்போது, சீர்காழி யந்தணர்கள் பிள்ளையாரை நாடி வந்தனர் வீழிமிழலை யந்தணர்கள் காழி யந்தணர்களைக் கைகுவித்து வரவேற்றனர். வந்தவர்கள் காழிப்பெருமானைக் கைகுவித்து வணங்கி மகிழ்வுடன் நலம் வினவினர். பிறகு, அவ்வூரந்தணர் அளித்த செவ்விய பல்சுவை யுணவை உண்டனர். பிள்ளையார் திருமுன் சென்று, 'தோணியப்பரை வணங்க எழுந்தருளவேண்டும்,' என வேண்டினர். 'வீழிமிழலையிறைவர் விடையளிப்பின் செல்வோம்,' என்றனர் இளங்கோலப்பெருமான்.

அன்றைய இரவு கனவிலே, 'தோணிபுரக் கோலத்தை வீழிமிழலையிலேயே காட்டுகின்றோம்,' எனக் கண்ணுதலார் எழுந்தருளிக் கூறினார். வைகறையிலே விண்ணிழிவிமானக் கோயிலுக்குச் சென்றார். இறைவர் தோணியப்பராகக் காட்சியளித்தருளினார். மெய்சிலிர்த்து நின்ற பிள்ளையார் வியந்து, 'மைம்மருபூங்குழல்,' என்று தொடுத்துப் பாடி யின்ப வெள்ளத்திலே முழுகிநின்றார். தெளிந்து விழுந்து வணங்கி, வெளிவந்து, பிரமபுரப் பெரியார்களை நோக்கி, 'இறைவர் எம்பெருமாட்டியாருடன் எழுந்தருளிய திரு நகர்களை யெல்லாம் வணங்க எழுந்த என் காதலுக்கிரங்கிய தோணியப்பர் இங்கேயே தமது கோலத்தைக் காட்டி யருளினார். ஆகையால், நீங்கள் சிரபுரஞ் செல்லலாம்,' எனச் செப்பினார். அவர்களும் திகைத்து அவராணையை மேற்கொண்டு தில்லை முதலான பதிகளை வணங்கித் தோணி புரம் சென்றனர். பிள்ளையாரும் அரசும் திருவீழிமிழலை யிலேயே எழுந்தருளியிருந்தனர்.

அந்நாளிலே வானம் பொய்த்ததனாலே, உலகிலே உயிர்கள் உணவின்றித் தடுமாறின. ஆறுகள வற்றின. புற்களும் பொடிந்தன. அறத்தின் நிலை அலைவுற்றது. விண்ணவர் திருக்கோயில்களில் விழாக்க ளொடுங்கின. பிள்ளையாரும் அரசும் பெரிதுங் கவலையுற்றனர். இறைவர் அவர்களின் கனவிலே யெழுந்தருளி, 'அடியவர் வறுமை நீங்கப்—பசி நீங்க—அன்றாடம் நம் விமானத்தின் முன் னும் பின்னும் உள்ள பீடங்களிலே ஒவ்வொரு பொற்காசு வைப்போம். நாளைமுதல் அவற்றைக் கொண்டு அடியார் பசியைப் போக்குங்கள்,' என்றருளினார்.

மற்றைநாட் காலையிலே விமானத்தின் முன்னும் பின் னும் உள்ள பீடங்களிலே பொற்காசு கண்டு மகிழ் வெய்தி னர். அவற்றைக்கொண்டு அடியார் பசியைப் போக்கினர். ஆனால், அரசின் திருமடத்திலே முன்பே அடியார் விருந் துண்பதையும் பிள்ளையார் திருமடத்திலே பின்பே உணவு கொள்வதையும் அறிந்த பிள்ளையார் அடியார்களை வின வினார்.

"நம் காசு மட்டமாம்! ஆகையால், அரசின் காசு மட்டும் உடனே ஏற்றுக்கொள்ளப்படுகிறது! நம் காசு வாசி பெற்றுப் பின்னரே ஏற்றுக்கொள்ளப்படுகிறது!"

அடியாரொருவர் கூறும் இம்மொழியைக் கேட்டவுடன் இறைவரை வணங்கி, 'வாசிதீர்த்' தருளவேண்டிப் பாடினார் பிள்ளையார். அன்றுமுதல் தூயகாசு—வாசியில்லாக் காசு—கிடைத்தது. காலத்திலே உணவு உண்டனர்; கண்ணுதலார் திருவடியை வணங்கினார்கள். பசிதீர்ந்து மிக மகிழ்ந்தனர்.

பலநாட்கள் கழித்து, வற்கடந் தொலைந்தது. சம்பந்தரும் அப்பரும் மகிழ்ந்து வெளிவந்து திருவாஞ்சியம் சென்று வணங்கினார். தலையாலங்காடு, பெருவேளூர், சாத்தங்குடி, திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலைநீணெறி, திருக்களர் முதலான திருவூர்களை வணங்கித் திருமறைக்காடு சேர்ந்தனர்.

## 23. திருமறைக்காடு—கதவுக் காப்பு

திருமறைக்காட்டில் வாழ்வோர் இவர்கள் வருகையையறிந்து, நகரை யணிசெய்து, நிறைகுட மேந்தி, மங்கல முழக்கி, மறையோதி, எதிர்கொண்டு வணங்கினர். அவர்களும் எதிர்வணக்கம் இயற்றி நகருட்புகுந்தனர். அப்போது சிவம்பெருக்குந் திருவொலி வானமளாவியெழுந்து மக்களின் உள்ளத்திலே மட்டற்ற இன்பவொலியை யெழுப்பியது. திருக்கோயிலையடைந்து திருக்கோபுரவாயிலில் விழுந்து வணங்கினர். பின்னர் மறைகள் வழிபாடுசெய்து திருக்காப்பிட்டவாயிலை யடைந்தனர். அவ்வாயில் மறைகள் திருக்காப்பிட்ட நாள்முதலாகத் திறக்கப்பெறுமலிருப்பதை அடியவர்கள் கூறினர். அது திறக்க முடியாமையால் வேறுவாயில் வகுத்துச்சென்று வழிபாடுசெய்து வருவதையும் விரும்பினர். இருவரும் வியப்புற்றனர்.

ஆளுடையபிள்ளையார், 'அப்பரே! மறைக்காட்டு மாமணியை மறைகள் காப்பிட்ட வாயில்வழியே எங்ஙன மேனுஞ்சென்று வணங்கல்வேண்டும். தாங்களே தம்பிரா னைப் பாடித் திறப்பித்தல் வேண்டும்,' என்றார்.

'தாங்கள் இப்பரிசு இயம்பியருளினால் ஏலேனென் பது எங்ஙனம்?'

அப்பர் பாடினார். பதிகத்திலே பத்துப்பாட்டு முடிந்துந் திறக்கப்பெறவில்லை. பதினோராவது திருப் பாட்டிலே இறைவர் உள்ளம் நெகிழ்ந்திடக் கதவுகளும் நெகிழ்ந்தன! திறந்தன! அவ்வியப்பைக் கண்டோரா மெய் சிலிர்த்து விழிபனிப்ப வாக்கின் மன்னரை வணங்கி வாழ்த்தி யாரவாரஞ் செய்தனர். பிள்ளையாரும் அப்பரை வணங்கினர். அப்பரும் எதிர்வணங்கினர். யாவரும் மறைக்காடரை வாழ்த்தி வழிபட அவ்வாயில்வழியே சென்று வலம்வந்து திருமுன்சென்று, படிமிசைப் படிந்து வணங்கினர். தாயினும் இனிய தம்பிரானை இருவரும் தாழ்ந்து மெய்ந்நடுங்கக் கரைகாணக் காதலுடன் பாடி யிறைஞ்சினர். வெளிவந்தவுடன் அப்பர் வேண்டு கோளின்படி பிள்ளையார் திருக்கதவுகள் காப்புக்கொளப் பாடினார். இரண்டாந் திருப்பாட்டிலேயே காப்பாயின தைக் கண்டு எல்லோரும் களிப்பெய்தினர். பதிகத்தை நிறைவாக்கியபின் ஆங்குள்ள திருமடமொன்றை யடைந்து வைகினர். அன்றுமுதல் அத்திருவாயில் திறக்கவுங் காப்பிடவுமான வழக்கத்தை யெய்தியது. இறைவர் திரு வருளை யென்னென்பது.

அன்றிரவிலே அப்பர் தாம் பத்துப் பாட்டுப் பாடி வணங்கியுந் திறவாக்கதவு பிள்ளையாரின் இரண்டாம் பாட்டிலேயே காப்பிட்டுக் கொண்டதை யெண்ணிக் குழம்பிய சிந்தையராய் இருந்தார். மைவளர்கண்டர் ஒரு சைவ வடிவுடன்வந்து, 'வாய்மூரி லுள்ளோம்; அங்கு வருக!' என்றருளி முன்சென்றார். பின்சென்றார் அப்பர். நெருங்குவார்போன்று நெடிது முன் செல்லுவாரானார் வந்த வள்ளலார். இது நிற்க.

சண்பை மன்னர் அப்பரைக் காணுமல், 'எங்குற்ருர்?' என்று வினவத் 'திருவாய்மூர் சென்றனர்' என அடியார் பணிவுடன் இயம்பினர். சென்றதெதற்கோ என ஐய முற்றுத் தாமும் அவர் சென்றவழியே சென்றனர் இடையிலே இறைவர் பிள்ளையார்க்குமட்டுந் தம் திருக்கூத்தை அம்பிகையுடன் காட்டியருளினர். பிள்ளையார், 'தளிரிள வளர்' என்னுந் திருப்பதிகம்பாடிப் பேரின்பமெய்திக் கும்பிட்டனர்; வாக்கரசுக்குங் காட்டினர். பிறகு, அரசுடன் திருவாய்மூர் சென்று வணங்கித் திருமறைக்காடு திரும்பி அங்கேயே எழுந்தருளியிருந்தனர்.

## 24 திருவாலவாய்—சமணரோடு வாது—வெற்றி— கூன்பாண்டியர் நெடுமாறனாராதல்— சைவஞாயிறு தழைத்தல்

அக்காலத்திற் பாண்டிநாடெங்குஞ் சமண நெறியே நிறைந்திருந்தது. சைவம் ஒடுங்குங் காலங் கருதியிருந்தது. அரசர் கூன்பாண்டியரும் சமண நெறியிலே அடியிட்டார். பாண்டிநாட் டரசியாரிடமும் அமைச்சர் குலச்சிறையாரிடமும் சைவநெறி மறைவாகத் தங்கியிருந்தது. அவ்விருவரும் அவரைச்சார்ந்த ஏவலரும் உளங்கலங்கிச், சைவந் தலையெடுக்கச் செய்யும் செயலேதாவதுண்டாமோ? இருணிறைந்த இந்தப் பாண்டிநாட்டிலே இரவு கழிந்து சைவஞாயிறு வெளிவராதோ? கண்களுக்குங் காட்சிகளைக் காண்போமோ? சிவபெருமானர் திருவுளமென்னவோ?' என்று நைந்து நைந்து காலங் கழித்துவந்தனர்.

இந்நிலையிலே, காழிவருங் கவுணியர் குலமணியின் சைவத் திருப்பணியைப்—பரமரைப் பரவித் திருப்பதிகத் தொடை புனையுஞ் சிறப்பினைக—கேள்வியுற்றனர் பாண்டிச் சைவர்களிருவரும். அவர்களடைந்த மகிழ்ச்சியை அளப்பதெப்படி! திருஞானசம்பந்தரை நேரிற் கண்டாற் போலத் திக்குநோக்கித் தொழுதனர்; உணர்ச்சியால் நட்புக்கிழமை பூண்டனர் தம் ஏவலரில் அறிவிற்சிறந்தவரைத் தூதுவிட்டனர். அவர்களும் திருமறைக்காடு சேர்ந்து சீர்காழிச்செல்வர் திருவடிகளைத் தொழுதனர்.

"நீங்கள் யார்?"

"பாண்டிநாட் டரசியாரும் குலச்சிறை யமைச்சரும் செலுத்திய ஏவலர்."

"நன்று; அவர்களிருவரும் நலமோ?"

"தங்கள் திருவருளால் நலமே."

"வந்த வேலை யென்ன?"

"பாண்டியரசரும் பாண்டிநாடுஞ் சமணவிருளிலே முழுகியது! எங்கு நோக்கினும பாயும் பீலியுமே பரவி யுள்ளன! அமைச்சரும் அரசியாரும்மட்டுந் திருவெண்ணீறணிந்து மறைவிலே சைவத்தைக் காத்து வருகின்றனர். இந்நிலையிலே அடிகளின் பேரொளி பரவிவருவதைச்—சைவக் கதிரவன் தழைத்து வருவதைக்—கேள்வியுற்றனர். எங்களை விடுத்தனா. பாண்டிநாடு சைவவொளியைப் பெறச் செய்யவேண்டுமென வேண்டிக்கொள்கின்றனர்."

அங்குள்ள அடியவரெல்லாரும் அவ்வாறு செய்வது சாலச் சிறந்ததெனை விண்ணப்பித்துக்கொண்டனர் பிள்ளையார் அவர்களுடன் திருக்கோயிலிற் சென்று வணங்கிப் பெரிய கோபுரத்தி லமர்ந்து, ஆளுடைய அரசர்பால் அவர்கள் வந்திருக்கும் நோக்கத்தைத தெரிவித்துக்கொண்டார். அப்பர் திடுக்குற்றார்.

"கவுணியர் குலக்கொழுந்தே! சமணர் வஞ்சகர்; அஞ்சாதவர்; இரக்கமில்லாதவர். அவர்களிருக்குமிடத்திற் கெழுந்தருளல் இனியதன்று. கோள்களுந் தீயன."

சம்பந்தப்பிள்ளையார் புன்முறுவல் செய்தார்.

"ஏன் தங்களுக் கச்சம்? நம் பெருமானார் திருவடியை வணங்கும் நமக்குக் கோள்களுஞ் சமணரும் எங்ஙனந் தீங்குசெய்ய முடியும்?"

இவ்வாறு கூறி "வேயுறு தோளி" எனத் தொடங்குங் கோளறு திருப்பதிகம் புனைந்தருளினர். அரசும் நன்றென்று உடன்பட்டுத் தாம் அவர்க்குமுன் எழுந்தருளி

ளுர். அதுகண்ட பிள்ளையார், 'அப்பரே! தாங்கள் சோழ நாட்டுத் திருப்பதிகளை வணங்கி யிங்கேயே எழுந்தருளல் வேண்டும்,' என்று வேண்டிக் கைகுவித்துத் தொழுதார். அரசும் எதிர்தொழுது, அரிதின் விடைநல்கி அங்கேயே எழுந்தருளியிருந்தார்.

பிள்ளையார் மறைக்காட்டாரை மனத்திலே தொழுது, ஐந்தெழுத் தோதியவராய் முத்துச்சிவிகையி லேறினர். அப்போது தொண்டர்கள் செய்த ஆரவாரம் கடலொலி யென எழுந்தது. மங்கல முரசுகள் ஒலித்தன. மறை முழங்கியது. வெற்றிச் சங்கதிர்ந்தது விரிபுனல் அணிந்த வேணியாரடியார் சூழ வேணுபுரப் பிள்ளையார் தென்னாடு நோக்கிச் சென்றனர். ஆங்காங்குள்ள திருப்பதிகளி லுள்ள அடியவர் எதிர்கொண் டழைத்துச் செல்லச் சென்று, அரனாரடிமலர்களை வணங்கிப் பாடியவாறே திருவகத்தியான்பள்ளி, திருக்கோடிக்குழகர்கோயில், திருக் கடிக்குளம், திருஇடும்பாவனம், திருவுசாத்தானம் என்னுந் திருபபதிகளைக் கும்பிட்டார். நெய்தல் நிலங்கடந்து மருதநிலம் அடைந்தார். அந்த மருதநிலவளனை யெப்படி இயம்புது? வயலெங்கும் சங்குகள்! கரும்புகள்! நெற் பயிர்கள்! பொய்கைகளெங்கும் புனல்! மணக்கும் மலர் கள்! எங்கெங்கும் உழவர் ஒலி! உழத்தியர் குரவையொலி! பார்க்குமிட மெங்கும் பன்மலர்ப் பொழில்கள்!

மருதங் கடந்து, முல்லை நகைக்கும் புதர்களும், பசுமை வழியுங் காடுகளும் ஆனிரைகள் மேயும் புல்வெளி களுமுடைய முல்லையைக் கடந்தார். வில்லேந்திய மறவர் வழிவருவோரைப் பொருளிலராயினும் வீழ்த்தி மகிழும் கொடிய பாலையைக் கடந்தார். சோழநாடு பின்தங்கப் பாண்டிநாட்டின் பாங்கிலே வந்தார்.

மணம்நிறைந்த மலர்கள்நிறைந்த மலைகளிலிருந்து, இறங்கிவரும பல ஆறுகளைக் கடந்தார். மான்கள் விளை யாடும் காடுகளைக் கடந்தார். திருக்கொடுங்குன்றஞ் சேர்ந் தார். கொடுங்குன்றத் தமர்ந்தருளிய பவளக்குன்றை—

நடைக்குன்றமான யானையை யுரித்தருளியவரை வணங்கிக் குன்றாத் தமிழாற் பாடிப்பரவினார். மதுரையை நெருங்கினார்.

அந் நாளிலே, சமணர்கள் தீய கனவையும் குறிகளையுங் கண்டனர். சம்பந்தர் எழுந்தருள்வதையுங் கேட்டனர். எட்டு மலையினுமுள்ள சமணர்கள் யாவருங் கட்டுப்பாடாக மதுரை மாநகரிலே கூடினார்கள். குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் நற்குறிகளைக் கண்டு மகிழ்ந்தனர். பிள்ளையாரை அழைக்க வந்த ஏவலர்கள், முன்னே ஓடிப் பிள்ளையார் மதுரையெல்லை வந்தடைந்த நன்மொழியை நவின்று பணிந்தனர் மங்கையர்க்கரசியார் குலச்சிறையாரிடம் பிள்ளையாரை யெதிர்கொண்டு வணங்கி யழைத்துவரப் பணித்தார். பின்பு தம் கணவரிடம் திருவாலவாய்க்குச் செல்வதாகச் செப்பி விடைபெற்றுத் திருவாலவாயை அடைந்தார்; சொக்கநாதரையும் அங்கயற்கண்ணியாரையும் அடிபணிந்து பிள்ளையாரை எதிர்நோக்கியிருந்தார்.

பொதிகைத் தமிழ்த்தென்றலெதிர்கொள்ள, திங்கள் வானத்திலிருந்து வழிபடுவதுபோல முத்துக்குடை நிழல் செய்ய, மறையொலியும் மங்கல முரசொலியும் முழங்கத் திருஞானசம்பந்தர் எழுந்தருள்வதைக் கண்ட குலச்சிறையார், அடியார் குழுவின் எதிரே விழுந்து வணங்கி யெழாமலே கிடந்தார் அடியார்கள் எதிர்தொழுது எழும்படி வேண்டவும் எழுந்திலர். ஆளுடைய பிள்ளையார் அது கேட்டு விரைந்து சிவிகையினின் றிழிந்துவந்து கைகொடுத்தெடுத்தருளினார். குலச்சிறையார் கைகுவித்து நின்றார். 'சோழர் திருமகளாராகிய பாண்டிய அரசியார்க்கும் நமக்கும் நாதற்கண்ணார் திருவருள் குறைவிலதே?' என வினவினார் வேணுபுரத் தந்தணர். குலச்சிறையார் மறுமுறையும் பணிந்தார்.

"சென்ற காலத்தில் செய்த தவத்தாலே தாங்கள் எழுந்தருளினீர்கள். நிகழ்காலத்திலே தங்கள் வரவால் எதிர்காலம் நன்றும் பேறு பெற்றோம். ஆகவே, இறைவரருள் நன்றுடையோம். இனி இந் நாடும் வேந்தனும்

வெண்ணீறணிந்து மேன்மையுறுவார்கள். பாண்டிமா தேவியார் தாங்கள் எழுந்தருள்வதை யறிந்து, எதிர் கொண்டு அடிபணிய அடியேனை யேவினர்.'' என்று கூறி மீளவும் பணிந்தார். பிள்ளையார் அவர்க்காசிகூறி யெதிர் தோன்றும் மதுரையை நோக்கி, 'ஆலவாய் எம்மருங் குளது?' என்று வினவினார். அடியாரொருவர், 'அதோ தோன்றும் வானளாவிய திருக்கோபுரமும் மருங்கிலே சோலைகளுமுடைய திருக்கோயிலே திருவாலவாய்,' என்று பணிந்து மொழிந்தனர்.

அம்மொழி கேட்ட வளவிலே காழிச் செம்மலார், சிறு மலர்க்கைகளைக் குவித்து நிலமிசை நெடிது வீழ்ந்து பணிந்தெழுந்து, 'மங்கையர்க்கரசி' எனத் தொடங்கி உலகு புகழும் 'ஆலவாயாவது மிதுவே' எனப் பாடிப் பரவினார்.

பிறகு, அடியாருடன் குலச்சிறையார் முன் செல்லச் சென்று திருவாலவாய் நெருங்கித் திருக்கோபுரத்தை வணங்கி, உள்புகுந்து, வலம் வந்து திருமுன் சென்றார். ஆலவாயமர்ந்த அண்ணலைப்—பாம்பணிந்த பரம்பொருளை —நீலகண்டரைக்—கண்டு கண்களித்துப் பன்முறை எட்டுறுப்பும் ஐந்துறுப்பும் நிலமிசைபடியப் படிந்தெழுந்து வணங்கினார். மெய்ம்முழுதும் புளகமும் கண்ணீரும் படிய நின்று, 'நீலமாமிடற்—றாலவாயிலான்' என்னுந் திரு விருக்குக்குறள் பாடிப் பரவினார். தலைச்சங்கப் புலவரை வணங்கினார். திரும்பவுஞ் சோமசுந்தரரைத் தொழுதார். அங்கயற்கண்ணியாரை வணங்கினார். திருவாயிலை யடைந் தார். அப்போது மங்கையர்க்கரசியார் திருமலர்க்கை களைத் தலைமேற் குவித்தவண்ணம் நிற்பதைக் குலச்சிறை யார் பிள்ளையார்க்குக் காட்டினார். பிள்ளையார் மகிழ்ந்து எதிர்செல்ல மங்கையர்க்கரசியார் வந்து மலரடி தொழுதார். பிள்ளையார் அவரை அன்புடன் எடுத்தருளினார்.

மங்கையர்க்கரசியார் மகிழ்ச்சியினால், வாய்குழறக் கண்ணீர்மல்க. 'யானும் என் கணவரும் செய்த தவம் என்கொல்?' என்று தொழுதார். அதற்கு விடைபோலப்

பிள்ளையார், 'சுற்றிலும் பரசமய மிருக்கவும் சிவத் தொண்டு புரிந்து நிற்கும் தங்களைக் காணவந்தோம்,' என்று அன்புரை கூறினார். இந் நிலையிலே திருவாலவாயி லிலே தொண்டு புரியும் அடியவரெலாம் வந்து வணங்கி, 'அமணிருள் நீங்கிடத் தாங்கள் எழுந்தருள எல்லையில்லாத் தவம் புரிந்தனம்,' என்று வாழ்த்தினார்கள். அவர்களுக் கருள் செய்து வெளிப்போந்து முத்துச்சிவிகைமீ தமர்ந்து குலச்சிறையார் மானியார் அருளின்படி காட்டிய திரும டத்தி லெழுந்தருளினார். அவருக்கும் அடியார்களுக்கும் அமைச்சர் குலச்சிறையார் திருவமுது அளித்தார்.

இரவு வந்தது! சமணர்கள் ஒருங்கு சேர்ந்தனர்; வெளியிருள் போலவே அவர்களுள்ளமும் ஒளியின்றிக் கலங்கியது! திருமடத்திலே சிவம் பெருக்குந் திருவொலி கிளர்ந்தெழுவதைக் கேட்டு வருந்தினர்! கொற்றம் நீடிய பாண்டியரைக் கண்டு கூற அரண்மனை யடைந்தனர்! காவ லர் மூலம் அறிவித்து, அரசர் வரவேற்கச் சென்றமர்ந் தனர்! அவர்கள் முகவாட்டத்தைக் கண்டார் பாண்டியர்!

"தாங்கள் ஒன்றுசேர்ந்து வரும்படி நேர்ந்ததென்ன?"

"தகுதியற்றதொன்று நேர்ந்தது! கூறவந்தோம்."

"என்ன அது?"

அரசர் வினவிலே நடுக்க மிருந்தது!

"உன் மதுரையிலே இன்று சைவ வேதியர் வந்து விட்டனர்! நாங்கள் கண்டு முட்டு!"

அரசர் கேட்டு வெகுண்டு நகைத்தார்!

"நாம் கேட்டு முட்டு! நாம் செய்த அறம் நன்று! அவர்கள் யார்? எதற்கு வந்தார்கள்?"

"சோழ நாட்டிலே சீகாழியிலே சூலபாணியிடம் ஞானம் பெற்றவனும்! ஒரு வேதியச் சிறுவன் அடியா ருடன் முத்துச் சிவிகையில் வந்துளான்! அவன் எங்க ளோடு வாது செய்வானும்?"

அரசர் வெகுண்டார். "யாது செய்வோம்?" என்றார்.

"வந்த அந்தணனை நாம் தடுத்துப் போக்க வேண்டும்! அன்றி, அவனுறையும் மடத்திலே நம் வித்தையினாலே தீயை உண்டாக்குவோம்! அதுகண்ட அவன் அஞ்சித் தானே போய்விடுவான்!"

"ஆகவேண்டுவது அதுவேயானால், அப்படியே செய்க!"

சமணர் மகிழ்ந்து சென்றனர். பாண்டிய மன்னர் ஒருவருடனும் உரையாடாமல் உள்ளக் கவலையுடன் ஓய்ந்து விட்டார். அரசியார் வந்து வாட்டங்கண்டு, 'தங்களுக்கு நேர்ந்ததென்ன? மகிழ்ச்சியின்றி முகம்வாடியுள்ளீர்கள்!' என்று கவலையுடன் வினவினார்.

"காவிரி நாட்டினனாம்! கழுமலத்தானாம்! சங்கரனருள் பெற்றவனாம்! ஒரு மறைச் சிறுவன் அடிகள்மாரை வாதில் வெல்ல வந்துளானாம்! நம் நகரிலே வெண்பொடி பூசுந் தொண்டர்கள் கூடிவிட்டார்கள்! அவர்களை அடிகளெல்லோருங் கண்டு முட்டு! யானும் கேட்டு முட்டு."

"இதற்குத்தானா வருந்துகிறீர்கள்? எவர்கள் சிறந்த தெய்வத்தன்மை காட்டி வெல்கிறார்களோ, அவர்கள் பக்கஞ் சேர்ந்து விடுவது நன்றாகும். இதற்கு வருந்த வேண்டா."

இவ்வாறு கூறிய மங்கையர்க்கரசியார் கணவரை விட்டு மகிழ்ச்சியுடன் வெளிவந்தார். குலச்சிறையார் அங்குவந்து வணங்கி, "இன்று நம் சிவனாரடியாரை வணங்கும் பேறு பெற்றோம். இனிச் சமணர் தம் சூழ்ச்சி எங்ஙன முள்ளதோ?" என்று கூறிக் கலங்கினார்.

மங்கையர்க்கரசியாரும் அஞ்சி, 'ஞானசம்பந்தருக்குத் தீங்கு நேர்ந்தால் யாமும் உயிர் துறப்போம்,' என்று முடிவு செய்தனர்.

இவர்கள் நிலை இங்ஙனமாக, அங்குச் சமணர்கள் தங்கள் மந்திரவலியால் நெருப்புப் பற்றச்செய்ய முயன்றனர். மந்திரம் பலியாமை கண்டு மனங் கலங்கினார்கள். 'இதை யறிந்தால் நம்மை மதிகுலத்தவன் மதியான். நம் ஆக்கத்தையும் அழிப்பான்,' என்று முடிவுசெய்தனர். நெருப்பைக் கொண்டுபோய் மடத்திற் பற்றவைத்து விட்டனர்! என்னே அறிவீனம்!

மடத்தின் ஒருபுறத்திலே தீ பற்றியதைத் தெரிந்த அடியார் விரைந்து அதனை அணைத்து விட்டுத், திருஞானசம்பந்தரிடந் தெரிவித்தனர். ஞானசம்பந்தர் இது கேட்டுத் துடித்தார்! வருந்தினார்! சினந்தார்!

"என்பொருட்டுத்தான் அவர்கள் இத்தீங்கு செய்தனர்! எனினும், அடியார்க்குமன்றோ அவலமுண்டாகும்? இஃது அரசன் முறைவழுவுதலையுங் காட்டுகிறது! ஆகையால், தீங்கு அரசனுக்காகும்! அரசன் இதன்பயனை யடையட்டும்! எனினும், அவனுக்குத் தீங்கு மிகாமல் அறிவுறுத்தும் அத்துணையே பெறச் செயல்வேண்டும்!"

இங்ஙனந் துணிந்து, 'செய்யனே' எனத் தொடங்கித் திருவாலவாயண்ணலை வழுத்தித் தீயானது பையச் சென்று பாண்டியனைப் பற்றட்டும் என்று பாடிப் பரவினார். பாண்டிமாதேவியார் மங்கலநாணுக்கும் பழுது வராமல் இவ்வாறு பாடியவுடன் பாண்டியரைப்பற்றி வெப்புநோய் எனப் பெயர்பெற்று வருத்தியது.

சமணர் தீமைசெய்தற் குடன்பட்டுக் களங்கமெய்திய இரவு கழிய இரவி யெழுந்தான். இரவி மரபுற்ற குலக்கொழுந்தாகிய பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் இரவு நடந்ததைக்கேட்டுப் பதைத்தனர்! தீங்கொன்றும் நேராமையாலே தெளிவுற்றனர்! அப்போது கஞ்சுகிகள் ஓடிவந்து, 'அரசர்க்கு வெப்புநோய்,' என்று பதைபதைப்புடன் குழறினர்! அரசியார் அஞ்சி விரைந்து சென்றார்! குலச்சிறையாரும் பின்சென்றார்!

அரசர் உடல் நடுங்கியது! வெதுப்புறும் வெம்மையோ உலைக்களமென உடல் முற்றுங் கவர்ந்து, அருகுறுவோரும் வெந்துபோகும்படி அனல் வீசியது! உணர்வும் உயிரும் அரசரை விட்டொதுங்குவனபோல ஒருபக்கம் அடைந்தன! அருகு நின்றவர் அகலவோடி நின்றனர்! கதலிக் குருத்தும் தளிர்களும் வாடிச் சுருண்டு துகளாயின! மருத்துவர் மருத்துவ நூல்களிற் கூறிய வகையெலாஞ் செய்து பார்த்துவிட்டனர்! வெம்மை மேலும்மேலும் பெருகியவாறே யிருந்தது! அரசர் கருத்தும் உரையும் மறந்தனர்!

சமணர்கள் கேள்வியுற் றோடிவந்தனர்! உண்மை யுணராமல், தங்கள் மறைகளிற் கூறிய மந்திரங் கூறிப் பீலிகொண்டு தடவினர்! பீலிகளும் பொரிந்தன! பிரம்பு களும் தீய்ந்தன! வெம்மைப்பொறி சிதறியது! அமணர் அஞ்சி நடுங்கினர்! அருகனைவேண்டிக் குண்டிகை நீர் தெளித்தனர்! அந்நீர் நெய்யாகி முன்னையைவிட மூளும் படி செய்தது! அரசர் வெருண்டார்! 'ஒருவரு மிங் கிராது போய்விடுங்கள்!' என்று சீறினார்.

அரசியாரும் அமைச்சரும் திகைத்து, 'இரவு சமணர் செய்த தீங்கே இந்நிலையை யுண்டாக்கியது! ஆகையால், அவர்கள் தீர்க்கவந்தால் முதிர்வதேயாகும்,' என்று தெளிந்தனர்.

இருவரும் அரசரை யணுகிப் பணிந்து, 'இந்த வெப்பு நோய் இந்த அடிகள்மார் சம்பந்தருக்குச் செய்த தீங்கினால் வந்ததுபோற் காண்கிறது! இதற்குத் தீர்வும் கவுணியர் தலைவரருளே!' என்று மெல்லென இசைத்தனர்.

மீனவர் செவியிலே அமுதமெனச்சென்ற இம் மொழியாற் சிறிது உணர்வுபெற்றுச் சிந்தித்துச் சைவச் சிறுவரால் இந்நோய் அகலுமேல் ஏற்பேன்!' என்றார். மற்றும், 'என் பிணியைத் தீர்த்து வென்றவர் பக்கஞ் சேர்வேன்! அழையுங்கள்!' என்று கூறினார். இருவரும் மகிழ்வுமிக அணையுடைத்துச் செல்லும் அன்புவெள்ளத்

திலே மிதந்து, அமைச்சர் பரியின்மீதிலும் அரசியர் சிவிகையிலும் சென்றனர்! திருமடத்தை யடைந்தனர்! முன்சென்ற குலச்சிறையார் பரியினின்றிழிந்து உட்புகுந்து அடியவரை வணங்கிப், 'பிள்ளையார்க்கு விண்ணப்பஞ் செய்யவேண்டும்,' என வேண்டினார். அவர்கள் ஆளுடைய பிள்ளையாரை வணங்கிக் குலச்சிறையாரும் பாண்டிமா தேவியாரும் வந்தடைந்ததை வழுத்தினர். 'அவர்களை அழையுங்கள்!' என்று பிள்ளையாரன்புடன் கூறியருளினார். அவ்வாறே இருவரும் உள்ளே வந்து, மெய்யுணர்வின் திரு வுருவம்—தமிழ் நான்மறையின் சிறந்த துணை—மண்ணில் வளர்கின்ற சிவத்திங்கட்கொழுந்து—கொன்றைச் சடை யான் சீர்பாடும் ஏழிசைக்குன்று ஆகிய அருளுருவைக் கண்டனர்.

> ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
> வானத்தி னிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
> தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
> கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்.
>
> (திருத். திருஞா. எஉஅ.)

பிள்ளையார் திருவடிகளில் விழுந்து வணங்கினர். கவலைக் கடலுக்குக் கரைகண்டார்போல் அவற்றை விடாது பற்றிக் கிடந்தனர்.

இருவரையும் மெல்ல அன்புடன் எழுந்திருக்கப் பணித்துத், 'தீங்குளதோ?' என்று வினவினர் பிள்ளையார்.

"வெய்ய சமணர் முன்செய்த வஞ்சனை கேட்டு அழி வுற்றோம்! ஆலமுண்டா ரருளாலே தங்கள் திருமேனிக் குத் தீங்குறாதெனப் பின்பு தெளிந்தோம்! ஆனால், அவர் கள் செய்த தீமை வெப்புநோயாக அரசரை வாட்டுகிறது! சமணர்களால் அது தீர்ந்திலது! தாங்கள் எழுந்தருளி மயங்கிக்கிடக்கும் அரசரைத் தெளிவுசெய்து சமணர்களை வென்றருளவேண்டும்! அவ்வாறு செய்தால் அரசரும் யாங்களும் உய்வோம்!" என்று மறுமுறையும் வேண் டினர்.

பூந்தராய் வந்த மறைக்குலச் சிறுவர், "நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சல் வேண்டா! நீங்கள் மகிழ இன்று அமணரை வென்று, பாண்டியரை வெண்ணீறணிவிப்போம்," என்று புன்முறுவலுடன் புகன்றனர்!

அதுகேட்டு மகிழ்ந்த இருவரும், 'அடியேங்களை இடர்க்கடலிலிருந் தெடுத்தருளத் தென்னாடு செய்தவத்தால் தாங்கள் எழுந்தருளும் பேறுபெற்ற நாங்கள் என் பெறோம்?' என்று பணிந்தனர்!

சண்பைக் காவலர், 'ஆவதும் அழிவதும் எல்லாம் அரனார் செயலாகும்! சமணரை வெல்லச் சங்கரனார் திருவுள்ளம் எப்படியுளதோ? திருவாலவாய் சென்று சேவித்து அறிவோம்,' என்று, அடியாரும் மற்றை இருவரும் உடன் வரச் சிவிகையிலேறித் திருக்கோயிலை யடைந்தார்! திருமுன் சென்று பணிந்தார்! 'சமணருடன் வாது செய்ய—அவர்களை நோக்கத்—தங்கள் திருவுள்ளமென்கொல்?' என வேண்டிக் 'காட்டுமாவது' 'வேத வேள்வி' எனத் தொடங்குந் திருப்பதிகங்களால் வாழ்த்தினார்!

"ஆலத்தை அமுதாக உண்ட அண்ணலே! காலனை மார்க்கண்டனுக்காகக் காய்ந்த கண்ணுதலே! தங்கள் புகழ் ஞாலத்திடைப்பரவ அருள்செயல்வேண்டும்!" என வேண்டினார். அருள் பெற்று மகிழ்ந்து திருவாயிலை யடைந்து முத்துச்சிவிகையிலேறினார்! அப்போது அடியார் செய்த ஆரவாரம் வானிடையே பரவி உலகெங்கும் நிறைந்தது! பலவகை இயங்கள் இயம்பின! திருவெண்ணீற்றின் ஒளி வட்டமாகச் சுடர் விழுவதுபோல முத்துக்குடை நிழற்றியது! முத்துச்சின்னமும் தாரையும் சங்கும் முழங்கிப் பொங்கின! மங்கையர்க்கரசியாரும் ஒரு சிவிகையின்மீதமர்ந்தார்! தெருவழியே சம்பந்தர் செல்கின்றார்!

மதுரைமாநகர் மக்கள் அக் காட்சியைக் கண்டு பிற சமயிகளாக இருந்தாலுங் களிப்படைந்தனர்! 'பாண்டிய மன்னர் செய்த தவமென்ன? இந்த இளங்கோலப்பெருமான் எழுந்தருளி இந்நகரைத் தூய்மை செய்தனர்,' என்றனர்.

இவ்வாறு காழிநாடுடைய வள்ளல் கன்னிநாடுடையார் அரண்மனையை அடைந்தனர். குலச்சிறையார் முன் சென்று சண்பையார் வரவு கூறினார் பாண்டிய மன்ன ரிடம்! அவர் சிறிது துயர் நீங்கியவராய்த் தம் தலைப்பக்கம் பொன்னணை யொன்றை இடச்சொல்லி எதிர்கொண் டழைத்துவரப் பணித்தார்! அமைச்சர் அகமகிழ்ந்து சென்றார்!

சமணர் அச்சமுற்றனர்! அரசை நோக்கி, 'இதுவோ நம் சமயத்தைக் காக்கும் முறை? தங்கள் அறநெறியைத் தாங்களே காத்தருளல் வேண்டும். அவரை வரவழைத்தீர்க ளானால் எங்கள் இருதிறத்தாரையும் ஒருங்கே வெப்பு நோயைத் தீர்க்கக் கூறுங்கள்! அவர் ஆற்றலால் நீங்கினும் நம் நெறியின் ஆற்றலாலேயே நீங்கியதாகக் கூறுதல்வேண் டும். இந்த வழியையாவது மேற்கொள்க!' என்றனர்.

பாண்டியர் அதற்கிசையவில்லை 'உங்கள் தெய்வச் சார்பினாலே இருதிறத்தீருந் தீருங்கள்! கைதவனான நான் சிறிதுங் கைதவம் பேசமாட்டேன்,' என்றறைந்தனர்.

இந்த நிலையிலே புகலியர்பெருமான் முத்துச்சிவிகையி னின்றிறங்கிப் பாண்டியர் பக்கம் வந்தார! குலச்சிறையா ரும் மங்கையர்க்கரசியாருங் கூடவே வந்தனர்! பாண்டியர் கவுணியரைக் கண்டார்! உற்று நோக்கினார்! உள்ளத்திலே அவரையறியாமலே மதிப்புண்டாயிற்று! நோயையும் பாராட்டாமற் கையையெடுத்துத் தலைப்பக்கமிட்டிருந்த பொன்னணையைக் காட்டினார்! தமிழ்க் கவுணியர் அதன் மிசை அமர்ந்தார்! சமணர் அஞ்சி நோக்கி நின்றனர்!

அரசர் சம்பந்தரை நோக்கித் 'தங்கள் நகர் எது?' என்றார். ஆளுடைய பிள்ளையார் அதற்கு விடையாகப் 'பிரமபுரம்' எனத் தொடங்கிக் காழிமாநகரின் பன்னி ரண்டு திருப்பெயர்களையும் அமைத்துப் பாடியருளினார். சமணர்கள் சினமடைந்து வாதுசெய்யத் தொடங்கினர்! அப்போது அரசியார் அரசரை நோக்கி, 'அமணர் பலர்! ஆளுடைய பிள்ளையார் ஒருவர்; சிறுவர்! தங்கள் மயக்

கத்தை எங்கள் தலைவர் தீர்த்தபின்—நோயைத் தணித்த பின்—பேசவல்லரேற் பேசலாம்,' என்றார். பாண்டியர், 'நீ வருந்தாதே!' யென்று ஆறுதல் கூறினார்.

பிள்ளையார் புன்முறுவலுடன் அரசியாரை நோக்கி, 'மானினேர்விழி மாதராய்' எனத் தொடங்கும் பதிகம் பாடி 'ஆலவாயரனருளிருப்பதால் யான் எளியேனலேன்!' என்று தேறுதல் கூறியருளினார்.

பாண்டியர் இருதிறத்தாரையும் நோக்கி, 'உங்கள் தெய்வத் திருவருளை என் நோயைத் தீர்ப்பதின் மூலம் தெளிவிக்கலாம்!' என்றார். மேலும், 'அவ்வாறு தீர்ப்பவரே வாதில் வென்றவராவீர்கள்!' என்றும் இயம்பினர். சமணர், 'நாங்கள் உங்கள் இடப்பக்க வெப்புநோயைத் தீர்ப்போம்,' என்று பீலிகொண்டு தடவினர்! வெப்பு நோய் இரட்டிப்பாயிற்று.

பாண்டியர் புகலி வேந்தரை நோக்கினார்! 'ஆலவாய் அண்ணல் நீறே மருந்தும் மந்திரமும் ஆகும்!' என்று 'மந்திரமாவது நீறு' எனத் திருவெண்ணீற்றுப்பதிகம் பாடித் திருநீறெடுத்து வலப்பக்கத்திலே தம் இளமலர்க்கைகளாலே தடவினார். அப்போது வலப்பக்கங் குளிர்ந்து இடப்பக்கம் மேலும் வெதும்பியது! சமணர் தங்கள் பீலி தீய்ந்துற அனல் வீசுதலால் அருகிலும் நிற்க முடியாமல் விலகி நடுங்கி நின்றனர்!

பாண்டியர் திருமெய்யிலே வெப்பமுந் தட்பமும் பங்கிட்டுக் குடிபுகுந்தாற்போலிருந்தது அந்நிலை! நொந்த அரசர், 'என்ன வியப்பிது? ஒரே காலத்தில் நரகிலும் பேரின்ப வீட்டிலுமிருப்பதுபோலவும், நஞ்சையும் அமுதையும் உண்பதுபோலவும் இருக்கிறதே என் நிலை!' என்றார்.

பிறகு, 'சமணரே! நீங்கள் தோற்றீர்கள்! என்னைவிட்டகலுங்கள்! மறைக்குல வள்ளலாரே! தங்கள் திருவருளாலே இந்த வெப்பினை நீக்கியருளுங்கள்!' என வேண்டினார். கவுணியர்பெருமான் அருள்வழியும்-பால்வழியும்-

திருமுகத்துடன், அருமைத் திருக்கையால் திருநீற்றை யெடுத்துத் திருவருளை வணங்கித் தடவினார்! இடப்பக்க வெப்பம் நீங்கியது!

பாண்டியர் களித்துக் கைகூப்பித் திருஞானசம்பந்தரை வணங்கி, 'உய்ந்தேன்' என்று தொழுதார்! சமணர்கள் செய்வதறியாமற் சிறிது திகைத்துத் தம்மில் ஒன்றுகூடிப் பேசித் தீயினாலும் நீரினாலும் வெல்வதென்று துணிந்தனர். பிள்ளைப்பெருமானும், 'உங்கள் வாய்மையை உரைமின்!' என்றனர். அவர்கள், 'நம் சமயக்கொள்கையைக் கண் காணக் காட்டும் வண்ணமே ஒட்டுவோம்,' என்றனர்.

அரசர் வெகுண்டு, 'நீங்கள் வெப்புநோய் தீர்க்க முடியாமலே தோற்றீர்கள்! இனி யென்ன வாது?' என்றார். சமணர்கள், 'என்ன வாது?' என்பதையே வினாவாகக் கொண்டு 'எங்கள் சமயக்கொள்கையை ஏட்டிலெழுதித் தீயிலே யிட்டால் வேகாமையே வென்றி,' என்று கூறினர். அரசர் அதற்கு விடை கூறுமுன் பிள்ளையார், 'நீங்கள் உரைத்தமை நன்று! தீயில் ஏடு வெல்வதே மெய்ம்மை யென்பதை நாமும் ஒப்புகிறோம்! அரசர் முன்பு அதை விளக்கலாம்,' என்றனர்.

அரசராணைப்படி தீமூட்டப்பெற்றுக் கொழுந்துவிட் டெரிந்தது. முத்தமிழ் ஞானசம்பந்தர் அதன் அருகே வந்து நின்று, செங்கண் ஏற்றவரே பொருளென்று கூறித் தம் தமிழ்முறையினை யெடுத்துக் காப்புநீக்கிக் கையினால் மறித்து நோக்கினார். 'போகமார்த்த' என்னுந் 'திருநள்ளாற்றுப் பதிகம்' வந்தது! அதனைத் தம் அழகிய சிறுமலர்க்கைகளா லெடுத்துச் சிவத்தைத் தொழுது, 'தளரிள வளரொளி' என்னும் பதிகம் பாடித் தீயிலிட்டார்! நெருப்பிலிட்ட அந்த ஏடு நீரிலிட்ட ஏடுபோலப் பசுமையாய் முன்னினும் பளபளப்பாக விளங்கியது!

சமணரும் மயக்கத்துடன் தம் நெறிவரைந்த ஏட்டைத் தீயிலிட்டனர்! அது வெந்து சாம்பலாகியது! அமணர் நடுங்கிநின்றனர்! எவ்வளவுநேரம் தீயிலிருக்க வேண்டும்

என்று குறிப்பிட்டனரோ அவ்வளவு நேரங்கழிந்தவுடன் சம்பந்தரிட்ட ஏட்டைப் பழுதின்றியெடுத்தனர்! கண்டவர் வியந்து கண்ணுதலார் கழலிணையே சிறந்ததெனக் கருத்துட்கொண்டனர்!

சமணர்கள் தாமிட்ட ஏட்டை எடுக்கச் சார்ந்தபோது தீயின் வெப்பம் உள்ளத்தையுஞ் சேர்த்துச் சுட்டதால் விலகி நின்றனர்! அரசர் ஆட்களை விட்டுத் தீயை அணைத்துக் கொடுத்தார்! சமணர்கள் அந்தச் சாம்பலைப் பிசைந்து திகைத்தனர்! அரசர் நகைத்துச், 'சாம்பலையின்னுந் தண்ணீர்விட்டரித்துக் காணுங்கள்! பொய்யை மெய்யாக்க வொண்ணுமோ? போமின்! நான் வெப்புநோயால் வாடியபோதே தோற்றீர்கள். அதற்குமாறாக இப்பொழுது எரியிலெறிந்த ஏடும் எரிந்தது! ஆகவே, நீங்கள் தோற்றிலீர் போலும்?' என்று கூறினார்.

பாண்டியர் இவ்வாறு இகழ்ச்சியாகக் கூறியதைச் சமணர்கள் உண்மையெனக்கொண்டு, 'இருமுறை தோற்றோம். மூன்றாமுறை வெல்வோமானால் உண்மை நெறியராவோம்! எனவே, இனி யொருமுறை ஓட்டுவோம்,' என்றனர். மன்னர் மறுத்தார். எனினும், பூந்தராய்ப் புண்ணியர், 'இனி எந்த வாது செய்வது?' என்று வினவினார்.

"உண்மைப்பொருளின் நிலைபெற்ற தன்மையை ஏட்டிலெழுதி ஓடும் நீரிலிடுவோம். எந்த ஏடு நீரோடு ஓடாமல் எதிர்ஏறி நிற்கின்றதோ, அந்த ஏட்டின் பொருளே—அப்பொருளையுடைய சமயமே—உண்மையெனக் காண்போம்," என்று சமணர் சாற்றினர்.

குலச்சிறையார் குறுக்கிட்டுத், 'தோற்றவர் என்னவதென்பதையும் ஓட்டவேண்டும்,' என்றார். சமணர் சற்றுஞ் சிந்தியாமலே 'தோற்றவரை அரசர் கழுவிலேற்றுவார்,' என்று பதறிக் கூறினர். அரசர் கேட்டு, 'உங்கள் சீற்றத்தாலே செயல் மறந்தீர்கள்! நன்று! இனி, ஏட்டையிட வைகைக்குச் செல்வோம்,' என்றார். எல்லோரும் புறப்

பட்டனர்! பிள்ளையார் முத்துச்சிவிகையி லேறினார்! அரசர் பரிமீதேறினார்! குலச்சிறையாரும் பரிமீதேறினார்! சமணர்களோ மயக்கத்தின் மேலேறிச் சென்றார்கள். இவர்கள் தெருவழியே செல்லும்போது நகரமக்களெல்லாம் சைவத்தின் சிறப்பையும் சம்பந்தர் சிறப்பையும் வியந்து பேசியவாறு நோக்கி நின்றனர்! பிள்ளையாருடைய இளந் திருக்கோலம் அவர்களுள்ளத்தைக் கவர்ந்தது! சமணருடைய தோற்றமோ—இதுவரையில் விருப்பமாயிருந்தாலும்—வெறுப்பையே ஊட்டியது! உலகியல் அவ்வாறுதானே?

வைகையாற்றை யெல்லோரும் நெருங்கியதும் கரைமேல் அமர்ந்தனர். கார்காலமாதலால் வைகை நிறைய நீர் பெருகிக் கடலைநோக்கி விரைந்து சென்றது. அக்காட்சியானது பருவமான பெண்ணொருத்தி தன் கணவன் வீட்டிற்கு விழைவுடன் செல்வது போன்றிருந்தது. தமிழ் வைகையென்னும் பொய்யாக் குலக்கொடியின் தகுதியை எப்படிப் புகழ்வது?

அரசர், 'இனி, ஏட்டை நீரிலிடுங்கள்!' என இருதிறத்தாரையும் நோக்கிக் கூறினார். சமணர்கள், 'முதலில் தோற்றவர் மறுமுறை தோலார்' என்று நினைத்தவாறு, 'அத்திநாத்தி' என்றெழுதிய ஏட்டை வைகைநீரி லிட்டனர்! அந்தோ! அந்த ஏடு நீரோடு ஓடியது கடலைநோக்கி! சமணருஞ் சிந்தைகலங்கிச் சிறிதுதூரம் ஓடி நிற்கிறதா என்று பார்த்து, நில்லாமை கண்டு, நெஞ்சழிந்து திரும்பினர்! பாவம்! அந்த ஆறு அவர்களை நட்டாற்றில் விட்டுப் போய்விட்டது! அச்சமும் வெட்கமுங்கொண்ட சமணர்கள் பிள்ளையாரை நோக்கி, 'நீரும் உம்முடைய ஏட்டையிடும்; பார்ப்போம்!' என்றனர்.

பிள்ளையார் திருக்கையால் வெண்ணீறு பூசப்பெற்று மலபரிபாகமும் இருவினையொப்பும் உற்று முதல்வனை அறியும் மூவாத்தன்மை எய்திய பாண்டியரும் பிள்ளையாரை நோக்கினார்.

தென்னவன் மாறன் தானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப்பெற்று
முன்னைவல் வினையும் நீங்கி முதல்வனை அறியுந் தன்மை
துன்னினான் வினைகள் ஒத்துத் துலையென நிற்றலாலே.

(திருத். திருஞா. அகக.)

ஆகையால், அவருக்கும் மற்றையவர்க்கும் உபதேச மொழியாக 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பதிகத்தைப் பாடி ஏட்டிலெழுதிவிட்டார் வைகையில்! அந்தத் திருவிதழ் கண்டோர் வியந்து அஞ்சலி செய்யும்படி, விரைந்து செல்லும் நீரை யெதிர்த்து ஓடியது! அக்காட்சி பிறவியாற்றிற்கெதிரே மாதவர் மனஞ்செல்வதைக் காட்டியது! மேலும், எல்லாருக்கும் 'சைவசமயமே மெய்ச்சமயம்' என்பதையுங் காட்டியது! சிவபிரானுரே எல்லாப்பொருளும் என்றெழுதிய அத் திருப்பதிகத்திலே, 'வேந்தனும் ஓங்குக!' என்று பாடியருளினாராகையால், வழுதியாரின் கூன் நிமிர்ந்து நெடுமாறனார் ஆனார்.

பாண்டியர் கூன்நிமிர்ந்ததையும், ஏடு ஆற்றிற்கெதிர்ந்ததையும் கண்டவரெல்லோரும் வியந்து பாராட்டிச் சைவம் நிமிர்ந்தது என்று ஆரவாரித்தனர்! பாண்டியரடைந்த மகிழ்ச்சியையுங் குலச்சிறையாரடைந்த மகிழ்ச்சியையும் பகர்வதெப்படி? இவ்வாறு சைவம் நிமிர்ந்ததைக் கண்ட சமணர் செருக்கழிந்து தலைகுனிந்தனர்! குலச்சிறையார் ஆற்றிலெதிர்ந்த ஏட்டை யெடுப்பதற்குக் கரைவழியே விரைந்து பரிமீது தாவிச்சென்றார். பிள்ளையார் ஏடு தங்கும்வண்ணம், 'வன்னியும் மத்தமும்' என்று தொடங்கிப் பாடின அளவிலே, திருவேடகத்து இறைவர் திருக்கோயிலுக் கருகில் ஏடு நின்றது! குலச்சிறையார் அஞ்சலி செய்து வணங்கி அந்தத் திருவேட்டைக் கையிலெடுத்துத் தலைமீது சுமந்து பிள்ளையாரிடங் கொணர்ந்து கொடுத்தார். பிள்ளையாரருளின்படி அத் திருவேட்டைப் பலருங் கண்டு களித்தனர்! சிவம் பெருக்கும் ஒலி வானத்திலே ஒல்லெனப் பரவி யினிமை தந்தது! பின்னர், அந்தோ! சமணர்கள் தாம் ஒட்டியவாறே கழுவிலேறி ஒப்பந்தத்தை நிறைவேற்றினார்கள்.

தென்னவர் பிள்ளையாரை வணங்கித் திருநீறு பெற்றார்! 'மன்னனெவ்வழி, மன்னுயிரவ்வழி' என்ற வாறு மதுரைநகர மக்களெல்லாம் திருநீறு வாங்கியணிந்து சைவரானார்கள்!

*தென்னவன் தனக்கு நீறு சிரபுரச் செல்வர் ஈந்தார்*
*முன்னவன் பணிந்து கொண்டு முழுவதும் அணிந்து நின்றான்*
*மன்னன்நீ றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார்*
*துன்னிநின் றார்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார்.*

(திருத். திருஞா. அ௯௭.)

குலச்சிறையார் மங்கையர்க்கரசியாரெனும் இரண்டிலைகளுடனிருந்த சைவக் கற்பகம் நெடுமாறர் போன்ற பல்லாயிரக்கணக்கான இலைகளுடன் பணைத்துக் கிளைத்துக் கவடுவிட்டுப் பாண்டியநாடு முற்றும் பரவியது!

பிள்ளையார் அடியவர் சூழத் திருவாலவாயை அடைந்து சிவிகையினின் றிறங்கினார். பாண்டியரும் அரசியாரும் அமைச்சரும் அவரடிகளிலே விழுந்து பணிந்து எழுந்து உடன்வரக் கண்ணுதலார் திருமுன் சென்றார். கைம்மலர்கள் தலைமீதேறின! கண்களில் இன்பவெள்ளம் பெருகி மெய்யெலாம் நனைந்தது! 'ஐயனே! அடியேனை அருளவல்ல மெய்யனே!' என்று போற்றினார். 'வீடலால வாயிலாய்,' என்று தொடங்கிப் பாடினார். 'எனக்குத் தங்கள் திருவடிகளை யன்றி வேறு உணர்வு கிடையாது. எங்கும் பரவிய தாங்கள் மக்கள் வாழ்வுபெற நின்று ஆடல் புரியும் அருளை நினைந்து நினைந்து நெகிழ்வது ஒழுங்காகும்!' என்று புகழ்ந்தார்.

பாண்டியர், பரமர் தாள் பரவி நின்று, 'திருவாலவாய் அரசே! சமணர் மாயையால் மயங்கி யாதும் அறியாமலிருந்தேன்! எளியேனை ஆட்கொள்ளவேபோலும் இப் பிள்ளையாரை அருளினீர்!' என்று வாழ்த்தி வணங்கினார். பிறகு, மனைவியாருடன் பிள்ளையாரையும் அடியார்களையும் திருமடத்திற் கெழுந்தருள்வித்துப் பிள்ளையாரின் அருள்பெற்று மந்திரியாருடனும் அரசியாருடனும் அரண்மனை யடைந்தார்.

பிள்ளையார் அங்கெழுந்தருளியிருக்கும் நாட்களிலே ஆலவாயண்ணலை வணங்கிப் பல பதிகங்கள் பாடியருளினார். அப் பதிகங்களிலே திருவியமகம் ஒன்றிலே திருநீல கண்டயாழ்ப்பாணரின் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடினார். அரசரும் அரசியாரும், அமைச்சரும் வந்து வணங்கிச் செல்லப் பலநாட்கள் எழுந்தருளினார்.

## 25. தந்தை வரவு—பாண்டிநாடு வணக்கம்

நீண்டநாட்கள் தம் குலவிளக்கைப் பிரிந்த சிவபாத இருதயர் தம் மைந்தர் பாண்டிநாடு சென்ற பரிசு காண்பே னென்று மதுரையை அடைந்தார். திருவாலவாயைச் சேவித்த பிறகு, அங்குள்ளாரை வினவித் திருமடத்திற்கு வந்தார். தந்தையாரைக் கண்ட பிள்ளையா ரெதிர்கொள்ள அன்புடன் கன்றைக்கண்ட பசுப்போற் களித்தார். தம் திருமகனார் தம்மினுஞ் சால்புடையராக—அருள்மிகுஞ் சைவநெறி பரப்புங் கதிரவனாக—இருக்கப் பேறுபெற்ற அந்தணர் தலைவர் அடைந்த மகிழ்ச்சியை யாரே புகல வல்லார் ?

தந்தையரைக் கண்டவுடன் சிவஞான அமுதூட்டிய தந்தையருந் தாயருமான தோணியப்பரையும் அம்மையை யும் நினைந்து நெகிழ்வுற்றார் சைவசமயப் பிள்ளையார், கண்ணீர் பெருகக் கைம்மலர் குவிய மெய்புளகிப்ப! 'மண்ணில் நல்ல' என்னும் திருப்பதிகம் அண்ணலார் தமை வினவிப் பாடினார். தந்தையார்க்கு விருந்தளித்துக் களைப்பைப் போக்கினார்.

ஒருநாள் பிறையணிந்த பெம்மானையும் பிற பதி களையும் வணங்க விரும்பித் தம் கருத்தை மன்னர்க்குத் தெரிவித்தார். மன்னரும் மங்கையர்க்கரசியாரும் மந்திரி யாரும் அவரடிமலர் வணங்கித் தாமும் பிரிவாற்றாமையால் உடன்வர விரும்புவதாற் பாண்டிநாட்டுத் திருவூர்களை வணங்கலாம் என்று விண்ணப்பித்துக்கொண்டனர். ஆளு டைய பிள்ளையாரும் ஒப்புக்கொண்டு அவர்கள் உடன்வர, அடியார் சூழத் திருப்பரங்குன்றம், திருவாப்பனூர், திருப்புத் தூர், திருப்பூவணம், திருக்கானப்பேர், திருக்குற்றாலம்,

திருநெல்வேலி என்னுந் திருவூர்களையும் பிறவற்றையும் கண்டு இறைவர் திருக்கோலத்தைத் தொழுது, திருவிராமேச்சுரத்தை யடைந்தார். இராமன் வழிபட்ட இராமலிங்கத்தைக் காதலுடன் பணிந்து பாடிப் பரவினர். அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்து ஈழநாட்டிலுள்ள திருக்கோணமலையையும், திருக்கேதீச்சுரத்தையும் நினைந்து பணிந்து பாடினர்.

அங்கிருந்து வடமேற்குத் திசையாகச் சென்று, திருவாடானை, திருப்புனவாயில் முதலான திருப்பதிகளைக் கும்பிட்டுக் குலச்சிறையார் வாழ்விடமான திருமணமேற்குடியை அடைந்து சிலநாட்கள் எழுந்தருளினர்.

பின்னர், சோழநாட்டுப் பதிகளை வணங்க விழைந்து பிரிவதற்கு வருந்தும் மூவரையும் தேற்றிச் சைவநெறியைப் பரப்பித் தமிழரசு புரிந்து வாழப் பணித்தார். அவர்களும் அப்பணியை மறுத்தற்கஞ்சிப் பன்முறை பணிந்து சிந்தையும் உடன்செல்லப் பிரிந்து நின்றனர். பிள்ளையார் சோழநாடு நோக்கிச் சிவிகைமீதமர்ந்து புறப்பட்டார்.

## 26. முள்ளிவாய்க்கரை - நாவலம் துடுப்பாக ஆறுகடத்தல்

அடியார்கள் அர அரவென்னும் ஒலி இன்னிசையாய் மக்களுள்ளத்திலே இன்பத்தைப் பாய்ச்சும்படி புறப்பட்டுத் திருக்களர், திருப்பாதளீச்சுரம் முதலான திருப்பதிகளை வணங்கி, முள்ளிவாய்க்கரையை அடைந்தார். அங்கே ஆறு கரைபுரண்டோடியது. இருகரையும் பொங்கி அலைவீசிச் செல்வதால் ஓடமும் விடமுடியாமல் ஓடக்காரன் ஓடத்தைக் கரையிலே பிணைத்துவிட்டுப் போய் விட்டான். அந்நிலையிலே அங்குப் போந்த அந்தணப் பிள்ளையார் அக்கரையிலே திருக்கொள்ளம்பூதூர் தோன்றக் கண்டு எப்படியேனுஞ் செல்ல வேண்டுமெனத் துணிந்தார்.

ஆகையால், அடியார்களை ஓடத்திலேற்றிக் கட்டவிழ்த்து விட்டார்! 'கொட்டமே கமழும்' என்னுந் தமிழ்மறை பாடினர்! உடனே ஓடம் தானே செல்லத்

தொடங்கியது! இறைவர் திருவருளை வியந்து போற்றிய வண்ணம் அக்கரை யடைந்து ஓடத்தை முன்போற் பிணித்துவிட்டுக் கொள்ளம்பூதூர்த் திங்கள்முடியாரைக் கும்பிட்டார். ‘தாணுவே! ஆற்றிலே ஓடத்தைச் செலுத்தும் முறையி லருளிய அண்ணலே! அரவப் பணியாரே! களிற்றுரிபோர்த்த கண்ணுதலே!’ எனப் புகழ்ந்து பரவினார். அந்நகரிற் சிலநாட்கள் இருந்தார்.

பின்னர், மதுரையிலே சமணருடன் வாதிட்டபோது எரியில்வேவாப் பதிகமுடைய இறைவரை வணங்கக் காதல் கொண்டு, அடியாருடன் திருநள்ளாற்றை அடைந்தார். மலர்க்கைகளைத் தலைமிசைக் குவித்து வணங்கிப், ‘பாடக மெல்லடி’ எனத் தொடங்கிய தமிழ்மறைமாலை சாத்தித் தொழுதார்! ‘பாண்டியமன்ன னெதிரிலே, அமணர் செய்த வாதிலே, தீயிலிடும் ஏடு பசுமையாக இருக்க அருளி என்னுள்ளத் துணையாய்த் திருவாலவாயிலிலே எழுந்தருளிய அருளென்சொல்?’ என்று என்புருக வழுத்தினார்!

## 27. சாரிபுத்தனுடன் வாதிட்டுத் தமிழ்மறை யெழுத்தாளர் வெற்றி

அங்குநின்றும் நீங்கித் திருத்தெளிச்சேரி வணங்கி மேலே செல்லும்போது சமணர்பதியான போதிமங்கை எதிர்ப்பட்டது. அங்குள்ள புத்தர்களெல்லாம் சிவம் பெருக்கும் ஒலி காதினைத் துளைத்தலால், வெகுண்டு புத்தநந்தி யென்னுந் தங்கள் தலைவனிடம் முறைத்தனர். அவன் வெளிப்போந்து, சைவமறைத் தலைவரான பிள்ளையாரின் வெற்றிச் சின்ன ஒலிகேட்டு, ‘எம்மை வென்றன்றோ வெற்றிச் சின்னம் பிடித்தல்வேண்டும்?’ என்று, சீற்றத்துடன் கழறினான்; திருச்சின்னம் ஒலிப்போரை விலக்கினான். அடியார்கள், ‘இத்தகைய செயலுக்கிவரைத் தடிதல் வேண்டும். இன்றேல் இவர்கள் வழிப்படார்கள்,’ என்று கருதிக் கவுணியர் தலைவரிடங் கைகுவித்துக் கூறினர். அவரும், ‘நாம் வருமிடங்களில் இந்த அழகிய வேலையே வருதல்வேண்டும். புத்தநந்தி கூறும் மேற்கோள்களை

வாதுபுரியும்போது காண்போம்,' என்று வாதுபுரியச் சித்தமானார்.

இதற்குள்ளாகப் பிள்ளையாருடன் வரும் தமிழ்மறை யெழுதும் எழுத்தாளர், "அத்திர மாவன அஞ்சு எழுத்துமே, என்னும் பிள்ளையார் திருமொழியால், இடிதாக்கிப் புத்தநந்தியின் தலை விழக்கடவது," என்று பதைப்புடன் கழற, அப்போதே புத்தநந்தி, தலைவேறு உடல்வேறு ஆகி விழுந்தான். இதை ஓடிவந்து அடியார் நவின்றார்கள். பிள்ளையாரும், 'தவறு செய்ததற்குத் தண்டனை கிடைத்தது. நீங்கள் அரநாமத்தை ஒன்று கூடி ஓதுங்கள்,' என்றார். அரவென்னும் ஒலி வானைப் புனிதம் ஆக்கியது.

புத்தநந்தி தலையற்று விழுவதைக்கண்டு ஓட்டமெடுத்த புத்தர்கள் துணிவுகொண்டு சாரிபுத்தன் என்பவனைத் துணையாகக்கொண்டு சம்பந்தரை யடைந்தார்கள். அவர்களுடன் வாதுசெய்ய ஒரு சந்திரமண்டபத்தை யடைந்தனர், தோணிபுரத் தோன்றலார். அப்போது தமிழ்மறை யெழுத்தாளர், பிள்ளையாரருள்பெற்றுச் சாரிபுத்தனுடன் வாதிட்டு வென்றார். வெல்லப்பெற்ற சாரிபுத்தன் முதலானோர் சைவசமயத்தை அன்றுமுதல் ஏற்று வாழ்ந்தனர்.

## 28. மூன்றுமுறை அப்பரைச் சந்தித்தல் : 'அப்பர் எங்குற்றார்? அடியேன் இங்குற்றேன்'

புகலிப்பெருமான் திருக்கடவூர் சென்று பணிந்து திருநாவுக்கரசரைக் காணும் ஆவல் மிகுந்ததனால், அடியாரை வினவித் திருப்பூந்துருத்தியில் எழுந்தருளி யிருப்பதை யறிந்து அங்கே சிவிகையூர்ந்து சென்றார். காவிரியின் தென்கரையிலுள்ள திருப்பதிகளை வணங்கித் திருப்பூந்துருத்தியை நெருங்கினார். வாகீசப்பெருந்தகையார் பிள்ளையார் எழுந்தருளும் பரிசுகேட்டுச் சமணரை வென்ற தனிப்பெருந்தகையை முன்சென் றிறைஞ்சும் நல்வினையைப் பெற்றேமென்று எதிர்கொண்டார்; அடியார்களின் நெருக்கத்திலே நுழைந்து, தம்மையறிவியாமலே சிவிகை தாங்குவோருடன். கலந்து தாமும் சுமந்துவந்தார்.

அடியார்க் கடிமை செய்யும் அவர்தம் ஆவலை யென்னென்பது ?

அப்பர் வந்தாரென்று கேட்ட சம்பந்தர் அவரைக் காணுமையால், 'எங்குற்றார் அப்பர் ?' என்ன, 'ஒப்பரிய தவம் புரிந்தேனுதலினுல் உம் அடிகள் இப்பொழுது தாங்கி வரப் பெற்றுய்ந்தேன். ஆதலால், அடியேன் இங்குற்றேன் !' என்று இயம்பினுர். அது கேட்டஞ்சிய பிள்ளையார் சிவிகையினின் றிறங்கி, 'இவ்வாறு ஏன் செய்தீர்கள் ?' என்று இறைஞ்சினுர். 'பின் எவ்வாறு செயல் வேண்டும் ?' என்று அப்பர் எதிரேற்றிறைஞ்சினுர். இருவரும் ஒருவரை யொருவர் தழுவி மகிழ்ந்து நலம் வினவிக் கொண்டனர். இருவர் தம் அடியார்களும் இக்காட்சி கண்டு, 'கண்பெற்ற பேறு' எனக் கைகுவித்து நிலமிசை விழுந்து வணங்கினர். இருவரும் பூந்துருத்தி மேவிய புண்ணியரைப் போற்றிய பின்னர், அங்கே சிலநாட்கள் எழுந்தருளினர்.

சமணரை வென்ற திறத்தைச் சண்பையர்கோவை வினவி யறிந்தார் சொல்வேந்தர். அவர் பிள்ளையாரை வாழ்த்தித் 'தாங்கள் சைவ வேலியானீர்கள்,' என்று தொழுதார். பிள்ளையாரும் அவரை எதிர்தொழுது பாண்டி மன்னர், அரசியார், அமைச்சர் ஆகிய மூவருடைய சைவத் தொண்டினையும் புகழ்ந்துரைத்தார். பிறகு, மொழியரசர் தாம் தொண்டை நாட்டுப் பதிகளை வணங்கிப் போந்த வகையைக் கூறினுர். அதைக்கேட்ட பிள்ளையார் தொண்டைநாட்டை வணங்க விழைந்தார். நாவுக்கரசரும் பாண்டிநாடு செல்ல விரும்பினுர். ஆகவே, அம்முறையே இருவரும் பிரிந்து சென்றனர்.

பிள்ளையார் அடியார் சூழ, முத்துப்பல்லக்கி லூர்ந்து, முத்துக்குடை நிழற்ற, முத்துச்சின்னங்கள் 'பரசமய கோளரி வந்தார் ! புகலிப் புண்ணியர் வந்தார்! ஆளுடைய பிள்ளையார் வந்தார் !' என ஒலிக்கப் புறம்போந்தார். காவிரியைக் கடந்து வடகரையேறித் திருநெய்த்தானம்,

திருவையாறு, திருப்பழனம் முதலான பதிகளை வணங்கித் தம் பிறப்பிடமான சண்பையைச் சார்ந்தார்.

சமணரை வென்று வெற்றியுடன் வரும் தங்கள் தலைவரைக் காழிநகர்மக்கள் எதிர்கொண்டழைத்த காட்சியை இயம்புவ தெப்படி? அவர்களடைந்த மகிழ்வுக்கும் வரம்புண்டோ? வந்து வணங்கி யெதிர்கொண்டவருடன் தோணியப்பர் திருமுன் சென்று அங்கமெட்டும் படியிற் படிய விழுந்து வணங்கிப் பெருகு காதலால் உருகுமுள்ளத்தராய்க் கைகுவித்துப் போற்றினார். வலங்கொண்டு பன்முறை வணங்கினார். 'உற்றுமை சேர்வது,' என்னுந் திருவியமகம் பாடிப் பரவினார். வெளிவந்து திருவாயிலை அரிதின் நீங்கி, நகரமக்கள் வாழ்த்தெடுப்பத் திருமறுகூடே சென்று சேர்ந்தார். அன்னையார், அரிவையர் மங்கலப் பொருள் ஏந்த எதிர்கொண்டு வணங்கிப், பெற்றபோதினும் பெரிதீ மகிழ்ந்தார். பாணரையும் விறலியாரையும் அவர்கள் மாளிகையில் இருக்கப்பணித்துப் பிள்ளையார் தம் மாளிகையிலே எழுந்தருளியிருந்தார்.

## 29. தொண்டைநாடு தொழுதல்

சில நாட்கள் கழித்துக் காஞ்சி முதலிய நகர்களை வணங்கக் கருதியிருப்பதைத் தந்தையார்க் குரைத்தருளி, அவரை அங்கேயே இருந்து வேள்வி செய்திருக்கவேண்டும் என்று கூறி, விடைபெற்றுத் திங்கள் வேணியரைத் தொழுதுகொண்டே தில்லை, திருத்தினைநகர், திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திரு இரும்பை மாகாளம் என்னுந் திருவூர்களைக் கும்பிட்டார். திருவதிகை வீரட்டானத்திலே சேவுகைத்தார் திருநடங் காட்டக் கண்டு, 'குண்டைக்குறட்பூதம்,' என்றெடுத்துப் பாடிப் பரவினார். திருவாமாத்தூர்ச் சிவனாரைக் 'குன்றவார்சிலை,' யெனத் தொடுத்த தமிழலங்கலால் அணிந்து போற்றினார். திருக்கோவலூர் வீரட்டானத்தையும் திரு அறையணி நல்லூரையும் சேவித்தார். திருவண்ணாமலையைக் கண்டபொழுதே காதலால் உருகிக் கைகுவித்துத் தொழுது, 'உண்ணாமுலை,'

எனத் தொடுத்துப் பாடிச் சென்று வணங்கினர். அங்குச் சிலநாளமர்ந்திருந்து திருவோத்தூரைச் சேர்ந்தார்.

## 30. ஆண்பனை பெண்பனையானது

அந்நகர்ப் பெரியார்கள் நகரணி செய்து, விளக்கு நிறைத்து, நிறைகுடமும் பூவும் பொரியும் சுண்ணமும் கொண்டு, எதிர்சென்று வணங்கி அழைத்துச் சென்றனர். பிள்ளையார் சிவிகையினின் றிழிந்து, அவர்களை யெதிர் வணங்கி உடன் சென்றார். அன்புமிகக் கைகுவித்து வணங்கி அரனுரைப் பாடிப் பரவினர். சொன்மாலை புனைந்தார். அங்கே தங்கியிருக்கும்போது ஓரடியார் வந்து வணங்கிச், 'சிவனார் திருத்தொண்டுக்கென அடியேனுக்கும் பனைகளெலாம் ஆண் பனைகளேயாயின. இங்குள்ள அமணர்கள், இப்பனைகள் காய்க்குமோ என்று நகையாடு கின்றனர்!' என்று பணிவுடன் இயம்பினர்.

ஆளுடைய பிள்ளையார், அவர்தம் பணியை நோக்கி யிரங்கி, அரனூர் திருக்கோயிலை யடைந்து, 'பூத்தேர்ந்தா யன,' எனத் தொடங்கிப் பரமனைப் பரவிக் கடைக்காப் பிலே, 'குரும்பை யாண்பனை யின்குலை யோத்தூர்,' என அமைத்தனர் அவ்வூரிலுள்ள ஆண் பனைகளெல்லாம் பெண் பனைகளாக மாறின! இதனைக் கண்டோரெல்லோ ரும் வியந்து, பிள்ளையாரைப் பரவினர். அமணர் தருக் கொழிந்தனர். பிள்ளையார் திருவாக்காற் பாடப்பெற்ற அப்பனைகளும் இறுதியிற் சிவத்தைக் கூடின.

கவுணியர் பெருமான் அங்கு நின்றும் திருமாகறல், திருக்குரங்கணின்முட்டம் என்னும் நகர்களை வணங்கிக் காஞ்சியைக் கண்டார். அந்நகர மக்கள் சண்பை மன்னர் வருகையை அறிந்து குருடன் கண் பெற்றதுபோல மகிழ்ந்து, தங்கள் காதலும் பணிவுந் தோன்ற வரவேற் றனர். அங்குச் சென்று திருவேகம்பரை, 'மறையானை' எனத் தொடங்கிப் பாடிப் பரவினர். நீண்ட நாட்களாக விரும்பியிருந்த பொருள் கைவந்தபோது அடையும்

மகிழ்ச்சிக் களவேது? காஞ்சியிலேயே பல நாட்கள் தங்கி ஒற்றைமா நீழலமர்ந்த உத்தமரைத் திருவியமகம், திருவிருக்குக்குறள் முதலிய சொன்மாலைகளணிந்து வழிபட்டும் ஆற்றாமைமீதூர நின்றார். மேலும் காமகோட்டம், திருநெறிக்காரைக்காடு, திருஅநேகதங்காவதம் முதலான திருக்கோயில்களையுஞ் சேவித்தார். அருகிலிருந்த திருமேற்றளி முதலான பதிகளையும் வணங்கிக் கொண்டு காஞ்சியிலேயே அமர்ந்திருந்தார். என்னே காஞ்சிக் காதல்!

• பின்னர், அரிதிலே வெளிப்போந்து பாலியின் தென் கரையிலே திருமாற்பேறு, திருவல்லம், திரு இலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவூறல் என்னுமிடங்களி லெழுந்தருளிய இறைவர்க்குச் சொன்மாலை புனைந்தணிந்து தொழுதார். பிற பதிகளையும் வணங்கித் திருவாலங்காட்டருகு சென்றார்.

## 31. 'நம்மை மறந்தனையோ?'

இம்மையிலேயே புவியறியத் தலையாலே நடந்து சென்று காரைக்காலம்மையார் போற்றிய ஆலங்காட்டை மிதித்தற்கஞ்சி அருகிலுள்ள ஒரு சிற்றூரிலே பிள்ளையார் அன்றிரவு துயின்றார். கனவிலே கங்கை வேணியர்—ஆலங்காட்டண்ணல்—'நம்மை மறந்தனையோ?' என்று வினவி மறைந்தார்! விழித்தெழுந்த பிள்ளையார், 'துஞ்ச வருவார்,' என்று தொடுத்துப் பாடிப் பரவிக் களிகூர்ந்தார். வைகறையிலே உடனிருக்கும் அடியார்க்கு ஆலங்காட்டார் கூறியதை மொழிந்தார்.

திருப்பாசூர்த் திருவாளரைப் பணிந்து, 'சிந்தை யிடையார்,' என்று பாடினார். திருவெண்பாக்கஞ் சேவித்தார். மருதநிலத்தைக் கடந்து மலை நிலத்தை யடைந்தார். திருக்காரிகரை பணிந்தெழுந்தார். எங்கு நோக்கினும் மலைகள்! மலையிலிருந்து குதித்தோடும் அருவிகள்! தினைப்புனங்கள்! மணியும் பொன்னுங் கொழித்து, அருவியாயிருந்தவை ஆறுகளாய் வழிக்கொள்ளும் அழகிய காட்சிகள்! மரங்களும் புதர்களும் விலங்குகளும் பறவைகளுமாய்

அச்சத்தையும் வியப்பையும் ஊட்டும் அம்மலைத் தொடர்களைக் கண்ட பிள்ளையார், 'திருக்காளத்தி மலையெது?' என்று சிவிகையிலிருந் திறங்கியவாறு வினவினார். அடியார்கள் அம் மலையைக் காட்டினர். உடனே அம் மலையை நோக்கிப் பணிந்தெழுந்து, சிந்தை களிக்க, 'வானவர்கள் தானவர்கள்,' எனத் தொடங்கிப் பாடிக்கொண்டே சென்றார். 'கண்ணப்பரின் திருப்பாதச் சுவடுகள் பதிந்த காட்டிலே நடக்கும்பேறு பெற்றோம்! இதோ அவர் ஏறியருளிய மலையிலேறிச் செல்வோம்!' என்று மகிழ்ச்சியினாலே உந்தப்பட்டவராய் அவருடைய—கண்ணப்பருடைய—திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடியவாறே சென்று பொன்முகலியைக் கண்டார். பொன்முகலியைத் தொழுது அன்பருவியிலே முழுகிக் களித்துக் கரையேறிக் காளத்திமலையடிவாரத்தை யடைந்தார்.

திருமலையை விழுந்து வணங்கி யெழுந்து தொழுதவாறே படிகளின் வழியே யேறித் திருக்கோயிலின் வாயிலை வணங்கி யுட்புகுந்து இறைவர் திருமுன் சென்று வீழ்ந்தெழுந்து கும்பிட்டார். அருகிலே அன்பின் பயனைக்—கண்ணப்பரைக்—கண்டு பன்முறை பணிந்தார். உள்ளத்திலே தெளிந்திருக்கின்ற அன்புருவினையும் அந்த அன்பினுள்ளே ஆனந்தக் கூத்தாடும் வெள்ளைமதிச் செஞ்சடைக் கற்றை விமலரையும் ஒன்றாகக் கண்ட ஆளுடைய பிள்ளையாரின் மகிழ்ச்சியை எப்படி இயம்புவது? சிவஞான அமுதைத் தேக்கியுண்ட திருவாயார் இன்பக்கண்ணீரருவியிலே முழுகிக் களித்தார். அரிதிற் பிரிந்து திருமடமொன்றிலே எழுந்தருளிக் காலந் தவறாமற் காளத்தியப்பரைச் சில நாட்கள் சேவித்திருந்தார்.

வடதிசைப்பதிகள் தமிழ் வழக்கற்றவைகளாதலால் அங்கிருந்தவாறே வடகயிலை, திருக்கேதாரம், திருக்கோகரணம், திருப்பருப்பதம், இந்திரநீலப் பருப்பதம் முதலியவற்றை நினைந்து பாடினார். பின்னர் ஒற்றியூர் வணங்க உள்ளங்கொண்டு காளத்தியை கைகூப்பி வணங்கிப் பாடிப் பிரிந்தார். திருவேற்காடு சென்றிறைஞ்சினார்.

திருவலிதாயச் செம்பொருளை வணங்கித் திருவொற்றியூரை நெருங்கியவுடன், சிவிகையிலிருந் திறங்கி 'விடையவன்,' எனத் தொடங்கிப் பாடிப் பரவியவாறே நடந்து சென்று, ஒற்றியூரை யடைந்து திருக்கோயிலை வணங்கியுட்புக்குத் திருமுன் விழுந்து வாழ்த்தி வணங்கிப் பரவினார். அங்கேயே சில நாட்கள் எழுந்தருளியிருந்தார்.

## 32. பூம்பாவை

திருமயிலையில், வணிகர் குடியில், வளநிதி படைத்த வள்ளலொருவர் சிவநேசர் என்னும் பெயருடையவராய் இருந்தார். அவர் பெயருக் கேற்றவாறே சிவநேசம் பூண்டவர்! தம்மை யுணர்ந்தவர்! பொய்ம்மையில்லாத வணிகர்! சிவனடியார்க் கடியராகி வேண்டுவன விழைந்து விரைந்தருளும் மெய்யன்பர்! சீகாழிச் செம்மல் சிவஞானப் பாலுண்ட சீர்த்தியை, அடியார் கூறக்கேட்டுச் சிவஞானப்பிள்ளையாரடியிலே சேர்ந்த உள்ளமுடையவரானார்! எப்போதும் அவர் புகழே இயம்புவார்! கேட்பார்!

அவருக்கு நீண்ட நாளாய் மகப்பேறின்றிச் சிவ ஞானக்கொடியாக ஒரு பெண் பிறந்தாள். அவள் திரு மகளென அழகிற் சிறந்தவளாயிருந்ததால் அன்புடன் பூம்பாவை யென்றழைத்தனர். அப் பெண்கொடி அசையும் மின்னல் முளையோ! பொற்கொடியின் இளந் தளிர்க் கிளையோ! மாணிக்கச் சுடர்க்கொழுந்தோ! அழகின் இளம்பதமோ! அணிவிளக்கோ! என்னும்படி வளர்ந்து வந்தாள். அவளழகைக் கண்ட சிவநேசர் மகிழ்ந்து, இவளை மணக்கும் பேறுடையானே எமது செல்வப்பேறுடையானென்று செப்பிக்கொண்டிருந்தார். இந்நிலையிலே திருஞானசப்பந்தர் சமணரை வென்றதை— செந்தீயிலிட்ட ஏடு பசுமை பெற்றிருந்ததை—ஓடும் நீரில் ஏடெதிர்ந்ததை—உரைப்பக் கேட்டுத் திகைப்பும் வியப்பும் அடைந்தார்! பூந்தராய் நோக்கித் தொழுதார்! உறவினரறிய உரைத்தார்!

"கற்றவர் போற்றுங் காழி வள்ளலுக்கே அடியேன் பெற்றெடுத்த பூம்பாவையும் வற்றிலாத செல்வமும் மனையும் பிறவும் யானும் உரிமையாகும்படி செய்தேன்!"

இங்ஙனம் நிகழும் நாட்களிலே, ஒருநாள் பூம்பாவையும் அவள் தோழிசூழ்மாக மணங்கமழும் மலர்ப் பொழிலிற் புகுந்து அரும்புகளைக் கொய்துகொண்டிருந்தனர். அப்போது, ஞானசம்பந்தர் பூம்பாவையை யேற்றுக்கொள்ளமாட்டாரென்பதை விளக்கவோ, வேறெதற்காகவோ அறிவோம்—ஒரு முள்ளெயிற்றரவு அவளைத் தீண்டிவிட்டது! மாதவிப் பந்தரிலே அவளுடைய மலர்க்கை விரலிலே கவ்வித தன் நஞ்சைச் செலுத்தியது! கண்ட தோழிகள் கதறிக் கூவினர்! பெற்ற தந்தையும் உற்ற பிறரும் ஓடிவந்து கண்டு கலங்கினர்! நஞ்சைப் போக்க மந்திரக்காரரும் மருத்துவரும் பலமுறையாலும் முயன்றும் முடியாமல், அந்தோ! உயிர் நீங்கியது!

சிவநேசர், 'இவள் கொண்ட நஞ்சை நீக்குவோர்க்கு, என் வளநிதி முற்றும் வழங்குவேன்,' என்று பறையறைவித்து, மூன்றுநாள்வரை காத்திருந்தார். பலர் வந்து முயன்றனர்! பயனின்றிக் கழிந்தனர்! சிவநேசர் கலங்கினர். எனினும், இறுதியில் ஒருவாறு துணிந்து, தம் அருமை மகளைக் கொளுத்திய சாம்பரையும் எலும்பையும் ஒரு குடத்தி விட்டார்! 'பிள்ளையார்க்கென இவளை வைத்தேன்! ஆகவே, தான் புறேன். அவரிடங் காட்டுவேன்!' என முடிவு செய்தார். கன்னிமாடத்தில் அழகிய பஞ்சணைக் கட்டிலில் வைத்தார்! பொன்னும் மணியும் புனைந்து, ஆடையுடுத்திச் சேமப்படுத்தினார்! வைகலும் மாலையிட்டுச் சாந்து பூசி மஞ்சனமாட்டுவார்! உணவு படைப்பார்! புகையிடுவார்! இவர் செயலைக் கண்டோர் வியந்தனர்.

இந்நிலையிலே, பிள்ளையார் திருவொற்றியூர்க்கு எழுந்தருளியிருப்பதை அடியவர் கூறக்கேட்டு மகிழ்ந்தார். நகரணி செய்தார்! மயிலையிலிருந்து ஒற்றியூர்வரையிற்

பந்தரிட்டு வாழையுங் கமுகுங் கட்டி மலர்மாலைகளைத் தூக்கி, வழியெல்லாம் பழமணல் நீக்கிப் புதுமணல் பரப்பி மலரும் சுண்ணப்பொடியுந் தூவினார்! நிறைகுடமும் மணிவிளக்கும் மலர்மாலைகளும் ஏந்தி மயிலை அடியாருடன் திருவொற்றியூரை நெருங்கினார்! ஆளுடைய பிள்ளையாரும் ஒற்றியூரை விட்டு, மயிலைக்குச் செல்லத் திருவுளங் கொண்டு எதிர்வந்தார்! அடியார்கூட்டம் சேய்மையில் வருவதை யறிந்த சிவநேசர் பிள்ளையாரே வருகிறாரென் றறிந்து மகிழ்ந்தார்! 'கும்பிடப்போன தெய்வங் குறுக வந்தது,' எனக் கரைகடந்த காதலுடன் புவிமிசை விழுந்து வணங்கினார்! இவர் வந்ததையறிந்த பிள்ளையார், சிவிகை விட் டெதிர்நோக்கி நடந்தார்! எதிர்கொள்ளும் அடியவரைக் கைகுவித்து வணங்கினார்! சிவநேசரைக் கை கொடுத்தெடுத்து நன்மொழி நவின்றார்!

எல்லோரும் மயிலையை அடைந்தனர். பிள்ளையார் கபாலீசர் திருக்கோயிலைக் கண்டவுடன் கைகுவித்து வணங்கிக் கோபுரவாயிலை யடைந்து, விழுந்து வணங்கி யெழுந்து உட்புகுந்து வலம்வந்து திருமுன் சென்று தாழ்ந்தெழுந்து பாடிப் பரவிப் புறத்தே வந்தார். சிவநேசரை அழைத்து, "அறிவிற் சிறந்த தங்கள் மகள் என்பு நிறைந்த குடத்தைக் கொண்டுவந்து கோயிலுக்கு—மதிற் புறத்துக்கு—வெளியே வைத்திடுக!" என்று அருள்கூர்ந்தார். சிவநேசர் பிள்ளையாரை வணங்கி வீட்டிற்குச் சென்றார். மகிழ்வுடன் கன்னிமாடத்தை அடைந்து, வெந்த சாம்பரும் என்பும் அடங்கிய குடத்தை யெடுத்துப் பொற்பல்லக்கில் வைத்துத் திரையிட்டுக் கொணர்ந்து மதிலுக்கு வெளியே திருவாயிலில் சிவலிங்கத்திற்கு நேராகக் குடத்தையெடுத்து வைத்தார்! மயிலை வாழ்வோரும் அருகிலுள்ளவர்களும் புறச்சமயத்தாரும் வந்து குழுமினர்!

பிள்ளையார் அடியார் சூழ்வரக் கோபுரவாயிலின் நேராக வந்து மட்குடத்தைக் கண்டார்! இறைவர் பெருமையைக் கருதினார்! இவ்வுலக மக்கள், இறந்தவ ரெலும்பினை நன்னெறிப் படுத்த அந்த எலும்பே நன்னெறிக்குத்

தொடர்ச்சியாம்,' என அறியும்வண்ணம் திருவருள் நோக்கஞ் செய்தார்!

பிறகு 'மட்டிட்ட' என்று தொடங்குந் திருப்பதிகத்திலே 'பூம்பாவாய்!' என விளித்து, 'மண்ணிலே பிறந்தார் பெறும் பயன் பிறைமுடியண்ணலா ரடியார்க் கமுதுசெய்வித்தலும், கண்ணினுலவர் திருவிழாவைக் காண்பதும் என்பது உண்மையாமெனில், உலகர் காண வருவாய்,' என உரைத்தார்!

"மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னுலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன்" வருகென வுரைப்பார்."
(திருத். திருஞா. ௧0௮௭)

அப்பதிகத்திலே 'போதியோ' என்னும் திருவாக்கின் அமுதம், அந்தக் குடத்திலுள்ள அங்கத்திற் சார்ந்தவுடனே உருவமாகத்தொடங்கியது முதற்பாட்டிலே வடிவு பெற்று, எட்டுப் பாட்டுக்களில் பன்னிரண்டு வயதும் பெற்றுச் சமணரைக் குறிப்பிடும் பாட்டு முடிந்தவுடன் மலர்க்கை வெளியே தோன்றக் குடமுடைந்து, முட்டையிலிருந்து வெளிவரும் மயிலெனப் பூம்பாவை எழுந்து நின்றாள்! பிள்ளையாருந் திருக்கடைக்காப்பு மொழிந்து மகிழ்ந்தார்!

அப்போது அங்கிருந்த சைவசமய அடியவர்களும் சமணர்களும் புத்தர்களும் வியப்படைந்தனர். சிவம் பெருக்கும் ஒலி வானளாவியது! சிவனேசர் அடைந்த மகிழ்ச்சியைச் செப்பல் ஒவ்வுமோ! பூம்பாவையோ அழகினுக்கழகாய் நின்றாள்! கற்பகமீன்ற அழகிய பவளவொளி பரவிய, பொன் திரண்ட, வயிரப்பத்தியையுடைய பூங்கொத்து மலர்ந்ததுபோன்ற—உலகிற் காணப்படாத—அழகினளாய் நின்றாள்.

அழகிற் சிறந்த திலோத்தமையின் அழகை அவளைப் படைத்தபோது அளவற்ற வயதுடைய நான்முகன் நான்கு

முகத்தாலே மட்டுங் கண்டான்! பதினாறு ஆண்டே நிரம்பிய பிள்ளையார் பூம்பாவையினிடம் இறைவரின் அருளழகை ஆயிரமுகங்களாலும் கண்டார்!

எண்ணிலாண் டெய்தும் வேதாப்
படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணுநான் முகத்தாற் கண்டான்;
அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினா றாண்டு
பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம்
ஆயிர முகத்தாற் கண்டார்!

(திருத். திருஞா. ௧௧0௧)

சிவநேசரும் பூம்பாவையுந் திருஞானசம்பந்தரடியிலே வீழ்ந்து வணங்கினர். அவர் அவர்களிருவரையும் வீட்டிற்குச் செல்லும்படி பணித்தார். அப்போது, சிவநேசர் தாம் எண்ணியிருந்ததை யியம்பித், 'தாங்கள் இவளைத் திருமணம் புரிந்தருளவேண்டும்,' என்று வேண்டிக்கொண்டார். பிள்ளையார் புன்முறுவல் செய்து, 'தாங்கள் பெற்ற பெண் நஞ்சினாலிறந்தாள்! இவளை இறைவரருளைக் கொண்டு பிறப்பித்தேன்! ஆகையால், என் பெண்போன்றவளானாள்! தங்கள் உரை தகாது' என்று மொழிந்தருளினார். சிவநேசர் அஃது உண்மையே எனத் தெளிந்தார். எனினும், பிள்ளையார்க்கென வைத்த பெண்ணைப் பிறர்க்களியேன் எனக் கன்னிமாடத்திலேயே இருத்தினார். அப்பொற்கொடியாள் அங்கேயே சிவனார் திருவடியைச் சிந்தித்திருந்து, அவர் திருவடி நிழலை யடைந்தாள்.

பிள்ளையார் கபாலீச்சுரரை வணங்கித் திருவான்மியூர் சென்று தொழுது பாடினார். திருவிடைச்சுரம் பணிந்தார். திருக்கழுக்குன்றடைந்து வலம் வந்து மலையைக் கும்பிட்டு, மலைமீதமர்ந்த பேரொளியை வணங்கினார். திருஅச்சிறுபாக்கத்துச் செங்கனகக்குன்றைப்போல்வாரைச் சேவித்தார். திருவரசிலி, திருப்பனங்காட்டூர் முதலான நகரங்களில் நம்பரைச் சிறப்புறப்பணிந்து தில்லையை அடைந்தார். தில்லை

வாழந்தணர்கள் களிப்புடன் எதிர்கொண்டழைக்கச் சென்று அம்பலத்தாடும் அற்புதக்கூத்தைக் கண்டு கண்களி லானந்த வெள்ளம் பெருகக் கைகள் உச்சியிற் குவியப் பரவிப் பாடி யாடி மகிழ்ந்தார். அங்கெழுந்தருளியிருக்கும் போது புகலியிலிருந்து சிவபாத இருதயரும் பிற மறையவரும் வந்து பிள்ளையாரை வணங்கி யழைத்துச் சென்றார்கள். தோணியப்பரையும் அம்மையையும் வணங்கிப் பாடி அன்புறு செந்தமிழ்த் தொடையணிந்து திருமாளிகையை அடைந்து இன்புற்றிருந்தார். இந்நாளிலே முருக நாயனாரும் நீலநக்கநாயனாரும் காழியையடைந்து கவுணியர் குலக்கொழுந்தைக் கண்டு களித்துக் கும்பிட்டு வாழ்த்தினர். பிள்ளையாரும் வணங்கி அவர்கட்கு விருந்தளித்துத் தம்முடன் இருத்தினர்.

## 33. திருநல்லூர்ப் பெருமணப் பேரொளி!

ஒருநாள் தந்தையாரும் மற்றோரும் பிள்ளையாரிடம் வந்து, 'குற்றமற்ற மறைமுறையை ஒட்டிய வேள்வி பல புரியவேண்டும். ஆகையால், ஒரு கன்னியை மணம் முடித்தருள்க,' என்று வேண்டினர்.

"சுற்றத்தாலுண்டாகுந் தொடர்ச்சியை விட நினைந்தேன்! இறைவரருள்பெற்ற நான், இனி உலகத் தொடர்பை மீண்டுந் திரும்பி நோக்குவது தகாது!"

'உலகத்திலே மறைவழக்கத்தையே தாங்கள் கொண்டீர்கள். ஆகையால், அம்மறை முறைப்படி அறுதொழிலை நடத்துதற்குத் திருமணம் புரிதலேவேண்டும்.'

பிள்ளையார் சிந்தித்து, மறைவாழவும் அந்தணர் நெறி வாழவும் உடன்பட்டார். அந்தணர்களும் தந்தையாரும் அடைந்த மகிழ்ச்சியை என்னென்பது? செம்பொன்வண்ணர் திருவடியை வாழ்த்தித் திருமண முயற்சியைத் தொடங்கினர்.

திருநல்லூரிலே நம்பாண்டார் நம்பியெனும் அந்தணரொருவரிருந்தார். அவர் திருமகள் எல்லா நலனும் எய்தப்பெற்றிருந்தாள். இதனை யுணர்ந்த சிவபாத இருதய

ரும் மறையவரில் இருவர் கோத்திரங்களையும் அறிந்த பெரியோர்களை யழைத்துக்கொண்டு மணம்பேசச் சென்றார். உடன்வந்தவர்கள் நாம் பெற்றபேறு என நன்மகிழ்ச்சி பொங்கத் திருநல்லூரையடைந்தனர். நம்பாண்டார் நம்பி இவர்கள் வருகையை அறிந்து திருநகரை அணிசெய்து நிறைகுடமும் அணிவிளக்கும் நிரைத்துச் சுற்றத்துடன் எதிர்கொண்டார். திருமனைக்கழைத்துச் சென்று விருந்து முதலான சிறப்பளித்தார்.

வந்த மறையவர்கள், 'எந்தம் கவுணியர் குலக்கொழுந்துக்கு நுந்தம் குலக்கொடியை அளிக்க வேண்டும்,' என்றனர். நம்பாண்டார் நம்பி முகமலர்ந்து, பெருமகிழ்ச்சி கொண்டு, கோத்திரங் கூறி யறிந்து, 'காழியர்செய் பெருந்தவத்தா லுதித்துக் கண்ணுதலாரருளால் உமையம்மையார் திருமுலைப்பாலைச் சிவஞானத்தொடுங் கலந்துண்ட பெருமானுக்கு எம் குலக்கொழுந்தை யாம் வாழ நல்குகிறோம்,' என்று மகிழ்ச்சியுடன் செலவிடுத்தார்.

சிவபாத இருதயர் இந்த நன்மொழியை வந்த மறையவருடன் சென்று பிள்ளையாரிடம் மகிழ்ச்சியுடன் இயம்பினர். பிறகு, திருமணச் சடங்குகளைத் தொடங்கினர். திருமணநாளைக் கணித்தறிந்து பெண்வீட்டாருக்கு மங்கலப் பெண்களும் மைந்தரும் கொண்டு செல்வத் திருமணவோலை விடுத்தனர். மற்றையவர்களுக்கும் அறிவித்தனர். நகரெங்கும் மணமுரசறைந்து தெரிவித்தனர். நகரமாந்தர் அடைந்த மகிழ்ச்சி கடலினும் பெரியதாயிற்று. தங்கள் தங்கள் வீட்டிலே திருமணம் என்று நினைத்துக் கொண்டாடினர். பெரிய மாடங்களையுங் கோபுரங்களையும் புதுப்பித்துப் புத்தோவியங்களாற் புனைவித்தனர்! வெள்ளித் திண்ணைகளையும் மேடைகளையும் சாந்தால் மெழுகினர்! தெருவெல்லாம் பந்தரிட்டு, விதானங்கள் கட்டி, வாழையுங் கமுகும் நிறுத்தித் தோரணங்கள் கட்டினர்! மலர்மாலைகளை நாற்றினர்! நிறைகுடங்களை அமைத்தனர்! தெருக்களைச் சுத்தம் செய்து நறுமணப் பொடியையும் மலர்களையுந் தூவினர்!

சிவபாத இருதயர் திருமனையிலே உறவினரெல்லோ ரும் ஒருங்கே வந்து கூடினர். திருமணத்திற்கு ஏழுநா ளிருக்கும்போது, மங்கலமுரசும் இனிய இசையும் இயம்பப் பொன்மணிப்பாலிகையிலே புனித முளை விதைத்தார்கள். நம்பாண்டார் நம்பியிடம் விடுத்த திருமணவோலையை அவர் மகிழ்வுடன் எதிர்கொண்டேற்றார்! அவருடைய உற வினர்க்கெல்லாம் அறிவித்துத் திருமணவினை தொடங்கி ஞர்! அவரும் ஏழுநாளிருக்கும்போதே பாலிகை தெளித் தார். நகரெங்கும் அணிசெய்யப்பெற்றது. புகலியும் நல் லூரும் திருமண வணியினாலே சிவலோகம்போல விளங் கின! திருமுளை நாளிலிருந்து ஒவ்வொருநாளும் அணி செய்து மகிழ்ந்தனர் நகரங்களை! எங்கும் அகிற்புகையும் வேள்விப்புகையும் மணத்துடன் பரவின! திருநல்லூரிலே எங்கு நோக்கினும் குங்குமச் செழுஞ்சேற்றுக் கூட்ட மைப்போரும், கலவைச் சந்தனமரைப்போரும், கர்ப்பூரச் சுண்ணமிடிப்போரும், மலர்மாலை புனைவோரும் காணப் பெற்றனர்! எங்கணும் மறையொலி! எங்கணும் உணவின் ஒலி! எங்கணும் திருமணப்பேச்சொலி! எங்கணும் வாழ்த் தொலி!

திருப்புகலியிலே திருமணத்திற்கு முதல்நாள் பிள்ளை யாருக்குக் காப்பு நாணணியுந் திருவிழாத் தொடங்கியது! மறைமுறைப்படி மங்கலவொலியுடன் தொண்டர்களும் மறையவர்களுங் கவிஞர்களுமாகப் பொற்காப்புநாணை நகரவலஞ் செய்வித்தனர்! நவமணிகளாற் புனையப்பெற்ற சித்திரவிதான மண்டபத்திலே மறையின்வண்ணம் சமா வர்த்தனப்பான்மை திகழப் பிள்ளையார் திருமுன்பு சென் றனர். செந்நெற்பரப்பிய செம்பொற்கலங்களும், நறுமண நீர்நிறைந்த மலர்மாலைகளால் அணிசெயப்பெற்ற நிறை குடங்களும், அரசிலை தர்ப்பை நீள்சுடர் விளக்கு ஆகியவை களும் விளங்கும் இடத்தில், மலர்க்கட்டிலின்மீது, சாந் தணிந்து, துகில் புனைந்த புண்ணியம்போல் வீற்றிருக்கும் பிள்ளையாரை நெருங்கி, அவர் மலர்க்கையிலே மலரயனைப் போன்ற மாதவமுனிவர் காப்புநாணை அணிந்தனர்! மறை யொலியும், மங்கலவொலியும் முழங்கின! "கடிமணங் காண

வந்தவர்களின் வல்வினையாப்புகள் அவிழ்ந்தன! தொண்டருடைய மனமும் முகமும் மலர்ந்தன.

திருமணநாளில், வைகறையிலே கதிரவன், உலகிலே மக்களின் மனவிருளை நீக்கிச் சைவசமய வொளியைப் பரப்பியெழும் கவுணியர் தலைவரைப்போல உலகிருளை நீக்கி யெழுந்தான்! திசைகளெங்கும் தெளிந்தன! வானம் மாசு மறுவின்றி விளங்கியது. உலகிலுள்ள வளங்களெல்லாம் ஒருங்குகூடிப் பிள்ளையாரின் மணவினை காண வந்தன போலத் திருநல்லூர் செழித்து விளங்கியது! மேலும் அவ் வளங்கள் தங்களைப் பலரறிய அறிவிப்பனபோன்றுங் காணப்பெற்றன! கடல் மங்கலமுரசுபோல ஒலித்தது! வேள்விக்குண்டங்களிலே ஆகுதி தொடங்குமுன்னமே நெருப்பு வலஞ்சுழித் தெழுந்தது! தென்றல் சந்தன மணத்துடன் மலர்மணத்தையுங்கொண்டு, மகரந்தப்பொடியாகிய திருநீற்றையணிந்து, வண்டொழுங்கெனுங் கண்டிகை புனைந்து, அடியார்களுடன் மெல்லெனத் திருமணங் காண வந்தது. வானம் வெண்முகில்களாகிய துகிற்கொடிகளை நிறைத்தது! இவ்வாறு இயற்கையும் எழில் செய்தது!

பிள்ளையார், காலைக்கடன்களை முற்றித் தோணிபுர வள்ளலைத் தொழுது, திருவருள்பெற்று வெளிவந்தார். மறையவர் கூட்டமும் அடியார் குழுவும் முன்செல்ல, மறை முழங்க, மங்கலம் இயம்ப, நகரை வணங்கி முத்துப் பல்லக்கி லேறினர். மற்றும் ஊர்திகளிற் செல்வோர் ஏறி வரத் தொங்கல், பிச்சம், குடை, கவரி ஆகியவை பொழில் போல நெருங்கின! வானத்திலே வான துந்துபியும், மண்ணிலே மங்கலமுரசும் முழங்கின! சங்கு, தாரை, சின்னம், காளம், தாளம், வங்கியம் ஆகியவைகளும் பிற துளைக்கருவிகளும் மறையொலியுடன் கலந்தொலித்தன! வீணையும், யாழும், விபஞ்சியும் இசைத்தன!

வெண்டுகிற் கொடி வெள்ளமும், கவரிக்கானமும் வானத்தை மறைத்தன! சில மாணவர்கள் தங்கள் ஆசிரியருடன் வேதமோதியவாறு போந்தனர்! தமிழ் மறைகளைச்

சிலர் ஓதிப் போந்தனர். சிலர் வேள்விச் செந்தீ யெடுத்துச் சென்றனர்! சைவத் தவமுனிவரும், அடியவரும், யோகி களும் வந்தனர்.

இவ்வாறு யாவருந் தொடரக் காழிவேந்தர் திரு நல்லூரை யடைந்து, பெருமணம் என்னுந் திருக்கோயிலை யடைந்தனர். திருக்கோயிலினுள்ளோர் எதிர்கொண்டு வணங்கி யழைக்கச் சென்று இறைவரைப் பணிந்து பாடிப் புறம்போந்தார். முதிய அந்தணர் திருமணக்கோலம் புனையவேண்டுமென்று கூற, அங்குள்ள ஒரு மடத்தை யடைந்தார்.

பிள்ளையார்க்குத் திருமணி அணிசெய்யப் போந்த வர்கள் அவரை ஒரு பீடத்திலிருத்தினர்! பொற்குடங்களி லிருந்த தூயமஞ்சனநீரால் ஆட்டினர்! ஒளிவிடும வெண் பட்டாடையை அணிந்தனர்! மேலாடை சாத்தினர்! பல வகைக் கலவைச் சந்தனங்களைப் பூசினர்! திருவடிமலரிலே முத்துக்கோத்த மாணிக்கச்சரி யணிந்தனர்! பரட்டிலே முத்துத்தாமம் புனைந்தனர்! பொன்னிழையிலே முத்தைக் கோத்த அரைஞாணைச் சாத்தினர்! முத்துக்கோவையா லான உதரபந்தனத்தின்மேல் முத்துச்சன்னவீரம் புனைந் தனர். முத்துப்பூணுநூலணிந்தனர்! விரல்களிலே வயிர ஆழி யிட்டனர். தடக்கைகளில் தண்டையும் சரியும் நாணும் அணிந்தனர்! முழங்கைப்பொட்டும் ஒளிவிடும் வடமும் புனைந்தனர்! சங்காலும் முத்தாலும் ஆன தோள் வளை அணிந்தனர்! திருக்கழுத்திலே உருத்திராக்கக் கண் டிகையுடன் முத்துவட மணிந்தனர்! காதில் முத்துக்குழை புனைந்தனர்! நெற்றியிலணியுந் திருநீற்றின் ஒளியெழுந்தது போல முத்தாலான முடியைச் சேர்த்தனர்! இவ்வாறு முத்தினாலே அணிசெய்தனர்!

இந்த அணி முற்றிய பின்னர், ஆளுடைய பிள்ளையார் உருத்திராக்க மாலையைத் தொழுது எடுத்து அணிந்தார்! அழகினுக் கழகு செய்யுந் திருவெண்ணீற்றை ஐந்தெழுத் தோதி அணிந்தார்! வெளியே வந்து விடையூர்தியை மனத் தாலே தொழுதார்! மங்கலமுழக்க முத்துச்சிவிகைமீதேறி

னார்! மறையொலி பொங்கி யுலகெங்கும் வழிந்தது! சங்க நாதம் முழங்கியது!

தொங்கலும், பிச்சமும், பீலியும், செம்பொற்பாண்டி லும், துகிற்சதுக்கமும் நிறைந்து சென்றன! முத்துப்பல் லக்கின்மீது முத்துக்குழை நிழல் செய்தது! முத்துச் சின் னங்களுங் காளங்களும் தாரைகளும் 'உலகுய்ய ஞானசம் பந்தர் வந்தார்!' என்று பேரொலி பெருகப் பிடித்தன!

கவுணியர் தலைவர் எழுந்தருளும் மங்கலமுழக்குத் திருமணமனையிலே வழிந்து பொங்க, மணமகளாரை மாதர் சூழ்ந்து காப்பணிந்து, திருமணக்கோலம் புரிந்தனர். பவழ மென்கொடிபோன்ற திருமணமகளார் எழில் விளக்கேபோற் காட்சியளித்தார்.

மறையவர்குல மைந்தர்கள் பிள்ளையார்க்கு முன்னே சென்று நவமணிகளையும் மலர்களையும் நறுமணப் பொடி களையும் வீசினர்! முதிய மறையவர்கள் அரசிலை தருப்பை தோய்ந்த பொற்கலசநீரை மறையுடன் கலந்து வீசினர். விண்ணவர் மலர்மாரியை வீசினர். இளந்தென்றல் மணங் கலந்து வீசியது. இத்தகைய காட்சியுடன் தோரணங்களி னூடே புண்ணிய வினைவான புகலியர்கோன் சென்று பூம்பந்தர் முன்பு அடைந்தார். சங்கொலி முழங்கச் சிவி கையினின்றும் மலரும் சுண்ணமும் பரவிய பாவாடைமீது இறங்கி வந்தார்.

அப்போது, மறைக்குல மங்கல மங்கையர் நிறைகுடங் களும், நிரைமணி விளக்குகளும், நறும் புகைகளும், மண மலர் மாலைகளும், முளைப்பொற்பாண்டிலும், கலவைச்சாந் தும் ஏந்தி எதிர்கொண்டு நின்றனர். அங்கே இடப்பட் டிருந்த செம்பொன்மணிப் பீடத்திலே ஞானவெள்ளம் எழுந்தருள்வதுபோல முத்தொளி வீசக் காழியர் தலைவர் ஏறி நின்றார்! வரவேற்று நின்ற மங்கலமகளிர் நறுமண நீரைக் கலசத்தினின்றும் ஒழுக்கி வலங்கொண்டு செய்ய வேண்டிய நல்வினைகளைச் செய்தனர். பிறகு, மங்கலப் பொருள்களை யேந்திய பெண்கள் முன்செல்லக் கங்கையின்

கொழுந்து இமயவரையிலே கலப்பதைப்போலச் சீகாழிப் பெருமான் திருமனையிலே ஆதிபூமியை அடைந்தார்!

அகிற்புகை கமழ, மாணிக்கங்களால் அழகுற வேயப் பெற்ற—துகிலாற்புனையப்பெற்ற—விதானத்தின் நிழலிலே மலர்த்தவசின்மேலே, மங்கல மடந்தையர் வாழ்த்த மறையவர் சூழ வீற்றிருந்தார் திருமணப் பிள்ளையார். பிறகு, நம்பாண்டார் நம்பியார் தம் மனைவியாருடன் வந்து, பாலும் நீருங்கொண்டு பிள்ளையாரைச் சிவபெருமானாராக நினைத்து மனைவியார் வார்க்கத் தாம் அவர் திருவடிகளை விளக்கி, மிக்க நீரைத் தலைமீது தெளித்துக்கொண்டு உள்ளுக்கும் கொண்டார். அருகிலுள்ள உறவினர்மேலும் ஆர்வத்துடன் தெளித்தார் பின்னர், தம் கோத்திரம் கூறி, 'என் பெண்ணையளித்தேன்!' என்று கரகநீரைக் கவுணியர் மலர்க்கைகளிலே வார்த்தார்.

நல்ல பொழுது நெருங்கியவுடன், திருமணமகளாரை உடன்பிறந்தோரும் பெற்றவரும் அழைத்துவந்து, ஒளி வீசும் வெண்முகிலின் அருகிலே மின்னுக்கொடியைச் சேர்ப்பதைப்போலப் பிள்ளையாரின் வலப்பக்கத்திலே அமர்த்தினார்கள். இருவரையும் ஒன்றாகக் கண்ட மக்கள் மங்கலவாழ்த்துக்கூறி இமையாநாட்டம் பெற்றவர்போல் நோக்கி மகிழ்ந்தனர்.

பைம்பொன் பதித்த பவழக்காற் பந்தரிலே, சித்திர விதானத்தின்கீழே, நீலநக்கர் பிள்ளையார்முன் இறைவரை வணங்கித் திருமணச் சடங்கு செய்தார். மறையொலியும் மங்கல ஒலியும் முழங்கின. பிள்ளையார் மணமகளார் செங்கை பற்றித் தீயிலே வெண்பொரியை இட்டுத் தீக்கடவுளரை வலமாக வரவேண்டிய பொழுதில், விழைதக்க விழுமிய தழலுருவாவார் சிவபெருமானே என்று திருப்பெருமணத்தைத் திருவுள்ளங்கொண்டு, 'இந்த இல்லொழுக்கும் வந்ததே! இவளுடன் சிவனாரடி சேர்வேன்,' என்னும் எண்ணம் பொங்கியது.

உடனே உறவினரும் அடியாரும் உடன்வரத் திருப்பெருமணக் கோயிலையடைந்தார். சிவனார் மலரடி தலைப்

படும் சார்பினாற், "பிறவியற எளியேனை முன்னாள் ஆண்டமைபோல இப்போதும் மலரடியிற் சேர்த்தருளும்," என்னும் எண்ணம் உண்டாகியது

சிவனமர்ந் தருளுஞ் செல்வத் திருப்பெரு மணத்து ளெய்தித்
தவநெறி வளர்க்க வந்தார் தலைப்படுஞ் சார்பு நோக்கிப்
'பவமற என்னை முன்னாள் ஆண்டஅப் பண்புகூட
நவமலர்ப் பாதங் கூட்டும்,' என்னு நல் லுணர்வு நல்க.
(திருத். திருஞா. கஉ.சச.)

அதுவே, 'கல்லூர்ப் பெருமணம்' எனத் தொடங்கி நல்லூர்ப் பெருமணங் கண்டோர் பிறவிப்பாசத்தைத் தீர்த் தலைச் செம்பொருளாகக் கொண்டு, 'நாதனே! நல்லூர் மேவும் பெருமண நம்பனே! உன்பாத மெய்ந்நீழல் சேரும் பருவம் ஈது,' என்று பாடினார். அப்போது இறை வர், 'நீயும் நின் துணைவியும் மணத்திலைக் காணவந்தாரும் எனபால்—இப்பேரொளியில்—வந்து சேருங்கள்,' என்று அருள்செய்து, பேரொளியாகி நின்றார். அவ்வொளி கோயிலையும் உட்கொண்டு மேலோங்கி வளர்ந்து வாயி லொன்றையும் வகுத்துநின்றது.

அவ்வேளையில் ஆளுடையபிள்ளையார் உலகமுய்யக் 'காதலாகி' எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப் பதிகத்தை அருளினார். எல்லோரையும் ஐந்தெழுத்தை யோதப் பணித்தார். பிறகு, 'பிறவித்துயரற விரும்பிய— திருமணத்திற்கு வந்த—எல்லோரும் இவ்வொளியிலே நுழையுங்கள்,' என்றருளினார்.

திருநீலநக்கர், திருமுருகர் திருநீலகண்டப் பெரும் பாணர் முதலான தொண்டர்கள் புகுந்தனர். சிவபாத இருதயர், நம்பாண்டார் நம்பி முதலான உறவினர்கள் புகுந்தனர். முத்துச்சிவிகை சுமந்தோர், அணிதாங்கிச் சென்றோர், திருமணத் தொழிலாளர் முதலாக ஆடவரும் பெண்டிரும் எல்லோரும் புகுந்தார்கள். ஆறுவகை அகச் சமயத்தடியவரும், தவத்தினரும், முனிவர்களும், கும்பிட

வந்தவர்களும் திருவருளினால் வீடுபெற வந்தவர்களும் புகுந்தனர்.

பின்னர், வாழ்க்கைத்துணைவியார் கையைப்பற்றி வலஞ்செய்து திருஞானசம்பந்தரும் புகுந்து இறைவருடன் கலந்தனர். பின்னர், அவ்வொளி மறைந்து திருப்பெருமணக்கோயில் காணப்பெற்றது. பேரொளியிற் புகும் பேறின்றி யிருந்து கண்டோர் கைகுவித்து வாழ்த்தினர்.

“வம்பறு வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்”

திருச்சிற்றம்பலம்

---

## ௩௦. ஏயர்கோன் கலிக்காம நாயனர்

சோழ நாட்டிலே பொன்கொழிக்கும் காவிரியின் வடகரையிலே கிழக்குத் திசையிலே திருமங்கலம் என்னும் நகரம் உள்ளது. அது சிவனடியார் நிறைந்து சிவபுரி யென்னலாம்படி திகழ்வுற்றது. அந்நகரிலே ஏயர்கோக் குடியே பழமையானது; சோழர் படைத்தலைமை தாங்கும் பேறுடையது; வேளாண்மையுடையது. அக்குடியிலே கலிக்காமரென்பவர் இருந்தார். அவர் சிவனடியாரிடத்தும் சிவலிங்கத்திடமும் சிவனிடத்தும் மாறாத பேரன்பு பூண்டவர்.

இவர் சிவபிரானைச் சுந்தரர் பரவையாரிடம் தூதனுப்பியதைக் கேட்டு வெகுண்டார். இதையறிந்த சுந்தரர் இறைவரை வேண்ட இறைவர் கலிக்காமருக்குச் சூலைநோய் அளித்துச் சுந்தரரால் தீரு மென்றார். அதை விரும்பாத கலிக்காமர் தற்கொலை செய்துகொண்டார். பிறகு, இறைவரால் உயிர்பெற்றுச் சுந்தரரிடம் நட்புப் பூண்டார்.

“ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்”

திருச்சிற்றம்பலம்

---

## ௬௧. திருமூல நாயனார்

### 1. நான்மறை யோகியார்

பிறைத் திங்களை முடித்த பெருமாளார் வீற்றிருக்குங் கைலையிலே, திருக்கோயிலிலே தலைமைதாங்கிய நந்தியெம்பெருமானருள்பெற்ற நான்மறையோகி யொருவரிருந்தார். அவர் அணிமா முதலான எட்டுச் சித்திகளும் பெற்றவர்.

அவர் ஒருமுறை பொதிகை முனிவரைக் கண்டு அளவளாவி மகிழ வழிக்கொண்டார். வழியிலுள்ள திருக்கேதாரம், நேபாளம் முதலான இடங்களிற் சிவனைக் கும்பிட்டார். கங்கையிலே நீராடினார் அவிமுத்தம் (காசி), திருப்பருப்பதம், திருக்காளத்தி, திருவாலங்காடு முதலான நகரங்களைத் தொழுது காஞ்சியிலே திருவேகம்பர் திருவடியை வணங்கினார். திருவதிகை, சிதம்பரம் சென்று சேவித்தார். கடல் சிவனார்க்கு நஞ்சளித்ததென்று வெகுண்டு அதன் வயிற்றை நிரப்பாமல், அப்பெருமானார் மகிழ்ந்துறையும் சோழவளநாட்டைக் காப்பாற்றும் காவிரியைக் கண்டு களித்து அதனுள் முழுகித் திளைத்தார்.

### 2. திருமூலர்—ஆநிரை மேய்த்தார்

திருவாவடுதுறையை அடைந்து பசுபதியாரை வணங்கினார். அந்த நகரத்தின்மீது காதல் மிக, உள்ளத்தை அங்கே நிறுத்தி, அரிதில் அகன்றார் காவிரியின் கரையிலே செல்லும்போது கருத்தையுருக்கும் காட்சியொன்றைக் கண்டார். அந்தணர் வாழும் சாத்தனூர் என்னும் நகரத்திலே இடையனொருவன் மூலனென்றும் பெயருடையவன் இருந்தான். அவன் அவ்வூர் ஆநிரைகளை மேய்ப்பவன்; அவைகளை அன்பாக மேய்த்துக் காப்பான். அவன் அன்று—மேய்க்கவந்த இடத்திலே—காலத்தைக் கழித்துவிட்டான். இறந்துபோன அவனைச் சூழ்ந்து ஆநிரைகள் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தன! அது தான் அவர் கண்டகாட்சி!

அருள் நிறைந்த இடையனைப் பிரிந்து ஆநிரைகள் அலமருதலைக் கண்ட அவர் இரக்கங்கொண்டார்! அவைகளுக்கு அவனிடமிருந்த காதலைக் கண்டு கசிந்தார்! அவனின்றி அவைகள் இரையுந் தீண்டாவென நினைத்து நெகிழ்ந்தார்! துறவியாகையால் அருளினாலே பரிவு கொண்டு, அவைகட்குத் தொண்டுசெயத் துணிந்தார்! யோகியாகையால், அவருடலை ஓரிடத்தில் அரண்செய்து உயிரை அந்த மூலனுடலிற் புகுத்தினார்! இறந்தவர் பிழைத்ததுபோல—உறங்கி யெழுந்தவர்போல—எழுந்தார்! பசுக்கூட்டங்கள் பார்த்தன! நாவினால் நக்கின! மோந்தன! நெருங்கி யுராய்ந்தன! கனைத்தன! அப்பப்பா! அவைகளடைந்த மகிழ்ச்சிக்களவேது? வாலையசைத்துத் துள்ளிக் குதித்தோடி மேய்ந்தன திருமூலராகிய யோகியார் திகைப்பும் மகிழ்ச்சியும் பெற்றார்.

திருமூல நாயனார் அவைகள் சென்று மேயுமிடங்களிலெல்லாம் கூடவே சென்று, நீருட்டி நிழலில் அடையவிட்டு மாலையானதும் அவற்றின்பின் சென்றார். அவைகளை உடையவர் வீடுகளிற் சேர்த்துத் தாம் ஓரிடத்திலே இருந்தார். மூலனுக்குக் காதல் மனைவி யொருத்தி யிருந்தாள். அவள் தன் கணவன் அடைந்த நிலையை அறியாளாகையால் அவரே தன் கணவனென்று நம்பினாள். உடல் ஒன்றும் உயிரும் உணர்வும் வேறுமானால் அவளால் அறிய முடியுமோ? தன் கணவன் ஏதோ கவலையுடன் இருக்கிறானென்றெண்ணி அவரிடம் சென்று கைத்தொட் டழைக்க முற்பட்டாள்.

திருமூலர் அவள் நிலையை ஒருவாறு உணர்ந்தார். பசுக்களின் உள்ளத்தைத் தெளிவிக்க—வருத்தத்தைப் போக்க—முயன்ற அவர் அவளைத் தெளிவிக்க முடியாமல் திகைத்தார். அவள் கணவன் மெய்யுடனிருக்கும் அவர் எப்படி அவளை நம்பச் செய்யமுடியும்? எனினும், அவளுக்கும் அவருக்கும் மாசை விளைவிக்கத்தான் முடியுமோ? ஆகவே, ஒன்றும் விளக்காமல் வீட்டிற்கு வரமுடியாதென்று மட்டும் மறுத்துவிட்டார். மற்றும் அங்கே நிற்

பது தவறென்று நினைத்து அங்கிருந்த திருமடமொன்றிற் புகுந்து யோகத்தி லமர்ந்தார்.

அவள் திகைப்புங் கவலையுங்கொண்டு மடத்திற்புகுந்தாள். அன்றிரவெல்லாம் உறக்கமின்றித் தன் கணவன் ஏன் மறுத்தான் என்று கலங்கிக் கிடந்தாள். கவலைக் கடலால் இரவுக் கடலைக் கடந்தாள். கதிரவன் கீழ்த்திசையிலே கவலையைப் போக்கவந்தான். உறவினரை யடைந்து இடையன் மனைவி யேங்கிக் கதறினாள்; அவர்கள் அவளுடன் திருமூலரை யடைந்து உரையாடினர். அவருடைய உயர்நிலையை யறிந்து, திகைத்தனர். அவர்களிடம், 'உன் கணவர் துறவியாய் விட்டாராகையால் அவரைத் திருப்ப முடியாது,' என்றுரைத்துச் சென்றுவிட்டனர். பித்துப் பிடித்தது கணவனையென் றெண்ணிய பேதை பித்துப் பிடித்தவளாய் மனையகம் புகுந்தாள்.

### 3. உடலெங்கே?

திருமூலர் ஆநிரைகள் வந்தவழியே சென்றார். மறைவினிலே காப்பில் வைத்த தம் உடலைத் தேடினார். காணவில்லை; யோகத்திலமர்ந்து சிந்தித்தார். நிலவு பொழியுந் திருமுடியினரான நீலகண்டரருளிய ஆகமப்பொருளைத் தமிழிலே வகுத்துணர்த்தவேண்டி இறைவரருளிய ஆணையெனத் தெளிந்தார் இனியும், தம்மை வெளிப்படையாக விளக்காமலிருப்பது தகுதியன்றென எண்ணினார். தம்மைத் தொடர்ந்த ஆயருக்குத் தாம் வேறானவரென்பதை விளக்கிக் கூறிவிட்டு, விடைபெற்றுத் திருவாவடுதுறையையே திரும்பவும் சேர்ந்தார்.

### 4. திருமந்திரம்

ஆங்குள்ள திருக்கோயிலை யடைந்து, சிவனடியைப் பணிந்து, திருமதிலுக்கு வெளியே மேலைத்திசையிலுள்ள அரசமரத்தின்கீழ்ச் சிவயோகத்திலமர்ந்தார். அப்போது ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நான்கையும் மலர்விக்கும் திருமந்திரம் என்னும் திருமுறையை மூவா

யிரம் பாக்களாற் பாடியருளினார். ஆண்டொன்றுக்கு ஒன்றாக அப்பாடல்கள் எழுதப்பெற்றன என்று பெரியோர்கள் கூறுவார்கள். பாடி முடிந்த பின்னர் பரமர் வாழுந் திருக்கயிலையை யடைந்தார். சிவனாரடி நீழலிலே இன்புற்றுத் திளைத்தார்.

"நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்"

*திருச்சிற்றம்பலம்*

---

## ௩௨. தண்டியடிகள் நாயனார்

### 1. பண்பு

திருவாரூர்ப் பிறந்தா ரெல்லாருஞ் சிவகணங்களெனப் பெரியோர் செப்புவர். தண்டியடிகள் அத்தகைய திருவாரூரிலே பிறந்த திருவினர். தில்லைக்கூத்தர் மறைச்சிலம்பொலிக்க ஆடுவதை—அத்திருவடியை—உளத்திலே நோக்குந் தவமுடைமையாலே, புறநோக்கை வேண்டார் போலப் பிறவியிலேயே காணுக்கண்ணரா யிருந்தார்.

*தண்டி யடிகள் திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்*
*அண்ட வாணர் மறைபாட ஆடுஞ் செம்பொற் கழல்மனத்துக்*
*கொண்ட கருத்தின் அகநோக்குங் குறிப்பே யன்றிப்புறநோக்கும்*
*கண்ட வுணர்வு துறந்தார்போற் பிறந்த பொழுதே கண்காணார்.*
*(திருத்—தண்டி, க.)*

அகத்திலே அரனாரஞ்செழுத்தையும் மறைச்சிலம்படியையும் நினைவதுடன் நில்லாமற் புறத்திலுஞ் சிவத்தொண்டு செய்யும் பண்பினராயிருந்தார். ஒவ்வொரு நாளும் பூங்கோயிலை யடைந்து புற்றிடங்கொண்ட புண்ணியரைத் தொழுது வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

### 2. திருக்குளத் திருப்பணி—சமணரோடு ஒட்டு

திருக்கோயிலின் மேற்கிலே உள்ள திருப்பொய்கையின் இடமும் ஆழமும் பெருகச் செய்யவேண்டுமென

நினைத்த தண்டியார் குளத்தில் ஒரு தூணும் கரைமேலே ஒரு தூணும் நட்டார். இரண்டிற்கும் இடையே கயிறு கட்டினார். குளத்திலிருக்கும் மண்ணைக் கூடையில் வெட்டிப்போட்டுக் கயிற்றைப் பிடித்துக்கொண்டே வந்து கரையிலே கொட்டுவார். என்னே அவர் திருத்தொண்டின் உறுதி!

இவ்வாறு செய்துவரும் நாட்களிலே, சமணர்கள் அவர் உறுதிக்கு வியந்தாராயினும் அருகிலிருக்குந் தங்கள் இருப்பிடங்கட்கு ஏதாவது இடையூறுண்டாகுமோ என்று நினைத்தனர். அடிகளிடம் வந்து கூறினர்.

"இவ்வாறு மண்ணைக் கல்லுவதால், எறும்பு முதலிய உயிர்கள் இறந்துபடுமே!"

"சிவபிரானார் திருவடித் தொண்டாகிய இதனால் எவ்வுயிர்க்குந் தீங்கு நேராது!"

"நாங்கள் கூறுவது உனக்கேன் விளங்கப்போகிறது? கண்ணைப்போலவே காதும் பயனற்றுப் போயிற்றே? உயிர்களிறக்குமென்பதை உணரவில்லையே!"

"யான் கண்ணுதலார் திருவடியன்றிக் காணேன் என்பது உண்மையே. அவ்வுண்மை உங்களுக்கா விளங்கும்? யான் உயிர்க்கொலை நிகழாதென்றே கூறினேன். போகட்டும்; இப்போது நம் நிலைமாறினால்-என் கண் ஒளிபெற்றும் என்னைப் பழிக்கும் உங்கள் கண் ஒளியிழந்தும் போனால்—என் செய்வீர்கள்?"

"அப்படி நீ கண்பெற்றுவிட்டால், யாங்கள் ஒருவரும் இவ்வூரி லிருக்கமாட்டோம்!"

சமணர்கள் இவ்வாறு கூறிவிட்டு அவர் நட்டிருந்த தூண்களைப் பிடுங்கி யெறிந்தனர். கயிற்றையும் எடுத்துக் கொண்டனர். அடிகள் சினத்துடன் திருமணிவாயிலை அடைந்து முறையிட்டுக் கூறினார் நடந்ததை! வருத்தத்துடன் சென்று தாமிருக்கும மடத்திலே தங்கினார். கவலையுடன் அன்றிரவு கண்துயின்றார்.

கனவிலே கண்ணுதலார் எழுந்தருளினர். 'கவலைப் படாதே! உன்கருத்தை முற்றுவிக்கிறோம். உன் திருத் தொண்டுக் கிடையூறிலாமல் உன் கண்கள் ஒளிபெறச் செய்கிறோம்' என்றருளினர். கண்விழித்த தண்டியார் தண்மைபெற இறைவரை வழுத்தினர். ஆலமுண்ட அண் ணல் அரசன் கனவிலும் எழுந்தருளித், 'தண்டி நமக்குத் திருக்குளப்பணி புரிகின்றான். அதனைச் சமணர்கள் தடுக்கின்றனர். நீ அவன் கருத்தை முற்றுவிப்பாயாக!' என்றருளி மறைந்தார். வேந்தன் விழித்து, வெண்ணிலவு பொழியும் வேணியரை வணங்கி, மெய்சிலிர்க்க வாழ்த் தினன்.

வைகறையிலே அரசன் தண்டியடிகளிடஞ் சென்று கனவைக் கூறிக் கைகுவித்து நடந்ததை வினவினன். அவரும் நடந்ததைக் கூறி இதனை ஒழுங்குற முடித்தல் வேண்டும் என்றார். அரசன் அருகரை அழைத்து வினவ, அவர்களும், 'அவர் கண் பெற்றால் யாங்கள் இவ்வூரைவிட் டகல்கிறோம்,' என ஒப்புக்கொண்டனர்.

## 3. கண் பேறல்

தண்டியடிகள் தாம் மண்ணெடுத்த குளத்திற்கு வந்தார்! அரசனும் அருகரும் வந்தனர்! அவர்கள் கரை யிலே நிற்க அடிகள் குளத்திலே இறங்கி, 'நான் சிவனர்க் கடிமையெனிற் கண்பெறுவேனக!' என ஐந்தெழுத்தையும் எண்ணியவாறே முழுகி யெழுந்தார்! அரனருளாற் கண் ணொளி பெற்றார்! கண்ட அரசன் கைகுவித்து வணங் கினன்! சமணர் கண்ணொளி நீங்கியது! பிற சமயத்தைப் பழிப்பது பாவமன்றே? கண்பெற்ற அடிகள் கண்ணருவி பொழியப் புற்றிடங்கொண்ட புண்ணியரைப் போற்றி வணங்கினர்! அடியவரெலாம் இன்பக் கடலில் முழுகினர்! சமணர் ஒப்பந்தப்படி வெளியேறினர்! தண்டியடிகள் தாம் தொடங்கிய திருப்பணியைக் குறைவற முடித்தார். அரசன் அவரடி பணிந்து வேண்டும் வகையிலே துணை புரிந்தான்!

இறைவ ரஞ்செழுத்தோதித் திருத்தொண்டு புரிந்து வாழ்ந்த தண்டியடிகள் இறுதியில் இறுதியிலாப் பேரின்ப நிலையை யெய்திச் சிவனாரடி நீழலில் வாழ்ந்தார்.

"நாட்டமிகு தண்டிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௩௩. மூர்க்க நாயனர்

### 1. பண்பு

சான்றோர் நிறைந்த தொண்டைவள நாட்டிலே, பாலாற்றின் வடக்கிலே திருவேற்காடு என்றொரு திருநகரம் உள்ளது. அந்நகரில் அமரர்களுக் கமுதமளித்துத் தாம் மட்டும் நஞ்சமுண்ட வள்ளலார்க் கடிமைபூண்ட வேளாளர் ஒருவரிருந்தார். அவர் அறிவு பெற்ற நாள் முதலாக வெண்ணீறணிந்த விமலரடியாரைத் தேடி அறுசுவை யுண்டி யளிப்பார்! அவர் வேண்டுவனவெல்லாம் விருப்புட னளிப்பார்! பிறகே, உணவு உண்பார்!

### 2. வறுமை—நற்சூதர்—மூர்க்கர்

இவருடைய விருந்தோம்பலால் அடியார் வரவு பெருகியது. ஆனால், அவர்கட்குதவும் பொருள் வரவு குறுகியது. பொருள் வரவு குறுகினும் பணி குறுகாமல் முன்னினும் பெருகியது; ஆர்வமும் பெருகியது; வறுமையும் பெருகியது. ஆகவே, அசையும் பொருளும் அசையாப் பொருளுமாக இருந்த அனைத்தையும் அசைத்துப் பிறர்க் காக்கிப் பொருள் பெற்றுத் தொண்டு செய்தார். அவைகளும் ஆயின பிறகுதான் அயர்ந்தார்! 'பணி செய்து கிடக்கும்' பண்புடைய வாழ்வுபெற எவ்வழி யேற்கலாமென இருந்திருந்து ஆராய்ந்து பார்த்தார் அவர்.

அவரிடம் இளமைப் பழக்கமான ஒரேயொரு வழிதான் இருந்தது. அதுதான் இப்போது துணையாயிற்று.

சூதாடிப் பொருள் பெற்றுத் தொண்டு செய்தலே துணி வாகக் கொண்டார். சூதிலே, முதலில் எதிரிக்கு விட்டுக் கொடுத்துப் பின் ஆட்டமெல்லாம் இவரே வெற்றி பெறு வார்! ஒழுங்காகவே சூதாடுவார்! பொய்ச் சூதாடமாட் டார்! ஆகையால், நற்சூதரெனப் பெயர் பெற்றார். சூதாட் டத்திலே பொய்யாக எவராவது ஆடினால் சுரிகையாற் குத்திவிடுவார்! எனவே, மூர்க்கரெனவும் பெயர் பெற்றார்! நாமும் மூர்க்கரெனவே மொழிவோம்.

மூர்க்க நாயனார் சூதில் வரும் பொருளைத் தாம் தொடவும் மாட்டார்! உணவு சமைப்போரிடம் அளித்துச் சிவனடியார்க் குணவுபடைக்கச் செய்வார்! இறுதிப் பந்தியிலே தாமும் ஒருவராக அமர்ந்துண்பார்.

திருவேற்காட்டிலும் அயல் நகர்களிலும் அவரோடு பொருவாரில்லாமற் போகவே, தென்னாடு நோக்கிச் சென்று, பல திருப்பதிகளையும் பணிந்தவாறு தம் தொண் டையும் நடத்திக்கொண்டு, குடமூக்கு (கும்பகோணம்) சென்று தங்கி, முன்போலத் தொண்டு செய்தார். இறுதி யிலே, இவ்வுலகைவிட்டுச் சிவனடி நீழலிலே சென்று தங்கி இன்புற்றார்.

"மூர்க்கர்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௩௪. சோமாசிமாற நாயனார்

சோழநாட்டிலே திருவம்பர் என்னும் நகரிலே சோமாசி மாறர் என்பவரொருவரிருந்தார். அவர் தூய அந்தணர். முப்புரமெரித்த அப்பரின் அடியவர் யாவராயினும் அவரே உயர்ந்தவரென்னும் உண்மை நெறியாளர். ஐந்தெழுத்தின் புணைகொண்டே அரும்பிறவிக் கடல் கடக்கும் ஆற்றலார் அவர். வேள்வியெல்லாம் விரிசடையார் மென்மலர்த்தாள்

கருதியே இயற்றுவார். வாழ்வதே மங்கைபங்கர் மலர்த் தாள் வழுத்தற்கென்னும் மனப் பண்புடையார்.

அவர் வன்றொண்டரான சுந்தரர் காலத்தவர். அவர் திருவடியைப் போற்றத் திருவாரூர்க்கே சென்று குடி கொண்டார். தம்பிரான் தோழர் நட்பைப் பெற்று, அவ ரடியைப் போற்றியிருந்து புள்ளித்தோலாடை யரனார் புனித மலரடி நீழலிற் பொருந்தினார்.

"அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்"

சுந்தரர் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்.

---

## எ. வார்கொண்ட சருக்கம்

### ௫௫. சாக்கிய நாயனார்

திருச்சங்கமங்கையிலே வேளாள ரொருவர் இருந்தார். அவர் எல்லா உயிர்களிடமும் அருளுடையவர். நன்னெறியிலே நிற்பவர். அவருக்குப் பிறவித் துன்பத்தை யொழிக்கும் ஆவலுண்டாகியது. அதற்குரிய நெறியை அறியக் காஞ்சியை அடைந்தார். சாக்கியர்களுடன் பழகி அந்நெறி நூல்களை யாராய்ந்தார். மற்றும் பல நெறி நூல்களையும் ஆராய்ந்தார். அவற்றின் பொருள் தெளிவாக இல்லாமை யறிந்தார். பிறகு, சைவசமய நூல்களைப் படித்தார். சிவனருளால் வினையும், வினை செய்வோனும்; வினைப்பயனும், வினையை ஊட்டுவோனும் என்னும நாற்பொருளையும் விளக்கும் சைவசமயமே சிறந்ததெனத் தெளிந்தார்.

செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுஞ் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்.
(திருத்-சாக்கிய, ௫.)

மேலும், எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும் அந்திவண்ணர் செந்தாமரைத்தாளே சிந்திப்பே னெனக் கொண்டார். முதலிலே சாக்கிய நெறியில் நுழைந்து அந்நெறியாளர் கோலத்தையே கொண்டிருந்தாராகையால், அக்கோலத்தை விடாமல், அகத்திலே மட்டும் அந்நெறியை விட்டுச் சிவநெறியை மேற்கொண்டார்.

அவருள்ளத்திலே சிவலிங்கவுருவம் செம்மையாய்ப் படிந்தது. ஐந்தெழுத்தோதி அன்பு மலரிட்டு அகத்திலிருக்கும் அவ்விலிங்கத்தை அடலாரறியாமல் வழிபட்டார். மேலும், சிவலிங்கத்தைப் புறத்தினுங் கண்டபிறகே உண்ண விரும்பினார். ஒருநாள் ஒரு , சிவலிங்கத்தைக்

கண்டபோது, காதல் பொங்கக் கண்ணீர் ததும்பச் செய்வது தவறெனத் தெரியாராய் ஒரு கல்லையெடுத்து அதன்மேலன்பு மலரிடுவதுபோல—உள்ளத்தூறிய அன்பு உறுதி வடிவு பெற்று வெளிவர அதனைச் சிவனார்க் கிடுவதுபோல—எறிந்தார். வெள்ளிடையிலிருந்த அவ் விலிங்கத்தைக் கல்லால வழிபட்டு வீடுசென்று உணவுகொண்டார். அன்பினாலிடுவது துன்பமோ செய்யும்? மேலும் தம் குழந்தைகள் வன்மையே புரிந்தாலும் இன்பமாகவே கொள்ளுதல் பெற்றோர் இயல்பன்றோ?

மறுநாளும் அந்தச் சிவலிங்கத்தைக் கண்டபோது, முதல்நாள் செய்தது நினைவுக்கு வர, 'அச்செயல் சிவனாரருளாலேதான் நிகழ்ந்திருக்கவேண்டும்; இன்றும், இனி என்றும் அச்செயலே செய்வேன்,' எனக்கொண்டு, அன்றும் ஒரு கல் மலரெடுத்து எறிந்து வழிபட்டுச் சென்றார். சிவனாரடியார் பலர்; அவர்கள் செய்யுந் திறனும் பல. ஆனால், அவை யாவும் சிவனாரடியே சிந்தனையாகக்கொண்டவை ஆகையால், அவற்றை அரனாரேற்று அருள்புரிகின்றார்.

ஒருநாள், அரனாரருள் கூடுதலாலே, மறந்து உண்ண அமர்ந்தவர், நினைவுகொண்டு, பொங்குங் காதலுடன் எழுந்தோடிப் புறம்போந்து சிவலிங்கத்தை யடைந்தார். அவருள்ளமும் செயலும் படபடத்தன. அன்பு பெருகியது. கல்லொன்றை யெடுத்துக் கைந்நடுங்க மெய்சிலிர்க்கக் கண்ணீர் பெருகக் கைகுவித்தெறிந்தார். விடையேறும் பெருமானார் மங்கை பங்குடன் வெளிப்பட்டுக் கனிவுடன் நோக்கியருளினார். சாக்கிய நாயனார் கைகுவித்தவாறே கண்டு மகிழ்ந்து விழுந்து பணிந்தார். சிவனார் தமது திருவடிநீழலை யளித்தருளினார்.

காமனெறிந்த மலரை வெறுத்துக் கண்ணாலெரித்த கங்கை வேணியர், சாக்கியர் எறிந்த கல்லை விரும்பி

யேற்றுக் கழலிணையளித்தது அன்பை விரும்புவதே அவருடைய அருள்நோக்கமென அறிவிக்கிறது.

"வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## கூசு. சிறப்புலி நாயனார்

பொன்கொழிக்கும் பொன்னிவள நாட்டிலே, தன்னை அடைந்த வறியவரைத் திருவாளராக்கும் ஊர் திருவாக்கூர். அது சண்பைப் பிள்ளையாரின் திருவாக்கைப் பெற்ற அந்தணர்கள் நிறைந்த நெடுநகர். அந்நகரிலே மறை முழக்கமும் பறை முழக்கமும் மாறுபட்டொலிக்கும். அகிற்புகையும் வேள்விப்புகையும் அளவளாவிப் பரவும். அந்நகரிலே வாழ்ந்த சிறப்புலியார் அந்தணர் மரபினர்; நற்பண்புகளாலே புகழ்பெற்றவர்; நம்பரடியார்க்கு நல்லுணவு படைப்பதும், வேண்டும் பொருளை நயந்து கொடுப்பதும் தம் பணியாகக் கொண்டவர். அவர் செய்யும் வேள்வி அரனார்க்காகியதே. அவர் கூறும் மொழி அரனார் ஐந்தெழுத்தே.

இந் நிலையிலே வழுவாமலிருந்து விரிமலர்க்கொன்றை வேணியார் மென்மலர்த்தாள் மேவினார்.

"சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௭. சிறுத்தொண்ட நாயனார்

### 1. படைத்தலைவர்—வாதாபி வெற்றி

காவேரித் திருநாட்டிலே சிவனார் மகிழ்ந்தருளுமிடங்களிற் செங்காட்டங்குடியும் ஒன்றாகும். அங்கிருக்குந் திருக்கோயிலுக்குக் கணபதீச்சரம் என்று பெயர். அந்நகரிலே மாமாத்திரர் குலத்திலே பரஞ்சோதியா ரென்பவர் பரமனாரடித் தொண்டிலே பதிந்த உளத்தவராயிருந்தார். மருத்துவக்கலை, வடநூற்கலை முதலிய அறிவுக் கலைகளேயன்றிப் படைக்கலைகளையும் நன்கு பயின்றார். யானையை நடத்திப் போர்புரிவதி லிணையற்றவர். குதிரைவீரர். கல்லெனத் திரண்டு விரிந்த மார்பர். இவர் பல்லவன் படைத்தலைவராயும் இருந்தார.

ஒருமுறை அரசனுக்காக வடநாட்டின்மேற் போர்க்குச் சென்று, வாதாபியைத் துகளாக்கிப் பல்வகைப் பொருட் குவைகளையும, களிறுகளையும், பரிக்கூட்டத்தையும் கொண்டுவந்தார்.

மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்.
(திருத்—சிறுத். ௬)

அரசன் அவர் போர்த்திறமையை அவையிலே புகழ்ந்து கூறினான். அவன் அடைந்த வியப்பைக் கண்ட அமைச்சர்கள், 'பரஞ்சோதியார் சிவனாரடியிலே சேர்ந்த உள்ளததினர்; அவர் திருவடித்தொண்டு சேர்ந்த செயலினர். ஆகையால், அவரை வெல்வது எவராலும் இயலாதது?' என்றனர்.

அரசன் வியப்பு நீங்கி நடுக்கமடைந்தான். 'அந்தோ! அறியாமற் கெட்டேன். காமனை யெரித்த கண்ணுதலார் அடியாரைப் போர் முனையிலே செலுத்தியது பெருந்தவறு. ஏதாவது இவருக்குத் தீங்குநேர்ந்தால் என்

ஆகும்?' என்று அஞ்சிக் கூறினன். தன் படைத்தலைவர்—தன்கீழ் வேலையாளர்—என்றெண்ணாமல் அவரை வணங்கி, 'எம்பெருமானே! இதனைப் பொறுத்தருளவேண்டும்,' என்று வேண்டிக்கொண்டான்.

பரஞ்சோதியார் தாமும் இறைஞ்சி, 'அரசே! என் உரிமைத்தொழிலை அடியேன் செய்கிறேன். இதனால் என்ன தீங்காகும்?' என்று பணிவுடன் பகர்ந்தார்.

அரசன் அம்மொழியொன்றையும் ஏலாமல், நிறைந்த பொருட்குவைகளையும், முற்றாட்டாக நிலபுலன்களையும் அளித்து, அஞ்சலிசெய்து, 'தங்கள் நிலைமையை எளியேன் அறியாமலே இதுவரையிற் பணிசெய்தீர்கள். இனி என் மனக்கருத்தாக இசைந்து தங்கள் மெய்ம்மைத் திருத்தொண்டு புரிந்துகொண்டு, விரும்பியவாறு ஒழுகுவீர்களாக!' என்று விடைகொடுத்தான்.

## 2. சிறுத்தொண்டர்

அரசனிடம் விடைபெற்ற பரஞ்சோதியார் தம் நகரை அடைந்தார்; கணபதீச்சரத்திறைவர் கழலிணை போற்றினார். முன்போலவே தம் சிவப்பணியிலே தலைநின்றார். அவர் வாழ்க்கைத் துணைவியாராக நற்குடி மங்கையரான திருவெண்காட்டு நங்கையார் அமைந்தது தெய்வத் திருவருளாயிற்று. 'காதல் இருவர் கருத்தொருமித்து'ச் செய்யும் இல்லறம் நல்லறமாக விளங்கியதில் வியப்பில்லை.

கொன்றையணிந்த பெருமானாரடியாரை நாடோறும் அழைத்துவந்து முன்னூட்டிப் பின்னுண்ணும் நிலைமையை மேற்கொண்டார். தூய திருவமுதும், இனிக்கும் சுவைக் கறிகளும், நெய் பால் தயிர்களும், இனிய பண்ணியங்களும் ஆக இவர் ஊட்டும் இனிய விருந்தையுண்டு சிவனடியார் சிந்தை மகிழ்ந்தனர். இவ்வாறு இறைவரடியார்முன் அவர்களைப் பெருமைபடுத்தி மிகவும் தாழ்மையுடன் சிறுமையாளர் போலவும் நடந்துகொண்டதனால் எல்லோரும் அவரைச் சிறுத்தொண்டரெனச் செப்புவாராயினர்.

சீதமதி அரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபாட்டால்
மேதகையா ரவர்முன்பு மிகச்சிறிய ராயடைந்தார்
ஆதலினாற் சிறுத்தொண்ட ரெனநிகழ்ந்தா ரவனியின்மேல்.
(திருத்.—சிறுத்.—கரு.)

ஆனால், அவருடைய பெருந்தொண்டை வியவாதாரில்லை.

## 3. சீராளர்

இவ்வாறு இவர்கள் வாழ்ந்துவரும் நாளிலே இறைவரருளாலே இவருடைய சிவத்தொண்டும் நற்பண்புகளும் ஒரு வடிவானதுபோலத் திருமகனார் பிறந்தார். அப்போது அவர்களடைந்த மகிழ்ச்சியை அளவிடல் ஒவ்வாது. சுற்றத்தாரோடு மற்றோரையும் வரவழைத்து விழாக்கொண்டாடி விருந்தளித்தார். கணபதீச்சரத்திற் கண்ணுதலாரை வழிபட்டுப் பெருவிழா நடத்தினார். வறியருக்குப் பொருளை வாரிவாரி வழங்கினார். சீராளரெனச் செல்வமகனார்க்குச் சீரான திருப்பெயரிட்டார்.

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து மூவாண்டு நிரம்பியதும் மயிர்வினை மங்கலஞ் செய்து, பள்ளியில் விட்டனர்.

## 4. ஆளுடைய பிள்ளையார் நட்பு

அந்நாளிலே சண்பையாளி யெழுந்தருளினார். பரஞ்சோதியார் எதிர்கொண்டு வணங்கி அழைத்துச் சென்று கணபதீச்சரம் பணிவித்து விருந்தளித்து வழிபட்டார். திருஞானசம்பந்தரும் அவரன்பிலே கட்டுப்பட்டு நட்புடையவராய்த் தம் திருப்பதிகத்திலே அவர் திருத்தொண்டைச் சிறப்பித்துப் பாடி அரிதில் விடைபெற்றுச் சென்றார்.

## 5. வயிரவர்

இவருடைய பெருமைபெற்ற திருத்தொண்டை நானிலமும் அறியச்செய்ய முக்கண்ணனார் எண்ணினார். வயிரவராக—வடநாட்டுக் கபாலியராக—எழுந்தருளினார். அவர் கொண்ட கோலத்தைக் கூறுவது எப்படி?

கொன்றையணிந்த செஞ்சடை கரும் பம்பையாக மாறியது. கருமேகம்போல்—அதன் சுருள்போல்—நீண்ட தலைமயிர் சுருண்டு இருண்டு தாறுபோ லடர்ந்து கற்றை யாகப் பரவியிருந்தது! அஞ்சனத்தை நீராட்டியது போன்ற பம்பையினிடையே மஞ்சிடையொளிரும் மின் னொளிபோல—வான் மீன் பரப்புப்போல—வெள்ளிய தும்பைமலர்கள் தோன்றின! முடியிலிருந்த அந்திவான் பிறையை இன்னுஞ் சிறுபிறையாக்கி யெடுத்துச் சாத்தி யதுபோலப் பவழவொளியை விரிக்கும் நெற்றியிலே திரு நீற்றுப் பொட்டுத் திகழ்ந்தது! கதிரவனும் திங்களும் தீயும் ஒன்றுசேர்ந்தாற்போல மாணிக்கக் குழைச்சங்கை வளைத்து, அதனுட் செவ்வரத்தமலரைச் சேர்த்த காதணி விளங்கியது! கழுத்திலே உள்ள நஞ்சின் கறையை மறைக்கக் கடலிலிருந்தெழுந்த அமுதக் குமிழிகளைக் கோவையாகத் தொடுத்தணிந்ததைப் போலப் பளிங்கு வடம் காண்போர் உயிரும் உளமுங் கரையும்படி காணப் பெற்றது மாலைச் செங்கதிரின் சிவந்த ஒளியை இருள் படர்ந்து சூழ்வதுபோலப் பவழத்திருமேனியை யானை யுரிக் கஞ்சுகம் போர்த்திருந்தது! அன்பர்களின் அன்பு விளைந்ததைப்போலச் சங்குமணியாலே சன்னவீரம், ஆரம் வடம், கையணி, தோள்வளை, சரி, அரைநாண், காற்சரி கள் ஒளிதழைக்க அணியப்பெற்றிருந்தன 'திருவடியிலே தொண்டர்களை வந்து பணிமின்! துயராறுமின்!' என்று மறை யழைப்பதுபோலச் சிலம்பொலி செய்தது. அயன் கபாலத்தை யேந்திய இடக்கை ஒரு முத்தலைச் சூலத்தைத் தோளிலே அணைத்திருந்தது! வலக்கை ஒரு தமருகத்தை யேந்தியிருந்தது இத்தகைய கோலத்துடன் செங்காட் டங்குடிசெய்த புண்ணியத்தினால் அத்தெருவிலே தம் திரு வடித் தாமரைகளை எடுத்துவைத்து வந்தார்.

## 6. கணபதீச்சரத்தி லிருப்பேன்

சிறுத்தொண்டர் மனையெங்கே யென்று வினவி யறிந்து, தடுக்கவியலாத பசியுடையார்போல விரைந்து வந்தார். 'உணவளிக்குஞ் சிறுத்தொண்டர் மனைக்குள்

உளரோ?' என வினவினார்! சந்தனநங்கையெனும் பணிப் பெண்ணார் ஓடிவந்து வணங்கி, 'அடியாரைத் தேடிப் புறத்தே போயிருக்கிறார்கள். தாங்கள் உள்ளே எழுந் தருளுங்கள்,' என்று பணிவுடன் வேண்டினார்.

'பெண்களிருக்கு மிடத்திலே தனியே புகுதமாட் டோம்.' இம்மொழிகேட்ட, உள்ளிருந்த திருவெண்காட்டு நங்கையார், 'அந்தோ! இவரும் அகன்று விடுவாரோ!' என அஞ்சி ஓடிவந்து பணிந்து, 'எம்பெருமானே, அம்பலத்தவ ரடியாருக் கமுதுசெய்வித்தல்லது உண்ணார். இன்று, ஏனோ இதுவரையில் ஒருவரும் கிடைத்திலர். ஆகையால், தேடிப்போயினார். தங்கள் திருவுருவைக் கண்டால் மிகப் பெரும்பேறென மகிழ்வார் இனி எங்கும் தாழாமல் வந்துவிடுவார். அருள்கூர்ந்து இம் மனையிலே எழுந்தருளி யிருங்கள்,' என்று வேண்டிக்கொண்டார்.

'ஒப்பில்லாத இல்லறத்தோர்களே! நாம் வடதிசையி லிருந்து வருகின்றோம். எல்லையற்ற புகழையுடைய சிறுத் தொண்டரைக் காணவே வந்தோம். எப்படியும் அவரின்றித் தனியே இங்கிரோம். கணபதீச்சரத்திலே ஆத்திமரத் தின்கீழ் இருக்கிறோம். அவர் வந்தால் அடையாளங் கூறுங்கள்,' என்று கூறி, இறைவர் போயினார்.

அவர் சென்றவுடனே சிறுத்தொண்டர் அடியாரைக் காணப்பெறாத கவலையுடன் மனையிற் புகுந்தார். மனைவியார வயிரவக்கோலத்தவர் இருப்பதை இயம்பினார். 'குருடன் கண் பெற்றதைப்போல, உய்ந்தேன்,' என்று ஓடிக் கபாலியாரைக் கண்டு பணிந்து கைகூப்பிநின்றார்.

அவரைப் பார்த்தார் அந்திவண்ணத்தார்.

“நீர்தாமோ பெரிய சிறுத்தொண்டர்?”

“திருநீறணிந்த செல்வர்முன் சொல்லத்தகாதவனே நான். எனினும், இறைவரடியார் அருள்கூர்ந்து அப்படித் தான் அழைப்பார்கள் என்னை. குற்றமற்ற அடியாரைத்

தேடியலைந்தேன். எளியேன் காதலுக்கு ஏற்றவண்ணம் ஒருவரையுங் காணேன். இப்போது தவத்தின் பயனாலே தங்களைக் கண்டேன். அடியேன் மனையி லெழுந்தருளி அமுது செய்தருளலவேண்டும்."

"தவத்திற்சிறந்த உம்மைக் காணவே வடதிசையி லிருந்து வந்தோம். எம்மைக் களிப்புடன் உண்பிக்க உம்மால் இயலாது. அச்செயல் அரியது!"

"அடியேன் சிந்தனையின்றிக் கூறமாட்டேன். தாங்கள் அமுதுசெய்யும் இயல்பை இயம்புங்கள். விரைவில அமைக்கிறேன். பிறையணிந்த பேரருளாளர் அடியவர்க்கு விருந்தளிக்க விரும்பினாற் கிடையாதனவுங் கிடைக்கும்."

## 7. கபாலவயிரவரின் உணவு

வயிரவக் கோலத்தார் மொழிந்தார்:

"தொண்டரிற் சிறந்தவரே! யாம் ஆறு திங்களுக்கொருமுறை ஒரு பசுவை உண்பது வழக்கம். அக்காலம் இன்றுதான் வந்தது. ஆகையாலேதான் உம்மால் இயலாது என்றோம."

சிறுத்தொண்டர் முகம் சிறிதும் மாறவில்லை.

"மிகவும் நன்று என்னிடம் மூவகை ஆநிரைகளும் உள்ளன. தாங்கள் வந்து எதைக் காட்டினாலும் அடியேன் அதனைக் கடிதிலே முடித்துக் காலந் தப்பாமல் உணவு படைப்பேன்"

பொய்க்கோலத்தார் நகைத்தார்.

"உமக்குப் பழக்கமில்லை இவ்வுணவு படைப்பதில் என்பது நன்றாகத் தெரிகிறதே! பசு என்றால் பசுவென்னும் விலங்கைத்தானா குறிக்கும்? வேள்விப் பசு எனறால் ஆடு, பசு, மக்கள் என்னும் எப்பொருளையுங் குறிப்பதில்லையா? நாம் இங்கே குறித்த பசுவும் அம்மாதிரியே ஒரு மக்கட் பிறவியையே குறிக்கின்றது. நாம் உண்பது

ஐந்தாண்டினுள்ள பிள்ளை; உறுப்புக் குறைவில்லாதது! அப்பிள்ளையைப் பக்குவம செய்யுமுறையைக் கூறுவது புண்ணிற் கோலிட்டாற் போலிருக்கும்!"

சிறுதொண்டர் கலங்கவில்லை.

"நீங்கள் கூறும் இஃது அருமையானதில்லை. மேலும் கூறுங்கள்."

"அங்ஙனமானாற் கூறுகிறேன். கலங்காமல் கேளும். ஒரு குடிக்கொரு சிறுவனாக இருக்கவேண்டும தாய் பிடிக்கத் தந்தை மனமுவந்து அரிந்து சமைத்தல் வேண்டும். அத்தகைய உணவையே யாம் உண்போம்."

சிறுத்தொண்டர் அவரைப் பணிந்து, "இதுவும் எனக்கு அரியதன்று! தாங்கள் அமுது செய்யும் பேறொன்றே வேண்டும!" என்று கூறி, அவர் இசைவைப் பெற்று மனைக்குச் சென்றார். மனைவியார் தம் கணவர் முகமலர்ச்சியுடன் வருவதைக் கண்டு வணங்கித், "தவத்தோர் என்ன கூறினார்?" என்று வினவினார்.

"அவர் அமுதுசெய்ய இசைந்தார். குடிக்கொரு சிறுவனாகவும், ஐந்து வயதுடையவனாகவும், உறுப்புக் குறைவில்லாதவனாகவும் உள்ளவனைத் தாய் பற்றத் தந்தையரிந்து சமைத்தால் உண்பார்."

மனைவியார் திகைத்தார். "அப்படிப்பட்ட குழந்தை எப்படிக் கிடைப்பான்?"

சிறுத்தொண்டர் நகைத்தார்.

"என்ன இயம்புகிறாய்? அத்தகைய மகனை எவர்தாம் பொருள் பெற்றுக்கொண்டு விற்பார்கள்? மேலும் அவர்களே அரிந்து கொடுப்பதற் கிசைவரோ? நமக்கு இறைவரளித்த சிறுவனிருக்கும்போது கலக்கமேன்? அவனையழைப்போம்!"

பெற்ற அன்னையாரும் முற்றும் ஒப்பினார்! ஐந்தாண்டுடைய தங்கள் திருமகனாரைச்—சீராளரைப்—பள்ளியிலிருந் தழைத்துவந்து, எழுதவுங் கை நடுக்கும்—உலகிய

னாக் கப்பாற்பட்ட—செயற்கரிய செயலைச்—செய்து உண வாகப் பக்குவஞ் செய்தனர் செய்து முடித்தபின் சிறுத் தொண்டர் கணபதீச்சரமடைந்து ஆத்திமர நிழலிலிருக் கும் அடியாரை வணங்கினார்.

"அடியேனில்லத்திற்கு வந்து அமுது செய்தல் வேண்டும். என்னால், காலந்தாழ்த்தது. பசித்திருக்கச் செய்துவிட்டேன். எனினும், தங்கள் விருப்பப்படி செய்துவைத்தேன்."

ஆலமுண்ட கண்டத்தை மறைத்துவந்த இறைவனார், "நன்று; செல்க" என்று பின்தொடர்ந்தார். சிறுத் தொண்டர் தம் மனைக்குள் அழைத்துச் சென்று, வறியன் செல்வம் பெற்றதைப் போன்ற மகிழ்வுடன் திருவடிகளை விளக்கி மலரிட்டு வணங்கினார். அடி கழுவிய நீரைத் தம்மேலும் மனைவியார்மேலும் தெளித்துக்கொண்டு உள்ளுக்குக் கொண்டார். வீடெங்குந் தெளித்தார்.

பிறகு, அவரைப் பீடமொன்றில் அமர்வித்தார். மனைவியாரும், கணவரும் "உணவு படைக்கும் முறை யெப்படி?" என, "எல்லாக் கறிகளையும் ஒருங்கே படைத் தல்வேண்டும்" என்றார் அடியவர் உடனே, அம்மையார், உண்கலங்களைத் தூய்மைசெய்து, செந்நெல்லரிசிச் சோற் றுடன் கறிகளையெல்லாம் படைத்து, ஒரு பீடத்தின்மேலே பாவாடை விரித்து, அதன்மேற் கலங்களைக் கொண்டு வந்து வைத்துத் தம் கணவரிடம் தெரிவித்துக் கொண்டார். அவர் வயிரவக் கோலத்தாரை அங்கெழுந் தருள வேண்டினார். அவர் வந்து, படைத்திருக்குங் கறிகளை நோக்கி, "உறுப்புக்கள் எல்லாவற்றையும் படைத் தீர்களோ?" என வினவினார்.

திருவெண்காட்டு நங்கையார், "தலையிறைச்சி அமு துக்காகாதென்று நீக்கினேன்," என்றார்.

இறைவர், "அதனையும் நாம் உண்போம்," என்றார்.

திருவெண்காட்டு நங்கையார் திகைத்தார். உடனே சந்தனநங்கையார், "அடியேன் சமைத்து வைத்துள்ளேன்.

இதோ கொண்டுவருகிறேன்," என்று கொண்டுவந்து கொடுத்தார். அதனையும் வாங்கி மகிழ்வுடன் படைத்தனர்.

சிறுத்தொண்டர், "உண்டருள்க!" என்று வணங்கினார். எல்லாமவல்ல இறைவர், "யாம தனியே உண்ண மாட்டோம். பரமரடியார் யாரையாவது அழைத்து வருக!" என்றார்.

பரஞ்சோதியார் கலங்கினார். திருவமுது செய்ய இது வேறு இடையூறாயிற்றே என்று சிந்தனையுடன் வெளியே சென்று தேடிக் காணாமல் திரும்பிவந்தார். பரமனார் அவரைப் பார்த்து, "யாராவது சிவனடியாராக இருத்தல் வேண்டும். ஒருவருமிலரேல் நீரே சிவனடியாராகையால் உடனிருந் துண்ணலாம்," என்றார். மேலும், திருவெண்காட்டு நங்கையாரை நோக்கி, "மற்றொரு கலத்திலே உணவும் கறியும் படையுங்கள்," என்றார். அவரும் படைத்தார்.

## 8 சீராளா! வாராய்!

சிறுத்தொண்டர் உணவின்முன் அமர்ந்து, தாமுண்டாலன்றி அடியாருண்ணா ரென்னும் நினைவாற் கையாலுணவைத் தொட்டார். என்னென்பது?

"உண்ணுதீர! என்ன அவசரம்? நாம் ஆறு திங்களாக உணவின்றி யிருக்கிறோம். அன்றாட முண்ணும் உமக்குப் பசி பொறுக்கவில்லையோ? நன்று! நம்முடன் உண்ண உமக்கு மகனிருந்தால் அழையும்!"

சிறுத்தொண்டர் மீண்டும் சிந்தை கலங்கினார். கலக்கத்தை வெளிக்காட்டாமல், "அவன் இப்போது உதவான்," என்றார். எனினும், இறைவர் விடவில்லை.

"அவன் வந்தாலன்றி உண்ணமாட்டோம். தேடியழைத்து வருக!"

விரைந்தெழுந்தார் சிறுத்தொண்டர். மனைவியாருடன் வாயிலுக்கு வந்தார். செய்வதறியாமல் திகைத்தனர். அவரையும் அறியாமல் அவர் வாய், "மைந்தா! வருக!"

எனக் கூவியழைத்தது! அன்னையாரும், "செய்ய மணியே! சீராளா! வாராய்! சிவனடியார் நாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்! வருக! மகனே வருக!" என்று ஓலமிட்டார்.

என்ன வியப்பு! சீராளர் பள்ளியிலிருந்து ஓடிவருவார்போல வந்தார். திகைப்பையும் மகிழ்வையும் வெளிக்காட்டாமல், அன்னையார் அன்புடன் எடுத்தணைத்துத் தம் கணவரிடங் கொடுத்தார்.

## 9 சிவனைக் கண்டார்

சிறுத்தொண்டர் சிந்தையில், 'அடியார் உண்ணும் பேறு பெற்றோம்,' என்னும் களிப்புமிகுந்தார். செவ்வப் புதல்வரை அழைத்துக்கொண்டு உள்ளேவந்தார். கபால வயிரவரைக் கண்டிலர்! திகைத்து வீழ்ந்தார்! தெளிந்து உணவை நோக்கினார் கறிகளில்லை! அச்சங் கொண்டார். 'சிவந்தமேனியுங் கரும் பம்பைத் தலையையுமுடைய வயிரவரெங்கே ஒளித்தார்?' எனக் கலங்கித் தேடினார். வெளியே வந்தார் மனைவியாருடனும் மகனுடனும்.

ஒப்பற்ற வெள்ளிடைமேல் உமையம்மையாரும் வடிவேற் குழந்தைப் பெருமானுந் தாமுமாக மலைவில்லார் எழுந்தருளினார் விசும்பிலே! பூதகணத் தலைவர், அமரர், முனிவர், விஞ்சையரெல்லோரும் புடைசூழக் காணப் பெற்ற பரஞ்சோதியைப் பரஞ்சோதியாரும் மனைவியாரும் மகனுங் கண்டு, நெக்குருகிக் கைகுவித்துக் கண்ணீர் வடிய விழுந்து வணங்கினர். எழுந்து வாழ்த்தினர்.

கொன்றைச்சடையார் அவர்களைத் தாதியாராகிய சந்தனநங்கையாருடன் தம் திருவடி நிழலிலே என்றும் பிரியாமல் வாழும் பேற்றை யருளி உடனழைத்துச் சென்றருளினார். வாளால் மகவரிந் தூட்டிய வல்லாளர் வாழ்க!

**"செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்"**

திருச்சிற்றம்பலம்

---

# ௩௮. சேரமான்பெருமாள் நாயனார்

## 1. தோண்டர்

செல்வமிக்க சேரநாட்டிலே தலைநகராய்ச் சிறப்புற்றது கொடுங்கோளூர். அது பாலியிலே பயின்ற பழம் பெருமை வாய்ந்தது திருவஞ்சைக்களம் என்னுந் திருக்கோயிலை யுடையது! காலையிலெழுந்தாற் பல கலைகளைப் பயிலு மொலிகேட்கும்! களிற்றுக் கன்றுகளைப் பழக்குமொலி கேட்கும்! பொழில்களிற் பயிலும் சுரும்புகளினொலி கேட்கும்! பரிகளைச் செலுத்துமொலி கேட்கும்! வீணை, விபஞ்சி, யாழ், குழல் முதலியவற்றினொலி கேட்கும்! பாட லொலி கேட்கும்! ஆடலொலி கேட்கும்!

மனைகளெங்கும் மகிழ்ச்சி வழியும் அறச்சாலைகளில் உணவு வழியும். மடங்களெங்கும் சைவம் வழியும். எங்கும் செல்வம் வழியும். கோதையென்று சேரர்க்குப் பெயர். மகோதையென்று அந்நகர்க்குப் பெயர்.

அத்தகைய மகோதையிலே, அறியாமை, வறுமைகளை அறவே போக்கிச் சைவந் தழைக்கும்வண்ணம் சேரர் மரபும் உலகும் புரிந்த தவத்தாலே பெருமாக்கோதையார் பிறந்தார். நகரமெங்கும் அவர் பிறந்த மகிழ்ச்சியைக் கொண்டாடியது. சைவநெறிவாழ வளர்ந்த அப்பெரு மாக்கோதையார், கண்ணுதலார் கழலை வழிபடுதலே கருத் தாகக்கொண்டு, அரசு விருப்பமின்றித் திருவஞ்சைக் களத்தையடைந்து, திருப்பணி செய்துவந்தார்.

வைகறையி லெழுவார்; புனலில் முழுகுவார்; திரு வெண்ணீற்றினும் முழுகுவார்; திருநந்தன வனத்திலே தொண்டுசெய்வார்; மலரும் அரும்புங் கொணர்வார்; மாலை தொடுத்துச் சாத்தக் கொடுப்பார்; திருமஞ்சனங் கொணர் வார்; திருவலகிடுவார்; மற்றுமுள்ள திருப்பணிகளெல்லா வற்றையுஞ் செய்வார். திருப்பாட்டினால் வாழ்த்துவார்.

இவ்வாறு ஒழுகும் நாட்களிலே; சேர அரசன் அரசை விடுத்துக் காட்டிற்குக் கடுந்தவம்புரியச் சென்றான்.

அமைச்சர்கள் இந்த நாட்டிற்குத் தக்கவாறு அரசுசெய்வது அரச குடும்பத்திற்கே இயலுமென்று நினைத்துப் பெருமாக் கோதையாரைக் கண்டார்கள். வணங்கி அமர்ந்து நிகழ்ந்த வற்றைக்கூறி 'அரசேற்கவேண்டும்,' என்று வேண்டினர். அரசர் மரபிலுதித்த பெருமாக்கோதையார், 'இன்பம் பெருகும் நிலையிலே திருத்தொண்டியற்று மெனக்கு இவர்கள் மொழிவது இடையூறாகும். சிவபெருமானாரடிக் கன்புநெறிவழுவாமல் அரசுபுரியும் நிலைகிடைத்தால் இறை வரை வணங்கி வினவுவேன்,' என்று திருவஞ்சைக்களத் தாரை வழிபட்டுநின்றார்.

## 2. அரசர்

அப்போது இறைவரருளால் அன்பு வழிபாடும், எவ்வுயிரும் இயம்புவன அறியும் அறிவும், ஒப்பற்ற விற லும், தடையிலாக் கொடையும், படை வாகனம் முதலான அரசர்க்கு வேண்டியன யாவும் பெற்றார்.

மேவும் உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாருங் கழறினவும் அறியும் உணர்வும் ஈறில்லாத்
தாவில் விறலும் தண்டாத கொடையும் படைவா கனமுதலாம்
காவல் மன்னர்க் குரியனவும் எல்லாங் கைவந் துறப்பெற்றார்.
(திருத்.—கழறிற். ௧௪)

இறைவரருளைப்பெற்று அஞ்சலிசெய்து, வெளியே வந்தார். 'அரனாரருளால் ஒப்புக்கொள்ளுகிறோம்,' என் றார். அமைச்சர்கள் மகிழ்ந்து முடிபுனைதற்காவன விரைந்து செய்தனர்.

நன்னாளிலே திருமுடி புனைந்தார். எல்லாவுயிரும் மகிழ்ந்தன. இம்மைக்கும் மறுமைக்கும் அரசுமுடிபுனைந்த சேரமான்பெருமாள் தம்பிரானார் கோயிலை வலம்வந்து விழுந்து வணங்கி வாழ்த்திக் களிற்றின்மீதேறினார். பல வகை மங்கலமுரசும் வெற்றிச் சங்கும் சின்னங்களும் ஒலிக்கக் கொற்றக்குடையும் சாமரையும் பணியாளர் ஏந்த நகர்வலம் வந்தார்.

## 3. நினைப்பித்தீர்!

அப்போது ஒரு வண்ணான் உவர்மண் படிந்த மெய்யுடன் பொதிசுமந்து வந்தான். அவனைக் கண்டவுடன் யானைமீதிருந்திறங்கி, விரைந்துசென்று காதலுடன் வணங்கினார். அவன் அஞ்சிக் கலங்கி விழுந்து வணங்கி, 'அடியேன் அடிவண்ணான்! யாரென்று நினைத்தீர்கள்?' என்றான். அரசர், 'அடியேன் அடிச்சேரன்! நீர் யாராயினுமென்ன? அன்பூட்டும் திருநீற்றுக்கோலத்தை நினைப்பூட்டினீர், அதனால் வணங்கினேன்; வருந்தாமற் செல்க!' என்று கூறிக் களிற்றின்மீதேறினார். அமைச்சரும் பிறரும் அரசருடைய திருநீற்றன்பைக் கண்டு வியந்து தலைமிசைக் கைகுவித்து வாழ்த்தினர். பிறகு, நகர்வலம் வந்து அரண்மனையை அடைந்தார்.

அவருடைய அரசாட்சியிலே சோழரும் பாண்டியரும் நட்பாளராயிருந்தனர். குடிகள் நல்வாழ்வு பெற்றனர். அகப்பகையும் புறப்பகையுமற்றன. சிற்றரசர் திறைகொணர்ந்து வணங்கினர். திருவெண்ணீற்றொளி வளர்ந்தது. மறை வளர்ந்தது.

## 4. சிலம்பொலி

தம் ஆட்சியாற்பெறும் பயனும், நிறையுந் தவமும், தேடும் பொருளும், பெருந்துணையும் தில்லையிலாடுந் திருவடியே எனத் துணிந்த பெருமாக்கோதையார் அம் மலரடியை மலரிட்டு வழிபட்டு வந்தார். மணமிக்க மஞ்சனநீர், மலர், சந்தனம், நறும்புகை, ஒளிவளர் விளக்கு முதலான வழிபாட்டுப் பொருள்களுடனும் வழிந்து பொங்கும் காதலுடனும் வழிபட்டதனால், இறைவர் அவர்க்குப் பூசைமுடிவிற் சிலம்பொலி கேட்பித்தார்.

## 5. 'மதிமலி புரிசை!'

பாண்டிநாட்டிலே மதுரைநகரிலே திருவாலவாயில் இறைவரை வழிபடும் பேரன்பர் பாணபத்திரரென்பவர் ஒருவரிருந்தார். அவர் வறுமையால் வாடுவதையறிந்த

சொக்கலிங்கர், 'அயராதே! நாம் உனக்கொரு திருமுகம் அளிக்கின்றோம். அதனைக் கொடுங்கோளூர் சென்று சேரமானிடம் அளித்தால் வளநிதி தருவான்!' எனக் கனவிலே மொழிந்தருளினர். விழித்த பாணபத்திரர் திருமுகத்தையும் கண்டு கண்களிலொற்றிக்கொண்டு விரிசடைக் கடவுளின் மெய்யருளை வாழ்த்தி, விடிந்தவுடன் சேரநாடு நோக்கிச் சென்றார். கொடுங்கோளூரைச் சார்ந்து, அரண்மனை வாயிலையடைந்து தம் வருகையை அறிவித்தார்.

அரனடியாரொருவர் வந்துளாரெனக் கேட்ட அரசர் வெளிவந்து கைகுவித்து வணங்கி, அன்பு வழிய முகமன்கூறிப் போந்தபடி வினவினர். அவரும் பன்முறை வணங்கி, 'அடியேன் பாணபத்திரன்; சோமசுந்தரப் பெருமானருளித்த திருமுகங் கொண்டுவந்தேன்!' எனக் கூறியவுடன், நடுங்கி, வாய்குழறி, மெய்சிலிர்த்துப் பாணபத்திரர் திருவடிகளிற் பலமுறை விழுந்து வணங்கி, 'என்னையும் பொருளாகக்கொண்டு திருமுகங் கொடுத்தாரோ?' என வாங்கிப் படிக்கின்றார்:

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரும் மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
உரிமையின் உரிமையின் உதவி, ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்கும் சேரலன் காண்க!
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன், தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்,
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

இத் திருமுகத்தைப் படிக்கும்பொழுது தம்மை மறந்த சேரர் தெளிவடைந்து பாணபத்திரரை ஒரு பீடத்திலெழுந்தருளச் செய்தார். பிறகு அத்திருமுகத்

தைப் படியெடுக்கும்படி பணித்து, அரண்மனை புகுந்து உரிமைச் சுற்றத்தையெல்லாம் அழைத்துவந்தார். அமைச்சர்களை நோக்கி, 'நம்மாளிகையிற் பண்டாரத்திலுள்ள பல்வகைப் பொருட்குவைகளையும் ஒழிவின்றி இங்கே கொணர்க!' என்று ஆணையிட்டார்.

அமைச்சர்கள் அவ்வாறே கொண்டுவந்த பிறகு, சேரமான் பாணபத்திரருக்கு அவைகளைக் காட்டிப், 'பொருட்குவையேயன்றிக் களிறு பரி முதலியனவும் இவ்வரசும் எல்லாம் கைக்கொள்வீராக!' என்று பணிந்தார்.

பாணபத்திரர் அவருடைய வள்ளன்மைக்கு வியந்து, 'அடியேறகு வேண்டுவது சிறிது பொருளே. மற்றவைகளைப் பெற இறைவரருளில்லை ஆகையால், அரசு முதலாயினவற்றைத் தாங்களே கைக்கொண்டருளல் வேண்டும்,' என்று கூறினார். சேரரும் இறைவரருளை மீற இயலாமற் பல்வகைப் பொருட்குவியல்களை நிலம நெளியக் கரிபரிகளின்மேல் ஏற்றிப் பாணபத்திரரையும் ஒரு பெருங் களிற்றின்மே லமர்த்திப் பல பணியாட்களுடனும் காவல் வீரர்களுடனும் செல்ல விடுத்தார் பாணரும பணிந்து சென்றார்.

## 6. வன்றொண்டர் தோழர்

ஒருநாள் தில்லைக்கூத்தர் தம் சிலம்பொலியைக் காலந் தாழ்த்துக் கேட்பித்ததன் வாயிலாகச் சுந்தரமூர்த்தி நாயனார் பெருமையைக் கேள்வியுற்று, ஆட்சியை அமைச்சரிடம் ஒப்பித்துத் தில்லையை வணங்கித் திருவாரூரைச் சேர்ந்தார். வன்றொண்டர் அன்புடன் வரவேற்று வேண்டியவாறு உபசரித்து நட்புரிமை பூண்டார். அங்குச் சில நாட்களிருந்து. அவருடன் மதுரை முதலான திருநகரங்களை வணங்கித் திருமபவும திருவாரூா வநதார். சுநதரரை யழைத்துக்கொண்டு கொடுங்கோளூர் வந்து பலநாட்கள் வழிபட்டு அளவளாவினா. சுந்தரா திருவாரூர்ப்பெருமானார் திருவடி வணங்கும் காதலாற் பிரிந்து சென்று சில நாட்கள் கழித்துத் திரும்பி வந்தார்.

பின்னர், வன்றொண்டர் வெள்ளானைமீது கைலைக்குச் செல்லும்போது, தாமும் பரிமீது உடன்சென்று திருக் கைலையை அடைந்தார்.

"காரிகோண்ட கொடைக்கழறிற் றறிவாற்கும் அடியேன்"

*திருச்சிற்றம்பலம்*

---

## ௩௯. கணநாத நாயனார்

சோழவள நாட்டிலே சீகாழியிலே மறையவர் குலத்திலே வந்தவர் கணநாத நாயனார். அவர் திருத்தோணியப்பர்க்குச் செய்யுந் திருத்தொண்டிலே விளக்கமுற்றவர். ஆகையால், திருப்பணி பயில்வோர் பலர் அவரிடம் வந்து பழகினார்கள். நந்தவனமமைத்தல், மலர்கொய்தல், மாலை புனைதல், திருமஞ்சனப்பணி செய்தல், இரவும் பகலும் திருவலகிடல், மெழுகுதல், விளக்கிடுதல், திருமுறை எழுதுதல், படித்தல் முதலான திருப்பணிகளைப் பயிற்றினார்.

நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணிதொடை புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிகருள்ளோர்
அல்லும் நன்பக லுந்திரு வலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்க
ளெல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை யெழுதுவோர் வாசிப்போர்.

(திருத். கண. ௩)

இந்நிலையிலே இல்லறத்தின் நெறிவழுவாமல் ஆளுடைய பிள்ளையாரை முப்போதும் காதலுடன் வழிபட்டு வந்தார். இறுதியில் இந்த நல்வினைப்பயனாலே—சம்பந்தர் வழிபாட்டின் பெருமையாலே—சிவகணநாதரானார்.

"கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்".

*திருச்சிற்றம்பலம்*

---

# ருo. கூற்றுவ நாயனர்

திருக்களந்தை யென்னுந் திருநகரிலே கூற்றுவ நாயனர் என்பவ ரொருவர் இருந்தார். அவர் குறுநிலமன்னர் மரபினர். பெயருக்கேற்றவாறே பகைவர்க்குக் கூற்றுவரா யிருந்தார் சூலப்படை யணிந்த இறைவர் திருப்பெயரை ஓதும் வலிமையாலே நாடெல்லாம் வென்று தமதாக்கினர். அவர் நால்வகைப்படையினும் மேம்பட்டவர்; வீரச் செருக்குடையவர். தோள்வலியும் உளவலியும் சூழ்ச்சி வலியும் இறைவர் வழிபாட்டுவலியும் மிக்க அவரை வெல் வாரெவரும் இலராயினர்.

நாடுகளை வென்று அடிப்படுத்திய பின்னர்த் தமக்கு முடிசூட்டும்படி தில்லைவாழந்தணரை வேண்டினர். அவர்கள், 'யாம் சோழர்குடிக் கல்லது முடிசூட்டோம்,' எனப் புகன்று, அங்கிருக்கவும் மனமின்றித் தம்மில் ஒரு குடியைமட்டுந் தம் உரிமைக்குக் காவலாக வைத்துவிட்டுச் சேரநாடு குடியேறினர்.

கூற்றுவ நாயனர் திகைத்தார். முடியரச ராவதற்குக் குலமொன்று தடையோ என்று குழறினர். கவலையுடன் தில்லைக்கூத்தர் திருவடிகளை நினைந்து, 'அடியேனுக்கு அந்தணர் முடிசூட்டாவிடினும் தங்கள் அடியிணை முடி சூடுதல்வேண்டும,' எனத் தொழுது துயின்றார். கனவிலே இறைவரெழுந்தருளித் தமது திருவடியை முடியாகச் சூட்டி மறைந்தருளினர். விழித்தெழுந்த வேந்தனர் மெய் சிலிர்த்துக் கைகூப்பி வெள்ளிய பிறையணிந்த வேணி யரைப் பரவினர். அரனர் திருவடியே முடியாகக்கொண்டு உலகெலாம் பொதுநீக்கித் தனிபுரந்துவந்தார்.

சிவபெருமானர் எழுந்தருளிய திருக்கோயில்களுக் கெல்லாம் வழிபாடு முறையாகச் செய்து, செங்கோ லோச்சிய கூற்றுவனர் இறுதியிலே பரமனர் அடிநிழ லடைந்தார்.

**" ஆர்கொண்டவேற் கூற்றன் களந்தைக்கோ னடியேன் "**

**சுந்தரர் திருவடி வாழ்க !**

திருச்சிற்றம்பலம்

---

# அ. பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்

## சுக. பொய்யடிமை இல்லாத புலவர்

பொய்யடிமையில்லாத புலவரென்போர், மையணி கண்டத்தார் மலரடிக்கே ஆளானவர்கள்; இதுவே மெய்யுணர்வின் பயனென்று துணிந்தவர்கள்; செய்யுளிலே அமைந்த சொற்களைத் தெளிந்தவர்கள்; செவ்விய பல நூல்களையும் நோக்கினவர்கள்; அரவணிந்த அண்ணலார் திருவடியையல்லால் வேறெதனையும் தம் சொற்களில் அமைக்கமாட்டார்கள்; அத்தகைய பெரும்புலவர்களின் பெருமையை யாவரே எடுத்துரைக்க வல்லார்? அவர்கள் வாழ்க!

**“பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்”**

*திருச்சிற்றம்பலம்*

---

## சுஉ. புகழ்ச்சோழ நாயனார்

### 1. பேரரசர்

இமயமலையிற் புலியை யெழுதிய—உலகை யொரு வெண்கொற்றக் குடையின்கீழ் ஆக்கிய—புமிழ்மிக்க சோழருக்குத் தலைநகராக விளங்கியது உறையூர். கார் படியும் கோபுரங்களையுடைய அந்நகரிலே அறம் வளர்க்கும் அநபாய சோழருடைய முன்னோர்களிற் **புகழ்ச்சோழர்** என்பவரொருவர் புகழ்மிக்கவர்.

அவர் நிலமகளைப் பொதுமகளாக்காமல் தமக்கே உரிமையாக்கிய கொற்றவர்; அவர் அரண்மனை வாயிலிலே புலவர்கள் சூழ்வதுபோலவே திறமையுடன் புரவலருஞ் சூழ்வர்; அவருடைய ஆட்சியிலே சைவந் தழைத்துப் படர்ந்தது; முக்கண்ணர் திருக்கோயிலுக்கெல்லாம் முட்டின்றிப் பொருள் வழங்கி வழிபாடு குறைபடாமற் செய்வதற்கு முறைசெய்தார்; திருநீற்றுநெறி அவராற் செழித்து ஒளி வீசியது.

## 2. கருவூரில் இருக்கை—எறிபத்தர்

கொங்கரிடமும் குடகரிடமும் திறைபெற விரும்பிய சோழர் மலைநாட்டுப் பக்கமான கருவூரைத் தலைநகராகக் கொண்டு வீற்றிருக்கத் தொடங்கினார்; கருவூர்த் திருவானிலையை அடைந்து காளகண்டர் திருவடியை வழிபட்டார்; அரனருள் பெற்றுத் தம் புதிய அரண்மனையிற் புகுந்தார்; அத்தாணி மண்டபத்திலே அரியணையிலே அமர்ந்திருந்து, குடபுலத்தரசர் கொணர்ந்த திறைகளைக்—கரிகளையும பரிகளையும—பெற்றுச் சேமித்தார்; அந்த அரசர்களுக்கு முகமன் கூறி, ஆணையளித்துச் செல்ல விட்டார்; அந்நாளிலே சிவகாமியாண்டாரின் பூக்கூடையைச் சிதறியதற்காகச் சோழர் பட்டத்துக் களிற்றையும் பாகர்களையும் எறிபத்தர் வீழ்த்தியதை அறிந்து, தம்மையும் கொல்லும்படி வேண்டிக்கொண்டு தம் வாளையளித்தார்; அப்போது அரசருடைய திருத்தொண்டின் மெய்ம்மையை உலகறிந்தது.

## 3. அதிகன்

ஒரு நாள் அமைச்சர்கள் அரசரை வணங்கி அதிகன் என்னும் ஒருவன் திறைகொடாமல் மலையரணை நம்பி இறுமாந்திருப்பதாக அறிவித்தனர். சோழர் நகைத்து, 'உங்களுக்கெதிரான அரணும் உளதோ? போய் அவனை வென்று வருக!' எனக் கட்டளையிட்டார். அமைச்சர்கள் படைத்தலைவருடன் சென்று போர்முனையிலே அதிகனை அவலப்படுத்திக் கான்புகச் செய்தனர். பல வகைப் பொருட்குவைகளையும், களிறுகளையும, பரிகளையும், பெண்களையும் கொண்டு திரும்பினார். அவற்றுடன் அதிகனுடைய படைத்தலைவரிற் சிறந்தவர்களின் தலைக்குவியலொன்றையும் கருவூர்க்குக் கொண்டுவந்தனர் வீரர்கள்.

## 4. அந்தோ! சடையுடைய தலை—எரியில் வீழ்தல்

கொண்டுவரப்பெற்ற வீரர்தலைகளைப் புகழ்ச்சோழர் நோக்கினார்; அவருடல் நடுங்கியது. புன்சடைத் தலை

யொன்றைக் கண்டார்; கலங்கினார்; கைகூப்பித் தொழு தார்; சடைமுடித்தலை சிவனாடியார் தலையன்றோ! கண்ணீர் வடிந்தது; வாய் குழறியது.

"போர் முரசு முழங்கச் சென்று, முதலமைச்சர் பகைவரை வென்று, புகழுடன் வந்த வென்றியொழிந்து பழி வந்ததே! கடலுலகில் வெண்ணீற்று நெறியை வளர்க் கும் என்முறை மிக அழகியது! எதிரியின் படையைத் தடுத்துத் தம் கடனை முடித்த சடைமுடியார், திருநீற ணிந்த சேவகனார் நெறியைச்—சைவ நெறியை வளர்ப்பவ ராயிற்றே! புகழ்பெற்ற இவருடைய சடைமுடியைத் தாங்கிவரக் கண்டும் உலகங்காப்பவன்போ லிருந்தேன்! பழியைத் தாங்குவேனான தறியேன்!

இவ்வாறு கலங்கிய சோழனார், அமைச்சர்களை விளித் துத் தமது கருத்தைத் தெரிவித்துத் தம் புதல்வனுக்கு முடிசூட்டுவித்தார்; தீயை வளர்த்துச் சிவனாடியை வணங்கி, ஐந்தெழுத்தோதி வெண்ணீறணிந்தார். சடையை யுடைய தலையைத் தம் தலைமேற் சுமந்து, கலங்குவோர்க் குத் தேறுதல் கூறித் தீயை வலம் வந்து பொய்கையிற் புகுவதுபோல முகமலர்ச்சியுடன் புகுந்தார்; தீவண்ணர் திருவடி நிழலை மேவி இன்புற்றார்.

"பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## ௬௩. நரசிங்கமுனையரைய நாயனார்

### 1. பண்பு

செந்நெறியொழுகுந் தங்குல மரபின்படி அரசாட்சி செய்து, திருநீற்று நெறியையே மனங்கொண்டவர் திரு முனைப்பாடி காவலரான நரசிங்கமுனையரையர். இவர் பகை வரை வென்று திறைகொண்டதோடு தீய நெறியையும் வென்று புறங்கண்டவர். "மூத்தலைச் சூலப்படையா ரடி

யார்க் கடியேன்," என்ற விருது கொண்ட மெய்யடியார்; விடையூர்தியார் திருக்கோயில்களுக்கெல்லாம் தாமவென்று கொண்ட திறைப் பொருள்களை அளித்தவர். உயிர் துறக்க நேரினும் திருநீற்று நெறியைத் துறக்கலாகாதென உறுதி பூண்டவர்; குடிகளுக்குயிர்போன்ற கோதிலாக் காவலர்; ஆளுடைய நம்பியை வளர்த்த தந்தையார்.

ஆதிரை நாடோறும் ஆறணிந்த அண்ணலார்க்கு வழிபாடும் திருவிழாவும நிகழ்த்துவார். நீறணிந்த அடியார்க்கெல்லாம் நூறு பொன்களுக்குக் குறையாமல் அளித்துச் சுவை மிக்க அடிசிலையும் இனிதூட்டுவார்.

## 2. திருநீற்றின் சிறப்பு

ஒரு திருவாதிரையின்போது, அடியார்கட்குப் பொன்னளித்துக் கொண்டிருக்குங்கால், ஒருவர் வந்தார்; அவர் காமத்தினாலே சீர்கெட்டு நோய்கொண்ட மேனியராய்த் திருநீறணிந்து வந்தார்; அரசருடைய பணியாட்கள் அவரைக் கண்டு விலகி நின்றனர்; சோழரோ அவரை அன்புடன் எதிர்சென்று கைகுவித்தழைத்து வந்து (திருநீறணிந்தவர் ஒழுங்கீனரா யிருந்தாலும் இகழாமல் ஏற்றுப் பணிபுரிதலே நலம் என்றும, இகழ்தல் நரகுக்கிடமானதென்றும் உலகிற்குணர்த்த) இரட்டிப்புப் பொன் கொடுத்துச் செல்லவிட்டார்.

சீலமில ரேயெனினுந் திருநீறு சேர்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரகம் நண்ணாமை யெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார்.
(திருத்—நரசிங். ௭)

இத்தகைய திருந்திய சிந்தையினராகத் திருத்தொண்டு செய்து வாழ்ந்து சிவனாரடி நிழலைச் சேர்ந்தார்.

**"மெய்யடியான் நரசிங்க முனையரையற் கடியேன்"**

திருச்சிற்றம்பலம்.

# ௪௪. அதிபத்த நாயனார்

## 1. நாகை

சோழ நாடு என்னும் கற்பகப் பூங்கொடியில் மலர்ந்த மலர் நாகபட்டினம் எனும் நகரம். தேன் மலர்க் குழலார் பந்தாடிய மேடைகள் சூழ்ந்த வானளாவிய மாளிகைகளையுடைய அது, திருமகளுக் குறைவிடமாயிருந்தது. திருமகளுறையுளாதலாலும் பேரொலியுடையதாதலாலும் எப்பொருளையுந் தருதலாலும் திரைபோலக் களிறும் பரியும் உலாவலாலும் அந்நகர் கடல்போலக் காணப்பெறும்.

மேலும், உலகிலுள்ள பல நாடுகளிலும் உறையும் மக்களுட பொருள்களும் நிறைந்து, நிதிக்குவையுடன் குடிவளம் பெருகியிருப்பதால், அந்நகர் நிலமகளின் கண்ணாடி போலக் காணப்பெற்றது. சோழநாட்டின் துறைமுக நகரங்களில் ஒன்றாகிய அதன் சிறப்பை எப்படி இயம்புவது?

## 2. நுளைப்பாடி

அச் சிறந்த நகரின் அருகில், அலைகடலின் விளிம்பில், வலை வளத்தால் உணவு பெறுங் குடிகள் நிறைந்த பழமை பெற்றது நுளைப்பாடி. அங்கே அளவற்ற மேகங்கள் தவழ்வன போன்ற குடிசைகளின் அருகிலே, மீன் விலைக்களந்த பசும்பொற் குவியல்கள் காணப்பெறும். வலைச்சியர் கண்கள் படகிலிருந்து வந்த வலைஞர்கள் சொரியுங் கயல்களைத் தம்முடன் ஒப்பிட்டு அளந்து பார்த்து மகிழும்.

வலைகளை இழுப்பவரொலியும், மீன் குவியலை விற்பவரொலியும், சங்குகளையும் பவழங்களையும் குவிப்பவரொலியும் கடலொலியோடு போட்டியிடும் அப்பாடியிலே, மணவளம் பெற்ற நுளையர் குடியிலே தோன்றியவர் அதிபத்தர். அவர் இளம்பிறை புனைந்த இறைவனார் கழல்களிலே இசைந்த உள்ளத்தினர்; நுளையர் தலைவர்; பல படகுகளையுடையவர்; அளப்பருஞ் செல்வமுடையவர்; செல்வாக்குடையவர்.

## 3. இறைவருக்குத் தலைமீன்

அவர் அலைகடலில் வலைவீசினால் முதல்வீச்சிற் கிடைக்கும மீனகளிலே தலைமீனை, அன்பர் வலையிலகப்படும் அந்திவண்ணருக்கென அலைகடலிலேயே எடுத்து விட்டுவிடுவார். அந்திவண்ணர் அருளால் அமமீன் உயிர் பிழைகரும். ஒருநாளைக்குக் கிடைப்பது ஒரே மீனானாலும் உமைபங்கருக்கென்றே விட்டுவிடுவார்.

இவ்வாறு நிகழும் நாட்களிலே அவருடைய செல்வ வளஞ் சுருங்கியது; இவருக்கும அடுத்தடுத்துப் பல நாட்கள் ஒவ்வொரு மீனே கிடைத்தது; ஆகையால், உணவுக்குந் தட்டுநேர்ந்து உறவினர் வாடினர்; எனினும், இறைவர்க்கென மீனை விட்டுவருவதைத் தட்டிலர்; விரிசடையார்க்காவது தவறாது மீன கிடைப்பதை நினைந்து மகிழ்வாரவர்; அவருடலும் பட்டினியாற் சோர்ந்து மெலிந்தது; எனினும், இறைவரன்பு சோர்ந்திலது; மீனுணவு பெறாவிட்டாலும் அன்பாலாமுணவு தட்டின்றிப் பெற்றுவந்தார்.

## 4. நவமணிய பொன்மீன்!

அடியவரன்பை யுண்ணும் ஆறுதரித்த அண்ணலார் இவரைத் தேர்நதறியத் திருவுளங்கொண்டார் ஒருநாள் வழக்கப்படி வலை வீசியபோது அநத ஒருமீனுங் கிடைக்க வில்லை; ஆனால், உலகை விலைமதிக்கும ஒப்பற்ற—நவ மணிக ளிழைத்த—பொன்மீனொன்று கிடைத்தது; அதன் ஒளி கதிரவனொளிபோலக் கண்ணொளியை மங்கச் செய்தது; உடனிருந்தவர், 'நம் வறுமையொழிய நம்பனா ரளித்தார் இதனை!' என வியந்து மகிழ்ந்தனர்; ஆயினும, அதிபததரோ இறைவர் திருவருளையெண்ணி, 'அழகிய நவமணிமீன் அங்கணருக்குக் கிடைத்ததே!' என அன்பினாலுருகிக் கைகுவித்துப் போற்றி அதனையுங் கடலில் எடுத்தெறிந்தார்! என்னே அவர்தம் பற்றற்ற இயல்!

அப்போது வானத்திலே வாலிய விடைமேல் மங்கை பங்கனார் எழுந்தருளினார்; வான துந்துபிகள் முழங்கின;

அதிபத்தர் அஞ்சலிசெய்து வீழ்ந்து வணங்கி இன்பக் கண்ணீர்வடிய நின்றார்; நஞ்சணிந்த கண்டர் அவரைக் கணங்களுடன் சேர்த்தருளினார்

"விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்"

திருச்சிற்றம்பலம்

## சுரு. கலிக்கம்ப நாயனார்

### 1. பண்பு

(பெருமையிற் சிறந்த, அறத்திலே நிலைபெற்ற குடிகள் நிறைந்த நகரம் பெண்ணாகடம்; அது சோழநாட்டிற்குக் கண்போல் விளங்குவது; அந்நகரிலே வணிகர் குடியிலே **கலிக்கம்பரென்பார்** கண்ணுதலை மறவாக் கருத்தினராயிருந்தார்; அந் நகரிலுள்ள தூங்கானைமாடச் சுடர்க் கொழுந்தைக் காலந்தவறாமல் வணங்குங் கடப்பாடுடையவர் அவர்; அரனாரடிக்கன்பர் யாவராயினும் அழைத்து வந்து மலரடி விளக்கி அமர்த்தி அறுசுவையுணவு அன்புடன் உண்பித்துச் செல்லவிடுவார்.)

### 2. கை துணித்தார்!

ஒருநாள் அடியார்களுக் குணவளிக்க அழைத்து, மனைவியார் கரகத்திலிருந்து நீர் வார்க்கத் தாம் அவர்களுடைய திருவடிகளைக் கழுவிவந்தார்; வந்த அடியவர்களில் ஒருவர் இவரிடம் வேலைக்காரராயிருந்து மாறுபட்டு வெளியேறியவர்; அவரைக் கண்டவுடன் அந்த அம்மையார் நம் பணியாளர்போலுமென்று எண்ணிக் காலந் தாழ்த்தார்; அவ்வடியவர் அடியைப்பற்றிய கலிக்கம்பர் தம் மனைவியார் நினைவையுணர்ந்து, அடியவர்க்குப் பிழை செய்தல் ஆகாத பெருந்தவறெனெ முடிவு செய்தார்; உடனே தம் வாளால் மனைவியார் கையைத் துணித்தார்; பிறகு, தாமே அந்த அடியவர்க்கும் பிறர்க்கும் நீர்வார்த்துக் கழுவினார்; வந்த அடியவர்க்கெல்லாம் தாமே உணவும் படைத்தார்; இச் செயல் கண்ட எல்லோரும் வியந்து,

திருத்தொண்டு நெறிக்கு அஞ்சினர்; இத்தகைய உயர் நெறியிலே நின்று, இறுதியிலே சிவனாரடி சேர்ந்தனர்; அடியார்களிலே வேறுபாடு கருதாத அவர் வாழ்க!

"கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பற் கடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௪. கலிய நாயனார்

### 1. பண்பு

புகழ்பெற்ற தொண்டை நாட்டிலே, சிவனாரமர்ந் துறையுந் திருப்பதிகளுட் சிறந்தது திருவொற்றியூர். அங் குள்ள மண்டபங்களில் திருப்பதிக இசைப்பாட்டொலி யொழியாது; அழகிய அரங்குகளிற் சிற்றிடையார் ஆடல் ஒழியாது; தெருக்களில் திருவிழா ஒழியாது; திருமடங்களிற் செந்நெல்லரிசி அடிசில் ஒழியாது; மாதவி, புன்னை, ஞாழல், சண்பகம், செருந்தி, தாழை ஆகிய மலர்களின் மணம் கடல் முழுதும் ஒழியாது; கடற் கரையிலே நிலவின் துகள்போல மணல் பரவி இனிமை தரும்; அங்கு மேக முழக்கமும் கடல் முழக்கமும் பல வகை முரசுகளின் முழக்கமும் வேறுபாடின்றி முழங்கும்.

அந் நகரிலே, சக்கரப்பாடித் தெருவிலே, செக்கார் குலத்திலே, கலியனார் என்பவர் இருந்தார்; அவர் அக் குலஞ்செய்த நல்வினை போன்றவர்; செல்வத்திற் சிறந் தவர்; முக்கண்ணனார்க்குத் திருத்தொண்டு செய்யுஞ் சீரியர்; திருவொற்றியூ ரமர்ந்த தியாகப்பெருமானார் திருக் கோயிலிலே உள்ளும புறமும் ஒளியைத் தரும் சிறந்த திருவிளக்குப் பணியிலே ஈடுபட்டவர்.

### 2. வறுமை—பலவகைத் தொழில்

இவ்வாறு பலநாட்கள் செய்து வருகையில், அவ ருடைய இருவினைகளும் விலகியதைப்போலச் செல்வமும் விலகியது! செல்வம் மாறியும் சிந்தை மாறாமல், தம் மரபினரிடம் எண்ணெய் எடுத்து விற்றுக் கூலியைப்

பெற்றுச் சிவனார்க்கு விளக்கிட்டார்; அதற்கும் முட்டு வரவே, தம் இனத்தவரிடம், எண்ணெயாட்டுஞ் செக்காரத் தொழிலிலே ஈடுபட்டுக் கூலிபெற்றார்; அத்தொழிற்கும் முட்டுவந்தது; அதற்கும் பலர் தொழிலாளராக வந்தனர்; அப்போதும் அடியார் மனம் வாடாமல் திருமனையைப் பிரித்து விற்றுத் தொண்டுசெய்தார்; அதுவும் ஒழிந்து போகவே, உள்ளங் கலங்கி, மனைவியாரை விற்கப் புறப் பட்டார்; ஒருவரும் வாங்குவாரில்லை; திரும்பிக் கோயி லுக்கு வந்தார்.

## 3. குருதியிட்டெரிப்பேன்

இறையவர் திருக்கோயிலினுள் அகல் பரப்பினார். எங்கிருந்தும் எண்ணெய் கிடையாமையால் எண்ணெய்க் கீடாக, 'என் உடம்பின் குருதியை இட்டெரிப்பேன்,' என வாளையெடுத்துக் கழுத்தை யரியத் தொடங்கினார். அப்போது இறைவர்கை அச்செயலைத் தடுக்க விரைந்து வந்து பற்றியது; இறைவர் மழவிடைமேல் எழுந்தருளினார்; கலியனார் கழுத்தின் வலியுங் கலியுந் தீர்ந்து கைகுவித்துப் பரவினார்; அவரை இறைவர் தம் சிவபுரியிலே சேர்த்தார்.

"கலியனுக் கடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௭. சத்தி நாயனார்

நீர்வளஞ் செறிந்த சோழநாட்டிலே, வரிஞ்சை என் னும் ஊரிலே, வேளாண்குலத்திற் பிறந்தவர் சத்தியார் என்னுஞ் சைவத் திருவாளர்; அவர் சிவனடியாரை இகழ்வோர் நாவினைத் தண்டாயம் என்னுங் கருவியால் இழுத்துக் கத்தியாலரியுஞ் சிறப்புடையார்; இதனாலேதான் சத்தியாரெனுங் காரணப்பெயர் பெற்றார்; இவர் பல்லாண்டு கள் இத் திருப்பணியிலே ஈடுபட்டிருந்து இறுதியிலே சேவுகைத்தார் திருவடியைச் சேர்ந்தனர்.

"கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## சுஅ. ஐயடிகள் காடவர்கோன் நாயனுர்

காடவர் என்பது பல்லவரின் மற்ரொரு பெயர்; பல்லவரின் மரபிலே தோன்றியவர் ஐயடிகள்; இவர் அரசு நெறி வழாமல் வறுமையும் பகையும் தொடாமல் சிவனர் திருவடியைப்பற்றித் தொண்டைநாட்டைக் காஞ்சியி லிருந்து ஆண்டவர்; அவர்க்கு மாற்றரசர் பணிசெய்து வாழ்ந்தனர்; வடகலையுந் தென்கலையும் தொண்டுசெய்து மகிழ்ந்தன.

இங்ஙனம் அரசாளும் நாளிலே, ஆட்சியிலே வெறுப் புற்ருர்; எனவே, ஆட்சியைப் புதல்வனிடம் ஒப்பித்துப் பசுபதியா ருறையும் பதிகளெலாம் வணங்கப் புறப்பட் டார்; ஒவ்வொரு திருப்பதியினும் இனிய திருப்பணி செய்து, அரவணிந்த அண்ணலாரை வழிபட்டு வெண்பா வொன்று புனைந்து அணிவார்.

அவ்வகையா லருள்பெற்றங் கமர்ந்துசில நாள்வைகி
இவ்வுலகிற் றம்பெருமான் கோயில்களெல் லாமெய்திச்
செவ்வியவன் பொடிபணிந்து திருப்பணியேற் றனசெய்தே
எவ்வுலகும் புகழ்ந்தேத்து மின்றமிழ்வெண் பாமொழிந்தார்.
(திருத். ஐய. சு)

இவ்வாறு பல நகர்களையும் வணங்கித் தில்லைநகரிற் பல நாள் எழுந்தருளியிருந்தார். அங்கும் வெண்பா மல ரணிந்து தில்லைக்கூத்தர் சேவடி பணிந்தார். பிறகு, பிற திருவூர்களையும் பணிந்து வழிபட்டுப் பிறைமுடியார் திருவடியணைந்தார்.

"ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்"

சுந்தரர் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்

---

## கூ. கறைக்கண்டன் சருக்கம்

### சுஅ. கணம்புல்ல நாயனார்

#### 1. பண்பு

வடவெள்ளாற்றுத் தென்கரையிலே வளம் நிறைந்தது இருக்குவேளூர் என்னும் நகரம். அந்த நகரத்திலே அளவிறந்த செல்வமுடையவராய், நற்குணமுடையவராய்ச் சிவனார் திருவடியே சிந்திப்பவ ரொருவரிருந்தார். அவர் அரனார் திருக்கோயிலில் விளக்கிட்டு வணங்குவதே நம் நல்வழிக்கு விளக்கிடுவதாகும் என்னுங் கொள்கையர்.

#### 2. வறுமை—தில்லையடைதல்—கணம்புல்லர்

இவ்வாறு திருத்தொண்டு செய்துவரும் நாட்களில் வறுமையுற்றுத் தில்லையை அடைந்தார். அங்குத் திருப்புலீச்சரத்துப் பெருமானார் திருக்கோயிலில் இல்லிலுள்ளவற்றை மாறித் திருவிளக்கிட்டு வணங்கிவந்தார். பிறகு கணம்புல்லை யரிந்துவந்து விற்று நெய் வாங்கி விளக்கிட்டார். ஆகையாற் கணம்புல்லர் என்று பெயரும் பெற்றார்.

ஒருநாள் அப்புல்லும் விலை போகவில்லை. என் செய்வார்? புல்லைக் கொண்டுவந்து விளக்காக எரித்தார். அப்புல்லும முதல் யாமம் வரையில் எரிக்கப் போதவில்லை. என்செய்வதென்று கலங்கித் தம் திருமுடியை விளக்காக எரிக்கத் தொடங்கினார். அவர் தொண்டை மெச்சிய கங்கைச்சடையார் தம கழலிணை நிழலை யளித்தார். என்னென் றியம்புவது இவர்தம் பெருமையை! உள்ள உறுதியை!

"கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ரு௦. காரி நாயனார்

திருக்கடவூரிலே—மறையவர் மரபிலே காரி நாயனார் தோன்றினார். அவர் தமது செந்தமிழ்ப் புலமையாலே பல கோவைகள் பாடி மூவேந்தரிடமும் அரங்கேற்றி அளவிறந்த பொருள் கொண்டுவந்தார். அவற்றைக்கொண்டு கங்கை வேணியர்க்குத் திருக்கோயில்கள் பல கட்டினார். ஐம்முகவனாரடியவர்கட்கு, வாரி வாரி இன்சொல்லுடன் வழங்கி மகிழ்ந்தார். இவ்வாறு உலகிலே புகழ்பெற்ற அச்சிரியார் அந்திவண்ணரடிமலரைச் சிந்தித்தவாறே கயிலைமலையை அடைந்து, அப்பெருமானார் அடிமலர் மேவினார்.

"காரிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ருக. நின்றசீர் நெடுமாற நாயனார்

பாண்டி மன்னராகிய—கூன்பாண்டியராயிருந்து திருஞானசம்பந்தரால் நெடுமாறனாராகிய—தென்னவர் சிறப்பு அத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவரலாற்றின்கண் விரித்து விளக்கப்பெற்றுள்ளது. அவர் முதலிற் சமணர் வலையிலகப்பட்டாலும் மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்னும் இருவர் துணையால், ஆளுடைய பிள்ளையார் திருவருளால் மீட்டும் சைவராகிச் சைவத்தை வளர்த்துப் பிறைமுடிப் பெருமானாரருள் பெற்றார். அவர் வடநாட்டரசருடன் நெல்வேலிப் போர்க்களத்திலே போர் செய்து வேம்புடன் வாகையையும் முடித்தவர். வாகையென்பது வென்றோரணியும் அடையாளப் பூ. அவர் சைவத்தையுந் தமிழையும் ஒருங்கே வளர்த்து உமைபங்கர் திருவடியை வணங்கியவாறு சிவலோகத்திலே இன்புற்றார்.

"நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

# ருஉ. வாயிலார் நாயனுர்

தொண்டை நாட்டிலே, கடற்கரையிலே, வளத்துடன் விளங்குவது திருமயிலைப்பதி அந்நகர் கடல் தன் நிதியை வைத்திடத் தேடியமைத்த செப்புப்போல் வளம் நிறைந்தது. அன்றி, மரக்கலமாகிய செப்பைக்கொண்டு கடல் தன் செல்வத்தைச் சேர்க்குங் கருவூலந்தான் மயிலை யென்றும் விளம்பலாம்.

அந்நகரிலே வேளாள மரபிலே **வாயிலார்** என்பவர் சிவம்பெருக்குஞ் சிந்தையராய் இருந்தார். அவர் மறவாமையால் அமைத்த மனக்கோயிலில் மங்கைபங்கரை யிருத்தினர் ; உணர்வென்னும் விளக்கை யேற்றினர் ; அழியாத இன்பமென்னும் திருமஞ்சனம் ஆட்டினர் ; அன்பு என்னும் திருவமுது அமைத்தார்.

மறவாமை யாலமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத ஆனந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்.

அகமலர்ந்த வர்ச்சனையி லண்ணலார் தமைநாளும்
நிகழவரு மன்பினு னிறைவழிபா டொழியாமே
திகழநெடு நாட்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனர்.
(திருத்—வாயிலார், அ, கூ)

ஐந்தெழுத்து மலரிட்டு வணங்கி வந்தார். இந்த வழிபாடு இடையருமல் நெடுங்காலம் நடைபெறச்செய்து சிவனரடி நீழலிலே தொழுது வாழ்ந்தார்.

**“ துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்**
**தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன் ”**

திருச்சிற்றம்பலம்

---

# ருரு. முனையடுவார் நாயனர்

சோழநாட்டிலே சிறப்புற்ற செல்வம்நீடிய ஊர் திருநீடூர். அவ்வூரிலே வேளாண்குடியிலே தோன்றிய இவர் போர் முனையிலே பகைவரை வெல்லுந் தொழிலாளராகையால் முனையடுவாரென்று பெயர்பெற்ருர். இவர் கண்ணுதலாரடியிலே வைத்த காதலாற் போர்த்தொழில் பூண்டார். பகைவரை வெல்ல விரும்பியோர் வந்தழைத்தால் அவர்கட்காகப் போய் வென்று கூலிப்பொருள் பெற்று மீள்வார்.

அப்பொருளைக்கொண்டே கங்கைவேணிய ரடியார்க்கு அறுசுவை யுண்டியும், நெய், பால், தயிரும் அமர அளித்து, வேண்டியவாறு பொருளுங் கொடுத்து மகிழ்வித்தார்.

இன்ன வகையால் பெற்றநிதி எல்லாம் ஈசன் அடியார்கள்
சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமும்
கன்னல் நறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த கலந்தளித்து
மன்னும் அன்பின் நெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினர்.

'(திருத்—முனையடுவார், ச.)

இவ்வாறு நீண்டகாலந் திருத்தொண்டு செய்திருந்து சிவலோகத்திற் பிரியா வாழ்வுபெற்ருர்

"அறைக்கோண்ட வேல்நம்பி முனையடுவாற் கடியேன்"

சுந்தரர் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்

# ௬௦. கடல்சூழ்ந்த சருக்கம்

## ருச. கழற்சிங்க நாயனார்

கழற்சிங்க ரென்பவர் பல்லவகுல மன்னர். வடபுலத்துக்குச் சென்று மாறுகொண்ட பகைவரை வென்று வந்த வீரர். முப்புரமெரித்த முக்கட்பெருமானு ரடிமலரன்றி வேறொன்றை வழிபடாத தூயவர். தீமை கடிந்து நன்மையை வளர்த்த செங்கோலர்.

அவர் தம் பட்டத்தரசியோடும் பரிவாரத்தோடும் பரமர் வைகும் பதிகளெங்குஞ் சென்று தொழுதுகொண்டு திருவாரூர் வந்துசேர்ந்தார். அங்கே அரசர் புற்றிடங்கொண்டவரைப் போற்றித் தொழுதுகொண்டிருக்கும் போது, அரசி முன்சென்று வலமாக வந்துகொண்டிருந்தாள். மலர்மண்டபத்தினருகில் வந்தபோது அங்கே கிடந்த புதிய மலரொன்றை யெடுத்து மோந்துவிட்டாள். அந்தோ! திருக்கோயில் முறை யறியாள்!

அங்கே திருப்பணி செய்துகொண்டிருந்த செருத்துணை நாயனார் அதைக் கண்டு பதைத்தார். சிவனார் திருக்கோயிலிற் பிழைபுரிந்தவர் யாராயினுமென்ன என்று எழுந்து மலரை மோந்த அவள் மூக்கைக் கருவியாலரிந்து விட்டார். அழகிய பூங்கொடிபோன்ற அவள் துடி துடித்தழுதாள். அப்போது அரசரும் சிவனார் திருமுன்னிருந்து வலமாக வந்தார். அவர் தம் பட்டத்தரசியின் பரிபவத்தைக் கண்டு பதைத்து, "அஞ்சாமல் இதனைச் செய்தார் யார்?" என்று இடிபோல் முழங்கினார்.

செருத்துணையார் முன்வந்து நிகழ்ந்ததை இயம்பினார். அதைக் கேட்ட கழற்சிங்கர் அஞ்சி, அவரை வணங்கித், "தாங்கள் சரியாகத் தண்டம் புரியவில்லை. முதலில் மலரை யெடுத்த இவள் கையையே துணிக்கவேண்டும்," என்று கூறித் தம் வாளால் தம் காதலியின் மலர்க்கை

பற்றித் துணித்தார். அங்குற்ற அடியாரெல்லாரும், 'ஆ ஆ!' என வியந்தனர். சிவனாரடிக்குத் தீங்கிழைப்பது தீமையினுந் தீமை! இவ்வாறு திருத்தொண்டாற்றிய அரசர் பல்லாண்டு செங்கோலோச்சிப் பரமனார் சேவடி நீழலடைந்தார்.

"கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௫௫. இடங்கழி நாயனார்

### 1. பண்பு

கடலை ஆடையாக உடுத்த நிலமகட்கு மார்பிலெழுதும் இலைத்தொழில் நிரம்பிய தொய்யில்போல அணிசெய்வது கோனாடு. அந்நாட்டுத் தலைநகர் கொடும்பாளூர். அந் நாட்டையாண்ட குறுநில மன்னர் மரபிலே பொன்மன் றுக்குப் பொன்னாலான கூரைவேய்ந்தவனும் பெருவீரனு மான ஆதித்தன் வழித்தோன்றலாக இடங்கழியாரென்னும் அரசரொருவர் இருந்தார். அவர் ஆமுதரித்த ஐம்முகவனார் திருவடி நெறியன்றி வேறு நெறியை விரும்பாதவர். அடியார் விரும்பி வந்தன யாவும் அளிக்குங் கடப்பாடுடை யவர். அரனார் திருக்கோயில்களெங்கும் முட்டின்றி வழி பாடு நடைபெறவேண்டியவைகளை அமைத்த அன்பர் அவர்.

இவர் காலத்தில் இளம்பிறைச்சடையா ரடியார்க் கமுதளிக்குந் திருத்தொண்ட ரொருவர் இருந்தார். அவர் ஒருமுறை திருவமுதளிக்கப் பொருள் கிட்டாமற் பல விடங்களிலும் அலைந்தார். ஓரிடத்திலுங் கிடையாமையால் முடிவில் அன்றைய நள்ளிரவிலே அரசருடைய நெற் பண்டாரத்திற் புகுந்து திருடத் தொடங்கினார். காவலர் கண்டு பிடித்துக் கடிதிலே இடங்கழியாராகிய அரசர்முன் விடுத்தனர்.

## 2. இவரலரோ பண்டாரம்?

அவரை அரசர் வினவி உண்மையறிந்து வருந்தினர். 'இவரலரோ பண்டாரம்? சிவனடியாரே பண்டாரமென் றுணராமல், அவர்க்குதவா முறையிலே பொருளைச் சேமித்தேன்! என்னிடத்திற் பொருளிருக்கவும் என் குடிகளி லொருவர் அரனடியார்க் கமுதுசெய்விக்கப் பொருளின்றி வாடித் திருடும்படி நேர்ந்தது. இஃது என் பிழையே!' என அறிந்து பண்டாரத்தைத் திறந்து அவர்க்கு வேண்டியவரையில் எடுத்துப்போக வேண்டிக்கொண்டார். மேலும் முக்கண்ணடியார்கள் எவரும் வந்து கொண்டு போகலாமென எல்லாப் பண்டாரத்தையுந் திறந்தே வைத்தார். இவ்வாறே திருநீற்று நெறியைக் காத்துச் சிவனடி மலர் நீழலைச் சேர்ந்தார்.

"மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

# ருசுா. செருத்துணை நாயனர்

## 1. பண்பு

உள்ளும் புறமும் ஒத்த ஒழுக்கமுடைய குடிவளமுடைய செல்வம் நிறைந்த நகர் சோழமண்டலத்திலே திருமருகனாட்டிலே உள்ள தஞ்சைமாநகர். இது குடிவளமுடையதென்றால் நீர்வளமும் செல்வவளமும் உடையதும் ஆகும். அப்பெருநகரிலே வேளாண்மரபிலே செய்ய வேணியர் திருவருளை நினைத்து வாழும் குடியிலே தோன்றியவர் செருத்துணையார். கூற்றினைக் குமைத்த பூங்கழலை நினைக்கும் அடியாரைக் கும்பிடுவார் அவர்.

## 2. அரசிக்குத் தண்டனை

அவர் திருவாரூருக்கு வந்தார். பூங்கோயிலின் வாயிலிலே அமர்ந்து புற்றிடங்கொண்டார்க்காகுந் திருப்பணிகள் புரிவாராயினர். அவ்வாறு வாழும் நாட்களிலே பல்லவ

அரசர் கழற்சிங்கரும் அவர் காதலியுமாகத் திருவாரூர் வந்தனர். அரசி மலர்மண்டபத்தின் பாங்கிற்கிடந்த மலரை மோந்ததைக் கண்ட நம் செருத்துணையார் அம்மலரை மோந்த மூக்கினை அரிந்து தண்டித்தார்! அரசர் வினவிய போதும் அஞ்சாது கூறினார். இவ்வாறு தொண்டு புரிந்து தூயநெறி நின்று சிவனார் துணைமலர்த்தாள் நிழலை யடைந்தார்.

"தஞ்சை - மன்னவனாஞ் செறுத்துணைதன்
அடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௭. புகழ்த்துணை நாயனார்

### 1. பண்பு

செருவிலி புத்தூரிலே, சிவமறையோர் மரபிலே, சிவனார்க்கடிமையிலே, நிகரற்ற—புகழ்பெற்ற—புகழ்த்துணையார் பிறந்தார். ஆகம வழியிலே நின்று அரவணிந்த அண்ணலை வழிபடுவதே பிறவிப்பயனெனக் கொண்டவர்.

ஒருமுறை வானம் வறண்டு தானமுந் தவமும் நில்லாத நிலை நேர்ந்தது. 'வயிற்றுணவு கிடையாவிடினும் வழிபாட்டுணவை விடமாட்டேன்,' என்று அப்போதும் மங்கையொருபங்கரை மஞ்சனமாட்டி மலரிட்டு வணங்கி வந்தார். உணவின்றி உடல்மெலிந்ததே தவிர வழிபாடின்றி உளம் மெலியவில்லை. 'உடலழியும்; உண்மை வழிபாடு அழியாது,' என உலகிற்குணர்த்திப் புகழ் பெற்றார் புகழ்த்துணையார்.

### 2. படிக்காசு

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்,' அன்றோ? ஒருநாள் நம் புகழ்த்துணையார் இறைவர்க்கு மஞ்சனமாட்டும்போது சோர்வினாலே குடம் தாங்கமுடியாது இறை

வர்முடியில் வீழ்த்து மூர்ச்சித்தார்; அப்படியே துயின்றும் போனார். கனவிலே கண்ணுதலார் எழுந்தருளி, 'அஞ்சாதே! பஞ்சம் நீங்கும் வரையிற் படிக்காசு ஒன்று தருகிறோம்! உணவுபெற்று வழிபடுக!' என்று அன்புடன் உரைத்தருளினார்.

அன்றுமுதல், அவருக்குப் படிக்காசு கிடைத்தது. பஞ்சம் நீங்கிடும் வரையிற் பட்டினியின்றியுண்டார். தம் வழிபாட்டை விடாது செய்து விரிசடையண்ணலார் மென் மலரடி சேர்ந்தார்.

"படைசூழ்ந்த புலியதள்மே லரவாட ஆடி, பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

# ௫௮. கோட்புலி நாயனார்

## 1. பண்பு

நலம் நிறைந்த சோணாட்டிலே நாட்டியத்தான் குடியூரிலே வேளாண்குடியிலே தோன்றியவர் கோட்புலியார். அவர் சோழருடைய படைத்தலைவர்; அஞ்சாத வீரர். கிடைக்கும் பொருளையெலாங் கேடின்றிச் செஞ்சடையார் திருக்கோயில்களுக்குத் திருவமுதுக்கு நெல் வாங்கிச் சேமங் கட்டிவைத்தார். அந்த நெற்குவையை அரனுருக்கே யாக்குவார். அரிய கிளையும்—தன்னகத்தாருங் கூடத்—தொடவிடார். 'என் கடன் இறையவனார் திருக்கோயிலுக் கமுதளிப்பதே!' என்று கொண்டார். 'இம்மையிலே யியற்றுவன மறுமையிலே இளம்பிறையணிந்த எங்கோவை யடைவதற்கேற்றனவா யிருத்தல்வேண்டும்!' என உறுதிபூண்டார்.

## 2. உறவினர்க்குரைத்த மொழி

அவர் ஒருமுறை அரசரேவிய போர்முனைக்குச் செல்ல நேர்ந்தது. 'அரனார்க் கமுதுபடியாக வைத்த செந்நெற்

குவையை எவருந் தொடலாகாது,' என்று உறவினர்க் கெல்லாந் தனித்தனி யுரைத்துச், செல்லவேண்டிய போர் முனைக்குச் சென்றார். திரும்பிவர நெடுங்காலமாயிற்று.

### 3. பசியின் கொடுமை

இடைக்காலத்திலே மழையின்றி மக்கள் வாடினர்; உணவு கிடையாமல் ஒடுங்கினர். அப்போது கோட்புலியா ரின் உறவினர், 'உற்ற வற்கடத்தை யொழிப்போம்! பிறகு சேர்த்துக்கொடுப்போம்!' என்று முடிவுசெய்து, அரனுக் கமுது செய்விக்க வைத்த நெற்கூட்டினைக் குலைத்து நெல்லையெடுத்துப் பஞ்சத்தைத் தணித்தனர். இது கோட் புலியாருக்கு எட்டியது.

### 4. சுற்றத்தார் தொடக்கறுத்தார்!

போர்முடிந்து வரும்போது, உறவினரெல்லோரும் எதிர்கொண்டனர். அவர்களுக்கு இன்மொழி பகர்ந்து யாவருக்குந் துகிலும் பொன்னும் மணியும் வழக்கம்போல் அளிப்பதாகத் தம் இல்லத்திற்கு வரவழைத்தார். யாவரும் வந்தவுடன் தம் பெயரையுடைய—கோட்புலியென்னும்— காவலனைக் கடைகாக்க வைத்துத் தாழிட்டுச், 'சிவ சொத் துக் குலநாசம்,' எனக்கூறி ஒருவரையும் விடாமல் வெட்டி வீழ்த்தினர்.

இறைவர் அவர் செயலுக்கு வியந்து விடைமீது வெளிவந்து, 'அன்பனே! உன் வாளால் உன் உறவின ருடைய பாவம் அகன்றது; சிறந்த பேறு பெற்றனர். நீயும் நம்முடன் வருக!' எனத் தம்முடன் அழைத்துச் சென்று சிவலோக வாழ்வளித்தனர். சுற்றத்தைவிடச் செந்தீவண்ணர் திருத்தொண்டே சிறந்ததெனக் காட் டியவர் அவர்.

"அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்"

**சுந்தரர் திருவடி வாழ்க!**

*திருச்சிற்றம்பலம்*

---

# கக. பத்தராய்ப் பணிவார் சருக்கம்

## ரு௰. பத்தராய்ப்பணிவார்

கங்கையணிந்த கண்ணுதலாரைப் பத்தியுடன் வழிபடுவோர், அரவணிந்த அண்ணலாரடியவரைக் கண்டால் உள்ளங் குதுகுதுப்பக் கூச்சத்துடன் கொண்டாடுவார். அன்பிலே ஆவின்பின் கன்றுபோல அவர்கள் பின் செல்வர். பணிந்த—இனிய—மொழிகளையே பேசுவோராவர். சிவனை மனமிட்டு யாவரேனும் வணங்குவதைக் கண்டால் இனிமையுடன் வணங்கி மகிழ்வோர் பலரறிய இம்மையிலே பயன்பெறுவர். அவர்கள் யாவரினும் மேலானவர் ஆவர்.

இறைவரையும் இறைவரடியாரையும் பொங்கிவருங் காதலுடன் வழிபடுவோர எவரும் அடைதற்கரிய மேன்மையான நிலையை அடைவார் தாம் செய்யும் எத்தொழிலும் சம்புவின் திருவடிக்கே யாமென்று அன்புடன் செய்வோர் பிறவித்துன்பம் அடையார். அவர் புகழ் அளவில்லாததாகும். சிவனார் புகழைக் கேட்போர் சிவனாரடிநிழலை யடைவார்.

உண்மையன்புடையோர் உமையொரு பங்கரையே, பணிந்துருகுவார். வாய் இன்பமுறத் தழுதழுப்பப் பேசுவார். அன்புடன் கண்ணீர் பெருக்குவார். மெய் சிலிர்ப்பக் கூச்சத்துடன் செயலற்று நிற்பார். மேலும், தொண்டரென்போர் நின்றாலும் அமர்ந்தாலும் படுத்தாலும் நடந்தாலும் உண்டாலும் உறங்கினாலும் விழித்தாலும் இமைத்தாலும் சிவனார் சிலம்பணிந்த செஞ்சேவடியை மறவாத பண்புடையோராவர்.

நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலும்
மன்றாடு மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்.

(திருத். பத்தராய்ப், எ.)

அவர்கள், தாம அரனடியாரென்பதை உலகிற்குணர்த்தி அதனாலொரு பயனையடைய விரும்பார். உலகு புகழ இறைவர் திருவடிகளை வணங்குதலையே கடமையாகக் கொண்டவர். இவரே 'பத்தராய்ப் பணிவோர்,' ஆவர்.

"பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௦. பரமனையே பாடுவார்

தென்மொழியாகிய தமிழிலாயினும் வடமொழியிலாயினும் எம்மொழியிலாயினும் முப்புரமெரித்த முதல்வரை - அரவணிந்த அண்ணலை - மெய்யுணர்வில வரும உண்மைப் பொருளை - உலகமெலாந் தாமேயானவரை - கரணங்களாற் காணமுடியாமல அறிவுக் கண்களுக்கு விருந்தானவரை - மன்றிலே நடம்புரியும் வள்ளலைப் - பொருளாக வைத்து, உள்ளமொன்றி யுருகிப பாடுவோரே 'பரமனையே பாடுவார்,' ஆவர்.

"பரமனையே பாடுவா ரடியார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௧ சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

தத்துவங்களெல்லாவற்றையுங் கடந்து நாதாந்தத்தின் மேல் நடிக்கின்ற—எல்லாவொளிக்கும் ஒளியைத் தரும் பேரொளியான—சிவத்தை யோகநெறியாலே சித்தத்திலே வழிபடுவோர் தில்லைக்கூத்தர் திருவடித் தொண்டின் நெறியை அடைந்தவராவர்.

"சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௨. திருவாரூர்ப் பிறந்தார்

அருவமாகியும் உருவமாகியும் அருவுருவமாகியும் எப்பொருளுமாகி நின்ற இறைவர்—உமையொருபங்கர்—மகிழ்வுடன் வீற்றிருக்குந் திருவாரூர்ப் பிறந்தவர்கள் சிவகணத்தாரே.

அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்
மருவாருங் குழலுமையாள் மணவாளன் மகிழ்ந்தருளும்
திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு தெரிந்துணர
ஒருவாயால் சிறியேனால் உரைக்கலாந் தகைமையதோ.
(திருத்—திருவா. க.)

ஆகையால், ஐம்பொறிகளையடக்கி அவர்களுடைய திருவடிகளை வணங்குவோர் இறைவர் திருவடியை யெய்துவார் சுந்தரர திருத்தொண்டத்தொகை பாட இவர்களே காரணரானார்கள். இவரைப் பாடாததாலேதான், ஒரடியார் 'வன்றொண்டரும் புறகு—அவரை ஆட்கொண்ட இறைவரும் புறகு,' என்றார்.

"திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்

---

## ௬௩. முப்போதுந் திருமேனி தீண்டுவார்

எப்போதும் இனியவரான இறைவரருளையே விரும்பி, உண்மை யறிவின் வழிவந்த விதி தவறாமல், எப்போதும் பொங்கியெழுங் காதலுடன் முப்போதும் வழிபடுவோரே முதன்மைபெற்ற சைவ முனிவோர். கண்ணுதலாரைத் தளராத அன்புடன் திருமஞ்சனமாட்டி மலரிட்டுப் போற்றும் பேறு பெற்றோர் சைவ ஆகமமுணர்ந்தவராயிருத்தல் வேண்டும்; ஆதிசைவரெனும் சைவ அந்தணராயிருத்தல் வேண்டும்.

"முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்"

திருச்சிற்றம்பலம்

## ௬௪. முழுநீறு பூசிய முனிவர்

திருவெண்ணீறு உண்டாக்கும் முறையால் கற்பம், அநுகற்பம், உபகற்பம் என மூவகைப்படும்.

### 1. கற்பம்

ஆக்கள் நோயின்றி யிருந்தபோது ஈன்ற கோமயத்தை ஈன்ற அப்போதே சிவமந்திரத்துடன் ஏற்றுக் காயவைத்துச், சிவமந்திரத்தா லாக்கப்பெற்ற வேள்வி நெருப்பிலே, சிவபெருமானுர் திருவடிகளை வாழ்த்தியிட்டு உண்டாக்கும் நீறு கற்பமாகும்.

### 2. அநுகற்பம்

நாட்டில் உலர்ந்து கிடக்கும் கோமயத்தைப் பொடி செய்து, ஆவின் நீராற் பிசைந்து உலர்த்தி, வேள்வி நெருப்பிலிட் டெடுத்துக்கொண்ட நீறு அநுகற்பம்.

### 3. உபகற்பம்

காடுபற்றி யெரிந்த நீறும், ஆனிலைகள் அனல்பட்டு வெந்த நீறும், மற்ற இடங்கள் எரிபட்டு வெந்த நீறும், செங்கற்கள் சுட்ட நீறும் ஆகிய இவற்றைத் தனித்தனியே ஆவின் நீரினுல் சிவமந்திரமோதி யுருண்டை செய்து மடங்களிலே உள்ள சிவாக்கினியிலே இட்டு வெந்தது உபகற்பம்.

இவற்றுள் எந்த வெண்ணீற்றையாயினும் அணியலாம். சிவனுர் திருமுன்னும், தீயின் முன்னும், ஆசிரியர் முன்னும் திருநீறணியலாகாது. நடக்கும்போதும் தூய்மையல்லாத நிலத்தும் அணியலாகாது.

இந்தவகை யாலமைத்த நீறு கொண்டே
இருதிறமுஞ் சுத்திவரத் தெறித்த பின்னர்
அந்தமிலா அரனங்கி யாறு மெய்ம்மை
அறிவித்த குருநன்மை அல்லாப் பூமி
முந்தஎதிர் அணியாதே அணியும் போது
முழுவதுமெய் புண்டரஞ்சந் திரனிற் பாதி
நந்திஎரி தீபமிகழ் வட்ட மாக
நாதரடி யாரணிவர் நன்மை யாலே.

(திருத். முழுநீறு, ௫.)

4. "நாளை நின்றவூர்ப் பூசலன்பன் கோயிலிற் புகுவோம்"

காடவர் கண்ட நன்னாளுக்கு முதல்நாள் இரவிலே காடவர் கனவிலே முக்கண்ணர் எழுந்தருளி, 'நாம் நாளை நின்றவூர்ப் பூசலன்பன் கோயிலிற் புகுவோம்! நீ நாளை விட்டு மற்றொரு நாளிலே வைத்துக்கொள்க!' என்று மொழிந்தருளினார்.

"நின்றவூர்ப் பூசலன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோம் நீயிங்
கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கொள்வா" யென்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப் [போந்தார்.

(திருத்-பூசலார், ௧௦)

காடவர் விழித்தெழுந்தார். அத்தகைய திருப்பணி செய்தவரைக் கண்டு வணங்கத் திருநின்றவூர் வந்தார்.

5 காடவா கண்ட கோயில்

அங்குள்ளவரைக் கண்டு அக் கோயில் எங்கு என்று வினவினார். 'பூசலார் கோயில் கட்டவில்லையே!' என்றனர் எல்லோரும். வியப்படைந்த வேந்தர், வேதியரெல்லாரையும் வரவழைத்தார். அவர்களிற் பூசலார் யாரென வினவினார்? பூசலார் அங்கு வரவில்லை. மற்றைய அந்தணர் மூலம் பூசலாரை யறிந்து, தாமே அவரில்லத்திற்குச் சென்றார். கண்டார் பூசலாரை. தொழுதார் திருவடிகளில்.

"தாங்கள் எட்டுத்திக்கும் வாழ்த்த எடுத்த திருக்கோயில் எது? இன்று கண்ணுதலாரை யெழுந்தருள்விக்க நன்னாள் கொண்டீர்களாம்! இறைவர் மொழிந்தருளினார். அத்தகைய பேறுபெற்ற தங்களடி பணிய வந்தேன்."

இம் மொழிகேட்ட பூசலார் மருண்டார். திகைத்தார்.

"இறைவரா அவ்வாறருளினார்? என்னைப் பொருளாகக் கொண்டு கூறியிருந்தால், வறியவனை—பொருளில்

லாத—நான் மனத்தால் வகுத்த கோயிலாகத்தான் இருத்தல் வேண்டும் !"

என்று தாங் கருத்திற் கட்டிய கோயிலைக் கூறினர். அரசர் வியந்தார் ! 'அன்பாகிய பொருளாற் கட்டிய அகக் கோயிலுக்குப் பொருள் கொண்டு கட்டிய புறக்கோயில் ஈடில்லை போலும் !' என்று பூசலார் பெருமையை நினைந்து நெகிழ்ந்து அவரடிகளில் விழுந்து வணங்கினர்; திரும்பத் தம் நகர் அடைந்தார்.

பூசலார், பிறையணிந்த பெருமானர், தம் மனக் கோவிலில் ஆணவம் முதலான குற்றங்களை நீக்கித் தூயதாக இடமமைத்த கோயிலில்—அருள் கூர்ந்து எழுந்தருளியதை எண்ணியெண்ணி இன்பவடிவானர். அன்பாலாகிய கோயிலிலே அந்திவண்ணரை எழுந்தருள்வித்துத் தவறாமல் அன்பு வழிபாடே இயற்றி அவரடி நீழலையே அடைந்தார்.

"மன்னியசீர் மறைநாவல் நின்றவூர்ப் பூசலுக்கு அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## ௬௧. மங்கையர்க்கரசியார்

மானியெனும் திருப்பெயரையுடைய மங்கையர்க்கரசியாரைப் புகழ்வதெப்படி ?

மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளினலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னரைப்
போற்றுவார் கழலெம்மால் போற்ற லாமே.

(திருத். மங்கை, க)

சோழர் குலக்கொடியாய்த் தோன்றினார். பாண்டியர் குலக் கொம்பிலே படர்ந்தார். சமணநெறி படர்ந்த பாண்டி நாட்டிலே சைவநெறி படரச் செய்தார். தம் கணவரைச் சண்பையர்கோன் அருளினாலே கூனை நீக்கி நெடுமாறனா ராக்கினார் திருநீற்றுச் செல்வம் எங்கும் திகழச் செய்தார். ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகத்திலே அமையும் பேறுபெற்றார். அவர் பாண்டியர் சைவ வாழ்க்கைத் துணை! பாண்டிநாட்டின் ஒளி! தமிழ் நாட்டின் தனிச் செல்வம்! எங்கள் குலத்தெய்வம்!

"வரிவளையாள் மானிக்கு அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## ௬௮. நேசநாயனார்

நன்னெறி நடத்தலும் அன்பு வாய்மை முதலிய நற்பண்புகள் படர்தலும் உடையோர் வாழும் தொன்னகர் காம்பீலி. அந்நகரிலே, அறுவையர் குலத்திலே தோன்றியவர் நேசனார். அவர் அக் குலத்தின் விளக்கு; நெய்தலில் நிகரற்றவர். அவர் தம் உள்ளத்தை உமை பங்கர் மலரடிக் காக்கினார். மொழியை அரனார் அஞ்செழுத்துக்காக்கினார். செயலைத் தம்பிரானாரடியார்க்குக் கீளுங் கோவணமும் ஆடையும் நெய்தளித்தலுக்காக்கினார்.

ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும் பழுதில்கோ வணமும் நெய்வார்.
(திருத். நேச, ௩)

இம் முறையிலே வழுவாதொழுகி அரனடி நீழலடைந்தார்.

"நேசனுக்கும் அடியேன்"

திருச்சிற்றம்பலம்.

---

## ௬௰௯. கோச்செங்கட் சோழ நாயனூர்

### 1. திருவானைக்கா—களிறுஞ் சிலந்தியும்

காவிரியாற்றின் மருங்கிலே 'சந்திர தீர்த்தம்,' என ஒரு பொய்கையிருந்தது. அதன் கரையிலே வானளாவிய சோலையில் ஒரு வெண்ணாவல் மரத்தின்கீழ்ச் சிவலிங்க மொன்றிருந்தது. அந்த இடத்தைச் சுற்றிலும் பெருங்காடு. அக்காட்டிலிருந்த வெள்ளானை யொன்று மலரும் நீரும் கொண்டு அந்தச் சிவலிங்கத்தை வழிபட்டது. ஆகவே, அந்த இடத்திற்குத் திருவானைக்கா என்று பெயர் வந்தது.

இவ்வாறாக, அங்கொரு சிலந்தி சிவலிங்கத்தின்மேல் சருகுகள் விழாமல் அதன்மேல் தன்வாயால் வலையொன்று பின்னியது. வழிபடவந்த யானை அது குற்றமென் றெண்ணி அவ்வலையைத் துதிக்கையாற் சிதைத்தது. சிலம்பியோ மறுபடியும் பின்னியது; யானையும் அழித்தது. சிலம்பிக்குச் சீற்றம் பொங்கியது. 'நம்பர் திருமுடிமேற் சருகு விழாமல் நான் கட்டும் வலையை இந்த வெள்ளானை யழிப்பதோ?' என்று வெகுண்டு யானையின் துதிக்கையி னுள் நுழைந்து கடித்தது. யானை அது பொறாமல் துதிக் கையை நிலத்தில் மோதி விழுந்திறந்தது. சிலம்பியும் அடி யால் தாக்கப்பெற்றதால் உயிர்விட்டது.

### 2. கோச் செங்கண்ணார்

நம்பர் வெள்ளையானைக்கு நற்பதம் அளித்துச் சிலம் பியை இப்பிறப்பு நினைவுடன் சோழர்குடியிற்பிறக்க அருள் செய்தார். அவ்வாறே அது சோழவரசரான சுப தேவர்க் கும் அரசியார் கமலவதியாருக்குந் திருமகவாயிற்று. இவர் பிறக்குமுன் கணிதம் வல்லோர், 'இக்குழவி இன் னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமேல் முப்புவனங் களையும் ஆளும்,' என்றனர். அதுகேட்ட அன்னையார், 'வரங்கிடந்து தில்லைக் கூத்தரருளாலே பிறக்கும் என் குழந்தை ஒருநாழிகை கழித்தே பிறக்கட்டும்,' என்று கூறித் தம்மைத் தலைகீழாகக் கட்டிவிடக் கட்டளையிட்டார்.

ஒருநாழிகை கழித்தவுடன் கட்டவிழ்த்துவிட்டனர். குழந்தையும் பிறந்தது. கமலவதியார் அதுவரையில் உயிருடன் இருந்து, 'என் கோச்செங்கண்ணனோ?' என்று அன்புடனழைத்துப் பின் உயிர்விட்டார்.

## 3. நம்பருக்குக் கோயில்கள்

முற்பிறப்பறிவுடன் பிறந்த சோச்செங்கட் சோழர் நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து, உரிய காலத்திலே கலை முதலிய யாவும் பெற்றார். தந்தையார் இவருக்கு முடியளித்துத் தவத்திற்கேகினார். அரசேற்றவுடன் முதலிலே திருவானைக்காவிலே இறைவருக்குக் கோயில் கட்டினார் அங்கு வெண்ணாவல் மரத்தைக் கெடாமற் பாதுகாத்தார்; வழிபாட்டுக்குப் பொருள் முதலியவை அமைத்தார்.

அமைச்சர்களைக்கொண்டு சோழநாடெங்கும் முக்கண்ணருக்குக் கோயில்கள் கட்டி வழிபாட்டுப் பொருளும் நிலமும் பொருந்தக் கொடுத்தார். வழிபடும் சைவ மறையவர்களை அங்கங்கே குடியாக்கி வேண்டும் நலங்களைச் செய்தளித்தார்.

அவர் கணிகள் கூறியவாறே உலகைத் தமது ஒற்றைக் குடையிலேயே நிறுத்திக் குடிகளுக்குக் காவலராய்த் தில்லைக்கூத்தர் சேவடித் தொண்டராய்ப் பல்லாண்டு வாழ்ந்திருந்து தில்லைக்கூத்தர் சேவடி நீழலிலேயே சிறந்து வாழ்ந்தார்.

**" தென்னவனாய் உலகாண்ட செங்கணாற் கடியேன் "**

திருச்சிற்றம்பலம்

---

## ௬௦. திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார்

### 1. திருவாலவாய்—பலகையிடுதல்

சோழ நாட்டிலே திருவெருக்கத்தம்புலியூரிலே வாழ்ந்த திருநீலகண்டயாழ்ப்பாணர் இறைவர் திருவிளையாடலைத் தமது யாழிலே இட்டுப் பாடும் பேறுபெற்றார். மதுரையை அடைந்து திருவாலவாயின் வாயிலில் நின்று யாழை ஒழுங்குசெய்து, காலத்துக்கேற்ற பண்ணமைத்துக் கண்ணுதலார் புகழைப் பாடினார் சோமசுந்தரர் அடியார் கனவிலெழுந்தருளி இவரைத் திருமுன் கொண்டுவர ஏவினார். அவர்கள் மற்றைநாட் காலையிலே பாணரைக் கண்டு வணங்கித் திருமுன்பு கொண்டுவந்து பாட வேண்டிக் கொண்டனர். மேலும், நிலத்தின் குளிர்ச்சி தாக்கினால் யாழ் கெடுமென்று நின்று பாடப் பலகையொன்றும் சோமசுந்தர ராணைப்படி அடியாரிட்டனர்.

### 2. திருவாரூர்—வாயில் வகுத்தல்

அங்கிருந்து பல திருப்பதிகளையும் வணங்கியவாறு திருவாரூர் சேர்ந்தார். அங்கே, வீதிவிடங்கரான இறைவர் அவரை வேறு வாயில் வகுத்து, அதன் வழியே வந்து தம்மைப் பாட அருளினார். அவ்வாறே இறைவரருளை வியந்து பாடினார் பாணர்.

### 3. சீகாழியிற் பிள்ளையார் நட்பு

திருவாரூரிலிருந்து பல திருவூர்களையும் வணங்கிச் சீகாழியடைந்து பிள்ளையாரை வணங்கினார். பிள்ளையார் இவருடைய யாழின் இனிமையிலே மகிழ்ந்தவராய்த் தம்முடன் இருந்து தேவாரங்களை யாழிலிட்டுப் பாடும்வண்ணம் அருள்புரிந்தார். அவ்வாறே, அவருடன் பல திருப்பதிகளை வணங்கிப் பாடியவற்றை யாழிலிட்டிசைத்து மகிழ்ந்தார். இறுதியிலே திருநல்லூர்ப் பெருமணத்திலே பேரொளியில் தம் வாழ்க்கைத்துணைவியாருடன் கலந்தார்.

**"திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்"**

*திருச்சிற்றம்பலம்*

---

*

## எக. சடையநாயனார்

தம்பிரானாரைத் தோழமை கொண்டு, தம் காதலிப ரிடம் அவரைத் தூதாக ஏவிட—சேரமானைத் தோழமை கொண்டருளிய—எம்பிரானாகிய சுந்தரரின் தந்தையார் இவர். இவர் திருவடியை என்றும் வணங்குவோம்.

திருச்சிற்றம்பலம்

---

## எஉ. இசைஞானியார்

இவர் சடையனார் வாழ்க்கைத் துணைவியார்; வன் றொண்டரைப் பெற்றெடுத்த பெருமையினர்; சைவத் திரு வாட்டியார்; இவர் பெருமை நம் சொற்களிலடங்குமோ? இவர் திருவடியை வாழ்த்தி வணங்குதல் நம் கடமை.

"என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே."

சுந்தரர் திருவடி வாழ்க!

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.

(திருத்—வெள்ளானை, ருடு)

சேக்கிழார் திருவடி வாழ்க!

இரண்டாம் காண்டம் முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

---

